# முகவுரை.

சிவபெருமான் கட்டளையின்படி திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகத்துக்கும் திருச்சிற்றம்பலக் கோவையெனவழங்கும் திருக்கோவையாருக்கும் முடிபு ஒன்றே. திருவாசகம் அன்பின்பெருக்கமாகிய தோத்திரங்களாகவும் திருக்கோவையார் அன்பின் முதிர்ச்சியாகிய கோவைத் துறைகளாகவு மிருக்கின்றன. அவற்றுள் திருக்கோவையாரில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகிய ஐந்தவஸ்தைகளும் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்திணைகளாகவும், பக்குவான்மாவும் சிவம்பொருளும், முறையே தலைமகனும் தலைமகளுமாகவும், திருவருள் பாங்கியாகவும், ஆன்மபோதம் பாங்கனாகவும், திரோதாயி செவிலித் தாயாகவும், ...ா நற்றாயாகவும், அவற்றினனுபவம் காண்டல் ...லிய நானூறு துறைகளாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இத்துறைகளையே பரமசிவம் மதுரைச் சங்கத்து ளொருவராகிய இறையனாராயிருந்து இறையனாரகப்பொரு ளிலக்கணமாகத் திருவாய்மலர்ந்தரு

இதற்குச் சிலர் நூல்களில் சாதாரணமாய்ச் சிவமும் ஆன்மாவும் ஆண்டானடிமையாக விவகரிக்கப்படுவதினாலும் அதற்கேற்பச் சிலதுறைக ளிருப்பதினாலும் பரம்பொருளும் பக்குவான்மாவும் முறையே தலைவனுந் தலைமகளுமாவரெனக் கூறுவர்; மற்றையர் இன்பசுகத்தைப் பெறுவான் பக்குவான்மாவும் அச்சுகப்பேற்றையளிப்பான் பரம்பொருளுமாக விருத்தலினாலும் அதற்கேற்பப் பலதுறைகளிருப்பதினாலும் பக்குவான்மாவும் பரம்பொருளும் முறையே தலைமகனுந் தலைமகளுமாவரெனக் கூறுவர்.

இவ்வுண்மை இத்திருக்கோவையாருள் சேர்க்கப்பட்டுள்ள திருக்கோவையாருண்மைக்கருத்தை ஆராய்ந்து சிந்திக்க நன்கு விளங்கும். ஆயினும் திருவாசகம் திருக்கோவையார் ஆகிய இவற்றின் உண்மைப்பொருள் பரிபாகமுள்ள பக்குவான்மாக்களுக்குத் திருவருட் சகாயத்தினால் குருமுகத்தில்விளையும் சிவானந்தானுபவத்தில் விளங்கத்தக்கதேயல்லாமல் வேறுவிதமா யறியத்தக்கதல்லவென்பது சான்றோர் கொள்கை. முத்திக்கு வித்தாகிய அக்குருவருட்சகாயம் திருமுறைகளைப் பத்தியோடு முழுமன நம்பிக்கையுடன் நிதம் பூசிக்கத் தானேயுண்டாகும்: இதுவே சைவசமயாசாரமாம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கோவையார்

என்கின்ற

# திருச்சிற்றம்பலக்கோவையார்

## மூலமும் உரையும்.

---

### விநாயகர் வணக்கம்.

எண்ணிறைந்த தில்லை யெழுகோ புரந்திகழக்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே—நண்ணியசீர்த்
தேனூறு செஞ்சொற் றிருக்கோவை யென்கின்ற
நானூறு மென்மனத்தே நல்கு.

---

### நூற்சிறப்பு.

ஆரணங்காணென்பரந்தணர்யோகியராகமத்தின்
காரணங்காணென்பர்காமுகர்காமநன்னூலதென்ப
ரேரணங்காணென்பரெண்ணரெழுத்தென்பரின்புலவோர்
சீரணங்காயசிற்றம்பலக்கோவையைச்செப்பிடினே.

இவ்விரண்டு செய்யுளும்
பிற்காலத் தான்றோரால் செய்யப்பட்டன.

---

### அதிகாரவரலாறு.

இந்நூல் களவிக்கொத் தெனப்படும் இருபத்தைந்ததிகாரங்
[illegible] புடைத்து. அவைவருமாறு:—

இயற்கைபாங்க னிடந்தலைமதியுட, னிருவருமுள்வழி யவன் வரவுணர்தல், முன்னுறவுணர்தல் குறையுறவுணர்தல், நன்னிலை நாண நடுங்கநாடல், மடல்குறைநயப்பு வழிச்சேட்படுத்தல், இடமிகுபகற்குறி யிரவுக்குறியோ, டொருவழித்தணத்த லுடன் கொண்டேகல், வரைவுமுடுக்கம் வரைபொருட்பிரிதல், மணஞ் சிறப் போர்தல் வார்புவிகாவல், இணங்கலர்ப்பொருத்தல் வேந் தற்குற்றுழி, பொருள்வயிற்பிரிதல் பரத்தையிற்பிரிதலென், றுங் ள்வயிற்சிறந்த வகத்திணைமருங்கின், இருளறுகிளவி யிவை யெனமொழிப.

---

## இயற்கைப்புணர்ச்சி.

என்பது, பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும், அவ்வாறு ஒரு பொழிலிடத்தெதிர்ப்பட்டுத் தெய் வகதியாய் ஓராவினுக் கிருகோடு தோன்றினாற்போலத் தம்மு ளொத்த அன்பினராய்த் தம்முட்டாமே கூடுங்கூட்டம். இது தெய்வப்புணர்ச்சி யெனினும், முன்னுறுபுணர்ச்சி யெனினும், காமப்புணர்ச்சி யெனினு மொக்கும்.

இக்கிளவி பதினெட்டுத் துறைகளை யுடைத்து. அவைவரு மாறு:—

காட்சியையந் தெளிதல்நயப்பே, உட்கோள்தெய்வந் துணி தல்கைக்கிளையொடு, கலவியுரைத்த லிருவயினொத்தல், கிளவி வேட்டல் நலம்புனைந்துரைத்தல், பிரிவுணர்த்தலொடு பருவர லறிதல், அருட்குணமுரைத்த லணிமைகூறல், ஆடிடத்துய்த்த லருமையறிதல், பாங்கியையறித லெனவீரொன்பான், நீங்கா வியற்கை நெறியெனமொழிப.

### காட்சி.

மதிவாணுதல் வளர்வஞ்சியைக்
கதிர்வேலவன் கண்ணுற்றது.

(எ-து.) மதிபோலும் ஒள்ளிய நெற்றியையுடைய வஞ்சி யிளங்கொடிபோன்ற தலைமகளைக் கதிர்வேலை யுடைய் தலைமகன் கண்டது.

திருவளர்தாமரைசீர்வளர்காவிகளீசர்தில்லைக் [வ
குருவளர்பூங்குமிழ்கோங்குபைங்காந்தள்கொண்டோங்குதெய்
மருவளர்மாலையோர்வல்லியினொல்கியனநடைவாய்ந்
துருவளர்காமன்றன்வென்றிக்கொடிபோன்றொளிர்கின்றதே.

(இ-ள்.) திரு வளர் தாமரை - திருவளரும் தாமரைப்பூவினை யும்,—சீர் வளர் காவிகள் - அழகுவளரும் நீலப்பூக்களையும்,— ஈசர் தில்லை குரு வளர் பூங்குமிழ் - ஈசரது தில்லைவரைப்பின்க ணுண்டாகிய பூங்குமிழினது நிறம்வளரும் பூவினையும்,—கோங்கு - கோங்கரும்புகளையும்,— பை காந்தள் கொண்டு - பசிய காந்தட்பூக்களையும் (உறுப்பாகக்) கொண்டு,— ஓங்கு தெய்வம் மருவளர் மாலை - மேம்பட்ட தெய்வமணம் வளரும் மாலை,— ஓர் வல்லியின் ஒல்கி அன்னம் நடை வாய்ந்து-ஒரு கொடிபோல நுடங்கி அன்னத்தினது நடைவாய்ந்து,—உரு வளர் காமன்தன் வென்றி கொடி போன்று - வடிவுவளரும் காமனது வெற்றிக் கொடிபோன்று, — ஒளிர்கின்றது - விளங்காநின்றது, (என்ன வியப்போ!) எ-று. * மெய்ப்பாடு - உவகை; பயன்-மகிழ்தல்.

திரு வென்பது அழகு. வளருமென்பது முக்காலத்துக்கும் பொது. ஈசர்தில்லை யென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டுக. பல நிலங்கட்கும் உரிய பூக்களைக் கூறியவதனால் நிலமயக்கங் கூறியவாறாயிற்று; ஆகவே பலநிலங்களினும் சென்று துய்க்

* மெய்ப்பாடென்பது புறத்துக்கண்டதோர் பொருள் காரணமாக நெஞ்சிற்றோன்றிய விகாரத்தின்விளைவு. பயனென்பது நெஞ்சினடுத்ததோர் மெய்ப்பாடு காரணமாகத் தன்னிடத்து நிகழ்ந்தசொல்லால் எய்துவது. இவற்றை வருமிடந்தோறும் கொள்க.

கும் இன்பமெல்லாம் இல்லையின்வாழ்வார் ஆண்டிருந்தேதுய்ப்பனென்பதுபோதரும்: அதனால் இம்மையின்பத்திற்குத் இல்லையே காரணமென்று கூறியவாறுமிற்று. அன்றியும் ஈசர்இல்லையென்பதனான், மறுமையின்பத்திற்கும் காரணமாதல் சொல்லாமையே விளங்கும்.

தாமரையால் மருதமும், நெய்தலால் நெய்தலும், குமிழால் முல்லையும், கோங்கால் பாலையும், காந்தளால் குறிஞ்சியும் என ஐந்துபூவினால் ஐந்திணையுஞ்சுட்டிக் கூறப்பட்டது. ஆதலால் அகத்தமிழின்பெருமை கூறப்படாது இல்லைநகரின்பெருமை கூறப்பட்டதோ வெனின், அற்றன்று சொல்லின்முடிவி னப்பொருண்முடித்தல் என்னும் உத்தியால் பைங்காந்தளென்று குறிஞ்சிக்குரிய பூவிலேமுடித்தலால், புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய குறிஞ்சியே கூறப்பட்டது. கோங்கிற் கடைகொடாது ஏனைநான்குமலர்க்கும் அடைகொடுத்தமை, பாலைக்கு நில மின்மையால் பாலைநிலஞ் சொல்லுதல்பற்றி; அடைகொடுத்தால் பிறவுறுப்புக்களோ டிதனையும் ஒப்பித்ததாம்.

ஐ ய ம்.

தெரியவரியதோர் தெய்வமென்ன
அருவரைநாட னையுற்றது.

(எ - து.) அருமையாகிய மலை நாட்டையுடையவனாகிய தலைமகன், (கண்டபின் இவ்வாறு தோன்றும் இம்மாது) தெரியவரியதாகிய (திருமகள்முதலிய) ஒப்பற்ற தெய்வமோ?(அல்லது மக்களுள்ளாளோ?) என்று ஐயங்கொண்டது.

போதோவிசும்போபுனலோபணிகளதுபதியோ
யாதோவறிகுவதேதுமரிதியமன்விடுத்த
தூதோவனங்கன்றுணையோவிணையிலிதொல்லைத்தில்லை
மாகோமடமயிலோவெனநின்றவர்வாழ்பதியே.

(இ-ள்.) யமன் விடுத்த தூதோ - இயமனால் விடுக்கப்பட்ட தூதோ,—அனங்கன் துணையோ - மன்மதனுக்கு (வசித்தற்கரியாரை வசித்தற்குண்டாயிற்றோர்) துணையோ,—இணையில் தொல்லை தில்லைமாதோ - ஒப்பில்லாதவனது பழைமையாகிய (இத்) தில்லையின்கண் வாழ்வாரோர் மாதரோ,—மடம் மயிலோ என நின்றவர் - மடப்பத்தையுடைய மயிலோ என்று (சொல்லும் வண்ணம்) நின்றவரது,—வாழ்பதி - வாழ்பதியானது,—போதோ - தாமரைப்பூவோ,—விசும்போ - ஆகாயமோ,—புனலோ - நீரோ,—பணிகளது பதியோ - பாம்புகளது பதியாகிய (நாகருலகமோ),—யாதோ - யாதோ,—ஏதும் அறிகுவது அரிது - சிறிதுந் துணித லரிது. எ-று. மெய்ப்பாடு-உவகையைச்சார்ந்த மருட்கை; பயன் - ஐயந்தீர்தல். (உ)

## தெளிதல்.

### அணங்கல்லளென் றயில்வேலவன் குணங்களைநோக்கிக் குறித்துரைத்தது.

(எ-து.) கூர்மையாகிய வேலையுடைய தலைமகன் (ஐயங்கொண்டபின்) அவயவம் இயங்கக்கண்டு இவள் தெய்வமல்லளென்று தெளிந்து கூறியது.

பாயும்விடையரன்றில்லையன்னாள்படைக்கண்ணிமைக்குந்
தோயுநிலத்தடிதூமலர்வாடுந்துயரமெய்தி
யாயுமனனேயணங்கல்லளம்மாமுலைசுமந்து
தேயுமருங்குற்பெரும்பணைத்தோளிச்சிறுநுதலே.

(இ-ள்.) பாயும் விடை அரன் தில்லையன்னாள் - பாய்ந்துசெல்லும் விடையையுடைய அரனது தில்லையை யொப்பாளுடைய,—படை கண் இமைக்கும் - வாள்போலுங் கண்கள் இமையாநின்றன,—நிலத்து அடி தோயும் - நிலத்தின்கண் பாதங்கள் தீண்டாநின்றன,—தூ மலர் வாடும் - தூயமலர்கள் வாடாநின்றன,—துயரம் எய்தி ஆயும் மனனே - (ஆதலின்) துயரத்தையெய்தி ஆராயும் மனமே!—அம் மா முலை சுமந்து தேயும் மருங்

குல் பணை பெரும் தோள் இ சிறு நுதல் அணங்கு அல்லள் - அழகிய பெரிய முலைகளைச்சுமந்து தேயாநின்ற இடையையும், மூங்கில்போலும் பெரிய தோள்களையுமுடைய இச்சிறுநுத லாள் தெய்வமல்லள். எ-று. மெய்ப்பாடு - மருட்கையினீங்கிய பெருமிதம்; பயன் - தெளிதல். (ரு)

## நயப்பு.

வணடமாபுரிகுழ லொண்டொடிமடந்தையை
நயந்தவண்ணல் வியந்துள்ளிய து

(எ-து.) வண்டுகள் அமரும் சுருண்டகுழலையும், ஒள்ளிய தொடியையுமுடைய தலைமகளை (மக்களுள் ளாளென்று தெளிந்தபின்) விரும்பிய தலைமகன் விய ந்து நினைந்தது.

அகல்கின்றவல்குற்றடமதுகொங்கையவையவநீ
புகல்கின்றதென்னைநெஞ்சுண்டேயிடையடையார்புரங்க
ளிகல்குன்றவில்லிற்செற்றோன்றில்லையீசனெம்மானெதிர்ந்த
பகல்குன்றப்பல்லுகுத்தோன்பழனம்மன்னபல்வளைக்கே.

(இ - ள்.) அடையார் புரங்கள் இகல் குன்றம் வில்லின் செற் றோன் - அடையாதவர் புரங்களது வலியை குன்றமாகிய வில் லால் வென்றவன்,—தில்லை ஈசன் - தில்லையின்கண் உளனாகிய சிவன்,—எம்மான் - எம்முடைய இறைவன்,— எதிர்ந்த பகல் குன்ற பல் உகுத்தோன் - மாறுபட்ட ஆதித்தனது பெருமை குறையப் பல்லையுகுத்தவன்,— பழனம் அன்ன பல்வளைக்கு (அவனது) பழனத்தையொத்த பல்வளையுடையாளுக்கு—இடை உண்டு - இடை உண்டு.—அகல்கின்ற அல்குல் தடம் அது கொங் கை அவை - அகலாநின்ற அல்குலாகிய தடம் அது, முலைகள் அவை,—நெஞ்சு - நெஞ்சே,—அவம் நீ புகல்கின்றது என்னை காரணமின்றி நீ சொல்லுகின்றதென்? எ - று. மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த மருட்கை; பயன் - ஐயந்தீர்ந்து மகிழ்தல்

இகல்குன்ற வில்லிற் செற்ரேன் என்பதற்கு இகல்குறைய வில்லாற் செற்றேனென்னினும் அமையும். (௪)

உட்கோள்.

இறைதிருக்கரத்து மறிமானேக்கி
யுள்ளக்கருத்து வள்ளலறிந்த து.

(எ-து.) இறைவனது திருக்கரத்திலுள்ள மறியாகிய மான்போலுங் கண்ணையுடைய தலைமகளை (நயந்தபின்) அவளது உள்ளத்தினெண்ணமாகிய காதலை வள்ளலாகிய தலைமகன் (அவள் கண்ணிற்கண்டு) தன்னுட்கொள்ளுதல்.

அணியுமமிழ்துமென்னுவியுமாயவன்றில்லைச்சிந்தா
மணியும்பரா ரறியாமறையோனடிவாழ்த்தலரிற்
பிணியுமதற்குமருந்தும்பிறழப்பிறழமின்னும்
பணியும்புரைமருங்குற்பெருந்தோளிபடைக்கண்களே.

(இ - ள்.) அணியும் அமிழ்தும் என் ஆவியும் ஆயவன் - (எனக்கு) ஆபரணமும் அமிழ்தும் என்னுயிரும் ஆனவன்,— தில்லை சிந்தாமணி - தில்லையின்கண் சிந்தாமணிபோல் (நினைத்ததை கொடுப்போன்),— உம்பரார் அறியா மறையோன் - (அன்பரல்லாத) தேவர்கள் அறியாத அந்தணன்,— அடி வாழ்த்தலரின் - (அவனது) திருவடிகளை வாழ்த்தாதவரைப்போல,— மின்னும் பணியும் புரையும் மருங்குல் பெரு தோளி - மின்னையும் பாம்பையும் ஒக்கும் இடையினையும், பெரிய தோள்களையு முடையாளது,—படை கண்கள் - வாள்போலுங் கண்கள்,— பிறழ பிறழ - பிறழுந்தோறும் பிறழுந்தோறும்,— பிணியும் - (பொதுநோக்காற்) பிணியும்,— அதற்கு மருந்தும் - (உள்ளக்கருத்து வெளிப்படுக்கு நாணேடுகூடிய நோக்கத்தால்) அதற்கு மருந்தும் (ஆகாநின்றன). எ - று. மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - தலைமகளது குறிப்பறிந்து மகிழ்தல். (௫)

## தெய்வத்தைமகிழ்தல்.

அன்னமென்னடை யரிவையைத்தந் த
மன்னிருந்தெய்வத்தை மகிழ்ந்துரைததது.

(எ-து.) (காதலையுட்கொண்ட தலைமகன்) அன்னம் போலும் மென்மையாகிய நடையையுடைய தலைமகளைத்தந்த நிலைபெற்ற பெருந்தெய்வத்தை மகிழ்ந்து கூறியது.

வளைபயில்கீழ்கடனின்றிடமேல்கடல்வானுகத்தின்
றுளைவழிநேர்கழிகோத்தெனத்தில்லைத்தொல்லோன்கயிலைக்
கிளைவயினீக்கியிக்கெண்டையங்கண்ணியைக்கொண்டுதந்த
விளைவையல்லால்வியவேனயவேன்றெய்வமிக்கனவே.

(இ - ள்.) வளை பயில் கீழ்கடல் நின்று இட - சங்கு நெருங்கின கீழ்த்திசைக்கடலிலே நின்று எறிய,—நேர்கழி மேல்கடல் வான் நுகத்தின் தொளைவழி கோத்தாலென - அவ் வொத்தகழி மேற்றிசைக் கடலிலிட்ட பெரிய நுகத்தினது தொளையின்கண் சென்று கோத்தாற்போல,— தில்லை தொல்லோன் கயிலை கிளை வயின் நீக்கி இ கெண்டையம் கண்ணியை கொண்டு தந்த - தில்லையிடத்துப் பழையோனாகிய சிவனது கயிலையில் ஆயத்தாரிடத்தினின்று நீக்கி இக்கெண்டைபோலுங் கண்ணையுடையாளை (கைக்) கொண்டு தந்த,— விளைவை அல்லால் - (நல்வினையின்) விளைவாகிய (தெய்வத்தை) யல்லது,—மிக்கன தெய்வம் - மிக்கனவாகிய பிறதெய்வத்தை,— வியவேன் - வியப்பதுஞ் செய்யேன்,— நயவேன் - நயப்பதுஞ் செய்யேன். எ - று. மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த மருட்கை ; பயன் - மகிழ்தல். (கூ)

## புணர்ச்சிதுணிதல்.

கொவ்வைச்செவ்வாய்க் கொடியிடைப்பேதையைத்
தெய்வப்புணர்ச்சி செம்மறுணிந்த து.

(எ-து.) (தெய்வத்தை மகிழ்ந்த தலைமகன் இது நமக்குத் தெய்வகதியாய் வந்த புணர்ச்சியெனத் தன் நெஞ்சிற்குச்சொல்லி) கொவ்வைக்கனிபோலுஞ் சிவந்த வாயையும், கொடிபோலும் இடையையு முடைய தலைமகளைப் புணரத் துணிந்தது.

ஏழுடையான்பொழிலெட்டுடையான்புயமென்னைமுன்னா
ளூழுடையான்புலியூரன்னபொன்னிவ்வுயர்பொழில்வாய்ச்
சூழுடையாயத்தைநீக்கும்விதிதுணையாமனனே
யாழுடையார்மணங்காணணங்காய்வந்தகப்பட்டதே.

(இ - ள்.) பொழில் ஏழுடையான் - ஏழுலகங்களை யுடையான்,—புயம் எட்டுடையான் - எட்டுப்புயங்களை யுடையான்,—என்னை முன் ஆள் ஊழுடையான் - (எனக்கு ஆட்படுந் தன்மை யுண்டாவதற்கு) முன்னே என்னை ஆள்வதொரு (புதிதாகிய) முறைமையை யுடையான்,—புலியூரன்ன பொன் - (அவனது) புலியூரையொக்கும் பொன்னனையாள்,— இ உயர் பொழில் வாய் - இவ்வுயர்ந்த பொழிலிடத்து,—சூழுடை ஆயத்தை நீக்கும் விதி துணையாக - (ஒருபொழுதும் விடாது) சூழ்தலை யுடைய மகளிர் கூட்டத்தை நீக்குதற்குக் (காரணமாகிய) விதி துணையாக,—மனனே - மனமே!—யாழுடையார் மணம் - கந்தருவர் மணம்,—காண் அணங்காய் வந்து அகப்பட்டது - காண முன் வருத்துவதாய் வந்து அகப்பட்டது, (இனிக் கூட்டத்துக் குடன்படுவாயாக). (எ - று.) மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த மருட்கை; பயன் - துணிதல்.

அணங்காய் வந்தென்றது - உள்ளஞ்செல்லவும் இது தகா தென்று விலக்குதலால் முன்வருத்தமாயினமையின், தெய்வத் தன்மையுடைத்தாய் வந்ததெனினும் அமையும். புணர்ச்சி துணிந்தமையான் அகப்பட்டதென்று இறந்தகாலத்தாற் கூறப் பட்டது. இதுவும் உட்கோள் பாற்படும். (எ)

## கலவியுரைத்தல்.

கொலைவேலவன் கொடியிடையொடு
கலவியின்பங் கட்டுரைத்த து.

(எ - து.) கொலைத்தொழில் பொருந்திய வேலை யுடைய தலைமகன், கொடிபோலும் இடையையுடைய தலைமகளோடு (நிகழ்ந்த) புணர்ச்சி யின்பத் தியல்பு உறுதியாகக் கூறியது.

சொற்பாலமுதிவள்யான்சுவையென்னத்துணிந்திங்ஙனே
நற்பால்வினைத்தெய்வந்தந்தின்றுநானிவளாம்பகுதிப்
பொற்பாரறிவார்புலியூர்ப்புனிதன்பொதியில்வெற்பிற்
கற்பாவியவரைவாய்க்கடிதோட்டகளவகத்தே.

(இ - ள்.) சொற்பால் இவள் அமுது யான் சுவை யென்னத் துணிந்து - சொல்லும்பகுதியில் இவள் அமுதம் யான் (அதன்) சுவையென்று துணிந்துசொல்ல,—புலியூர் புனிதன் பொதியில் வெற்பில் - புலியூரின்கண் உளனாகிய தூயோனது பொதியிலாகிய வெற்பில்,—கல் பாவிய வரைவாய் கடிதோட்ட களவகத்து- கற்பரந்த தாழ்வரையிடத்துக் காவலைவாங்கிய களவிடத்து,— இங்ஙனே நற்பால் வினைத்தெய்வம் தந்து இன்று நான் இவளாம் பகுதி பொற்பு ஆர் அறிவார் - இவ்வண்ணமே நல்லகூற்றின் வினையாகிய தெய்வம் தர (இவ்வாறு வேறுபாடில்லையாயினும், புணர்ச்சியான்வரும் இன்பம் துய்த்தற் பொருட்டாக) இன்று யானென்றும் இவளென்றும் வேறுபாட்டோடு கூடிய அழகை (இதனை யனுபவிக்கின்ற யானே அறியினல்லது) யாரறிவார்? எ - று. மெய்ப்பாடு - உவகை, பயன் - மகிழ்ச்சி, அது தலைமகனை மகிழ்வித்தலுமாம்.

களவகத்துப் பொற்பு ஆரறிவாரெனக் கூட்டுக. கடிதோட்ட வென்பதற்குக் கடியப்பட்ட தலைமகளாயமும் தன்னிளைஞரும் ஆகிய தொகுதியையுடைய களவென்றுரைப்பினும் அமையும்.(

## இருவயினொத்தல்.

ஆராவின்பத் தன்புமீதூ
வாரார்முலையை மகிழ்ந்துரைத்தது.

(இ-து.) நீங்காத இன்பத்தால்வந்த (செயற்கை) அன்பு(புணர்ச்சிக்கு முன்னிருந்த அப்பெற்றியேபுணர்ந்த பின்னும்) நின்று வளர்தலால், கச்சணிந்த முலையையுடைய தலைமகளை (தலைமகன்) மகிழ்ந்து சொல்லியது.

உணர்ந்தார்க்குணர்வரி யோன்றில்லைச்சிற்றம் பலத்தொருத்தன், குணந்தான்வெளிப்பட்ட கொவ்வைச்செவ்வாயிக் கொடியிடைதோள், புணர்ந்தாற்புணருந் தொறும்பெரும் போகம் பின் னும்புதிதாய், மணந்தாழ்புரிகுழ லாளல்குல்போல வளர்கின்றதே.

(இ - ள்.) உணர்ந்தார்க்கு உணர்வு அரியோன் - (ஒருகால் தன்னை) உணர்ந்தவர்கட்கு (பின்னுணர்வதற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குதலான்) மீட்டும் உணர்வதற்கு அரியவன்,— தில்லை சிற்றம்பலத்து ஒருத்தன் - தில்லையில் சிற்றம்பலத்தின்க ணுளனாகிய ஒப்பில்லாதவன்,—குணந்தான் வெளிப்பட்ட - (அவனது) குணமாகிய ஆனந்தம் வெளிப்பட்டாற்போலும்,— கொவ்வை செவ்வாய் இ கொடி யிடைதோள் புணர்ந்தால் - கொவ்வைக் கனிபோலுஞ் செவ்வாயை யுடைய இக் கொடிபோன்ற யிடையை யுடையாள் தோளைக் கூடினும்,—புணருந்தொறும் பெரு போகம் பின்னும் புதிதாய்-கூடுந்தோறும் பெரிதாகிய இன்பம் (முன்பு போலப்) பின்னும் புதிதாய்,—மணம் தாழ் புரி குழலாள் - மணந்தங்கிய சுருண்ட குழலையுடையாளது,—அல்குல் போல வளர்கின்றது - அல்குல் போல வளரா நின்றது. எ - று. மெய்ப்பாடு - உவகை, பயன் - மகிழ்ச்சி.

உணர்ந்தார்க் குணர்வரியோ னென்பதற்குத் தவத்தானுந் தியானத்தானும் எல்லாப் பொருள்களையு முணர்ந்தவர்க்கும் உணர்வரியோ னெனினும் அமையும். அல்குல் வளர்கின்ற தென்றதனால் ஒருகாலைக் கொருகால் வரம்பின்றி வளருமென்ற தல்லர்; மற்றென்னெனின், இயற்கைப் புணர்ச்சி புணர்கின்ற காலத்து இவள் பதினோராண்டும் பத்துத் திங்களும் புக்காளாகலின், இவளது அல்குல் இலக்கணக் குறைபாடின்றியே வளரா நின்று பன்னீராண்டு நிரம்பினால் ஒரு பெற்றியே நிற்கும். அது போல இவன்காதலும் உள்ளம் உள்ளளவு நிறைந்து பின்னைக் குறைபாடின்றி ஒரு பெற்றியே நிற்கு மென்பதாம். (கூ)

### கிளவி வேட்டல்.

அன்னமன்னவ ளவயவங்கண்டு
மென்மொழிகேட்க விருப்புற்றது.

(எ - து.) (இருவயி னொத்தின்புறும் தலைமகன்) அன்னம்போன்ற தலைமகளது அவயவங்களைப் பார்த்து அவளது மென்மையாகிய வாய்மொழி கேட்க விருப்பத்தால் வருந்தியது.

அளவியையார்க்குமறிவரியோன்றில்லையம்பலம்போல்
வளவியவான்கொங்கைவாட்டடங்கண்ணுதன்மாமதியின்
பிளவியன்மின்னிடைபேரமைதோளிதுபெற்றியென்றாற்
கிளவியையென்னோவினிக்கிள்ளையார்வாயிற்கேட்கின்றதே.

(இ - ள்.) அளவியை யார்க்கும் அறிவரியோன் - அளவை யார்க்கும் அறிதற்கரியசிவனது,—தில்லை யம்பலம்போல்-தில்லை யம்பலம் போல,—வான் கொங்கை வளவிய - பெருங் கொங்கைகள் வளத்தை யுடையன,—தடம் கண் வாள் - பெரிய கண்கள் வாளோ டொக்கும்,—நுதல் மா மதியின் பிளவியல் - நுதல் பெரிய மதியின் பாகத்தி னியல்பையுடைத்து,—இடை மின் - இடைமின்னோ டொக்கும்,—தோள் பெரு அமை-தோள்

ள் பெரிய வேயோ டொக்கும்,—பெற்றி இது என்றால் - (இவ ளது) தன்மை இதுவானால்,—கிள்ளையார் வாயின் கிளவியை- கிள்ளைபோல்வாள் வாயின் மொழியை,— இனி கேட்கின்றது என்-இனிக் கேட்க வேண்டுகின்றதென்? (அதுவும் தக்கதேயிருக் கும்.) எ - று. மெய்ப்பாடு - உவகை, பயன் - நயப்புணர்த்துதல்.

கிளவி - வாய்மொழி. அவயவங் கண்டெம்புழி உறுதன் முத லிய நான்கையுங் கண்டென்றார். (கO)

நலம்புனைந்துரைத்தல்.

பொங்கிழையைப் புனைநலம்புகழ்ந்
தங்கதிர்வேலோ னயர்வுநீங்கிய து.

(எ - து.) (கிளவிவேட்டு வருந்தக்கண்ட) மிகுந்த ஆபரணத்தை யுடைய தலைமகள் (முறுவல் செய்யக் கண்டு) அழகிய ஒளியுள்ள வேலேந்திய தலைமகன் (அவளது) புனையப்பட்ட இயற்கை நலத்தைப் புக ழ்ந்துகூறி (சொல்லாடாமையா லுண்டாகிய) வருத் தம் நீங்கியது.

ம்பலங்கைத்தலத்தன்பரென்பூடுருகக்குனிக்கும்
ாம்பலங்காரப்பரன்றில்லையம்பலம்பாடலரிற்
றம்பலஞ்சிற்றிடையீங்கிவடீங்கனிவாய்கமழு
ாம்பலம்போதுளவோவளிகாணும்மகன்பணையே.

(இ-ள்.) அளிகாள்-வண்டுகாள் !—நும் அகன் பணை - ந கன்ற மருதநிலத்து,—கூம்பு கைத்தலத்து அன்பர் என்பு டுருக குனிக்கும் - கூம்புங் கைத்தலங்களையுடைய அன்பரது ன்பும் உள்ளுருகக் கூத்தாடாநின்ற,—பாம்பு அலங்காரப்பரன் ல்லையம்பலம் பாடலரின் - பாம்பாகிய அணியையுடைய சிவ து தில்லையம்பலத்தைப் பாடாதாரைப்போல,—தேம்பு சிறு டை ஈங்கிவள் தீம் கனி வாய்-தேம்பும் சிறிய இடையையுடை இவளது இனிதாகிய கனிக்க வாய்போல,—கமழும் ஆம்பலம்

போது உளவோ - நாறும் ஆம்பற் பூக்கள் உளவோ (சொல் லுமின்.) எ-று. மெய்ப்பாடு-உவகை. பயன்-நயப்புணர்த்துதல்.

அல்லும் அம்மும் அல்வழிச்சாரியை. கனிவாய்-கனிபோலும் வாயெனினுமமையும். ஈங்கிவள்-ஒருசொல். (கக)

## பிரிவுணர்த்தல்.

பணிவளர் அல்குலைப் பயிர்ப்புறுத்திப்
பிணிமலர்த்தாரோன் பிரிவுணர்த்தியது.

(எ-து.) பாம்பின் (படம்போலும்) வளர்கின்ற அல்குலை யுடைய தலைமகளைத் தொடுக்கப்பட்ட மலர் மாலையை யுடைய தலைமகன்(அவள் முறுவல்செய்து நாணினால்வருந்துவதையறியாது) அவளுக்குப்பழக்க மில்லாத பிரிவினைக்கருதி வருந்துகின்றாளென வுட் கொண்டு, (நின்னை) நீங்கி (யான்) ஆற்றேனென் றுணர்த்தியது.

சிந்தாமணிதெண்கடலமிர் தந்தில்லையானருளால்
வந்தாலிகழப்படுமேமடமான்விழிமயிலே
யந்தாமரையன்னமேநின்னையானகன்றாற்றுவனோ
சிந்தாகுலமுற்றென்னோவென்னைவாட்டந்திருத்துவதே.

(இ - ள்.) சிந்தாமணி - (ஒருவன் தவஞ்செய்துபெறுஞ்) சிந்தாமணியும்,—தெள் கடல் அமிர்தம்-தெளிந்தகடலின் அமிர் தமும்,— தில்லையான் அருளால் வந்தால்-தில்லையான் அருளால் (தாமே) வந்தால்,—இகழப்படுமே - (அவை) இகழப்படுமா ?— மடமான் விழி மயிலே - மடமான்விழிபோலும் விழியையுடைய மயிலே!—அம் தாமரை அன்னமே - அழகியதாமரைக்கண்வா ழும் அன்னமே!—நின்னை யான் அகன்று ஆற்றுவனோ - உன்னை யான் பிரிந்தாற்றி யுள்ளவனோ ?—சிந்தாகுலமுற்று என்னை வாட்டந் திருத்துவது என்னோ - சிந்தையின் மயக்கமுற்று

ானன்னை வாட்டுவதென்னே? எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - பிரிவச்சமுணர்த்துதல்.

நின்னையென்புழி உயிரினுஞ் சிறந்தநின்னை யென்றும், யானெ ன்புழி இருதலைப்புள்ளி னோருயிரோனாகிய யானென்றும், அச் சொற்களான் விளங்கின. வாட்டத்திருத்துவதென்றும் பாடம்.

.பருவாலறிதல்.

'பிரிவுணர்ந்த பெண்கொடிதன்
பருவரலின் பரிசுநினைந்த து.

(எ-து.) பிரிவென்பதொன்றுண்டென்றறிந்த பெ ண்ணாகிய கொடிபோன்ற நல்லமகள் (அதனால்) தனக் குண்டாகிய துன்பத்தின் தன்மையை யெண்ணியது.

கோங்கிற்பொலியரும்பேய்கொங்கைபங்கன்குறுகலரூர்
ங்கிற்புகச்செற்றகொற்றவன்சிற்றம்பலமனையா
ீங்கிற்புணர்வரிதென்றோநெடிதிங்ஙனேயிருந்தா
ாங்கிற்பழியாமெனவோவறியேனயர்கின்றதே.

(இ - ள்.) கோங்கின் பொலி அரும்பு ஏய் கொங்கை பங்கன்- காங்கின்கண் உண்டாகிய பொலிந்த அரும்பையொக்கும் முலை டையாளது பங்கையுடையான்,—குறுகலர் ஊர் தீங்கில் புக சற்ற கொற்றவன் - குறுகாதார்புரங்கள் (பாசண்ட தருமமா ய) தீங்கிலேபுகுதலான் (அவற்றைக்) கெடுத்த வெற்றியை டையான்,— சிற்றம்பலம் அனையாள் அயர்கின்றது - (அவ து) திருச்சிற்றம்பலத்தை யொப்பாள் வருந்துகின்றது,— ங்கில் புணர்வது அரிதென்றோ - பிரிந்தால்கூடுவ தரிதென்று னைந்தோ?—நெடிது இங்ஙனே இருந்தால் ஆங்கு இல் பழியாம் னவோ - நெடும்பொழுது இவ்வாறிருந்தால் அவ்விடத்துக் டிப்பழியாமென்று நினைந்தோ?— அறியேன் - அறிகிலேன். -று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த மருட்கை; பயன் - பங் தீர்தல்.

ஆங்கு-சுற்றத்தாரிடத்தும் அயலாரிடத்தும் எனினும், 'ஆங்கு' அசைநிலை யெனினுமமையும். (கங)

## அருட்குணமுரைத்தல்.

கூட்டியதெய்வத் தின்னருட்குணம்
வாட்டமின்மை வள்ளலுரைத்தது.

(எ - து.) (நம்மிருவரையும்) கூட்டிய தெய்வத்தினது இனிய அருட்குணத்தால் (பிரிந்தேமாயினும் பிரிவில்லை யாதலால்) வாடுதலின்மையை வள்ளற்றன்மையுடைய தலைமகன் கூறியது.

தேவரிற்பெற்றநஞ்செல்வக்கடிவடிவார்திருவே
யாவரிற்பெற்றினியார்சிதைப்பாரிமையாதமுக்கண்
மூவரிற்பெற்றவர்சிற்றம்பலமணிமொய்பொழில்வாய்ப்
பூவரிற்பெற்றகுழலியென்வாடிப்புலம்புவதே.

(இ - ள்.) தேவரில் பெற்ற நம் செல்வ கடி - (முயற்சியும் உளப்பாடுமின்றி) தெய்வகதியாய்ப்பெற்ற நமது அழகியமணத்தை,—வடிவு ஆர் திருவே-வடிவார்ந்த திருவே!—இனி யாவரில் பெற்று யார் சிதைப்பார்-இனி (சிதைத்தற்கிடாகிய தன்மையை) யாவராலேபெற்று யார் சிதைப்பார்?—இமையாத முக்கண் மூவரில் பெற்றவர் சிற்றம்பலம் - இமையாத மூன்றுகண்களையும் மூவராலே பெற்றவரது சிற்றம்பலத்தை,—அணி மொய் பொழில்வாய் பூ அரில் பெற்ற குழலி - அழகுசெய்த செறிந்த பொழிலிடத் துளவாகிய பூக்களது பிணக்கத்தைப்பெற்ற குழலையுடையாய்!—வாடி புலம்புவது என் - (நீ) பொலிவழிந்து துன்பப்படுகின்ற தென்னோ? எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வன்புறை.

மூவர்—சந்திரர் ஆதித்தர் செந்தீக்கடவுள். (கச)

இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.

மடவரலை வற்புறுத் தி
இடமணித்தென் றவணியம்பியது.

(எ-து.) (அருட்குணமுணர்ந்தும் ஆற்றுமை நீங்காத) தலைமகட்குத் தலைமகன் எமதூர் சமீபத்தி லுள்ளதென வற்புறுத்திச் சொல்லியது.

நங்குன்றமொன்றுரித்தோன்றில்லையம்பலவன்மலயத்
நங்குன்றவாணரிளங்கொடியேயிடரெய்தலெம்மூர்ப்
நங்குன்றமாளிகைநுண்களபத்தொளிபாயநும்மூர்க்
நங்குன்றம்வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங்கனங்குழையே.

(இ - ள்.) வரும் குன்றமொன்று உரித்தோன் - இயங்குமலை யிய யானையையுரித்தவன்,— தில்லையம்பலவன் - தில்லையம் பத்தையுடைய சிவன், — மலயத்து - (அவனது பொதியின்) லயிடத்து,—இரும் குன்றவாணர் இளங்கொடியே - பெரிய ன்றத்தின்கண் வாழ்வாருடைய மகளே !— இடர் எய்தல் - நத்தத்தைவிடு,—கனங்குழையே - கனங்குழாய் ! — எம்மூர் நம் குன்றம் மாளிகை - எம்மூரிடத்துப் பெரியகுன்றம்போ ம் மாளிகைகளின்,—நுண் களபம் ஒளி பாய - நுண்ணிதா ப சாந்தினொளி பரந்து,—நும் ஊர் கரு குன்றம் வெள் நிறம் ஞ்சுகம் ஏய்க்கும் - நும்மூர்க்க ணுண்டாகிய கரியகுன்றம் வள்ளை நிறத்தையுடைய சட்டையிட் டதனோ டொக்கும். று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - இடமணித்தென்று ற்புறுத்தல். (சரு)

ஆடிடத்துய்த்தல்.

வன்புறையின் வற்புறுத் தி
அன்புறுமொழியை யருககன்றது.

(எ-து.) பேருவகை மீதூரலான் வற்புறுத்தி அன் புற்ற மொழியையுடைய தலைமகளை (நோக்கி யாணிங்

ஆங்கு-சுற்றத்தாரிடத்தும் அயலாரிடத்தும் எனினும்; ஆங்கு-அசைநிலை யெனினுமமையும். (கரு)

## அருட்குணமுரைத்தல்.

கூட்டியதெய்வத் தின்னருட்குணம்
வாட்டமின்மை வள்ளலுரைத்தது.

(எ - து.) (நம்மிருவரையும்) கூட்டிய தெய்வத்தினது இனியஅருட்குணத்தால் (பிரிந்தேமாயினும் பிரிவில்லை யாதலால்) வாடுதலின்மையை வள்ளற்றன்மையுடைய தலைமகன் கூறியது.

தேவரிற்பெற்றநஞ்செல்வக்கடிவடிவார்திருவே
யாவரிற்பெற்றினியார்சிதைப்பாரிமையாதமுக்கண்
மூவரிற்பெற்றவர்சிற்றம்பலமணிமொய்பொழில்வாய்ப்
பூவரிற்பெற்றகுழலியென்வாடிப்புலம்புவதே:

(இ - ள்.) தேவரில் பெற்ற நம் செல்வ கடி - (முயற்சியும் உளப்பாடுமின்றி) தெய்வகதியாய்ப்பெற்ற நமது அழகியமணத்தை,—வடிவு ஆர் திருவே-வடிவார்ந்த திருவே!—இனி யாவரில் பெற்று யார் சிதைப்பார்-இனி(சிதைத்தற்கிடாகிய தன்மையை) யாவராலேபெற்று யார் சிதைப்பார்?—இமையாத முக்கண் மூவரில் பெற்றவர் சிற்றம்பலம் - இமையாத மூன்றுகண்களையும் மூவராலே பெற்றவரது சிற்றம்பலத்தை,—அணி மொய் பொழில்வாய் பூ அரில் பெற்ற குழலி - அழகுசெய்த செறிந்த பொழிலிடத் துளவாகிய பூக்களது பிணக்கத்தைப்பெற்ற குழலையுடையாய்!—வாடி புலம்புவது என் - (நீ) பொலிவழிந்து துன்பப்படுகின்றது தென்னோ? எ - று. மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - வன்புறை.

மூவர்—சந்திரர் ஆதித்தர் செந்தீக்கடவுள். (கசா)

### இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.

மடவரலை வற்புறுத் தி
இடமணித்தென் றவனியம்பியது.

(எ-து.) (அருட்குண முணைத்தும் ஆற்றுமை நீங்காத) தலைமகட்குத் தலைமகன் எமதூர் சமீபத்தி லுள்ளதென வற்புறுத்திச் சொல்லியது.

வருங்குன்றமொன்றுரித்தோன்றில்லையம்பலவன்மலயத்
திருங்குன்றவாணரிளங்கொடியேயிடரெய்தலெம்மூர்ப்
பருங்குன்றமாளிகைநுண்களபத்தொளிபாயநும்மூர்க்
கருங்குன்றம்வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங்கனங்குழையே.

(இ - ள்.) வரும் குன்றமொன்று உரித்தோன் - இயங்குமலையாகிய யானையையுரித்தவன்,— தில்லையம்பலவன் - தில்லையம்பலத்தையுடைய சிவன், — மலயத்து - (அவனது பொதியின்) மலையிடத்து,—இரும் குன்றவாணர் இளங்கொடியே - பெரிய குன்றத்தின்கண் வாழ்வாருடைய மகளே!— இடர் எய்தல் - வருத்தத்தைவிடு,—கனங்குழையே - கனங்குழாய்! — எம்மூர் ப்ரும் குன்றம் மாளிகை - எம்மூரிடத்துப் பெரியகுன்றம்போலும் மாளிகைகளின்,—நுண் களபம் ஒளி பாய - நுண்ணிதாகிய சாந்தினொளி பரந்து,—நும் ஊர் கரு குன்றம் வெள் நிறம் கஞ்சுகம் 'ஏய்க்கும் - நும்மூர்க்கணுண்டாகிய கரியகுன்றம் வெள்ளை நிறத்தையுடைய சட்டையிட்டதனே டொக்கும். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - இடமணித்தென்று வற்புறுத்தல். (சரு)

### ஆடிடத்துய்த்தல்.

வன்புறையின் வற்புறுத் தி
அன்புறுமொழியை யருககன்றது.

(எ-து.) பேருவகை மீதூரலான் வற்புறுத்தி அன்புற்ற மொழியையுடைய தலைமகளை (நோக்கி யானிங்

ஙனே ஒளித்து அங்ஙனே வருகின்றேனென்) ஆடி டத்துய்த்து நீங்கியது.

தெளிவளர்வான்சிலைசெங்கனிவெண்முத்தர்திங்களின்வாய்ந்
தளிவளர்வல்லியன்னாய்முன்னியாடுபின்யானளவா
வொளிவளர்தில்லையொருவன்கயிலையுகும்பெருந்தேன்
றுளிவளர்சாரற்கரந்துங்ஙனேவந்துதோன்றுவனே.

(இ - ள்.) தெளி வளர் வான் சிலை செம் கனி வெள் முத்தம் திங்களின் வாய்ந்து - கால்நிமிர்ந்த பெரியசிலைகளும், சிவந்த மகாவ்வைக்கனியும், வெள்ளிய முத்தங்களும், (ஒரு) திங்களின் கண்ணே வாய்ப்ப, — அளி வளர் வல்லியன்னாய் - வண்டுகள் தங்கும்கொடியை யொப்பாய்! — முன்னி ஆடு - (யான் சொன்னவற்றை) நினைந்து (முற்பட்டு) விளையாடுவாயாக,—ஒளி வளர் தில்லை அளவா ஒருவன் - ஒளி வளராநின்ற தில்லைக்கணுளனாகிய அளக்கப்படாத ஒருவனது, — கயிலை உகு பெரும் தேன் துளி வளர் சாரல் கரந்து யான் பின் உங்ஙனே வந்து தோன்றுவன் - கைலையிடத்துச்சிந்தும் பெருந் தேன்துளிகள் பெருகும் சாரற் (பொதும்பரில்) ஒளித்திருந்து யான் பின்னும் உவ்விடத்தேவந்து தோன்றுவேன். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - இடங்குறித்து வற்புறுத்தல்.

தெளிவளர்வான்சிலை யென்பதற்கு ஒளிவளருஞ் சிலையென் றுரைப்பினு மமையும். (கசு)

## அருமையறிதல்.

சுற்றமு மிடனுஞ் சூழலு நோக்கி
மற்றவ ளருமை மன்ன னறிந்தது.

(எ-து.) (பின் தலைமகளின்) ஆயவெள்ளத்தையும, (அவளிருந்த) இடத்தையும் (அதைச்சூழ்ந்த) சோலை

யையும் கண்டு (இனியிவள் எய்தற்கரியளென) அவள தருமையைத் தலைமகனறிந்து (வருந்தியது).

புணர்ப்போனிலனும் விசும்பும்பொருப்புந்தன் பூங்கழலின், றுணர்ப்போதெனக்கணி யாக்குந்தொல்லோன்றில்லைச் சூழ்பொழில்வா, யிணர்ப்போதணிகுழ லேழைநன்னீர்மையிந் நீர்மையென்றாற், புணர்ப்போகனவோ பிறிதோவறியேன் புகுந்ததுவே.

(இ - ள்.) இணர் போது அணி குழல் ஏழைதன் நீர்மை இந் நீர்மை என்றால் - பூங்கொத்துக்களை யணிந்த குழலையுடைய மாதினது நீர்மை இத்தன்மையாயின்,— நிலனும் விசும்பும் பொருப்பும் புணர்ப்போன் - மண்ணையும் விண்ணையும் (மண்ணின்கணுள்ள) மலையையும் படைப்போன்,— தன் பூம் கழலின் துணர் போது எனக்கு அணி ஆக்கும் தொல்லோன் - தன்னுடைய பொலிவினையுடைய திருவடியாகிய துணர்ப்போதுகளை எனக்கு முடியணியாக்கும் பழையோன்,— தில்லை சூழ் பொழில்வாய் - (அவனது) தில்லைநகரத்தின்கண் ணுண்டாகிய சூழ்பொழிலிடத்து,— புகுந்தது புணர்ப்போ கனவோ பிறிதோ அறியேன் - (இவள்) புகுந்தது மாயமோ கனவோ (இரண்டுமன்றி) வேறொன்றோ இன்னதென்றறியேன். எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - தலைமகளது அருமை யுணர்தல்.

பூங்கழலென்பது பூப்போலுங் கழலெனவுவமைத்தொகையாய்க் கழலென்னுந் துணையாய்நின்றதெனினுமமையும். வீரக் கழலையுடைய துணர்ப்போதென் றுரைப்பினுமமையும். பிறிதோவென்பதற்கு நனவோ எனினுமமையும். பொழில்வாயிணர்ப்போ தென்பாருமுளர். (கஎ)

பாங்கியையறிதல்.

கடல்புரையாயத்துக் காதற்றோழியை
மடவரல்காட்ட மன்னனறிந்தது.

(எ-து.) கடல்போன்ற (அவ்) ஆயவெள்ளத்துள் தலைமகள் (தன்) காதற்றோழியைக் (கடைக்கண்) குறிப்பாற் காட்டத் தலைமகன் (இதுவும் தனக்கோர் சார்பாமென உட்கொண்டு) அவளை யறிந்தது.

உயிரொன் றுளமுமொன் றொன்றேசிறப்பிவட் கென்னொடென்னப், பயில்கின்றசென்று செவியுறநீள்படைக் கண்கள்விண் வாய்ச், செயிரொன்றுமுப்புரஞ் செற்றவன்றில்லைச்சிற்றம்பலத் துப், பயில்கின்றகூத்த னருளென லாகும் பணிமொழிக்கே.

(இ - ள்.) இவட்கு என்னொடு உயிர் ஒன்று உளமும் ஒன்று சிறப்பு ஒன்று என்ன - (அருகிலிருக்கும்) இப்பாங்கிக்கு என்னோடு உயிருமொன்று மனமுமொன்று (குரவர்களாற் செய்யப் படும்) சிறப்புக்களும் ஒன்றென்றுசொல்லி,—விண்வாய் செயிர் ஒன்றும் முப்புரம் செற்றவன் - விண்ணிடத்துக் குற்றம்பொ ருந்தின மூன்றுபுரத்தினையும் கெடுத்தவன்,—தில்லைச்சிற்றம் பலத்து பயில்கின்ற கூத்தன் - தில்லைச்சிற்றம்பலத்தின்கண் இடைவிடாதாடுகின்ற கூத்தை யுடையவன்,— அருள் எனலா கும் - (அவனது) அருளென்று கூறியத்தகும்,— பணி மொ ழிக்கு - தாழ்ந்த மொழிகளை யுடையாட்கு, — நீள் படை கண் கள் - நீண்ட படைபோலுங் கண்கள்,—செவியுற - செவியுறும் வண்ணம், — சென்று பயில்கின்ற - சென்று பயிலாநின்றன (அதனால் இவள்போலும் இவட்குச் சிறந்தாள்). எ-று. மெய்ப் பாடு - பெருமிதம் ; பயன் - ஆற்றாமைநீங்குதல்.

அருளென்பது - அருளின்வரும் ஆனந்தம். (கஅ)

இயற்கைப்புணர்ச்சி முற்றிற்று.

---

# பாங்கற்கூட்டம்,

என்பது, தெய்வப்புணர்ச்சி புணர்ந்ததலைமகன், தெருண்டு வரைதலைத் தெருளானுய்த் தன்பாங்கனுற் சென்றெய்துதல்.

இக்கிளவி முப்பது துறைகளையுடைத்து. அவைவருமாறு:—

நினைதல்வினுத லுற்றதுரைத்தல், கழறல்மறுத்தல் கவன்றுரைத்தல்லே, வலியழிவுரைத்தல் விதியொடுவெறுத்தல், நொந்துகூறல் நோதனீங்கி, இயலிடங்கேட்ட லியலிடங்கூறல், வற்புறுத்தல்குறி வழிச்சேறல்காண்டல், வியந்துரைத்தலம் மெல்லியல்தன்னைக், கண்டமைகூறல் கருத்துக்கேற்பச், செவ்வி செப்ப லவ்விடத்தேகல், ஈங்கிவைநிற்க விடந்தலைநனக்கும், ஆங்கவண்மெலிதல் பொழில்கண்டுமகிழ்தல், நீங்காமகிழ்வொடு நிலைகண்டுவியத்தல், தளர்வகன்றுரைத்தல் மொழிபெறவருந்தல், மண்புதைவருத்தங் காவல்காண்விடல், நண்பொடுசென்று நன்மருங்கணைதல், இன்றியமையாமை யாயத்துய்த்தல், நின்றுவருந்தல் நிகழாறைந்தும், துன்றுபாங்கற் றுறையெனமொழிப.

### பாங்கனை நினைதல்.

எய்துதற்கருமை யேழையிற்றோன்றப்
பையுளுற்றவன் பாங்கனைநினைந்த து.

(எ - து.) தலைமகளிடத்தே (தான்) சென்றடைதற் கருமைதோன்ற மயக்கமுற்ற தலைமகன் தன் பாங்கனை நாடியது.

பூங்கனையார்புனற்றென்புலியூர்புரிந்தம்பலத்து
ளாங்கெனையாண்டுகொண்டாடும்பிரானடித்தாமரைக்கே
பாங்கனையானன்னபண்பனைக்கண்டிப்பரிசுரைத்தா
லீங்கெனையார்தடுப்பார்மடப்பாவையையெய்துதற்கே.

(இ-ள்.) பூ கனை ஆர் புனல் தென்புலியூர் அம்பலத்துள் புரிந்து - பூக்களையுடைத்தாய் முழங்குதல் நிறைந்த புனலையுடைத்தாகிய தென்புலியூர் அம்பலத்தின்கண்விரும்பி,—ஆங்கு எனை ஆண்டுகொண்டு ஆடும் பிரான் அடி தாமரைக்கே பாங்கனே - அவ்வாறு என்னை ஆண்டுகொண்டு ஆடும்பிரானுடைய அடியாகிய தாமரைகளுக்கே பாங்காயுள்ளானே,—யான் அன்ன பண்பனே - என்னையொத்த குணமுடையானே, — கண்டு இப்பரிசு உரைத்தால் - கண்டு (இகழ்ந்து) இப்பரிசை யுரைத்தால், — மடம் பாவையை எய்துதற்கு ஈங்கு எனை தடுப்பார் யார் - மடப்பத்தையுடைய பாவைபோன்றவளை அடைதற்கு இவ்வுலகத்தின்கண் என்னைத் தடுப்பவர் யாவர்? எ - று. மெய்ப்பாடு - அசைவுபற்றிவந்த அழுகை; பயன்-ஆற்றாமை நீங்குதல்.

இன் - ஏழனுருபாதல் புறனடையாற் கொள்க. (கசு)

**பாங்கன்வினுதல்.**

கலிகெழுதிரடோள் மெலிவதுகண்ட
இன்னுயிர்ப்பாங்கன் மன்னனைவினுயது.

(எ-து.) புகழாலவந்த ஆரவாரந்தழைத்த தோள்கள் வருந்துவதுகண்ட இனிய உயிர்போன்ற பாங்கன் (தன்னை நாடிவந்த) தலைமகனை வினவியது.

சிறைவான்புனற்றில்லைச்சிற்றம்பலத்துமென்சிந்தையுளு
முறைவானுயர்மதிற்கூடலினுய்ந்தவொண்டீந்தமிழின்
றுறைவாய்நுழைந்தனையோவன்றியேழிசைச்சூழல்புக்கோ
விறைவாதடவரைத்தோட்கென்கொலாம்புகுந்தெய்தியதே.

(இ - ள்.) சிறை வான் புனல் தில்லைச்சிற்றம்பலத்தும் - ... லாயுள்ள மிக்க நீரையுடைய தில்லைச்சிற்றம்பலமாகிய (நல்ல) இடத்தும்,—என் சிந்தையுளும் - என்னுடைய நெஞ்சமாகிய (தீய) இடத்தும், — உறைவான் உயர் மதில் கூடலின் ஆய்ந்த ஒள் தீம் தமிழின் துறைவாய் நுழைந்தனையோ - (ஒப்பத்) தங்

குமவனது உயர்ந்த மதிலையுடைய கூடலின்கண் ஆராய்ந்த ஒள்ளிய இனிய தமிழின்துறைகளிடத்து நுழைந்தாயோ?—அன்றி ஏழ் இசை சூழல் புக்கோ - அல்லது ஏழிசையினது சூழலின்கண் புகுதலாலோ, — இறைவா - இறைவனே !—தடம் வரை தோட்கு புகுந்து எய்தியது என்கொல் - பெரியவரைபோலு (நின்)தோள்கட்கு (மெலியப்) புகுந்து எய்தியதென்னோ? எ-று. மெய்ப்பாடு - அணங்குபற்றிவந்த அச்சம்; பயன் - தலைமகனுக்கு உற்றதுணர்தல்.

கொல் - கொலாமென ஈறுதிரிந்தது. ஆம் - அசைநிலையெனினுமமையும். (உ0)

### உற்றதுரைத்தல்.

மற்றவன் வின வ
உற்ற துரைத்த து.

(எ - து.) பாங்கன் வினவத்தலைமகன் தனக்குற்ற (வருத்தத்தை) உரைத்தது.

கோம்பிக்கொதுங்கிமேயாமஞ்ஞைகுஞ்சரங்கோளிழைக்கும்
பாம்பைப்பிடித்துப்படங்கிழித்தாங்கப்பணைமுலைக்கே
தேம்பற்றுடியிடைமான்மடநோக்கிதில்லைச்சிவன்று
ளாம்பொற்றடமலர்சூடுமென்னாற்றலகற்றியதே.

(இ - ள்.) கோம்பிக்கு ஒதுங்கி மேயா மஞ்ஞை - ஓந்திக்கு விலகி (இரை) கவராத மயிலானது,—குஞ்சரம் கோள் இழைக்கும் பாம்பை பிடித்து படம் கிழித்தாங்கு - யானைக்குத் துன்பத்தைச் செய்யும் அரவினைப்பற்றிப் படத்தினைக் கிழித்தது போல, — மான் மடம் நோக்கி அப்பணை முலைக்கே தேம்பல் துடி இடை - மான்போலும் மடமைபொருந்திய விழியை யுடையாளுடைய அந்தப் பருத்த முலையினாலே தேய்தலையுடைய உடுக்கையையொத்த மருங்குலானது,—தில்லை சிவன் தாளாம் பொன் தடம் மலர் சூடும் என் ஆற்றல் அகற்றியது - தில்லை

யிலிருக்கின்ற சிவனுடைய பாதமாகிய பொன்னைப்போலச் (சிறந்த) பெரிய தாமரைப்பூவை அணிகின்ற எனது வலிமையை நீக்கியது. எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - பாங்கற்கு ணர்த்துதல்.

மற்று-அசை. குஞ்சரம் உவமைக்கு அடையாய்ப்பாம்பினது ஆற்றலை விளக்கிற்று; கடமலர் உவமிக்கப்படும் பொருட்கு அடையாய்த் தலைமகனது ஆற்றலை விளக்கிற்று. துடியிடையை யுடைய மான்மடநோக்கி என்னுற்றலகற்றியது, மஞ்ஞைபாம் பைப்பிடித்துப் படத்தைக் கிழித்தாற்போலுமெனக் கூட்டி யுரைப்பாருமுளர். (உக)

கழறியுரைத்தல்.

வெற்பனைத் தன் மெய்ப்பாங்கன்
கற்பனையிற் கழறியது.

(எ - து.) வெற்பனுகிய தலைமகனைநோக்கி அவ னுடைய உற்றதுகேட்ட உயிர்ப்பாங்கன் (இது) நின் கற்பனைக்குப் போதாதென் றுறுதியாகச்சொன்னது.

உளமாம்வகைநம்மையுய்யவந் தாண்டுசென் றும்பருய்யக்
களமாம்விடமமிர் தாக்கியதில்லைத்தொல்லோன்கயிலை
வளமாம்பொதும்பரின்வஞ்சித் துநின்றோர்வஞ்சிமருங்கு
லிளமான்விழித்தென் றோவின்றெம்மண்ணலிரங்கியதே.

(இ - ள்.) உளம் ஆம் வகை உய்ய வந்து நம்மை ஆண்டு - (உளமாயும் இலமாயும் மாறிவாராது எப்பொழுதும்) உள்ளோ மாகும்வண்ணம் (பிறவித் துன்பத்தினின்றும்) பிழைக்க (தான்) வந்து நம்மை ஆதரவுசெய்து,— உம்பர் சென்று உய்ய களம் ஆம் விடம் - தேவர்கள் (தன்னிடத்தில்) வந்து பிழைக்கக்கண் டத்தின்கண் உளதாகும் நஞ்சை,—அமிர் தாக்கிய தில்லை தொல் லோன் - அமுதமாகச்செய்த தில்லையின்கணுள்ள பழையோ னுகிய (சிவனது), — கயிலை வளம் மா பொதும்பரில் வஞ்சித்து

நின்று ஓர் வஞ்சி மருங்குல் இள மான் விழித்ததென்றோ - கைலை மலையில் வளப்பம்பொருந்திய மாஞ்சோலைக்கண் வஞ்சனைசெய்வது (என்றறியாது) நின்று ஒரு பூங்கொடிபோலும் இடையினை யுடைய இளமையாகிய மான்பார்த்ததென்றோ,—எம் அண்ணல் இன்று இரங்கியது - எம்முடைய இறைவனாகிய (தலைமகன்) இன்று மயங்கினது. எ - று. மெய்ப்பாடு - எள்ளல்பற்றி வந்த நகை; பயன் - கழறுதல்.

நம்மையென்றது - நம்மைப்போல்வாரை. களமார் விடமென்பதூஉம் பாடம். (உஉ)

## கழற்றெதிர்மறுத்தல்.

ஆங்குயி ரன்ன பாங்கன் கழற
வளந்தருவெற்ப னுளந்தளர்ந் துரைத்தது.

(எ - து.) உயிரன்னபாங்கன் அவ்வாறு சொல்ல, வளப்பத்தையுதவும் மலைநாடனாகிய தலைமகன் மனந்தளர்ந்து சொல்லியது.

சேணிற்பொலிசெம்பொன்மாளிகைத்தில்லைச்சிற்றம்பலத்து
மாணிக்கக்கூத்தன்வடவான்கயிலைமயிலைமன்னும்
பூணிற்பொலிகொங்கையாவியையோவியப்பொற்கொழுந்தைக்
காணிற்கழறலைகண்டிலைமென்றோட்கரும்பினையே.

(இ - ள்.) சேணில் பொலி செம் பொன் மாளிகை தில்லை சிற்றம்பலத்து மாணிக்கம் கூத்தன் - தூரத்தில் விளங்குகின்ற சிவந்த பொன்னாற்செய்த மாளிகைகளையுடைய தில்லைநகரத்தி லுள்ள திருச்சிற்றம்பலத்தின்கண் மாணிக்கம்போலும் கூத்தைச்செய்கின்ற சிவனது, — வட வான் கயிலை மயிலை - வடக்கின்கண்ணுள்ள பெரிய கயிலைமலையினிடத்து (வாழும்) மயிலை யொப்பாளை, — மன்னும் பூணின் பொலி கொங்கை ஆவியை - பொருந்திய ஆபரணங்களால் விளங்குகின்ற முலைகளையுடைய (என்) உயிரையொப்பாளை, — ஓவியம் பொன் கொழுந்தை -

சித்திரமாகிய பொன் (வண்ணமாகக் கொண்டெழுதிய) கொ ழுந்தை யொப்பாளை, — மெல் தோள் கரும்பினை கண்டிலை - மெல்லிய தோளையுடைய கரும்புபோல்வாளைக் காணவில்லை,— காணின் கழறலை - கண்டனையாகில் கழறமாட்டாய். எ - று. மெய்ப்பாடு,- அழுகையைச்சார்ந்து வருத்தம்பற்றிவந்த இளி வரல்; பயன் - பாங்கனை யுடம்படுவித்தல்.

வளந்தருவென்பது வெற்புக்கடை. "வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே" என்பவாகலின் வெற்பனுக்காக்கினுமாம்..

## கவன்றுரைத்தல்.

கொலைக்களிற் றவ்வனை குறைநயந் துரைப்பக்
கலக்கஞ் செய்பாங்கன் கவன்றுரைத் தது.

(எ-து.) கொலைத்தொழில் புரியும் யானையையுடை ய தலைமகன் (தன்) குறையை விரும்பிக்கூறக் கலங் காநின்ற பாங்கன் கவலைகொண்டு கூறியது.

விலங்கலைக்கால்விண்டுமேன்மேலிடவிண்ணும்மண்ணுமுந்நீர்க்
கலங்கலைச்சென்றவன்றுங்கலங்காய்கமழ்கொன்றைதுன்று
மலங்கலைச்சூழ்ந்தசிற்றம்பலத்தானருளிலவர்போற்
றுலங்கலைச்சென்றிதென்னோவள்ளலுள்ளந்துயரின்றதே.

(இ-ள்.) விலங்கலை கால் விண்டு மேல் மேல் இட - மலைகளைக் காற்றுடைத்து பிளந்து மேலுமேலுமிட,—விண்ணும் மண்ணும் முந் நீர் கலங்கலை சென்ற அன்றும் கலங்காய் - வானுலகும் மண்ணுல கும் கடலால் கலங்குதலை யடைந்த அப்பொழுதும் கலங்கமாட் டாய், — கமழ் கொன்றை துன்றும் அலங்கலை சூழ்ந்த சிற்றம்ப லத்தான் - மணக்கின்ற கொன்றைப்பூக்கள் நெருங்கிய மாலை யைச்சுற்றிய திருச்சிற்றம்பலத்திலுள்ள சிவனது,—அருள் இல் லவர்போல் - கிருபை யில்லாதவர்களைப்போல்,— துலங்கலை சென்று உள்ளம் துயரின்றது இது என்னோ வள்ளல் - துளங் குதலையடைந்து (நினது) மனம் துன்புறுகின்றது இஃது

என்னையோ? இறைவனே! எ-று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - கழறுதல்.

மேல் பொதுவகையானும், ஈண்டு விசேடவகையானுங் கழறினனென்பதாம். (உ௪)

## வலியழிவுரைத்தல்.

நிறைபொறைதேற்ற நீதியொடுசால் பு
மறியுறுநோக்கிற்கு வாடினேனென்றது.

(எ - து.) (முன்பு நீகூறிய அத்தன்மையோனாகிய யான் இன்று) மான்போன்றவளது விழியால் நிறை, பொறுமை, தெளிவு, நீதியுடன் சால்பு, இவைகளை அழிந்து வருந்தினேன் என்றது.

தலைப்படுசால்பினுக்குந் தளரேன்சித்தம்பித்தனென்று
மலைத்தறிவாரில்லையானையுந்தேற்றுவனெத்துணையுங்
கலைச்சிறுதிங்கண்மிலைத்தசிற்றம்பலவன்கயிலை
மலைச்சிறுமான்விழியாலழிவுற்றுமயங்கினனே.

(இ - ள்.) தலை படு சால்பினுக்கும் தளரேன் - முதன்மைப் படும் அமைதிக்கும் (மனம்) தளரேன்,—சித்தம் பித்தனென்று மலைத்து அறிவார் இல்லை - மனத்தில் பித்தங்கொண்டவனென்று மாறுபட்டறிபவருமில்லை,—யானையும் எத்துணையும் தேற்றுவன் - யாவரையும் மிகவும் தெளிவிப்பேன்,—கலை சிறு திங்கள் மிலைத்த சிற்றம்பலவன் - (இப்போது) ஒருகலையாகிய சிறியபிறையைச் சூடிய திருச்சிற்றம்பலத்திலுள்ள சிவனது,—கைலைமலை சிறு மான் விழியால் அழிவுற்று மயங்கினன் - கைலைமலையின்கணிருக்கின்ற சிறிய மான்போன்றவளது கண்ணினால் அழிவையடைந்து மயங்கினேன். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை யுணர்த்தல்.

தலைப்படுசால் பென்றதனால் - நிறையும் பொறையும் சால்பும்; பித்தனென்று மலைத்தறிவாரில்லையென்றதனால் - தேற்ற

மும்; யாரையுந் தேற்றுவ னென்றதனால் - நீதியும்; பெறப்பட்டன. அவற்றை இதுபொழுதுடையே னல்லனென்பார், வாடினேனென்றும்; அவை நீங்குதற்குக் காரணம் அவள் மான்விழி நோக்கென்பார், மறியுறு நோக்கென்றுங் கூறினார். நீதியென்றது நலங்கிளரைத் தெளிவித்தல். சால்பு என்றதை "அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ - டைந்து சால் பூன்றிய தூண்" என்பதனாலறிக. நோக்கிற்கு உருபு மயக்கம். (உரு)

## விதியோடுவெறுத்தல்.

கல்விமிகுபாங்கன் கழறவெள்கி ச
செல்வமிகுசிலம்பன் றெரிந்துசெப்பியது.

(எ - து.) கற்றறிபாங்கன் சொல்லுதலால் நாணி, செல்வமிகுந்த சிலம்பனாகிய தலைமகன் (பின்னும்) தன் விதியொடு வெறுத்துக் கூறியது.

நல்வினையுங்நயந் தந்தின்றுவந் துநடுங்குமின்மேற்
கொல்வினைவல்லனகோங்கரும்பாமென்றுபாங்கன்சொல்ல
வில்வினைமேருவில்வைத்தவன்றில்லைதொழாரின்வெள்கித்
தொல்வினையாற்றுயரும்மெனதாருயிர்துப்புறவே.

(இ - ள்.) நடுங்கு மின்மேல் கோங்கு அரும்பு கொல்வினை வல்லன ஆமென்று - நடுங்காநின்ற மின்னன்மே லுண்டாகிய கோங்கினுடைய அரும்புகள் கொல்லுந் தொழிலை வல்லனவாமென்று,—பாங்கன் சொல்ல - பாங்கன்றானே (இகழ்ந்து) சொல்லுதலாலே,—வில் வினை மேருவில் வைத்தவன் தில்லை தொழாரின் வெள்கி - வில்லின் றொழிலை மேருமலையிடத்து வைத்த சிவனது தில்லைந்தலத்தை வணங்காதாரைப்போல வெட்கப்பட்டு,—தொல் வினையால் துயரும் எனது ஆருயிர் துப்புற நல்வினையும் வந்து நயம் தந்தது இன்று - பழையதாகிய தீவினையால் துயரத்தை யடைகின்ற என்னுடைய அரிய வுயிரானது, வலி

மைபொருந்த, (முன்செய்த) நல்வினையும்வந்து பயனைக் கொடுத்ததில்லை. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமையுணர்த்தல்.

நாணமுடையார் மேனி வெள்குதலின்றல் 'வெள்கியென்றதென்க. (உகூ)

## பாங்கன்நொந்துரைத்தல்.

இன்னுயிர்ப்பாங்க னேழையைச்சுட்டி
நின்னாதுதன்மை நினைந்திலையென்றது.

(எ - து.) இனிமையாகிய உயிர்போன்ற பாங்கன் (விதியொடு வெறுக்கும்) தலைமகனைநோக்கி (ஒரு) பெண் காரணமாக நினது ஒழுக்கத்தை அறிந்திலையென்றது.

ஆலத்தினாலமிர் தாக்கியகோன்றில்லையம்பலம்போற்
கோலத்தினாள்பொருட்டாகவமிர் தங்குணங்கெடினுங்
காலத்தினான்மழைமாறினுமாறக்கவிகைநின்பொற்
சீலத்தைநீயுநினையாதொழிவதென்றீவினையே.

(இ - ள்.) ஆலத்தினால் அமிர்து ஆக்கிய கோன் தில்லையம்பலம்போல் கோலத்தினாள் பொருட்டாக-விடத்தினால் அமுதத்தை உண்டாக்கிய இறைவனாகிய சிவனது தில்லையின்கணுள்ள அம்பலத்தைப்போலும் அழகை யுடையாள் காரணமாக,— அமிர்தம் குணம் கெடினும் காலத்தினால் மழை மாறினும் - அமுதமானது குணங்கெட்டாலும் பெய்யுங் காலத்தில் மேகமானது (பெய்யாது) மாறினாலும்,—மாறா கவிகை நின் பொன் சீலத்தை நீயும் நினையாது ஒழிவது - மாறாத ஈகையையுடைய உனது பொன்னையொத்த ஒழுக்கத்தை நீயும் நினையாமலொழிகின்றது,—என் தீவினை - என்னுடைய தீவினைப் பயனும். எ - று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - தலைமகனைத் தெருட்டல்.

நின்னது - எதுகைநோக்கி விரித்தல் பெற்றது. (உஎ)

## இயலிடங்கேட்டல்.

கழுமலெய்திய காதற்றோழ ன்
செழுமலைநாடனைத் தெரிந்துவினாயது.

(எ - து.) (தலைமகனோடு) துயரத்தை யடைந்த காதற்றோழன், வளப்பமுடைய மலைநாடனாகிய தலைமகனை, அவளியங்குமிடம் அறிந்துகொள்ளக் கேட்டது.

நின்னுடைநீர்மையுநீயுமிவ்வாறுநினைத்தெருட்டு [ண்
மென்னுடைநீர்மையிதென்னென்பதேதில்லையேர்கொண்முக்க
மன்னுடைமால்வரையோமலரோவிசும்போசிலம்பா
வென்னிடம்யாதியனின்னையின்னேசெய்தவீர்ங்கொடிக்கே.

(இ - ள்.) நின்னுடைய நீர்மையும் நீயும் இவ்வாறு - நின்னுடைய குணமும் (இவ்வாறாயிற்று) நீயும் இவ்வாறாயினாய்,— நினை தெருட்டும் என்னுடை நீர்மை இது என் என்பது - (இனி) உன்னைத் தெளிவிக்கும் என்னுடைய தன்மையாகிய இதை என்னென்று சொல்லுவதோ?—சிலம்பா - மலையையுடையவனே!— தில்லை ஏர்கொள் முக்கண் மன்னுடைய மால் வரையோ - தில்லைக்கணுள்ள அழகுகொண்ட மூன்று கண்ணையுடைய மன்னவனாகிய சிவனது பெரிய கைலைமலையோ,—மலரோ - தாமரைப் பூவோ,—விசும்போ - விண்ணுலகமோ,—நின்னை இன்னே செய்த ஈரம் கொடிக்கு - உன்னை இத்தன்மையாகச்செய்த இனிமையாகிய கொடியை யொப்பாளுக்கு,—இடம் என் இயல் யாது - இடமானது யாது? இயலானது எது? (கூறுவாயாக). எ-று.
மெய்ப்பாடு - அச்சம்; பயன் - தலைமகனை யாற்றுவித்தல்.

தெரிந்து - தெரியவென்பதன் திரிபு. (உஅ)

## இயலிடங்கூறல்.

அழுங்கலெய்திய வாருயிர்ப்பாங்கற்கு ச்
செழுங்கதிர்வேலோன் றெரிந்துசெப்பியது.

(என்-து.) இரக்கமடைந்த அருமையாகிய உயிர்ப் பாங்கனுக்குச் செழுமையாகிய ஒளிகதிர் வேலையு டையனாகிய தலைமகன் அவள் இயலிடம் அறிய வுணர்த்தது.

விழியாற்பிணையாம்விளங்கியலான்மயிலாமிழற்று
மொழியாற்கிளியாமுதுவானவர்முடித்தொகைகள்
கழியாக்கழற்றில்லைக்கூத்தன்கயிலைமுத்தம்மலைத்தேன்
கொழியாத்திகழும்பொழிற்கெழிலாமெங்குலதெய்வமே.

(இ - ள்.) முது வானவர் தம் முடித் தொகைகள் கழியா கழல் தில்லை கூத்தன் கயிலை - தலைவராகிய இந்திரன்முதலிய தேவர் களுடைய மகுடத்திரள்கள் நீங்காத திருவடியையுடைய தில் லையிலுள்ள சிவனது கயிலையின்கண்ணது,—முத்தம் மலை தேன் கொழியா திகழும் பொழிற்கு எழிலாம் எம் குலம் தெய்வம் - முத்துக்களை மலைத்தேனானது கொழித்துவிளங்கும் சோலைக்கு அழகாகும் எம்முடையகுலதெய்வமானது,—விழியால் பிணை யாம் - கண்களால் மானாம், — விளங்கும் இயலால் மயிலாம் - விளங்காநின்ற சாயலால் மயிலாம், — மிழற்றும் மொழியால் கிளியாம் - கொஞ்சுகின்ற சொற்களால் கிளியாம். எ - று. மெய்ப்பாடு - உவகை ; பயன் - பாங்கற் குணர்த்தல். (உக)

வற்புறுத்தல்:

பெயர்ந்துறைத்த பெருவரைநாடனை
வயங்கெழுபுகழோன் வற்புறுத்தியது.

(என்-து.) கழற மறுத்துரைத்த பெரிய மலைநாட் டைய தலைமகனை, இயலிடங்கேட்ட மிக்க புகழை யுடைய பாங்கன் (இப்பெற்றியாளை யான் கண்டு வருமளவும்) நீ ஆற்றுவாயாக வென வற்புறுத்திக் கூறியது.

குயிலைச்சிலம்படிக்கொம்பினைத்தில்லையெங்கூத்தப்பிரான்
கயிலைச்சிலம்பிற்பைம்பூம்புனங்காக்குங்கருங்கட்செவ்வாய்

மயிலைச்சிலம்பகண் டியான்போய்வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச்சிலம்பெதிர்கூய்ப்பண்ணைநண்ணும்பளிக்கறையே.

(இ - ள்.) சிலம்ப - சிலம்பனே!—குயிலை - குயிலையொப்பாளை,—சிலம்பு அடி கொம்பினை - சிலம்பைத்தரித்த பாதங்களையுடைய பூங்கொம்பையொப்பாளை,—தில்லை எம் கூத்தப்பிரான் கயிலை சிலம்பில் பை பூ புனம் காக்கும் கருங்கண் செவ்வாய் மயிலை - தில்லையின்கணுள்ள எம்முடைய சிவனது கைலைமலையின்கண் பசுமையாகிய அழகிய தினைப்புனத்தைக் காக்கின்ற கரியகண்ணையும் செவ்வாயையுமுடைய மயிலையொப்பாளை,—வண் பூ கொடிகள் பண்ணை பயில சிலம்பு எதிர் கூய் நண்ணும் பளிக்கறை - வளமாகிய பூங்கொடிகள்போலும் ஆயத்தார் நெருங்க மலையெதிரே கூவிப் பொருந்தும் பளிக்குப்பாறையினிடத்து,—யான் போய் கண்டு வருவன் - யான்சென்று பார்த்து வருவேன்,—(அது வரையும் நீ யாற்றுவாயாக). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வற்புறுத்தல்.

வயவென்னுமுரிச்சொல் விகாரத்தால் வயமென நின்றது. ()

## நெறிவழிச்சேறல்.

அறைகழலண்ண லருளினவழியே
நிறையுடைப்பாங்க னினைவொடுசென்றது.

(எ-து.) ஒலிக்கின்ற வீரகண்டையையுடைய தலைமகன் இயலிடம்சொல்லி அனுப்பியபடி ஐம்பொறிகளையும் அடக்கிய பாங்கன், (யான் காணலாமோவென்ற) நினைவினொடு சென்றது.

கோடுங்கால்குலவரையேழ்பொழிலெழில்குன்றுமன்று
நடுங்காதவனைநடுங்கநுடங்குநுடங்குடைய
விடங்காலயிற்கண்ணிமேவுங்கொலாந்தில்லையீசன்வெற்பிற்
றடங்கார்தருபெருவான்பொழினீழலந்தண்புனத்தே.

(இ - ள்.) கொடு கால் குலவரை ஏழ், பொழில் ஏழ், எழில் குன்றும் அன்றும் நடுங்காதவனை - கொடியகாற்றால் குலமலைக ளேழும் உலகமேழும் அழகு கெடும் (ஊழியிறுதியாகிய) அந்நா ளிலும் நடுங்காமலிருப்பவனை,— நடுங்க நுடங்கும் நடு உடைய விடம் கால் அயில் கண்ணி - நடுங்கச்செய்யும் இடையையுடைய விடத்தைத்தரும் வேல்போலும் கண்ணையுடையாள்,— தில்லை ஈசன் வெற்பில் தடம் கார்தரு பெரு வான் பொழில் நீழல் தண் புனத்து - தில்லையிலிருக்கும் சிவனது மலையிடத்துப் பெரிய மேகம்போலும் மிகவும் பெரிய சோலையின் நிழலையுடைய குளிர்ந்த புனத்தினிடத்து,— மேவும்கொலாம் - தங்கியிருப் பளோ? எ - று. மெய்ப்பாடு - பெருமிதஞ்சார்ந்த மருட்கை; பயன் - உசாவியுணர்தல்.

கார்தரு என்பதில் தரு - உவமவுருபு. கார் தரு - கார்தங்கு மெனினு மமையும். (௩௧)

குறிவழிக்காண்டல்.

குளிர்வரைநாடன் குறிவழிச்சென்று
தளிர்புரைமெல்லடித் தையலைக்கண்டது.

(எ - து.) (குறிவழிச்சென்ற பாங்கன்) குளிர்ச்சி பொருந்திய மலைநாடனாகிய தலைமகன் சொல்லிய குறியிடத்துப்போய், தளிர்போன்ற மெல்லியபாதங் களையுடைய தலைமகளைக்கண்டது.

வடிக்கணிவைவஞ்சியஞ்சுமிடையிதுவாய்பவளந்
துடிக்கின்றவாவெற்பன்சொற்பரிசேயான்றொடர்ந்துவிடா
வடிச்சந்தமாமலரண்ணல்விண்ணோர்வணங்கம்பலம்போற்
படிச்சந்தமுமிதுவேயிவளேயப்பணிமொழியே.

(இ-ள்.) வடி கண் இவை - வடுவகிர்போலும் கண்களும் இவை யே,— வஞ்சி அஞ்சும் இடை இது - பூங்கொடி அஞ்சத்தக்க

மருங்குலும் இதுவே,—வெற்பன் சொல் பரிசே வாய் பவளம் துடிக்கின்றவா - வெற்பனானவன் சொன்ன தன்மையாகவே வாயானது பவளந்துடித்தாற்போலத் துடிக்கின்றவாறு,—யான் தொடர்ந்து விடா அடி சந்தம் மா மலர் அண்ணல் - நான்பற்றி விடமாட்டாத பாதமாகிய அழகிய பெரியதாமரைப்பூவையுடைய இறைவனாகிய (சிவனது), — விண்ணோர் வணங்கும் அம்பலம்போல் படிச்சந்தமும் இதுவே - தேவர்கள் வந்துதொழும் திருச்சிற்றம்பலம் போலும் அழகியவொப்பும் இதுவே,— அ பணி மொழி இவளே - அந்தப் பணிந்தமொழியை யுடையாளும் இவளே. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தெளிதல்.

படிச்சந்தம் - ஒன்றன்வடிவை யுடையதாய் அதுவென்றே யெண்ணப்படும் இயல்பையுடையது, அது பிரதிச்சந்தமென்னும் வடமொழிச்சிதைவு. வடியென்பது - வடிவகிருக்கோா பெயர். பவளந்துடிக்கின்றவா என்பதற்குப் பவளம்போலப் பாடஞ்செய்கின்றவாறு என்னென் றுரைப்பாருமுளர். (௩௨)

தலைவனைவியந்துரைத்தல்.

நயந்தவுருவு நலனுங்கண் டு
வியந்தவனையே மிகுத்துரைத்தது.

(எ - து.) (குறிவழிக்கண்டபாங்கன்) தலைமகன் விரும்பிய வுருவையும் அழகையும பார்த்து அதிசயித்து அத்தலைமகனைத் திண்ணியானென்று வியந்து சொல்லியது.

குவளைக்களத்தம்பலவன்குரைகழல்போற்கமலத்
தவளைப்பயங்கரமாகநின்றுண்டவவயவத்தி
னிவளைக்கண்டிங்குநின்றங்குவந்தத்துணையும்பகர்ந்த
கவளக்களிற்றண்ணலேதிண்ணியானிக்கடலிடத்தே.

(இ-ள்.) குவளை களத்து அம்பலவன் குரை கழல்போல் - நீலப் பூப்போலும் கண்டத்தை யுடைய திருச்சிற்றம்பலத்திலுள்ள சிவனது ஒலிக்குங் கழலையுடைய திருவடிபோலும்,— கமலத்து வளை பயங்கரமாக நின்று ஆண்ட அவயவத்தின் இவளை கண்டு-தாமரைப்பூவிலிருக்குஞ் சீதேவியைப் பயத்தைச் செய்வனவாக நின்று அடிமைகொண்ட அவயவங்களையுடைய இம்மாதினைப் பார்த்து,—இங்கு நின்று அங்கு வந்து அத்துணையும் பகர்ந்த கவளம் களிறு அண்ணலே - இவ்விடத்துநின்று அவ்விடத்துவந்து அவ்வளவும் கூறிய, கவளத்தையுண்ணும் யானையையுடைய, அரசனே,—இ கடலிடத்து - இக்கடல்சூழ்ந்த வுலகத்தினிடத்து,— திண்ணியான் - வலிமையையுடையான். எ - று. மெய்ப்பாடு - மருட்கையைச்சார்ந்த அச்சம்; பயன் தலைமகனை வியத்தல். ( )

### கண்டமைகூறல்.

பிடிமிசைவைத்துப் பேதையதுநிலைமை
அடுதிறலண்ணற் கறியவுரைத்த து.

(எ - து.) (வியந்துரைத்த பாங்கன்) தலைமகளது தன்மையைப் பிடியின்மேல்வைத்து மாற்றுரை அடுந் திறலையுடைய தலைமகனுக்குத் தெரியக்கூறியது.

பணந்தாழரவரைச்சிற்றம்பலவர்பைம்பொற்கயிலைப்
புணர்ந்தாங்ககன்றவொருகரியுன்னிப்புனத்தயலே
மணந்தாழ்பொழிற்கண்வடிக்கண்பரப்பிமடப்பிடிவாய்
நிணந்தாழ்சுடரிலைவேலகண்டேனென்றுநின்றதுவே.

(இ - ள்.) வாய் நிணம் தாழ் சுடர் இலை வேல - வாயின்கண் நிணந்தங்கிய பிரகாசிக்கின்ற இலைபோலும் வேலினையுடையாய்!—பணம் தாழ் அரவு அரை சிற்றம்பலவர் பைம்பொன் கயிலை புணர்ந்து - படங்கள்தாழ்ந்த பாம்பையணிந்த அரையையுடைய சிற்றம்பலத்தையுடையவரது பசும்பொன்னையுடைய கயிலை

மலையிடத்துக் கூடி,—ஆங்கு அகன்ற பொரு கரி உன்னி - அவ்விடத்தினின்று நீங்கிய போர்செய்கின்ற யானையைநினைந்து,— புனத்து அயலே மணம் தாழ் பொழிற்கண் வடி கண் பரப்பி மடப்பிடி ஒன்று நின்றது கண்டேன்-தினைப்புனத்தருகிலே வாசனை தங்கிய சோலையினிடத்து வடுவகிர்போலும் கண்ணைப்பரப்பி மடப்பத்தையுடைய பெண்யானையொன்று நிற்கின்றதைப் பார்த்தேன். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகனை யாற்றுவித்தல்.

பணைந்தாழ்தல் - முடிந்துவிழுதலால் தொங்கல்போலத் தாழ்தல். புனத்தில் விளையாடும் ஆயத்தை நீங்கிநிற்றலின் புனத்தயலென்றும், இன்னதிசையில் வருமென்றறியாது சுற்றெங்கு நோக்குதலின், வடிக்கண்பரப்பியென்றுங் கூறினார். ஆங்ககன்று என்பதில் நின்று என்னும் ஐந்தாம்வேற்றுமைப் பொருள்படுவதோரிடைச்சொல் வருவித் துரைக்கப்பட்டது. (௩௪)

## செவ்விசெப்பல்.

அறபுதனகயிலை மற்பொலிசிலம்ப ற்
கவ்வுருக்கண்டவன் செவ்விசெப்பியது.

(எ - து.) அற்புதனாகிய இறைவனது கயிலைமலையிலுள்ள மற்போர்க்குரிய மலைநாடனாகிய தலைமகனுக்கு அவளது வடிவத்தைக்கண்ட பாங்கன் (பிடியிசைவைத்துக் கூறியும் அவன் ஆற்றாமை நீங்காமையான், அவனை யாற்றுவிப்பது காரணமாக) அவளது அவயவம் கூறியது.

கயலுளவேகமலத்தலர்மீதுகனிபவளத்
தயலுளவேமுத்தமொத்தநிரையரனம்பலத்தி
னியலுளவேயிணைச்செப்புவெற்பாநினதீர்ங்கொடிமேற்
புயலுளவேமலர்சூழ்ந்திருளோங்கிப்புரள்வனவே.

(இ-ள்.) வெற்பா - வெற்பனே!—நினது ஈரம் கொடிமேல்- உனது குளிர்ந்த பூங்கொடியின்கண்,—கமலத்து அலர்மீது கயல் உளவே-தாமரைப்பூவின்மேல் கயல்மீன்க ளுள்ளனவே,—கனி பவளத்து அயல் ஒத்த நிரை முத்தம் உளவே - கனிந்தபவளத்திற்கு அருகில் இனமொத்த வரிசையாகிய முத்துக்கள் உள்ளனவே,—இணை செப்பு அரன் அம்பலத்தின் இயல் உளவே - இரண்டாகிய செப்புகள், சிவனது திருச்சிற்றம்பலத்தின் இயல்பையுடையனவுளவே,—மலர் சூழ்ந்து இருள் தூங்கி புரள்வன புயல் உளவே - பூமாலைசூழ்ந்து இருளானது தங்கி புரளுகின்றனவாகிய மேகமுள்ளனவே. (உளவாயின் யான் கண்டவுருவம் நீ கூறிய உருவமாம்.) எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகனை யாற்றுவித்தல்.

அம்பலத்தினியல் - ஆறும்வேற்றுமைத் தொகைபபுறததுப பிறந்த அன்மொழித்தொகை. (கரு)

## அவ்விடத்தேகல்.

அரிவையது நிலைமை யறிந்தவனுரைப்ப
எரிகதிர்வேலோ னேகிய து.

(எ-து.) தலைமகளது நிலைமையைத்தெரிந்து பாங்கன் சொல்ல, எரிக்கின்ற ஒளியுள்ள வேலையுடைய தலைமகன் (அவ்விடத்துச்) சென்றது.

எயிற்குலமூன்றிருந்தீயெய்தவெய்தவன்றில்லையொத்துக்
குயிற்குலங்கொண்டுதொண்டைக்கனிவாய்க்குளிர்முத்தநிரைத்
தயிற்குலவேல்கமலத்திற்கிடத்தியனநடைக்கு
மயிற்குலங்கண்டதுண்டேலதுவென்னுடைமன்னுயிரே.

(இ-ள்.) எயில் குலம் மூன்று இரும் தீ எய்த எய்தவன் தில்லை ஒத்து - (இரும்பும் வெள்ளியும் பொன்னுமாகிய) மதிற்சாதி மூன்றும் பெரியநெருப்பை அடையும்படி எய்தசிவனது தில்லை நகரத்தை யொத்து,— குயில் குலம் கொண்டு தொண்டை கனி

வாய் குளிர் முத்தம் நிரைத்து - குயிலினது சாதியைக்கொண்டு தொண்டைக்கனியினிடத்துக் குளிர்ந்த முத்துக்களை வரிசையாகப்பெற்று, — அயில் குல வேல் கமலத்தில் கிடத்தி - கூர்மையையுடைய நல்லவேலை தாமரைப்பூவினிடத்து கிடக்கச்செய்து,—அன்னம் நடக்கும் மயில் குலம் கண்டது உண்டேல்-அன்னம்போல் நடக்கும் மயிற்சாதி காணப்பட்ட துண்டாயின்,— அது என்னுடைய மன் உயிரோ - அது என்னுடைய நிலைபெறுமுயிராம். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - ஆற்றுமைநீங்குதல்.

மொழியாற் குயிலினது தன்மையை யுடைத்தாகலின் குயிற் குலங் கொண்டென்றார். தொண்டைக்கனிவாய் என்பதற்கு தொண்டைக்கனிபோலும் வாயென்பாரு முளர்.

இவைநிற்க இடந்தலை தனக்குமாமாறு சொல்லுமாறு. (௩௬)

**மின்னிடைமெலிதல்.**

மன்னனை நினைந்து
மின்னிடை மெலிந்தது.

(எ-து.) (முன்னைநாள் பிரிந்துபோனவர் காதல் மிகுதியால் இடமறியாமல் ஆயத்திடைவருவாரோ என்னும் பெருநாணினாலும், ஆற்றுமையால் இறந்துபட்டாரோ என்னும் பேரச்சத்தினாலும், யாருமில்லாத தனியிடத்திருந்து) தலைமகனை யெண்ணி, மின்போலு மிடையையுடைய தலைமகள் வருந்தியது.

ஆவியன்னாய்கவலேலகலேமென்றளித்தொளித்த
வாவியன்னார்மிக்கவாவினராய்க்கெழுமற்கழிவுற்
றாவியன்னார்மன்னியாடிடஞ்சேர்வர்கொலம்பலத்தெம்
மாவியன்னான்பயிலுங்கயிலாயத்தருவரையே.

(இ - ள்.) ஆவியன்னாய் கவலேல் அகலேமென்று அளித்து ஒளித்த ஆவி அன்னார் - உயிரை யொப்பானவளே கவலைப்படா

தே (உன்னை) நீங்கோமென்று தலையளிசெய்து மறைந்த (என்) உயிரை யொப்பார்,—மிக்கு அவாவினராய் கெழுமல் கழிவுற்று - மிகுந்த விருப்பத்தை யுடையராய் (மனந்)தளர்தல் காரணமாக (மன) மழிந்து (இடமறியாது),—அம்பலத்து எம் ஆவி அன்னோன் பயிலும் கயிலாயத்து அரு வரை-திருச்சிற்றம்பலத்தின்கணுள்ள எம்முடைய உயிரை ஒப்பவனாகியசிவன் சேர்ந்துவாழும் கைலாயத்தின்கணுள்ள அரிய தாழ்வரையினிடத்து,— ஆவியன்னார் மன்னி ஆடிடம் சேர்வல்கொல் - (என்) உயிரையொத்தஆயத்தார் நிலைபெற்று விளையாடுமிடத்துச் சேர்வாரோ. எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த மருட்கை; பயன் - உசாவியாற்றுமை நீங்குதல்.

அளித்தல் - பிரிகின்ற காலத்துச்செய்த தலையளி யென்னுமமையும். (௩௭)

## பொழில்கண்டுமகிழ்தல்.

மணங்கமழ்பொழிலின் வடிவுகண்
டணங்கெனநினைந் தயர்வுநீங்கியது.

(எ - து.) (தலைமகளை நோக்கிச் சென்ற தலைமகன் முன்னைநாள் அவளைக் கண்ணுற்ற) வாசனைவீசும் பொழிலின் தோற்றங்கண்டு அதைத் தலைமகளென்றே யெண்ணி மகிழ்ச்சியடைந்தது.

காம்பிணையாற்களிமாமயிலாற்கதிர்மாமணியால்
வாம்பிணையால்வல்லியொல்குதலான்மன்னுமம்பலவன்
பாம்பிணையாக்குழைகொண்டோன்கயிலைப்பயில்புனமுந்
தேம்பிணைவார்குழலாளெனத்தோன்றுமென்சிந்தனைக்கே.

(இ - ள்.) காம் பிணையால் - மூங்கிலிணையாலும்,— களி மாமயிலால் - களிப்பை யுடைய கரியமயிலாலும்,— கதிர் மா மணியால் - ஒளியையுடைய பெரிய நீலமணியாலும்,— வாம்பிணையால் - தாவுகின்றமானாலும்,—வல்லி ஒல்குதலால் - பூங்கொடி

யசைதலாலும்,— மன்னும் அம்பலவன் - நிலைபெற்ற அம்பலத்தை யுடையோன்,— பாம்பு இணையா குழைகொண்டோன் - பாம்பை ஒப்பற்ற குழையாகக்கொண்டோன்,— கயிலை பயில் புனமும் - (அவனது) கயிலைமலையினிடத்து அவள் பயிலும் தினைப்புனமும்,—என் சிந்தனைக்கு - என் மனத்துக்கு,—தேம்பிணை வார் குழலாளென தோன்றும் - தேன்பொருந்திய மாலையையுடைய நெடிய குழலையுடையாளென்றே தோன்றா நிற்கும். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.

பாம்பை யிணைத்துக் குழையாகக்கொண்டவனெனினு மமையும். (௩அ)

### உயிரோனவியத்தல்.

வெறியுறுபொழிலின் வியன்பொதும்பரின்
நெறியுறுகுழலி நிலைமைகண்ட து.

(எ - து.) (பொழில்கண்டு மகிழ்ந்து) மணம் பொருந்திய பொழிலின் மரஞ்செறிந்தவிடத்தில் நெறிப்புற்ற குழலினை யுடைய தலைமகளது நிலைமை கண்டு (என்னுயிர் இவ்வாறு செய்தோ நிற்பதென) வியந்தது.

நேயத்ததாய்நென்னலென்னைப்புணர்ந்துநெஞ்சநெகப்போ
யாயத்ததாயமிழ்தாயணங்காயரனம்பலம்போற்
றேயத்ததாயென்றன்சிந்தையதாய்த்தெரியிற்பெரிது
மாயத்ததாகியிதோவந்துநின்றதென்மன்னுயிரே.

(இ - ள்.) நேயத்ததாய் நென்னல் என்னை புணர்ந்து - உள்ளநெகிழ்ச்சியை யுடையதாய் நேற்று என்னைக்கூடி,—நெஞ்சம் நெகபோய் ஆயத்ததாய் - (பின் என்)மனம் நெகிழும்படி நீங்கிப்போய் ஆயத்தாரிடத்ததாய்,— அமிழ்தாய் - (இன்பத்தைச் செய்தலின்) அமிர்தமாகி,— அணங்காய் - துன்பஞ் செய்வ

தாய்,—அரன் அம்பலம்போல் தேயத்ததாய் - (புலப்பாட்டான்) அரனது சிற்றம்பலத்தைப்போலும் ஒளியை யுடையதாய்,— என்றன் சிந்தையதாய் - (புலப்படாதுவந்து)என்மனத்தின் கண்ணதாய்,—தெரியின் பெரிது மாயத்ததாகி - ஆராயின் மிகவும் மாயத்தை யுடையதாய்,— என் மன் உயிர் - எனது நிலைபெற்ற வுயிர்,— வந்து நின்றது இதோ - வந்துநின்ற திதுவோ. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.

நேய முடைமையும் நேயமின்மையும், இன்பஞ் செய்தலுந் துன்பஞ் செய்தலும், புலப்படுதலும் புலப்படாமையு மொரு பொருளுக்குப் பொருந்தாமையால் பெரிது மாயத்ததாகி யென்றான். தேயம் - வடமொழிச் சிதைவு. என்னிடத் தருளுடையதாய் முற்காலத் தென்னைவந்து கூடி, அருளில்லாததுபோல என் னெஞ்சுடையும் வகைபோய் தன் மெய்யடியார் கூட்டத்ததாய், நினைக்குந்தோறும் அமிர்தம்போல இன்பஞ்செய்து, கண்ணுக்குத் தோன்றாமையால் துன்பஞ்செய்து, அம்பலம்போலும் நல்ல தேசங்களி னிடத்ததாய் வந்து என் மனத்தினிடத்ததாய், இத்தன்மைத் தாதலால் பெரிது மாயத்தை யுடைத்தாய், எனது நிலைபெறு முயிர்வந்து தோன்றுகின்றதென வேறுமொரு பொருள் விளக்கிநின்றது. (கூகூ)

### தளர்வகன்றுரைத்தல்.

பனிமதிநுதலியைப் பைம்பொழிலிடைத்
தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தது.

(எ - து.) (உயிரொனவியந்த தலைமகன்) குளிர்ந்த சந்திரன்போலும் நெற்றியையுடைய தலைமகளைப் பசிய பொழிலின்கண் தனித்திருக்கக்கண்டு தளர்ச்சி நீங்கிக் கூறியது.

தாதிவர்போதுகொய்யார்தையலாரங்கைகூப்பநின்று
சோதிவரிப்பந்தடியார்சுனைப்புனலாடல்செய்யார்

போதிவர்கற்பகநாடுபுல்லென்னத்தம்பொன்னடிப்பா
யாதிவர்மாதவமம்பலத்தான்மலையெய்துதற்கே.

(இ-ள்.) தாது இவர் போது கொய்யார் - மகரந்தப்பொடிகள் பரந்த பூக்களைப்பறிக்கின்றிலர்,—தையலார் அங்கை கூப்ப நின்று சோதி வீசி பந்து அடியார்-(ஆயத்தாராகிய)மாதர்கள் அஞ்சலி செய்யநின்று ஒளியையும் கட்டுதலையுமுடைய பந்துகளை அடிக்கின்றிலர்,—சுனை புனல் ஆடல் செய்யார்-சுனையின்கணுள்ளநீரில் முழுகுதலைச் செய்கின்றிலர்,—போது இவர் கற்பகம் நாடு புல்லென்ன - புட்பங்கள் பரந்த கற்பகவிருட்சங்களையுடைய தேவருலகும் அழகழிய,—தம் பொன் அடி பாய் - தமது பொன்போலும் அடியை (நிலத்தின்கண்ணே)பாவி,—அம்பலத்தான் மலை எய்துதற்கு - அம்பலவாணனது கயிலைமலையை அடைதற்கு,—இவர் மா தவம் யாது - இம்மாதர் (செய்கின்ற) பெரியதவமானது யாது. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன்-மகிழ்தல்.(சO)

## மொழிபெறவருந்தல்.

கூடற் கரிதெ ன
வாடி யுரைத்த து.

(எ - து.) (தளர்ச்சி நீங்கிய தலைமகன்) தலைமகளைச் சேர்தற் கரிதெனக்கருதி (சொல்லேனும் பெற வேண்டி) வருந்தி யுரைத்தது.

காவிநின்றேர் தருகண்டர்வண் டில்லைக்கண் ணார்கமலத்
தேவியென்றேயையஞ்சென்றதன்றேயறியச்சிறிது
மாவியன்றன்னமென்னோக்கிநின்வாய்திறவாவிடினென்
னாவியன்றேயமிழ்தேயணங்கேயின்றழிகின்றதே.

(இ - ள்.) காவி நின்று ஏர் தரு கண்டர் - நீலப்பூப்போலும் (விடம்) நின்று அழகைக்கொடுக்கும் கண்டத்தை யுடையவரது,—வண் தில்லை கண் ஆர் கமலம் தேவியென்றே ஐயம் சென்

றது - வளப்பம் பொருந்திய தில்லைக்கணுண்டாகிய, கண்ணிற் கழகு நிறைகின்ற, தாமரைப்பூவில் வாழ்கின்ற சீதேவியோவெ ன்று சந்தேகம் தோன்றியது,—அறிய - (அதனைத்) தெளிந் தறிய, — மா இயன்றன்ன மென்னோக்கி - மானோக்கத்தால் செய்தாற்போலும் மெல்லியநோக்கத்தை யுடையாய்!— சிறிது நின் வாய் திறவாவிடின் - சிறிதாயினும் உனதுவாயைத் திற வாதொழியின்,—அமிழ்தே - அமிர்தமே!— அணங்கே - தெய் வப்பெண்ணே!— இன்று என் ஆவி அழிகின்றது அன்றே - இப்பொழுதே என்னுடைய வுயிர் அழியாநின்ற தன்றே (இதனை நீகருதாதொழிகின்ற தென்னே? எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமை யுணர்த்துதல்.

இன்பமுந் துன்பமு மொருங்கு நிகழ்தலின் அமிழ்தே யணங் கே என்றான். தேவியென்றே ஐயஞ்சென்றதென ஐந்துள் ஒருதலையே பற்றிக் கூறினன். (சச)

**நாணிக்கண்புதைத்தல்.**

**ஆயிடைத்தனிநின் றாற்றுதழிந் து**
**வேயுடைத்தோளியோர் மென்கொடிமறைந்தது.**

(எ-து.) தலைமகனவ்வாறு கூறியவிடத்து ஆற்று விப்பாரையின்றி நின்று, நாணினு லாற்றாது வருந்தி, வேய் போன்ற தோளையுடைய தலைமகள் ஒரு மெ ல்லிய கொடியினுதுங்கி (தன் கண்புதைய) மறை ந்தது.

அகலிடந்தாவியவானேனறிந்திறைஞ்சம்பலத்தி
னிகலிடந்தாவிடையீசற்றொழாரினின்னற்கிடமா
யுகலிடந்தான்சென்றெனதுயிர்நையாவகையொதுங்கப்
புகலிடந்தாபொழில்வாயெழில்வாய்தருபூங்கொடியே.

(இ - ள்.) அகலிடம் தாவிய வானேன் - உலகத்தைத் தாவி யளந்ததிருமால்,—அறிந்து இறைஞ்சு அம்பலத்தின் இகலிடம் -

தெரிந்து வணங்கும் சிற்றம்பலத்தின்கணுள்ள பகையையுடைய விடங்களிலே,—தா விடை ஈசன் தொழாரின் இன்னற்கு இடமாய் - தாவும் இடபத்தையுடைய பரமசிவனை வணங்காதவர் களைப்போலத் துன்பத்திற்கிடமாய்,— உகல் இடம் தான் சென்று எனது உயிர் நையா வகை ஒதுங்க புகல் இடம் - அழியும் அளவைத் தானடைந்து என்னுயிரானது வருந்தாதபடி, ஒதுங்குதற் கடைக்கலமாமிடத்தை,— பொழில்வாய் எழில்வாய் தரு பூங்கொடியே-பொழிலிடத்துள்ள அழகுவாய்ந்த பூவையுடைய கொடியையொப்பாளே! தா - தருவாயாக. எ-று. மெய்ப்பாடு- அச்சம்; பயன் - ஆற்றாமை நீங்குதல். (சஉ)

### கண்புதைக்க வருந்தல்

வேற்றருங்கண்ணிணை மிளிர்வன வன்றுநின்
கூற்றருமேனியே கூற்றெனக்கென்றது.

(எ-து.) (தலைமகன் கண்புதையாநின்ற தலைமகளை நோக்கி) வேல்போலும் கண்ணிரண்டும் விளங்குவன வன்று, நினது சொல்லற் கருமையாகிய படிவமே எனக்கு இயமன் (ஆகலான் நின்மேனி முழுதும் புதைப்பாயாக வெனத் தன் வருத்தமிகுதி) கூறியது.

தாழச்செய்தார்முடிதன்னடிக்கீழ்வைத்தவரைவிண்ணோர்
சூழச்செய்தானம்பலங்கைதொழாரினுள்ளந்துளங்கப் [னைநீ
போழச்செய்யாமல்வைவேற்கண்புதைத்துப்பொன்னேயென்
வாழச்செய்தாய்சுற்றுமுற்றும்புதைநின்னைவாணுதலே.

(இ-ள்.) தாழ செய்தார் முடி தன் அடிக்கீழ் வைத்து அவரை விண்ணோர் சூழ செய்தான் - தன்னிடத்தில் வணங்குதலை செய்தவருடைய தலைகளை தனது திருவடியின்கீழ் வைத்துக்கொண்டு அவர்களை தேவர்கள் சூழும்படிசெய்தசிவனது,— அம்பலம் கை தொழாரின் - திருச்சிற்றம்பலத்தை வணங்காதாரைப்போல,—

உள்ளம் துளங்க போழ செய்யாமல் வை வேல் கண்புதைத்து- மனமானது அஞ்சும்படி பிளக்கச்செய்யாமல் கூர்மையாகிய வேல்போலும் கண்ணைமூடி,— பொன்னே என்னை நீ வாழச் செய்தாய் - பொன்னை யொப்பாய்? என்னை நீ வாழும்படி செய்தாய்,—வாள் நுதலே - ஒளிபொருந்திய நெற்றியை யுடையாளே!— சுற்றுமுற்றும் நின்னை புதை - (என்னுள்ளம் துளங்காமை வேண்டின்)சுற்றுமுழுதும் உன்னை மூடிக்கொள்வாயாக. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன்-ஆற்றுமை யுணர்த்தல். ()

**நாண் விட வருந்தல்.**

ஆங்ஙனங்கண் டாற்றளா கி
நீங்கினநாணொடு நேரிழைநின்றது.

(எ - து.) (தலைமகன்) அவ்வாறாற்றுகைக்கண்டு, தலைமகள் ஆற்றுதவளாய் நீங்கிப்போன நாணத்துடன் நின்றது.

தருநான்மலர்ப்பொழில்சூழ்தில்லைக்கூத்தனையேத்தலர்போல்
வருநாள்பிறவற்கவாழியரோமற்றென்கண்மணிபோன்
றொருநாள்பிரியாதுயிரிற்பழகியுடன்வளர்ந்த
வருநாணளியவழல்சேர்மெழுகொத்தழிகின்றதே.

(இ-ள்.) குரு நாள் மலர் பொழில் சூழ் தில்லை கூத்தனை ஏத்தலர்போல் - நிறத்தையுடைய புதிதாகிய மலர்களையுடைய சோலைகள் சூழப்பெற்ற தில்லையிலுள்ள நடராசனைத் துதியாதவர் (துன்புறும்பிறவியிற் பிறப்பாராகலான், அவர்களைப்) போல,— வரு நாள் பிறவற்க-மேல்வரக்கடவதாகிய துன்புறுநாளில்(யான் இவ்வாறு) பிறவாதொழிக,—வாழி என் கண்மணிபோன்று ஒருநாள் பிரியாது உயிரின் பழகி உடன் வளர்ந்த - இந்நாள் வாழ்வதாக எனது கண்மணியை யொத்து ஒருபொழுதும் பிரியாமல் உயிர்போலப் பழகி என்னோடுவளர்ந்த,—அளிய வரு நாண் அழல்சேர் மெழுகொத்து அழிகின்றது - அளித்தாகிவருகின்ற

நாணமானது நெருப்பைச்சேர்ந்த மெழுகையொத்து அழியா நின்றது. எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

வருநாள் பிறவற்க என்பதற்கு ஏத்தாதாரைப்போல வருந்த இவ்வாறு பயின்றாப் பிரியவருநாட்கள் உளவாகா தொழிக எனினு மமையும். வாழி என்றது இத்தன்மைத்தாகிய துன்ப மின்றி இந்த நான்வாழ்வதாக என்க. அரோவும் மற்றும் அசை நிலை. (சுசு)

## மருங்கணைதல்.

ஒளிதிகழ்வார்குழ லளிகுலம்விளக்கிக்
கருங்களிற்றண்ணன் மருங்கணைந்தது.

(எ - து.) (தலைமகள் நாணிழந்து நிற்க) அவளது ஒளிவிளங்கும் நீண்ட கூந்தலின்கண் வண்டின் கூட்டத்தை விலக்கிக் கருங்களிற்றையுடைய தலைமகன் அவள் பக்கத்தில் அணைந்தது.

கோலத்தனிக்கொம்பரும்பர்புக்கஃதேகுறைப்பவர் தஞ்
சீலத்தனகொங்கைதேற்றகிலேஞ்சிவன்றில்லையன்னா [ற்
றூலொத்தநேரிடைநொய்ம்மையெண்ணாதுநுண்டேனசையா
சாலத்தகாதுகண்டீர்வண்டுகாள்கொண்டைசார்வதுவே.

(இ-ள்.) கோலம் தனி கொம்பர் உம்பர் புக்கு அஃதே குறைப் பவர் தம் சீலத்தன கொங்கை - அழகையுடைய தனிமையாகிய கொம்பின் மேலேறி அதனையே அடியில் வெட்டுபவரது தன் மையையுடையன தனங்களானவை,—தேற்றகிலேம் - (விழுமெ ன்று) தெளிகின்றிலேம்,—வண்டுகாள்-(அதனால்)வண்டுகளே!— சிவன் தில்லை அன்னாள் தூலொத்த நேர் இடை நொய்மை எண் ணாது - சிவனது தில்லையை யொப்பாளுடைய நூல்போன்ற நேர்மையாகிய மருங்குலினது நுட்பத்தை நினையாது,—நுண் தேன் நசையால் கொண்டை சார்வது சால தகாது - நுண்ணிய

தேனின்மே லுண்டாகிய விருப்பத்தால் நீயிர் கொண்டையைச் சேர்வது மிகவும் தகுதியல்ல. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - சார்தல்.

கண்டீரென்பது முன்னிலை யசைச்சொல். அளிகுலம் வடமொழிமுடிபு. கொங்கை தேற்றகிலேம் என்பதற்கு முலைகளைத் தெளிவிக்கமாட்டேம் என்பாருமுளர். (சடு)

## இன்றி யமையாமைகூறல்.

வென்றிவேலவன் மெல்லியறனக்
கின்றியமையாமை யெடுத்துரைத்தது.

(எ - து.) (புணர்ச்சி யிறுதிக்கண்) வெற்றிபொருந்திய வேலையுடைய தலைமகன், மென்மையாகிய இயலையுடைய தலைமகளிடத்துத் தனக்கு அவளையின்றி யமையாமையை எடுத்துக் கூறியது.

நீங்கரும்பொற்கழற்சிற்றம்பலவர்நெடுவிசும்பும்
வாங்கிருந்தெண்கடல்வையமுமெய்தினும்யான்மறவேன்
தீங்கரும்பும்மமிழ்துஞ்செழுந்தேனும்பொதிந்துசெப்புங்
கோங்கரும்புந்தொலைத்தென்னையுமாட்கொண்டகொங்கைகளே

(இ-ள்.) நீங்கு அரு பொன் கழல் சிற்றம்பலவர் - நீங்குதற்கரிய பொன்னாற்செய்த கழலையணிந்த திருவடியையுடைய திருச்சிற்றம்பலத்தி லுறைபவரது,—நெடு விசும்பும் வாங்கு இருந்தெள் கடல் வையமும் எய்தினும் - பெரிய தேவருலகத்தையும் வளைந்த பெரியதெள்ளிய கடல்சூழ்ந்த பூவுலகத்தையும் (ஒருங்கு) பெறவரினும்,—தீம் கரும்பும் அமிழ்தும் செழு தேனும் பொதிந்து - இனிமையாகிய கரும்பினது ரசத்தையும் அமிர்தத்தையும் செழுமையாகிய தேனையும் உள்ளடக்கிக்கொண்டு,—செப்பும் கோங்கு அரும்பும் தொலைத்து - செப்பையும் கோங்கரும்பையும் வென்று,—என்னையும் ஆள் கொண்ட கொங்கை

கள்-என்னையும் அடிமைகொண்ட தனங்களை,—யான் மறவேன்-நான் மறக்கமாட்டேன். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - நயப்புணர்த்துதல். (சசு)

**ஆயத்துய்த்தல்.**

**தேங்கமழ் சிலம்பன்**
**பாங்கிற் கூட்டிய து.**

(எ - து.) (இன்றி யமையாமை கூறிப் பிரியலுறு கின்ற) தேன்கமழ்கின்ற மலைநாடனாகிய தலைமகன் (பிரிவின்மைகூறி) தலைமகளை ஆயத்துக் கூட்டியது.

சூளாமணியும்பர்க்காயவன்சூழ்பொழிற்றில்லையன்னாய்க்
காளாயொழிந்ததென்னாருயிராரமிழ்தேயணங்கே
தோளாமணியேபிணையேபலசொல்லியென்னைதுன்னு
நாளார்மலர்ப்பொழில்வாயெழிலாயநணுகுகவே.

(இ-ள்.) உம்பர்க்கு சூளாமணி ஆயவன் சூழ் பொழில் தில்லை அன்னாய்க்கு - தேவர்களுக்கு முடிமணி யானவனாகிய சிவனது சூழ்ந்த பொழிலையுடைய தில்லையை யொப்பாளாகிய உனக்கு,—என் ஆர் உயிர் ஆளாய் ஒழிந்தது-என்னுடைய பெறுதற்கரிய வுயிரானது அடிமையாயிற்று,— ஆர் அமிழ்தே - நிறைந்த அமிர்தமே!—அணங்கே - தெய்வப்பெண்ணே!— தோளா மணியே - தொளைக்கப்படாத மாணிக்கமே!—பிணையே - பெண் மானே!— பல சொல்லி என்னை - பலவற்றைச்சொல்லி (பெறும்பயன்) யாது?—துன்னும் ஆர் நாள் மலர் பொழில்வாய் எழில் ஆயம் நணுகுக - சேர்ந்துவிளையாடும் நிறைந்த புதுமலரையுடைய சோலையின்கண் அழகையுடைய ஆயத்தைச் சேர்வாயாக. எ-று. மெய்ப்பாடு-பெருமிதம்; பயன்-பிரியலுறுந்தலைமகன் வற்புறுத்தல்.

பலசொல்லி யென்னை யென்றது உயிர் நினக்கு ஆளாகிய பின் வேறுபல சொல்லுதல் பயனில கூறல்ன்றே என்றவாறு. பொழில்வாய் நணுகவென இயைப்பினு மமையும். (சஎ)

## நின்றுவருந்தல்.

பாங்கிற்கூட்டிப் பதிவயிற்பெயர்வோ
னீங்கற்கருமை நின்றுநினைந்த து.

(எ-து.) தலைமகளை யாயத்துக் கூட்டித் தன்பதிக்குச் செல்பவனாகிய தலைமகன் அப்புனத்தை நீங்கற் கருமையை நினைந்து நின்று வருந்தியது.

பொய்யுடையார்க்கரன்போலகலும்மகன்றாற்புணரின்
மெய்யுடையார்க்கவனம்பலம்போலமிகநணுகு
மையுடைவாட்கண்மணியுடைப்பூண்முலைவாணுதல்வான்
பையுடைவாளரவத்தல்குல்காக்கும்பைம்பூம்புனமே.

(இ-ள்.) மையுடைய வாள் கண் மணியுடைய பூண் முலை வாள் நுதல் - மையையுடைய வாள்போலுங் கண்ணையும், மணியையுடைய அணியையணிந்த முலையையுமுடைய, ஒள்ளிய நெற்றியையுடையாளும்,— வான் பையுடைய வாள் அரவம் அல்குல் காக்கும் பூ பை புனம் - பெரிய படத்தையுடைய ஒளிபொருந்திய பாம்புபோலும் அல்குலை யுடையாளுமாகிய (அவள்) காக்கின்ற பூக்களையுடைய பசுமையாகிய புனம், — அகன்றால் பொய்யுடையார்க்கு அரன்போல் அகலும் - நீங்கினால், பொய்யை யுடையவர்க்கு அரன்சேய்மைய னாதல்போல், எனக்குச் சேய்மையதாம்,—புணரின் மெய்யுடையார்க்கு அவன் அம்பலம்போல மிக நணுகும் - சேர்ந்தால், மெய்யையுடையவர்க்கு அச்சிவனது சிற்றம்பலம் அணிமையதாதல்போல, எனக்கு மிகவும் அணிமையதாம். எ - று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - ஆற்றாமை நீங்குதல். (சஅ)

பாங்கற்கூட்டம் முற்றிற்று.

## இ ட ந் த லை ப் பா டு,

என்பது, முன்னைநாள் கூடிய பொழிலிடத்துச் செல்லத் தலைப்படுதல்.

இக்கிளவி ஒருதுறையையுடைத்து. அது வருமாறு:—

பொழிலிடைச்சேற லிடந்தலைசொன்ன, வழியொடுகூட்டி வகுத்திசினோரே.

பொழிலிடைச்சேற லொன்றும் இடந்தலைக்கே யுரியது. இவ் விரண்டனுள்ளு மொன்றே நிகழுமாகையால் இதற்கு "மின் னிடை மெலிநல்'" முதலாக "சின்றவருந்நல்" ஈறாக வருங்கிளவியெல்லாம் எடுத்துணைத்துக் கொள்க.

### பொழிலிடைச்சேறல்.

ஐயரிக்கண்ணியை யாடிடத்தேசென்
றெய்துவனெனநினைந் தேந்தல்சென்றது.

(எ-து.) அழகிய அரிபரந்த கண்ணையுடைய தலைமகளை (இன்னும் தெய்வந்தானே தருமென்று) அவள் ஆடிடத்தே சென்றடைவேனென நினைந்து தலைமகன் சென்றது.

என்னறிவால்வந்ததன்றிதுமுன்னுமின்னும்முயன்றான்
மன்னெறிதந்ததிருந்தன்றுதெய்வம்வருந்தனெஞ்சே
மின்னெறிசெஞ்சடைக்கூத்தப்பிரான்வியன்றில்லைமுந்நீர் [தே.
பொன்னெறிவார்துறை வாய்ச்சென்றுமின்றோய் பொழிலிடத்

(இ - ள்.) இது முன்னும் எம் அறிவால் வந்ததன்று - இப்புணர்ச்சியானது முன்னரும் எனதறிவோடுகூடிய முயற்சியினாலே வந்ததன்றாம், — இன்னும் முயன்றால் மன் நெறி தந்தது தெய்வம் இருந்தன்று - இன்னும் முயற்சி செய்தால் நிலைபெற்ற நெறியாகிய (களவொழுக்கத்தைத்) தந்ததாகிய தெய்வமானது இருந்தது (அதுமுடிக்கும்),—நெஞ்சே வருந்தல் - (அதனால்)

மனமே வருந்தாதே,—மின் எறி செஞ்சடை கூத்தப்பிரான் - மின்னலை வெல்லுகின்ற சிவந்த சடையையுடைய நடேசனது,—வியன் தில்லை முந்நீர் பொன் எறி வார் துறைவாய் - அகன்ற தில்லை நகரத்தைச்சூழ்ந்த கடற்றிரையானது பொன்னை எறிகின்ற நெடிய துறையினிடத்து,— மின் தோய் பொழில் இடத்து சென்றும் - மின்னலையுடைய மேகத்தைத் தொடுகின்ற சோலையினிடத்துச் செல்லுவோம். எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - இடந்தலைப்படுதல். (சுகூ)

இடந்தலைப்பாடு முற்றிற்று.

---

## மதியுடம்படுத்தல்,

என்பது, தலைமகளாற் கண்ணுற் காட்டப்பட்ட காதற் பாங்கியை வழிபட்டுச் சென்றெய்துதல் முறைமை யாகலான், அவ்வாறு வழிபடத் தலைமகன் பாங்கிக்குத் தெற்றெனத் தன்குறை கூறாது மறைந்த மொழிகளால் தன்கருத்தறிவித்து, அவளை ஐயவுணர்வினளாக்கி, அது வழியாக நின்று தன்குறை கூறுதல்.

இக்கிளவி பத்துத்துறைகளையுடைத்து. அவை வருமாறு:—

சேறல்துணிதல் வேழம்வினாதல், கலைமான்வழிபதி பெயர் வினாதல்லே, மொழிபெறாதுரைத்தல் கருத்தறிவித்தல், இடை வினாதலோ டிவையீரைந்தும், மடவரற்றோழிக்கு மதியுடம்படுத்தல்.

### பாங்கியிடைச்சேறல்.

**கரந்துறைகிளவியிற் காதற்றோழி யை**
**இரந்துகுறையுறுவலென் றேந்தல்சென்றது.**

(எ - து.) (உள்ளக்குறிப்பை) மறைத்துக் கூறுஞ் சொல்லால் உயிர்ப்பாங்கியைக் குறையிரப்பேனென்று தலைமகன் சென்றது.

எளிதன் றினிக்கனிவாய்வல்லிபுல்லலெழின்மதிக்கீற்
றொளிசென்றசெஞ்சடைக்கூத்தப்பிரானையுன் ஞரினென்கட்
டெளிசென்றவேற்கண்வருவித்தசெல்லலெல்லாந்தெளிவித்
தளிசென்றபூங்குழற்றோழிக்குவாழியறிவிப்பனே.

(இ-ள்.) கனி வாய் வல்லி புல்லல் இனி எளிது அன்று - தொண்டைக் கனிபோலும் வாயையுடைய பூங்கொடியை யொப்பாளைக் கூடுதல் இனி எளிதான காரியமன்று,—எழில் மதிக்கீற்று ஒளி சென்ற செஞ்சடை கூத்தப்பிரானை உன்ஞரின் - (அதனால்) அழகையுடைய பிறைமதியின் ஒளிபரந்த சிவந்தசடையையுடைய நடேசனை நினையாதாரைப்போல, — என்கண் தெளி சென்ற வேல் கண் வருவித்த செல்லலெல்லாம் தெளிவித்து - என்னிடத்து தெளிதலைப்பொருந்திய வேல்போன்ற கண்கள் வருவித்த துன்ப மெல்லாவற்றையும் தெளிவியாநின்று,—அளி சென்ற பூ குழல் தோழிக்கு அறிவிப்பன் - வண்டுகளடைந்த பூவையணிந்த குழலையுடைய பாங்கிக்குச்சொல்லுவேன். எ-று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தோழிக் குணர்த்தி அவளால் முடிப்பலெனக்கருதி ஆற்றுமை நீங்குதல். வாழி - அசைச்சொல். (௫0)

துறையுறத்துணிதல்.

ஓரிடத்தவரை யொருங்குகண்டுதன்
பேரிடர்பெருந்தகை பேசத்துணிந்தது.

(எ - து.) (பாங்கியைக் கருதிச்சென்ற) பெருந்தகைமையுடைய தலைமகன் (தலைமகளும் பாங்கியுமாகிய) இருவரும் ஓரிடத் தொருங்கு நிற்கக்கண்டு (பாங்கியிடத்து) தன் பெருங்குறையைச் சொல்லத் துணிந்தது.

துவளக்கருங்கட்கொடியேரிடையிக்கொடிகடைக்க
ணுவளத்தனதுயிரொன்றது தன்னேடுவமையில்லா

தவளைத்தன்பால்வைத்தசிற்றம்பலத்தானருளிலர்போற்
றுவளத்தலைவந்தவின்னலின்னேயினிச்சொல்லுவனே.

(இ - ள்.) குவளை கரு கண் கொடியோர் இடை இக்கொடி கடைக்கண் - குவளைப்பூவையொத்த கருமையாகிய விழியினை யும், கொடியையொத்த இடையினையுமுடைய, இம்மாதினது கடைக்கண்,—உவளை தனது உயிரொன்றது-அவளைத் தன்னுடைய வுயிரொன்று சொல்லிற்று,— தன்னோடு உவமை இல்லாதவளை தன்பால் வைத்த சிற்றம்பலத்தான் - தன்னுடனே ஒப்பில்லாத அம்மையைத் தன்னுடைய வொருபங்கில் வைத்திருக்கின்ற திருச்சிற்றம்பலத்திலுள்ள சிவனது,— அருள் இலர்போல் - கிருபையை இல்லாதாரைப்போல,— துவள தலைவந்த இன்னல் இனி இன்னே சொல்லுவன் - வருந்தும்படி என்னிடத் துவந்த துன்பத்தை இனி இப்பொழுதே சொல்லுவேன். எ-று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம்; பயன் - மதி யுடம்படுத்தற் கொருப்படுதல். (ருக)

## வேழம்வினுதல்.

ஏழையரிருவரு மிருந்தசெவ்வியுள்
வேழம்வினுஅய் வெற்பன்சென்றது.

(எ - து.) (குறைகூறத்துணிந்த தலைமகன் தன்கு றையைப் பாங்கி தானேயுணருமளவும் மறைந்த சொற்களால் சிலசொல்லிப் பின் குறைகூறுவதே காரியமென வுட்கொண்டு வேட்டைகருதிச் சென்று ழுக) தலைமகளும் பாங்கியும் இருந்தசமையத்தில் தலைமகன் (தன்காதல்தோன்ற) யானைவரக் கண்ட துண்டோ வென்று அவருழைச்சென்றது.

இருங்களியாயின்றியாணிறுமாப்பவின்பம்பணிவோர்
மருங்களியாவனலாடவல்லோன்றில்லையான்மலையீங்

கொருங்களியார்ப்பவுமிழ்மும்மதத்திருகோட்டொருநீள்
கருங்களியார்மதயானையுண்டோவரக்கண்டதுவே.

(இ-ள்.) இரு களியாய் இன்று யான் இறுமாப்ப - பெரிய களிப்பை யுடையேனாய் இந்நாள் யானிறுமாக்கும்படி,— இன்பம் பணிவோர் மருங்கு அளியா - நிரதிசய வின்பத்தைப் பணி கின்ற அடியாரிடத்தே(அவரோடுயானுறும்படி)எனக்களித்து,— அனல் ஆட வல்லோன் - தீயிலாட வல்லவன்;— தில்லையான் - தில் லைக்கணுள்ள சிவன்;— மலை ஈங்கு - (அவனது) மலையாகிய யிவ் விடத்து,— ஒருங்கு அளி ஆர்ப்ப - ஒருசேர வண்டுக ளாரவாரிக் க,— உமிழ் மும்மதத்து இருகோட்டு நீள் கரு களி ஆர் ஒரு மத யானை - உமிழுகின்ற மூன்றுமதத்தையும் இரண்டு கொம் பினையுமுடைய, நீண்ட கரியகளிபொருந்திய, ஒரு மதயானையா னது,— வர கண்டது உண்டோ - வாராநிற்பப் பார்த்த துண் டோ? உரைமின். எ-று. “வேழம்வினுதல்” முதல் “இடைவினு தல்” ஈறுகவுள்ள எட்டுப்பாட்டிற்கும் மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்; பயன் - மதியுடம்படுத்தல்.

அனலாடவென்பது அனலோடாட வெனவிரியும். ஆர்ப்பவுமிழுமெனினு மமையும். களி - உள்ளச்செருக்கு. மதயானை - மதமிடையறுத யானை. (ருஉ)

கலைமான்வினுதல்.

சிலைமா னண்ண ல்
கலைமான் வினைய து.

(எ-து.) (யானைவரக் கண்டதுண்டோ வென்றுவினவி யுள்ளேபுகுந்தபின்பு, தான் கண்ணால் வருந்தினமை தோன்ற நின்று, கண்போலும்) பாணத்தால் வருந்தின மலைபோன்ற தலைமகன் கலைமான் வரக்கண்டதுண்டோவென்று கேட்டது.

கருங்கண்ணனையறியாமைநின்றோன்றில்லைக்கார்ப்பொழில்வாய்
வருங்கண்ணனையவண்டாடும்வளரிளவல்லியன்னீ
ரிருங்கண்ணனையகணைபொருபுண்புணரிப்புனத்தின்
மருங்கண்ணனையதுண்டோவந்ததீங்கொருவான்கலையே.

(இ-ள்.) கரு கண்ணனை அறியாமை நின்றோன் தில்லை கார் பொழில்வாய் - கரியதிருமாலை அவனறியாமல் (தன்னை) யொளித்து நின்றவனது தில்லைநகரின்கணுண்டாகிய கரியபொழிலிடத்து,—வரும் கள் நனைய - புறப்படாநின்ற மதுவினால் தம்முடல் நனையும்படி,— வண்டு ஆடும் வளர் இள வல்லி அன்னீர் - வண்டுக ளாடுதல்செய்யும் வளராநின்ற இளமையாகிய பூங்கொடியை ஒத்தவர்களே!—இரு கண் அனைய கணை பொரு புண் புணர் ஒரு வான் கலை - (உம்முடைய) பெரியகண்கள்போலும் அம்பு பொருதலாலுண்டாகிய புண்ணை அடைந்த ஒரு பெரிய கலைமானானது,—இ புனத்தின் மருங்கண் அனையது ஈங்கு வந்தது உண்டோ - இப்புனத்தின்மருங்கு அத்தன்மையது இவ்விடத்துவந்தது உண்டோ? உரைமின். எ-று.

ஐகாரம் அசைநிலையெனினு மமையும். வருங்கண்ணனைய என்பதற்கு உண்டாகக்கடவ கள்ளையுடைய அரும்புகளையுடைமையான் வண்டு காலம்பார்த்து ஆடுமாறுபோல, நம்முள்ளத்து நெகிழ்ச்சியுண்டாமளவும் நமது பக்கம்விடாது உழல்கின்றேனென்பது பயப்ப, வருங் கள்ளனையையுடையவென் றுரைப்பினுமமையும். மருங்கு என்பது மருங்கண்ணனென ஈறு திரிந்துநின்றது. அணித்தாக என்னும்பொருட்டாய் அணி அண்ணெனக்குறைந்து நின்றதெனினு மமையும். கண்ணனென்னும் பொருளதோர் பாகதச்சிதைவு, அஃது அப்பண்பு குறியாது ஈண்டுப்பெயராய் நின்றது. (ருந)

வழிவினாதல்.

கலைமான்வினாய கருத்துவேறறிய
மலைமானண்ணல் வழிவினாயது.

(எ-து.) கலைமான்வரக் கண்டதுண்டோவென்று கேட்ட எண்ணம் வேறெனப் பாங்கி யறிந்துகொள்ள, மலைபோன்ற நலைமகன் (கலைமான் வரவு கூறுவிட்டாலும்) நம்மூர்க்குச் செல்லும் வழியாயினும் சொல்லுமின் எனக் கேட்டது.

சிலம்பணிகொண்டசெஞ்சீறடிபங்கன்றன்சீரடியார்
குலம்பணிகொள்ளவெனைக்கொடுத்தோன்கொண்டுதானணியுங்
கலம்பணிகொண்டிடமம்பலங்கொண்டவன்கார்க்கயிலைச்
சிலம்பணிகொண்டநுஞ்சீறூர்க்குரைமின்கள்சென்னெறியே.

(இ-ள்.) சிலம்பு அணி கொண்ட செம் சிறு அடி பங்கன் - சிலம்பானது அழகுபெற்ற சிவந்த சிறியபாதத்தை யுடையாளது பங்கையுடையவன்,—தன் சீர் அடியார் குலம் பணி கொள்ள எனை கொடுத்தோன் - தன்னுடைய சிறப்புப்பொருந்திய அடியார் கூட்டம் குற்றேவல்கொள்ள என்னைக் கொடுத்தவன்,—தான் கொண்டு அணியும் கலம் பணி கொண்டு அம்பலம் இடம் கொண்டவன் - தான்கொண்டணியும் ஆபரணம் பாம்பாகக் கொண்டு, சிற்றம்பலத்தை யிடமாகக் கொண்டவன்,—கார் கயிலை சிலம்பு அணி கொண்ட நும் சீறூர்க்கு - (அவனது) முகில்களையுடைய கைலையினிடத்து மலையானது அழகுகொண்ட உம்முடைய சிறியவூருக்கு,— செல் நெறி உரைமின்கள் - செல்லும் வழியைச் சொல்லுங்கள். எ-று. (ருசு)

## பதிவினுதல்.

பதியொடுபெயர்வினுய் மொழிபலமொழிந்து
மதியுடம்படுக்க மன்னன்வலிந்த து.

(எ-து.) (வழிவினுவவும் அதற்கு மறுமொழிகொடாத அவ்விருவரையும், பின்னும்) பதிமுதலியவற்றை வினுவிப் பலமொழிகளைச்சொல்லிப் பாங்கியை வழிபடுதற்குத் தலைமகன் வலிந்தது.

ஒருங்கடமூவெயிலொற்றைக்கணைகொள்சிற்றம்பலவன்
கருங்கடமூன்றுகுநால்வாய்க்கரியுரித்தோன்கயிலை
யிருங்கடமூடும்பொழிலெழிற்கொம்பரன்னீர்களின்னே
வருங்கடம்மூர்பகர்ந்தாற்பழியோவிங்குவாழ்பவர்க்கே.

(இ - ள்.) மூ எயில் ஒருங்கு அட ஒற்றை கணை கொள் சிற்றம்பலவன் - மூன்றுமதிலையும் ஒருசேர அழிக்கவேண்டியோரம்பைக்கொண்ட திருச்சிற்றம்பலத்தி லுறைபவன்; — கருகடம் மூன்று உகும் நால் வாய் கரி உரித்தோன் - கரியமதம் மூன்று மொழுகும் தொங்குகின்ற வாயினையுடைய யானையையுரித்தவன்;—கயிலை இரு கடம் மூடும் பொழில் எழில் கொம்பர் அன்னீர்கள் - (அவனது) கைலைக்கண் பெரியகாட்டினுல் மூடப்படும் பொழிலினிடத்து அழகையுடைய பூங்கொம்பை யொப்பாகிய நீங்கள்,— இன்னே வருங்கள் - இங்கே வாருங்கள், — தம் ஊர் பகர்ந்தால் இங்கு வாழ்பவர்க்கு பழியோ - தங்களூர் சொன்னுல் இம்மலையில் வாழ்பவர்களுக்குப் பழியாமோ? எ-று.

இன்னே வருங்கள் என்பதில் வாருமென்பது குறுகின்றது.

## பெயர்வினுதல்.

பேரமைத் தோளியர்
பேர் வினுய து.

(எ-து.) (பதிவினவியும் மறுமொழிகொடாத) பெரிய மூங்கில்போலும் தோள்களையுடைய அவரது பெயரை வினவியது.

தாரொன்னவோங்குஞ்சடைமுடிமேற்றனித்திங்கள்வைத்த
காரொன்னவாருங்கறைமிடற்றம்பலவன்கயிலை
யூரொன்னவென்னவும்வாய்திறவீரொழிவீர்பழியேற்
பேரொன்னவோவுரையீர்விரையீர்ங்குழற்பேதையரே.

(இ - ள்.) ஓங்கும் சடை முடிமேல் தார் என்ன தனி திங்களை வைத்த - உயர்ந்த சடைமுடியின்மீது மாலையாக ஒருகலையாகிய

பிறையை வைத்த,— கார் என்ன ஆரும் கறை மிடற்று - மேக மென்ன நிறைந்த கறுப்பையுடைத்தாகிய கண்டத்தை யுடைய,— அம்பலவன் கயிலை - சிற்றம்பலவனது கைலையினிடத்து,— ஊர் என்ன என்னவும் வாய் திறவீர் - உம்முடைய ஊர்களைத் தன்மையவென்று சொல்லவும் வாய்திறவா திருக்கின்றீர், — பழியேல் ஒழிவீர் - (ஊர்சொல்லல்) பழியாகுமாகுல் ஒழிவீராக,— பேர் என்னவோ - பெயர்களைத்தன்மையவோ,— விரை ஈரம் குழல் பேதையரோ உரையீர் - வாசனையும் செய்ப்பையுமுடைய குழலையுடைய மாதர்களே? சொல்வீராக எ-று. தனித்திங்கள்— ஒப்பற்ற திங்களெனினுமமையும். வாய்திறவா தொழிவீரென்பதூஉம் பாடம். (ருகூ)

## மொழிபெறுதுகூறல்.

தேமொழியவர் வாய்மொழிபெருது
மட்டவிழ்தாரோன் கட்டுரைத்தது.

(எ - து.) (பெயர்வினவியபின்) தேன்போலுஞ் சொல்லை யுடையவரது வாய்மொழிபெருமல் மணங் கமழும் மலர்மாலையையுடைய தலைமகன் கட்டுரை கூறியது.

இரதமுடையநடமாட்டுடையவரெம்முடையர்
வரதமுடையவணிதில்லையன்னவரிப்புனத்தார்
விரதமுடையர்விருந்தொடுபேச்சின்மைமிட்டதன்றேற்
சரதமுடையர்மணிவாய்திறக்கிற்சலக்கென்பவே.

(இ-ள்.) இரதம் உடைய நடம் ஆட்டு உடையவர் - இனிமையையுடைய கூத்தாட்டை யுடையவர்,— எம்முடையர் - எம்முடையதலைவர்,— வரதம் உடைய - (அவரது) வரத்தை யளித்தலையுடைய,— அணி தில்லை அன்னவர் இ புனத்தார் - அழகிய தில்லைப்பதியை யொப்பவராகிய இந்தப்புனத்தில் வாழ்வோர்,— விருந்தொடு பேச்சு இன்மை விரதம் உடையர் - விருந்தின

ரோடு பேசாமையை விரதமாக வுடையார்,— மீட்டு அதன் றேல் - மேலும் அதுவன்றாயின்,—வாய் திறக்கின் சலக்கென்ப மணி சரதம் உடையர் - வாயைத்திறந்தால் சலக்கென்று விழு வனவாகிய முத்துமணிகளை மெய்யாக வுடையவர். எ-று.

வேழம் வினுதல் முதல் இவ்வாறுபாட்டானும் வம்புச்சொல் கூறுவார் வினவுந் தன்மைபோலத் தன் குறை தோன்றுவகை வினவினுனென்பதாம். (ருஎ)

## கருத்தறிவித்தல்.

உரைத்த துரையாது
கருத்தறி வித்த து.

(எ - து.) வினுவியவற்றிற்கு மறுமொழி கொடா மையின் (இந்தழை நும்மல்குற்குத் தகுமாயின் அணிமினென்று) தன்கருத்தை யறிவித்தது.

வின்னிறவாணுதல்வேனிறக்கண்மெல்லியலைமல்லற்
றன்னிறமொன்றிலிருத்திநின்றோன்றனதம்பலம்போன்
மின்னிறநுண்ணிடைப்பேரெழில்வெண்ணகைப்பைந்தொடியீர்
பொன்னிறவல்குலுக்காமோமணிநிறப்பூந்தழையே.

(இ-ள்.) வில் நிறம் வாள் நுதல்-வில்லினது இயல்பையுடைய ஒளிபொருந்திய நெற்றியையும்,—வேல் நிறம் கண் - வேலினது இயல்பையுடைய விழிகளையுமுடைய,—மெல் இயலை மல்லல் தன் நிறம் ஒன்றில் - மென்மையாகிய இயல்பையுடைய உமா தேவியை வண்மையையுடைய தனது திருமேனி ஒன்றிலே,— இருத்தி நின்றோன் தனது அம்பலம்போல் - இருக்கச்செய்து நின்றசிவனது திருச்சிற்றம்பலத்தை யொக்கும்,—மின் நிறம் நுண் இடை பேர் எழில் வெள் நகை பை தொடியீர் - மின்னி னது இயல்பையுடைய நுண்ணிய மருங்குலையும் மிகுந்த அழ கினையும் வெண்மையாகிய பற்களையுமுடைய பசுமையாகிய வளையல்களையுடைய மாதர்களே! — மணி நிறம் பூ தழை

மணியினது நிறத்தையுடைய இப்பூவோடுகூடிய தழையான து,—பொன் நிறம் அல்குலுக்கு ஆமோ - பொன்னினது நிறத் தையுடைய அல்குலின்மீது அணிதற்கு ஆகுமோ? (ஆமாயின் அணிவீராக). எ-று.

பொன்னிறத்திற்கும் மணிநிறத்திற்கும் பொருத்தமுடைத் தென்பது கருத்து. பொன்னிற வல்குலென்று அல்குலின் தன் மை கூறியவதனால் முன்னமே புணர்ச்சி நிகழ்ந்தமையு முண் டென்பது கூறியவாறாயிற்று. ஆமோ என்ற ஓகாரம் கொடுப் பாரது உண்மகிழ்ச்சியையும் கொள்வாரது தலைமையையும் விளக்கிநின்றது. (ருஅ)

## இடைவினாதல்.

வழிபதி பிறவினை ய்
மொழிபல மொழிந்தது.

(எ - து.) வழிபதிமுதலியவற்றை வினவியும் (த ழைகாட்டிக் கருத்தறிவித்தும் அதுவழியாக நின்று இடை வினவுதலாகிய) மொழிகள் பலகூறியது.

கலைக்கீழகலல்குற்பாரமதாரங்கண்ணார்ந்திலங்கு
முலைக்கீழ்ச்சிறிதின்றிநிற்றன்முற்றுநன்றிலங்கையர்கோன்
மலைக்கீழ்விழச்செற்றசிற்றம்பலவர்வண்பூங்கயிலைச்
சிலைக்கீழ்க்கணையன்னகண்ணீரொதுநுங்கள்சிற்றிடையே.

(இ - ள்.) கலை கீழ் - அகல் அல்குல் பாரமது - மேகலைக்குக் கீழாகிய அகன்ற அல்குலாகிய பாரமானது,—ஆரம் கண் ஆர்ந் து இலங்கும் முலை கீழ் சிறிதின்றி நிற்றல் முற்றுது - முத்துவ டம் கண்ணிற்குநிறைந்து பிரகாசியாநின்ற தனத்தின்கீழ் இடை சிறிதில்லாமல் தானேநிற்குதல் முடிவுபெறாது,—அன்று இலங் கையர்கோன் மலை கீழ் விழ செற்ற சிற்றம்பலவர் - (இம்மலை யையெடுத்த) அப்பொழுது இராவணன் இம்மலையின்கீழ் விழும் படி நெரித்த திருச்சிற்றம்பலத்திலுள்ள சிவனது, — வண் பூ

கயிலை சிலைகீழ் கணையனைன கண்ணா - வளபபமபொருந்திய பொலிவையுடைய கைலையில்நிற்கின்ற வில்லின்கீழ்வைத்த அம்புபோலும் புருவத்தின் கீழுளவாகிய கண்ணையுடைய மாதர்களே!—நுங்கள் சிற்றிடை எது - உம்முடைய சிறிய இடையானது யாது. எ-று.

பாரமது நிற்றலென இயையும். பாரம் அது என எழுவாயும் பயனிலையுமாக்கி முலைக்கீழ்ச் சிறிதாயினும் ஒன்றுமின்றி இவ்வுருவம் நிற்றல் முற்றதென் றுரைப்பாருமுளர். இவ்விரண்டு பாட்டாலும் இவன்குறை நம்மிடத்ததேயென்பது பாங்கிக்குப் புலப்பட இத்தழைகொள்ளீரென்றும் நும் இடையாதென்றும் வினவினனென்பதாம். (ருகூ)

மதியுடம்படுத்தல் முற்றிற்று.

## இருவருமுளவழியவனவரவுணாதல,

என்பது, தலைமகளும் பாங்கியு மிருக்குமிடஞ்சென்று, தலைமகன் மறைந்தமொழியால் தன்கருத்தை யறிவிக்க, பாங்கி அவன் நினைவையறிதல்.

இக்கிளவி இரண்டு துறைகளையுடைத்து. அவைவருமாறு:—

ஐயம்நாட லாங்கவையிரண்டு, மையறுதோழி யவன்வரவுணர்தல்.

### ஐயுறுதல்.

அடற்கதிர்வேலோன் றொடர்ச்சிநோக்கித்
தையற்பாங்கி யையமுற்றது.

(எ - து.) ஒளியுள்ள வெற்றிவேலையுடைய தலைமகன் (மேனி யொளியிழந்து) இப்புனத்தைவிட்டு நீங்காமையைநோக்கி புனையப்படுதலையுடைய பாங்கி (இவன் யாவனோவென) ஐயமுற்றது.

பல்லிலனுகப்பகலைவென்றோன்றில்லைபாடலர்போ
லெல்லிலனுகத்தொடேனம்விளுவிவன்யாவன்கொலாம்
வில்லிலனுகந்தழைகையில்வேட்டைகொண்டாட்டமெய்யோர்
சொல்லிலனுகற்றவாகடவானிச்சுனைப்புனமே.

(இ - ள்.) பல் இலனுக பகலை வென்றோன் - பற்களில்லாதவனுகச் சூரியனை வென்றசிவனது, — தில்லை பாடலர்போல் எல் இலன் - தில்லைப்பதியைப் பாடாதவர்களைப்போல ஒளியில்லாதவன் (ஆயினும்),—விளு நாகத்தொடு ஏனம் - விளுவப்படுவனயானையும் மானுமாயிருந்தன,—இவன் யாவன்கொல் - இவன் யாவனே?—வில் இலன் கையில் நாகம் தழை கொண்டாட்டம் வேட்டை - வில்லையுடையவனல்லன், கையில் நாகமரத்தினது தழைகளாகவிருந்தும் கொண்டாடப்படுகின்றது வேட்டை,— மெய் ஒர் சொல்லிலன் - மெய்யாயிருப்பதொரு சொல்லையுமுடையனல்லன்,—ஆ கற்றவா - ஆ (இவன் பொய்யுரை) கற்றவாறென்? — இ சுனை புனம் கடவான் - (ஈண்டொரு குறையுடையான்போன்று) இந்தச் சுனையோடுகூடிய புனத்தை கடக்கமாட்டான்போலும். எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - உசாவி யையந்தீர்தல். ஆ - வியப்பின்கட் குறிப்பு. (சுo)

## அறிவுநாடல்.

வெற்பன்விளுய சொற்பதநோக்கி
நெறிகுழற்பாங்கி யறிவுநாடிய து.

(எ - து.) (ஐயுற்றுநின்ற) நெறிந்த கூந்தலையுடைய பாங்கி தலைமகன்வினவிய சொல்லளவை ஆராய்ச்சி செய்து அறிவால் நாடியது.

ஆழமன்ளுேவுடைத்திவ்வையர்வார்த்தையனங்கனைந்து
வீழமுன்னுேக்கியவம்பலத்தான்வெற்பினிப்புனத்தே
வேழமுன்னுய்க்கலையாய்ப்பிறவாய்ப்பின்னுமென்றழையாய்
மாழைமெ்ன்னுேக்கியிடையாய்க்கழிந்ததுவந்துவந்தே.

(இ-ள்.) அனங்கன் நைந்து வீழ - மன்மதன் அழிந்து விழ படி,—முன் நோக்கிய அம்பலத்தான் வெற்பின் - முற்காலத்த் நோக்கிய திருச்சிற்றம்பலத்தி லுறைபவனது மலையிலுள்ள, இ புனத்தே முன் வேழமாய் கலையாய் பிறவாய் - இப்புன தின்கண்ணே முன் யானையாய் (பின்) மானாய் வேறுகிலவாய், பின்னும் மென் தழையாய் வந்து வந்து மாழை மென் நோ இடையாய் கழிந்தது - பின்னும் மெல்லியதழையாய் வந்து து பேதமையையுடைய மெல்லியபார்வையை யுடையாள மருங்கு மாய்விட்டது.—இ ஐயர் வார்த்தை - இவ்வையருடை ய சொல்லானது,—ஆழம் உடைத்து - ஆழ்ந்தகருத்தை உடை யது. எ-று. மெய்ப்பாடு - மருட்கையைச்சார்ந்த பெருமிதம் பயன் - ஐயந்தீர்தல்.

மன்னும் ஓவும் அசைநிலை. மெல்லிய நோக்கத்தையுடைய ளிடைபோலும் பொய்யாய் விட்டதென்பாருமுளர். சொற் தம் - சொல்லளவு. (கூ

இருவருமுள்வழி யவன்வரவுணர்தல் முற்றிற்று.

---

## முன் னு ற வு ண ர் த ல்,

என்பது, தலைமகன் வினவியதற்கெல்லாம் பாங்கி மறுமொ ழி கொடாமையால் தலைமகன்வாட, அதுகண்டு தலைமகளும் வாட, அவ்விருவர் வாட்டத்திற்கும் முன்னுற்ற காரணத்தைய யப் பாங்கி தலைமகளை வினவுதல்.

இக்கிளவி ஒரு துறையையுடைத்து. அதுவருமாறு:—

வாட்டம்வினாதல் முன்னுறவுணர்தல், கூட்டியுணரும் குறி புணையாகும்.

### வாட்டம்வினாதல்.

மின்னிடைமடந்தை தன்னியனோக்கி
வீங்குமென்முலைப் பாங்கிபகர்ந்த கூ.

க (எ-து.) மின்போலும் இடையையுடைய தலைமக ளது இயல்பினைநோக்கிப் பருத்தமென்மையாகிய முலையையுடைய பாங்கி (தலைமகள்துவாட்டம்) வினவியது.

திருத்தம்பயின்றவன்சிற்றம்பலத்துநெற்றித்தனிக்க
ணொருத்தன்பயிலுங்கைலைமலையினுயர்குடுமித்
திருத்தம்பயிலுஞ்சுனைகுடைந்தாடிச்சிலம்பெதிர்கூய்
வருத்தம்பயின்றுகொல்லோவல்லிமெல்லியல்வாடியதே

(இ-ள்.) சிற்றம்பலத்து நிருத்தம் பயின்றவன் - திருச்சிற்றம்பலத்தின்கண் நடனத்தை (இடைவிடாமல்) செய்தவன்,—நெற்றி தனி கண் ஒருத்தன் - நெற்றியினிடத்து தனிமையாகியகண்ணையுடைய ஒப்பில்லாதவன்,—பயிலும் கயிலை மலையின் - (அவன்) வாசஞ்செய்யும் கயிலை மலையினுடைய,—உயர் குடுமி திருத்தம் பயிலும் சுனை குடைந்து ஆடி - உயர்வாகிய வுச்சியில் தீர்த்தம் நிற்கும் சுனையை மூழ்கியாடி,—சிலம்பு எதிர் கூய் - மலைக்கு எதிரே யழைத்து,—வருத்தம் பயின்றுகொல்லோ - (இவ்வாறு விளையாடியதால்) வருத்தத்தை அடைந்தோ (பிறிதொன்றினானோ),—வல்லி மெல் இயல் வாடியது - வல்லிபோலும் மெல்லிய வியல்பினையுடையாள் வாடினது. (எ-று.) மெய்ப்பாடு-மருட்கை; பயன் - தலைமகட்குற்ற வாட்டமுணர்தல். (கூ௨)

மூன்றுறவுணர்தல் முற்றிற்று.

---

## குறையுறவுணர்தல்,

என்பது, தலைமகன் குறையுற, பாங்கி அத்னைத்துணிந்தறிதல்.

இக்கிளவி, நான்குதுறைகளையுடைத்து. அவைவருமாறு:—

குறையுற்றுநிற்ற லவன்குறிப்பறிதல், அவள்குறிப்பறிதலோடவர்நினைவெண்ணல், கூறியநான்குங் குறையுறவுணர்வெனத், தேறியபொருளில் தெளிந்திசினோரே.

## குறையுற்று நிற்றல்.

கறையுற்ற வேலவன்
குறை யுற்ற து.

(எ - து.) கறைதங்கிய வேலையுடைய தலைமகன், (நீவிர் வேண்டிய) இழிதொழிலையுஞ் செய்வேனென் று கூறியது.

மடுக்கோகடலின்விடுதிமிலன்றிமறிதிரைமீன்
படுக்கோபணிலம்பலகுளிக்கோபரன்றில்லைமுன்றிற்
கொடுக்கோவளைமற்றுநும்மையர்க்காயகுற்றேவல்செய்கோ
தொடுக்கோபணியீரணியீர்மலர்நுஞ்சுரிகுழற்கே.

(இ-ள்.) கடலின் விடு திமில் மடுக்கோ - கடலின்கண் விட படுந்தோணியைச் செலுத்துவேனோ,—அன்றி மறி திரை மீ படுக்கோ - அல்லாமல் மடங்குகின்ற அலைகளையுடைய கடலி புக்கு மீன்களைப் பிடிப்பேனோ, — பணிலம் பல குளிக்கோ (ஒரு குளிப்பில்) சங்குகள் பலவற்றை யெடுப்பேனோ, — பர தில்லை முன்றில் வளை கொடுக்கோ-சிவபிரானது தில்லைமுற்ற திற்சென்று சங்குவளைகளை விற்பேனோ,—மற்றும் நும் ஐயர்க்ஞ ஆய குற்றேவல் செய்கோ - பின்னும் உம்முடைய ஐயன்ம ருக்குப் பொருந்தின குற்றேவல்களைச் செய்வேனோ, — அ ஈரம் மலர் நும் சுரி குழற்கு தொடுக்கோ பணியீர் - அணியப் டும் குளிர்ச்சிபொருந்திய மலர்களை உம்முடைய சுரிந்த கூந் லிற்குத் தொடுப்பேனோ, சொல்லுங்கள். எ-று. மெய்ப்பாடு இளிவரல் ; பயன் - குறையுறுதல்.

மற்று-வினைமாற்று. இவன் உயர்ந்த தலைமகனுதலின் அவ தன்னை வேறுபட வுணராமைக் கூறியவாறு. (சுங

## அவன்குறிப்பறிதல்.

பொற்றொடித்தோளிதன் சிற்றிடைப்பாங்கி
வெறிப்பூஞ்சிலம்பன் குறிப்பறிந்த து.

(எ-து.) பொன்னாலாகிய தொடியையணிந்த தோளினையுடைய தலைமகளது சிறிய இடையையுடைய பாங்கி, மணங்கமழும் பூக்களையுடைய மலைநாடனாகிய தலைமகனது (குறையுறும்) நிலைமையைத் துணிந்தறிந்தது.

அளியமன்னும்மொன்றுடைத்தண்ணலெண்ணரன்றில்லையன்னா [ள்
கிளியைமன்னுங்கடியச்செல்லகிற்பிற்கிளரளகத்
தளியமர்ந்தேறின்வறிதேயிருப்பிற்பளிங்கடுத்த [த்தே.
வொளியமர்ந்தாங்கொன்று போன்றொன்றுதோன்றுமொளிமுக

(இ-ள்.) அரன் தில்லையன்னாள் - அரனது தில்லையையொப்பாள்,—மன்னும் கிளியை கடிய செல்லகிற்பின் - (புனத்தின்கண் பொருந்தும்) கிளிகளை ஓட்டுதற்குச் செல்லகின்றாலும்,— கிளர் அளகத்து அளி அமர்ந்து ஏறின் - (இவளுடைய) விளங்குகின்ற கூந்தலின்கண் வண்டுகள் மேவி ஏறினாலும், — வறிதே இருப்பின் - (இவள்) சும்மா இருந்தாலும், — பளிங்கு அடுத்த ஒளி அமர்ந்தாங்கு - பளிங்கானது (தன்னை) அடுத்த நிறத்தைப் பொருந்தினாற்போல, — ஒளிமுகத்து - (இவளது) ஒளியையுடைய முகத்தினிடத்து, — ஒன்றுபோன்று ஒன்றுதோன்றும் - (முன்) ஒன்றைப்போலிருந்து (பின்) வேறொன்றுதோன்றும்.—அளிய அண்ணல் எண் மன்னும் ஒன்றுடைத்து - (அதனால்) அளிய அண்ணலது எண்ணமானது பொருந்திய ஒரு குறிப்பை யுடையது. (அஃது இவள் கண்ணதேபோலும்).
எ-று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - துணிந்துணர்தல்.

கிளியை மன்னு மென்புழி மன்னும் அசைநிலையெனினு மமையும். ஒன்றுபோன் றொன்று தோன்றுமென்றது - கிளியைக்கடியச் சிறிதுபுடைபெயரின் நெட்டிடைகழிந்தாற்போல ஆற்றாகலானும், வண்டுமூசப்பெறுளென்று வருந்தி வண்டை யோச்சுவான்போலச் சேறலானும், வாளாவிருப்பிற் கண்டின்புறுத

லானும், இவள் கண்ணிகழ்ச்சி இவன்முகத்தே புலப்படாநின்றது. ஏறிவறிதே யிருப்பினென்பது பாடமாயின், அளியேத் அளகத்தின்கட் சிறிதிருப்பினுமெண வுரைக்க. ஒளிர் முகபே யென்பதூஉம் பாடம். (௬௪

அவள்குறிப்பறிதல்.

ஆங்கவள் குறிப்பு ப்
பாங்கி பகர்ந்த து.

(எ-து.) (தலைமகன் குறிப்பறிந்த) பாங்கி, அவனைப்போலத் தலைமகள் குறிப்பும் (ஒன்றெனத்) துணிந்தறிந்தது.

பிழைகொண்டொருவிக் கெடாதன்புசெய்யிற் பிறவியென்னு, முழைகொண்டொருவன்செல் லாமைநின்றம்பலத் தாடு முன்றோ, னுழைகொண்டொருங்கிரு நோக்கம்பயின்றவெம் மொண்ணுதன்மாந், தழைகொண்டொருவனென் னுமுன்னமுள்ளந் தழைத்திடுமே.

(இ - ள்.) பிழைகொண்டு ஒருவி கெடாது ஒருவன் அன்பு செய்யின் - பிழைத்தலைக்கொண்டு நீங்கிக் கெடாமல் ஒருவன் அன்பைச் செய்வானாகில், — பிறவியென்னும் முழைகொண்டு செல்லாமை அம்பலத்து நின்று ஆடும் முன்றோன் - (அவன்) பிறப்பென்கின்ற குகையையடைந்து செல்லாதபடி திருச்சிற்றம்பலத்தின்கண் நின்று ஆடாநின்ற முதல்வனது, — உழை கொண்டு ஒருங்கு இருநோக்கம் பயின்ற - மானையொத்து ஒரு சேர (வெள்ளைநோக்கமும், அதற்கில்லாத கள்ளநோக்கமுமாகிய) இருநோக்கத்தையுங் கற்ற,—எம் ஒள் நுதல் - எம்முடைய ஒள்ளிய நுதலையுடையாள், — மா தழைகொண்டு ஒருவன் என்னு முன்னம் உள்ளம் தழைத்திடும் - மாமரத்தினது தழையைக்கொண்டு ஒருவனென்று சொல்லுவதன்முன் மனம் மகிழாநிற்பாள். (அதனால் இவள் குறிப்பு அவன் கண்ணதேபோலும்.) எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - குறையுறுதல்

அடைந்தார் பிழைசெய்யின், தலையாயினார் பிழையை யுட்கொண்டமைதலும், இடையாயினார் அவரைத் துறத்தலும், கடையாயினார் அவரைக் கெடுத்தலும், உலகத்துள்ளதாகலான், அம்மூவகையும் செய்யாதொழிறு மமையும். (சுரு)

## இருவர்நினைவு மொருவழியுணர்தல்.

அன்புறு நோக்காய்கறி ந்
இன்புறுதோழி யெண்ணியது.

(எ - து.) அன்புறுநோக்கம் அவ்விடத்தறிந்து (இருவர் காதலையுங் கண்டு) இன்புறுகின்ற பாங்கி, நினைந்தது.

மெய்யேயிவற்கில்லைவேட்டையின்மேன்மனமீட்டிவளும்
பொய்யேபுனத்தினைக்காப்பதிறைபுலியூரனையாள்
மையேர்குவளைக்கண்வண்டினம்வாழுஞ்செந்தாமரைவா
யெய்யேமெனினுங்குடைந்தின்பத்தேனுண்டெழிறருமே.

(இ-ள்.) இறை புலியூர் அனையாள் - இறைவனது சிதம்பரத்தை யொப்பாளுடைய,—மை ஏர் குவளை கண் வண்டு இனம் வாழும் - மையழகுடைய குவளைமலர்போலும் கண்ணாகிய வண்டுக்கூட்டங்கள் வாழ்தற்குத் தகும், — செந்தாமரைவாய் எய்யேம் எனினும் குடைந்து இன்பம் தேன் உண்டு எழில்தரும் - (இவன்முகமாகிய) செந்தாமரைமலரின்கண் (யாம்) அறியோமாயினும் குடைதலைச்செய்து இன்பமாகிய தேனை யருந்தி யழகைப்பெறாநிற்கும்.—மெய்யே இவற்கு வேட்டையின்மேல் மனம் இல்லை - (அதனால்) உண்மையாகவே இவனுக்கு வேட்டையாடுதலின்மேல் உள்ளமானது இல்லையாம். — மீட்டு இவளும் புனம் தினை காப்பது பொய்யே - மீண்டிவளும் புனத்தினுள்ள தினையைக் காத்தலைச்செய்வது பொய்யேயாம். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - குறையுறுதல்.

எய்யேமெனினு மென்பதற்கு ஒருவனையொருவர் அறிே மென்றிருப்பினும் எனினு மமையும். எழில்தருதல் - எ லைப் புலப்படுத்துதல். நோக்கத்தின் பன்மைகருதி வண்டின என்றாள். (சுக

குறையுறவுணர்தல் முற்றிற்று.

---

## நாணநாட்டம்,

என்பது, இருவர்நினைவும் ஐயமறத் துணிந்தபாங்கி, அவ கூட்டமுண்மை அறிவது காரணமாகத் தலைமகளை நாணநாட நிற்றல். இது நன்னிலைநாணமெனினு மொக்கும்.

இக்கிளவி ஐந்துதுறைகளை யுடைத்து. அவை வருமாறு:—

பிறைதொழுகென்றல் பின்னுமவளை, உறவெவ்வேறு படுத்து யுரைத்தல், சுனையாடல்கூறல் தோற்றங்கண்டு, புணர்ச்சியுரை தல் பொதுவெனக்கூறி, மதியுடம்படுதல் வழிநாணநடுங்கல் புலிமிசைவைத்தல் புகலுங்காலே. இவற்றுள் புலிமிசைவை தல் நடுங்கநாட்டமாம்.

### பிறைதொழுகென்றல்.

பிறைதொழுகென்று பேதைமாத ரை
நறுநுதற்பாங்கி நாணநாட்டிய து.

(எ-து.) பேதைமைத்தன்மையையுடைய தலைம களைப் பிறையைக்காட்டித் தொழுகவென்று நல்ல நெற்றியையுடைய பாங்கி, நாணத்தான் அவள் நினை வை நாட்டியது.

மையவார்கருங்கண்ணிசெங்கரங்கூப்புமறந்துமற்றப்
பொய்வானவரிற்புகாதுதன்பொற்கழற்கேயடியே
ஐய்வான்புகவொளிர்தில்லைநின்றோன்சடைமேலதொத்த
செவ்வானடைந்தபசுங்கதிர்வெள்ளைச்சிறுபிறைக்கே.

(இ - ள்.) மறந்தும் பொய் அவானவரில் புகாது - மறந்தும் பொய்மையையுடைய அந்தத் தேவர்களிடத்துப் புகாமல்,— தன் பொன் கழற்கு - தன்னுடைய பொன்னாற்செய்த கழலை யணிந்த திருவடிகளில்,—அடியேன் உய்வான் புக - அடியேன் பிழைக்கவேண்டிப் புகும்படி,—ஒளிர் தில்லை நின்றோன் - விளங்குகின்ற தில்லையின்கண் நின்றசிவனது,— சடைமேலது ஒத்து - சடையினிடத்ததாகிய பிறையை யொத்து,—செவ்வான் அடைந்த - செவ்வானத்தைச் சேர்ந்த, — பசுங்கதிர் வெள்ளை சிறு பிறைக்கு - செவ்விய கிரணத்தையுடைய வெண்மையாகிய சிறிய பிறைக்கு,—மை வார் கரு கண்ணி - மையையுடைய நெடிய கருமையாகிய கண்ணையுடையாய்!,—செம் கரம் கூப்பு - (நினது) செம்மையாகிய கைகளைக் கூப்புவாயாக. எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - கரவுநாடி யுணர்தல்.

மற்று - அசைநிலை. மற்றையென்பது பாடமாயின் அல்லாத பொய்வானவரொன் றுணைக்க. பிறர்கூறும் பெருமை அவர்க்கின்மையின் பொய்வானவரொன்றார். சடை - செக்கர்வானத்துக் குவமை. (கூஎ)

### வேறுபடுத்துக்கூறல்.

**வேய்வளைத்தோளியை வேறுபாடுகண்**
**டாய்வளைத்தோழி யணங்கென்ற து.**

(எ-து.) மூங்கில்போலும் வளைவினையுடைய தோளையுடையதலைமகளை (பிறைதொழாது தலைசாய்த்து) வேறுபட்டிருத்தல்கண்டு ஆராய்ந்த வளையலையணிந்த பாங்கி, வளையணங்காகப் புனைந்து கூறியது.

**அ**க்கின்றவாமணிசேர்கண் டனம்பலவன்மலயத்
திக்குன்றவாணர்கொழுந்திச்செழுந்தண்புனமுடையா
ளக்குன்றவாறமர்ந்தாடச்சென்றாளங்கமவ்வவையே
யொக்கின்றவாறணங்கேயிணங்காகுமுனக்கவளே.

(இ - ள்.) அக்கு தவா மணி சேர் கண்டன் - அக்காகிய நல்ல மணியைப் பொருந்திய கண்டத்தையுடையவன். — அம்பலவ ன் - சிற்றம்பலத்திலுள்ளவன். — மலையத்து இ குன்றவாணர் கொழுந்து - (அவனது) பொதிய மலையின்கணுள்ள இந்த குன்றவாணருடைய மகளாகிய,—இ செழு தண் புனம் உடையாள் - இந்த செழுமையாகிய தண்ணிய தினைப்புனங் காவலுடையாள்,—அ குன்றம் ஆறு அமர்ந்து ஆட சென்றாள் - அக் குன்றத்தின்கணுள்ள நதியை விரும்பி மூழ்கப் போயினாள்,— அங்கம் அவ்வவையே ஒக்கின்றவாறு - உன் அவயவங்கள் அவ ளவயவங்களாகிய அவற்றையே ஒத்திருக்கின்றபடி,—அனை ங்கே - என்னணங்கே! — உனக்கு அவள் இணங்காகும் - நினக்கு அவள் இணங்குதற்காகும். (அதனால் அவளைக்கண்டுபோவாய். எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - கரவுநாடியுணர்தல்.

இன் - அல்வழிச்சாரியை. (௬௮)

சுனையாடல்கூறி நகைத்தல்.

மாணநாட்டிய வார்குழற்பேதையை
நாணநாட்டி நகைசெய்த து.

(எ - து.) மாட்சிமைப்பட நிலைபெறுத்த நீண்ட கூந்தலையுடைய (வேறுபடுத்துக் கூறக்கேட்ட) தலை மகளை, (பாங்கி சுனையாடல்கூறி) நாணத்தை விளை வித்து நகைசெய்தது.

செங்கிறமேனிவெண்ணீறணிவோன்றில்லையம்பலம்போ
லங்கிறமேனிநின்கொங்கையிலங்கழிகுங்குமமு
மைங்கிறவார்குழன்மாலையுந்தாதும்வளாய்மதநுஞ்சே
ரிங்கிறமும்பெறினியானுங்குடைவனிருஞ்சுனையே.

(இ-ள்.) செம் நிறம் மேனி வெண்ணீறு அணிவோன் தில்லை அம்பலம்போல் - செவந்த நிறத்தையுடைய திருமேனியில்

வெண்மையாகிய திருநீற்றை அணிபவனது தில்லையம்பலத்தை யொக்கும், — அம் நிறம் மேனி நின் கொங்கையில் - அழகிய நிறத்தையுடைத்தாகிய மேனியையுடைய உன்னுடைய தனங்களில், — அங்கு அழி குங்குமமும் - அவ்விடத்தழிந்த செஞ்சாந்தையும், — மை நிறம் வார் குழல் மாலையும் - மையைப்போலும் நிறத்தையுடைய நெடிய கூந்தலிலுள்ள மாலையையும், — தாதும் - (அக்கூந்தலி லப்பிய) பூந்தாதினையும், — வளாய் மதம் சேர் இந்திறமும் - (உடல்முழுவதும்) சூழ்ந்து (காமக்களிப்பாலுண்டாகிய) கதிர்ப்பைச் சேர்ந்த இந்தநிறத்தையும், — பெறின் - பெறுவேனாயின், — இரும் சுனை யானும் குடைவன் - (நீமூழ்கிய) பெரிய சுனையில் யானும் மூழ்குவேன்.

எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - கரவுநாடியுணர்தல்.

அங்கழிகுங்கும மென்றது - முயங்குதலாலழியும் அவ்விடத்தி லழிந்த குங்குமம். வளாவுதல் என்றது - புணர்ச்சிக்காலத்தில் மாலையின் முறிந்தமலரும், அளகத்தப்பியதாதும், சிதறிக் குங்குமத்தினமூழ்ந்தி வாங்குதற் கருமையாக விரவுதல். (கூ௯)

## புணர்ச்சியுரைத்தல்.

மணக்குறி நோக்கிப்
புணர்ச்சி யுரைத்தது.

(எ-து.) (சுனையாடல்கூறி நகைசெய்தபாங்கி, தலைமகளிடத்து) மலர்நாற்றக் குறியைக்கண்டு புணர்ச்சி கூறியது.

பருங்கண்கவர்கொலைவேழப்படையோன்படப்படர்தீத்
தருங்கண்ணுதற்றில்லையம்பலத்தோன்றடமால்வரைவாய்க்
கருங்கண்சிவப்பக்கனிவாய்விளர்ப்பக்கண்ணாரளிபின்
வருங்கண்மலைமலர்சூட்டவற்றேமற்றவ்வான்சுனையே.

(இ - ள்.) பரு கண் கவர் கொலை வேழம் படையோன் பரியகண்ணுக்களையும் விரும்பப்படுங் கொலையையுமுடைய க ம்புவில்லாகிய படையையுடைய மன்மதனை, — படட படர் தரும் கண்ணுதல் தில்லையம்பலத்தோன் - அழியச் செல்லு கின்ற நெருப்பைத் தருகின்ற கண்ணையுடைத்தாகிய நெற்றி யையுடைய தில்லையம்பலத்திலுள்ள இறைவனது,— தட மா வரைவாய் - மிகப்பெரிய மலையிடத்து, — அ வான் களை (நீழ்மூழ்கிய) அந்த பெரிய சுனையானது,— கரு கண் சிவப்ப - க பகண்ணுனது சிவக்க,—கனி வாய் விளர்ப்ப - தொண்டை கனிபோலும் வாயானது வெளுக்க,—அளி பின் வரும் கூ ஆர் கள் மலை மலர் சூட்டவற்றே - வண்டுகள் பின்றொடர்ந் வரும் கள்ளிற்கு, நிறைந்த தேனையுடைய மலைமலரைச் சூடு தன்மையையுடையதோ? (சொல்வாயாக.) எ-று. மெய்ப்பாடு நகை ; பயன் - கரவுநாடி யுணர்தல்.

தடமும் மாவும் பெருமையாகலின் மிகப்பெரிய வென்பது விளங்கும். தடம் - தாழ்வரை யெனினு மமையும். மற்று-அசை நிலை. (௭0

மதியுடம்படுதல்.

அயில்வேற்கண்ணியொ டாடவன்றனக்குயிரொன் மயிலியற்றோழி மதியுடம்பட்டது. [றெனை

(எ - து.) கூர்மையாகிய வேல்போன்ற கண்ணை யுடைய தலைமகளோடு தலைமகனுக்கு உயிரொன்றே யென (புணர்ச்சியுணர்ந்து) மயிலினது சாயலையுடைய பாங்கி, வியந்து கூறியது.

நாகத்திருகண்ணிற்கொன்றேமணிகலந்தாங்கிருவ ராகத்துளோருயிர்கண்டனம்யாமின்றியாவையுமா மேகத்தொருவனிரும்பொழிலம்பலவன்மலையிற் றோகைக்குந்தோன்றற்குமொன்றாயவருமின்பத்துன்பங்களே.

(இ - ள்.) யாவையுமாம் ஏகத்து ஒருவன் - எல்லாப்பொருள்களுமாய் விரியும் பராசத்தியையுடைய ஒருவன்.—இரும்பொழில் அம்பலவன் - பெரிய சோலைகளால் சூழப்பட்ட திருச்சிற்றம்பலத்தை யுடையவன். — மலையில் - (அவனது) மலையின்கண்,—நோகைக்கும் நோன்றற்கும் இன்பத்துன்பங்கள் ஒன்ருய் வரும் - மயிலையொத்த இம்மாதுக்கும் இவ்வரசனுக்கும் இன்பமுந் துன்பமும் ஒன்ருய் வராநின்றன. — காகத்து இரு கண்ணிற்கும் மணி ஒன்றே கலந்தாங்கு - (அதனுல்) காக்கையினது இரண்டு கண்களுக்கும் மணி ஒன்றே கலந்தாற் போல,—இருவர் ஆகத்துள் ஓருயிர் யாம் இன்று கண்டனம் - இருவருடைய உடலின்கன் ஒருயிரை நாம் இன்று கண்டோம். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - மதியுடம்படுதல்.

அம்பலவன் மலையில், இன்று யாம் கண்டனமென்று கூட்டி, வேருேரிடத்து வேருெரு காலத்து வேருெருவர் இதுகண் டறிவாரில்லை யென்பதுபட வுரைப்பினு மமையும். கலந்தா ரிருவரொன்பது பாடமாயின் காகத்திருகண்ணிற் சொன்றே மணியென்பதனை யெடுத்துக்காட்டாக வுரைக்க. (எக)

நாணநாட்டம் முற்றிற்று.

---

# நடுங்கநாட்டம்,

என்பது, தலைமகள் பெருநாணினளாகலானும் பாங்கி அவள் குற்றேவல் மகளாகலானும், சொல்லாடாது தலைமகளைக்கொண்டே கேட்பதுகாரணமாக நெருங்கிநின்று, ஒருபுலி யொருவனை யெதிர்ப்பட்டதெனப் பாங்கி, தலைமகளை நடுங்க நாடுதல்.

இக்கிளவி நடுங்கநாட்ட மென்னும் ஒரு துறையை யுடைத்து.

## நடுங்கநாட்டம்.

நுடங்கிடைப்பாங்கி
நடுங்கநாட்டியது.

(எ - து.) துவள்கின்ற இடையையுடைய பாங்கி, (புலியெதிர்ப்பட்டதென) நடுங்கும்படி நாடிநின்றது.

ஆவா விருவ ரறியா வடிதில்லை யம்பலத்து
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாரின்முன்னித்
தீவா யுழுவை கிழித்தந்தோ சிறிதே பிழைப்பித்
தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றோ ரண்டகையே.

(இ-ள்.) இருவர் அறியா அடி - அயனும் அரியுமாகிய விரு அறியாத திருவடியை,—தில்லை அம்பலத்து மூவாயிரவர் வண ங்க நின்றோனை - தில்லை நகரத்திலுள்ள திருச்சிற்றம்பலத்தி கண் மூவாயிரம் அந்தணர்கள் வணங்கும்படி (எளிவந்து) நி றவனை, — உன்னாரின் - நினையாதவரைப்போல (வருந்த),- முன்னி தீவாய் உழுவை கிழித்தது - எதிர்ப்பட்டு (நஞ்சு) ெ டியவாயினை புலி திறந்தது,—அந்தோ சிறிதே பிழைப்பித்த (அப்போது) ஐயோ சிறிதே தப்புவித்து,—இன்று ஓராண் கை மணி வேலை பணிகொண்டவாறு - இன்று ஒரு ஆ மகன் மணியையுடைய வேலினை ஏவல்கொண்ட விதம் எ எ-று. மெய்ப்பாடு - நகை; பயன் - நடுங்கநாடிக் கரவுநாடு ணர்தல்.

ஆவாவென்பது, அயனும் அரியும் தில்லையம்பலத்திற் சென் வணங்குமா றறிந்திலரென்னும் கருத்தினராகலின், அருளி கட்குறிப்பு. அந்தோவென்பது இரக்கத்தின்கட்குறிப்பு. இ திக்கண் ஆவாவென்பது வியப்பின்கட் குறிப்பு. (எ

நடுங்கநாட்டம் முற்றிற்று.

## மடற்றிறம்,

என்பது, நடுங்காடவும் தலைமகள் நாணத்தால் தன்குறை கூறமாட்டாது நிற்ப, இனியிவள் இறந்துபடவுங் கூடுமெனவுட்கொண்டு, தலைமகளுடன் சொல்லாடத் துணிந்த பாங்கி, தானும் பெருநாணினளாதலின் பின்னும் அவன் குறையுறவேண்டி நிற்கு நிலைமைக்கண், தலைமகன்சென்று என்குறை நின்னால் முடியுமெனக்கருதி நின்னைவந்திரந்தேன், அது நின்னால் முடியாதாயின், மடலூர்ந்தாயினும் அக்குறையை முடித்துக்கொள்வேனெனப் பாங்கிக்கு மடலூருந்திறத்தைக் கூறுதல்.

இக்கிளவி ஒன்பது துறைகளையுடைத்து. அவைவருமாறு:—

ஆற்றாதுரைத்த லலரின்மேல்வைத்தல், தன்றுணி புரைத்தலொடுவகையுரைத்தல், அருளாலரிதெனல் நடையாலரிதெனல், அவயவமெழுத லரிதெனவிலக்கல், உடம்படாதுவிலக்க லுடம்பட்டுவிலக்கல், இடம்படவொன்பதும் செப்புங்காலை, வடம்படுமுலைமேல் மடலாகும்மே.

### ஆற்றாதுரைத்தல்.

மல்லற்றிரள் வரைத்தோளவன்
சொல்லாற்றாது சொல்லியது.

(எ-து.) வளப்பம் பொருந்திய திரண்ட மலைபோலுந் தோளையுடைய தலைமகன் (தன்வருத்த மிகுதியை) சொல்லுதற்கும் ஆற்றாதுரைத்தது.

**பொ**ருளாவெனைப்புகுந் தாண்டுபுரந்தரன்மாலயன்பா
லிருளாயிருக்குமொளிநின்றசிற்றம்பலமெனலாஞ்
சுருளார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்துடியிடையீ
ரருளாதொழியினொழியாதழியுமென்னாருயிரே.

(இ-ள்.) புகுந்து எனை பொருளா ஆண்டு-(தானேவந்து) புகுந்து என்னைப் பொருளாக மதித்து ஆட்கொண்டு,—புரந்தரன்

மால் அயன்பால் இருளாய் இருக்கும் - இந்திரன் திருமால் நான்முகன் (என்னும்) அவர்களிடத்து இருளாயிருக்கின்ற, — ஒளிகின்ற சிற்றம்பலம் எனலாம் - ஒளிதங்கிய திருச்சிற்றம்பலம் என்று சொல்லத்தகும், — சுருள் ஆர் கரு குழல் வெள் நகை செ வாய் துடி இடையீர் - சுருள்பொருந்திய கருமையாகிய கூந்தலினையும் வெண்மையாகிய பல்லினையும் சிவந்த வாயினையும் (உடைய) உடுக்கையையொத்த இடையினையுடையீர்! — அருளாது ஒழியின் - (நீயிர்) அருள் செய்யாதொழியின், — என் ஆர் உயிர் ஒழியாது அழியும் - எனது ஆருயிரானது தப்பாமலழியும். (அதனை அருளத்தகும்.) எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமையுணர்த்துதல். (எ௩

## உலகின்மேல்வைத்துரைத்தல்

புலவேலண்ணல் புனைமடலேற்
றுலகின்மேல்வைத் துய்த்துரைத்தது.

(எ - து.) (ஆற்றாமைகூறி அதுவழியாகநின்று) நிணந்தங்கிய வேலையுடைய தலைமகன், அலங்கரிக்கின்ற மடலின்வயத்தனாய் உலகின்மேல் வைத்துக் குறிப்பா லுரைத்தது.

காய்சினவேலன்னமின்னியல்கண்ணின்வலைகலந்து
வீசினபோதுள்ளமீனிழந்தார்வியன்றென்புலியூ
ரீசனசாந்துமெருக்குமணிந்தோர்கிழிபிடித்துப்
பாய்சினமாவெனவேறுவர்சீறூர்ப்பனைமடலே.

(இ-ள்.) காய் சினம் வேல் அன்ன மின் இயல் கண் வலை கலந்து வீசின போது - காய்கின்ற கோபத்தையுடைய வேலையொத்த ஒளியியலும் விழியாகிய வலையை (மகளிர்) கலந்து வீசின காலத்து,—உள்ளம் மீன் இழந்தார் - மனமாகிய மீனை இழந்துபோன ஆடவர்கள், — வியன் தென் புலியூர் ஈசன சாந்தும் எருக்கும் அணிந்து - (அதைப்பெறுதற்கு வேறுபாயமில்லாத

விடத்து) பெரிய தென்றிசையிலுள்ள தில்லை நகரத்திலிருக்கின்ற ஈசனுடைய திருநீற்றையும் எருக்கம்பூவையும் அணிந்துகொண்டு, — ஓர் கிழி பிடித்து - ஒரு படத்தை (கையில்) பிடித்து,—பாய் சினம் மா என பனைமடல் சிறு ஊர் ஏறுவர் - பாய்கின்ற கோபத்தையுடைய குதிரையென்னும்படி பனைமடலைச் சிறிய ஊரினிடத்து ஏறுவார்கள். எ - று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - ஆற்றாமை யுணர்த்துதல்.

மின்னியல்வேலென்று கூட்டினு மமையும். இன் அல்வழிச் சாரியை. கன்னெனன் வலையென்பதூஉம் பாடம். சாந்தும் எருக்குமென இரண்டாகலின் ஈசன வெனப் பன்மையுருபு சொடுத்தார். உள்ளமிழந்தவர் உள்ளம்பெறுமளவும் தம்வயமன்றி மடலின்வயத்தராய் நிற்றலான் கருவிகருத்தாவாகக் கொள்க.()

**தன்றுணிபுரைத்தல்.**

மானவேலவன் மடன்மாமி சை
யானுமேறுவ னென்னவு ரைத்தது.

(எ-து.) (முன் உலகின்மேல்வைத்து அதுவழியாக நின்று) மானமாகிய குணத்தையுடைய வேலேந்திய தலைமகன், மடலாகிய குதிரையின்மேல் யானு மேறுவேனென்று (தன் துணிவை) சொல்லியது.

விண்ணைமடங்கவிரிநீர்பரந்துவெற்புக்கரப்ப
மண்ணைமடங்கவருமொருகாலத்துமன்னிநிற்கு
மண்ணன்மடங்கலதளம்பலவனருளிலர்போற்
பெண்ணைமடன்மிசையானவரப்பண்ணிற்றோர்பெண்கொடியே

(இ-ள்.) விண் மடங்க - விண்ணொடுங்கவும்,—விரிநீர் பரந்து வெற்பு கரப்ப மண் மடங்க - கடலானது பரவுதலால் மலையானது மறைய பிரிதிவியொடுங்கவும், — வரும் ஒருகாலத்தும் மன்னி நிற்கும் - வருகின்ற ஊழிமுடிவாகிய வொருகாலத்திலும் நிலைபெற்றுநிற்கின்ற,—அண்ணல் - இறைவன்.—மடங்கல்

அதன் அம்பலவன் - சிங்கத்தினது தோலையுடைய திருச்சிற்றம்பலவன். — அருளிலர்போல் - (அவனது) அருளில்லாதாரைப் போல,—பெண்ணை மடல் மிசை யான் வர - (பிறரிகழ) பனை மடலின்மேல் யான் வரும்படி,— ஓர் பெண் கொடி - ஒரு பெண்கொடியானது,—பண்ணிற்று - (அறிவின்மைசெய்ய) செய்தது. எ - று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - ஆற்றாமை யுணர்த்துதல்.

விண்ணை மண்ணை யென்புழி ஐகாரம் அசைநிலை. மடங்குதல் தத்தங் காரணங்களி னொடுங்குதல். மடங்கல் புலியெனினு மமையும். (எரு)

## மடலேறும்வகையுரைத்தல்.

அடல்வேலவ னழிவுற்று
மடலேறும்வகை யுரைத்தது.

(எ-து.) (துணிபுரைக்கக்கேட்ட பாங்கிக்குப் பின்னும்) வெற்றிபொருந்திய வேலையுடைய தலைமகன், வருந்தி மடலேறும் வகையைக் கூறியது.

கழிகின்றவென்னையுநின்றநின்கார்மயிறன்னையும்யான்
கிழியொன்றநாடியெழுதிக்கைக்கொண்டென்பிறவிகெட்டின்
றழிகின்றதாக்கியதாளம்பலவன்கயிலையந்தேன்
பொழிகின்றசாரனுஞ்சீறூர்தெருவிடைப்போதுவனே.

(இ - ள்.) கழிகின்ற என்னையும் - இயல்புகழியாநின்ற என்னையும்,—நின்ற நின் கார்மயில் தன்னையும் - தன்னியல்பாய்நின்ற உன்னுடைய கார்காலத்து மயிலையொத்தவளையும்,—யான் - நான்,—கிழி ஒன்ற நாடி எழுதி கை கொண்டு - படத்திற்பொருந்த ஆராய்ந்து சித்திரித்து (அதை) கையிற்கொண்டு,—என்பிறவி இன்று கெட்டு அழிகின்றதாக்கிய தாள் அம்பலவன் - என்னுடைய பிறவியை இப்பொழுது கெடுதலடைந்து அழியாநின்ற

தாகச்செய்த திருவடியையுடைய சிற்றம்பலவனுடைய, — க
லை அம் தேன் பொழிகின்ற சாரல் - கைலைமலையின் அழகி
தேனைச்சொரிகின்ற சாரலின்கணுள்ள,— நும் சிறு ஊர் தெ
விடை போதுவன் - உம்முடைய சிறிய ஊரின் தெருவினிட
துத் திரிவேன். (பின் வருவதுகாண்.) எ-று. மெய்ப்பாடு - இ
வரல்; பயன் - ஆற்றுமை யுணர்த்துதல்.

என்னையும் நின்கார்மயில் தன்னையும் மடலிடத் தெழுதுவே
னென்ற தென்னையெனின் - கார்மயிலை மடலெழுதிக் கையி
கொண்டால் உரையாடுகையின்றி இவனும் ஓவியமாகலின், ம
லின் தலையிலே தன்னுரையும் தன்பேரையும், அவளுரைய
அவள் பேரையும், எழுதுகையாம். பிறந்ததற்குக் காரணமாகி
மலங்கெட்டும் யாக்கைக்குக் காரணமாகிய மலத்துடனே விழ
நின்றமையின், அழிகின்றதென நிகழ்காலத்தாற் கூறினர்.(எ

## அருளாலரிதெனவிலக்கல்.

அடல்வேலண்ண லருளுடைமையின்
மடலேற்றுனக் கரிதென்றது.

(எ - து.) (மடலேறும் வகையை வெளிப்படக் கூறக்கேட்ட பாங்கி) வெற்றிபொருந்திய வேலையுடைய தலைமகனே! நீ அருளுடையா ஞதலால் மடலேறுதல் உனக்கரிதா மென்றது.

நடனும்வணங்குந்தொல்லோனெல்லைநான்முகன்மாலறியாக்
கடனுமுருவத்தரன்றில்லைமல்லற்கண்ணார்ந்தபெண்ணை
யுடனும்பெடையொடொண்சேவலுமுட்டையுங்கட்டழித்து
மடனும்புனைதரின்யார்கண்ணதோமன்னவின்னருளே.

(இ-ள்.) நடன் - நடேசன்,—நாம் வணங்கும் தொல்லோ
நாம் வணங்காநின்ற பழையோன்.—நான்முகன் மால் எல்
அறியா கடனும் உருவத்து அரன் - பிரமனும் நாரணனு

(முடியுமடியுமாகிய) எல்லேகளை அறியாத இயல்பாகிய வடின
யுடைய அரன்,—தில்லை - (அவனது) தில்லை நகரத்தின்க
(இருக்கின்ற),—மல்லல் கன்னி ஆர்ந்த பெண்ணை உடனும் ெ
டையொடு ஒள் சேவலும் முட்டையும் கட்டு அழிந்து - வள
பத்தையுடைய கன்னிற்கு நிறைந்த பனைமரத்தின்கண் உ
ணிருக்கின்ற பெட்டையுடனே ஒளியையுடைய சேவலையு
முட்டையையும் காவலையழித்து, — மடல் நாம் புனைதரின்
மடலின்னை நாம் (குதிரையாகச்) செய்யின், — மன்ன - அர
னே! — இன் அருள் யார்கண்ணதோ - இனிய அருளான
(இவ்வுலகத்தில்) யாவரிடத்ததாம்? எ-று. மெய்ப்பாடு - நகை
பயன் - மடல் விலக்குதல்.

அறியாவுருவமென இயையும். அறியாத அக்கடவுளதா மு
வமெனினுமமையும். மடல்விலக்கித் தழீஇக்கொள்கின்று ளா
லின், நாமெனவுளப்படுத்துக் கூறினன். (எ

மொழிநடையெழுத லரிதெனவிலக்கல்.

அவயவமரிதி னெண்ணறீட்டினு ம்
இவையிவைதீட்ட லியலாதென்றது.

(எ-து.) (அருளொடுத் துணைந்து விலக்கவும் தன்
வழி நில்லாமை கண்ட பாங்கி, அவன்வழியொழுகி
விலக்குவாளாக) தலைமகனே! அவயவம் அருமையின்
எழுதுவையாயினும் ( அவள் மொழிநடையாகிய )
இவற்றை எழுதுதல் முடியாதென்றது.

அடிச்சந்தமால்கண்டிலாதனகாட்டிவந்தாண்டுகொண்டென்
முடிச்சந்தமாமலராக்குமுன்னோன்புலியூர்புரையுங்
கடிச்சந்தயாழ்கற்றமென்மொழிக்கன்னியனநடைக்குப்
படிச்சந்தமாக்கும்படமுளவோநும்பரிசகத்தே.

(இ - ள்.) சந்தம் மால் கண்டிலாதன அடி காட்டி - வே
மும் திருமாலும் கண்டறியாதனவாகிய திருவடிகளை (என

குக்) காண்பித்து,—வந்து ஆண்டுகொண்டு என் முடி சந்தம் மா மலர் ஆக்கும் - (தானே) வந்து ஆட்கொண்டு எனது தலைக்கு (அவ்வடிகளை) சிறந்தையுடைய பெரிய பூவாகச்செய்யும்,— முன்னோன் புலியூர் புரையும் - முதல்வனாகிய இறைவனது திருப்புலியூரை யொக்கும், — அடி சந்தம் யாழ் கற்ற மென்மொழி கன்னி - சிறந்த சந்தத்தையுடைய யாழோசையின் தன்மையைக்கற்ற மெல்லிய மொழியையுடைய மாதினது,—அன்னம் நடைக்கு - அன்னத்தினது நடைபோலும் நடைக்கு, — படி சந்தம் ஆக்கும் படம் உளவோ - அழகு கருதப்படும் இயல்பையுடையதாகப் பண்ணப்படும் படங்கள் உள்ளனவோ?—நும் பரிசகத்து - உமது சித்திரச்சாலையினிடத்து. எ - று. மெய்ப்பாடு - நகை; பயன் - மடல் விலக்குதல். (எஅ)

அவயவமெழுதலரிதெனவிலக்கல்.

அவயவ மான வை
யிவையிவை யென்ற து.

(எ-து.) (அம்மொழிநடைகளிருக்க) இன்னின்ன அவயவங்கள் தாம் எழுதமுடியுமோ வென்றது.

யாழுமெழுதியெழின்முத்தெழுதியிருளின்மென்பூச்
சூழுமெழுதியொர்தொண்டையுந்தீட்டியென்றொல்பிறவி
யேழுமெழுதாவகைசிதைத்தோன்புலியூரிளமாம்
போழுமெழுதிற்றொர்கொம்பருண்டேற்கொண்டுபோதுகவே.

(இ-ள்.) யாழும் எழுதி - (மொழியாக) வீணையையுமெழுதி,— எழில் முத்து எழுதி - (பற்களாக) அழகையுடைய முத்துக்களையுமெழுதி,—இருளின் மெல் பூ சூழும் எழுதி - (குழலாக) இருளின்கண் மெல்லிய பூக்களா னியன்ற மாலையுமெழுதி, — ஓர் தொண்டையும் தீட்டி - (வாயாக) ஒரு தொண்டைக்கனியையும எழுதி,—என் தொல் பிறவி யேழும் எழுதாவகை சிதைத்

தோன் புலியூர் இள மாம்போழும் எழுதிற்று - (கன்னுக) என்னுடைய பழமையாகிய பிறப்புக்களேழையும் எழுதாவிதம் கெடுத்தவனது புலியூரிடத்துள்ள மாம்பிஞ்சின் பிளவையும் எழுதப்பட்ட,—ஓர் கொம்பர் உண்டேல் - ஒரு பூங்கொம்பா னது உண்டாயிருந்தால்,—கொண்டு போதுக - அதனைக் கைக் கொண்டு (எம்மூர்க்கண்) மடலேற வாரும். எ-று. மெய்ப்பாடு நகை; பயன் - மடல் விலக்குதல்.

முத்துமென்றூழும்மை விகாரத்தாற் றொக்குநின்றது. (எக)

உடம்படாதுவிலக்கல்.

அடுபடையண்ண லழிதுயரொழிகென
மடநடைத்தோழி மடல்விலக்கிய து.

(எ-து.) (அவயவம் எழுதலாகாமையை யெடுத் துக்காட்டிய) மடப்பம் பொருந்தியநடையினையுடை ய பாங்கி, அடுகின்ற படையினையுடைய தலைமக னே! வருந்துகின்ற துயரம் ஒழிகவென்று மடலே றுதலைத் தானுடம்படாது விலக்கியது.

ஊர்வாயொழிவாயுயர்பெண்ணைத்திண்மடனின்குறிப்புச்
சீர்வாய்சிலம்பதிருத்தவிருந்திலமீசர்தில்லைக்
கார்வாய்குழலிக்குன்னாதரவோதிக்கற்பித்துக்கண்டா
லார்வாய்தரினறிவார்பின்னைச்செய்கவறிந்தனவே.

(இ - ள்.) உயர் பெண்ணை திண் மடல் ஊர்வாய் ஒழிவாய் - உயர்ந்த பனையினது வலிமையாகிய மடலையூர்வாய் அன்றியொ ழிவாய் !—சீர் வாய் சிலம்ப நின்குறிப்பு - சிறப்புவாய்ந்த மலை யையுடையாய்! உன்னுடைய கருத்தை,—திருத்த இருந்திலம்- (யாம்) திருத்தும்படி இருந்திலேம், — ஈசர் தில்லை கார் வாய் குழலிக்கு - ஈசரது தில்லைநகரத்தின்கண்ணுள்ள கருமைநிறம் பொருந்திய கூந்தலையுடையவளுக்கு,—உன் ஆதரவு ஓதி கற் பித்து கண்டால் வாய்தரின் ஆர் அறிவார் - உன் விருப்பத்

தைச் சொல்லி (இதற்கு அவள் உடம்படச் சிலவற்றைக்) கற்பித்துப் பார்த்தால் இடந்தருமாயினும் யாவர் அறிவார்கள்,— பின்னை அறிந்தன செய்க - (இடங்கொடாளாயின்) பின்பு நீ அறிந்தனவற்றைச் செய்வாயாக. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளை யாற்றுவித்தல். (அ0)

## உடம்பட்டுவிலக்கல்.

அரவருநுண்ணிடைக் குரவருகூந்தலென்
னுள்ளக்கருத்து விள்ளாளென்றது.

(எ - து.) (முன் உடம்படாது பொதுப்படவிலக்கியபாங்கி,) அரவுபோலும் நுட்பமாகிய இடையையும் குராக்காயை யொத்த கூந்தலையு முடைய தலைமகள் என்னுள்ளத்திற் கொண்ட எண்ணத்தைத் தடுக்காளென்று (பின் உடம்பட்டுவிலக்கிக்) கூறியது.

**பை**ந்நாணரவன்படுகடல்வாய்ப்படுநஞ்சமுதா
மைந்நாண்மணிகண்டன்மன்னும்புலியூர்மணந்தபொன்னிம்
மொய்ந்நாண்முதுதிரைவாயானழுந்திநுமென்னின்முன்னு
மிந்நாளிதுமதுவார்குழலாட்கென்கணின்னருளே.

(இ - ள்.) பை நாண் அரவன் - படத்தையுடைய பாம்பாகிய நாணினையுடையவன்,—படு கடல்வாய் படு நஞ்சு அமுதாம் மை நாண் மணி கண்டன் - ஒலிக்குங் கடலிடத் துண்டாகிய விடமானது அமிர்தமாகும் மையானது நாணுகின்ற நீலமணியையொத்த கண்டத்தையுடையவன், — மன்னும் புலியூர் மணந்த பொன் - (அவன்) தங்கும் புலியூரைப்பொருந்திய பொன்னையொப்பாள், — நாள் மொய் இ முது திரைவாய் யான் அழுந்திநும் என்னின் முன்னும் - நாளில்மூழ்கும் பெருமையையுடைய இந்த முதிய கடலினிடத்து யானழுந்தினேனாயினும் (தான்) என்னின்முற்பட்டு (அழுந்துவாள்),— மது வார்

குழலாட்கு என்கண் இன் அருள் இந்நாள் இது - தேனையுடைய நெடிய கூந்தலையுடையாளுக்கு என்னிடத்துண்டாகிய இனிய அருள் இப்பொழுது இத்தன்மைத்தா யிராநின்றது. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகனை யாற்றுவித்தல்.

மைந்நாணும் கண்டமெனை இயையும். மொய் - வலி ஈண்டு பெருமைமேல் நின்றது. நாள் - புண்ணியகாலம். குற்றேவல் செய்வாரிடத்து பெரியோர்செய்யும் அருள் எக்காலத்தும் ஒரு தன்மைத்தாய் நிகழாதென்னுங் கருத்தான் இந்நா ளிதுவென்றுள். எனவே தலைமகளது பெருமையும் தன்முயற்சியது அருமையுங் கூறியவாறுயிற்று. (அக)

மடற்றிறம் முற்றிற்று.

---

## குறைநயப்புக்கூறல்.

என்பது, தலைமகனை மடல்விலக்கிக் குறைநேர்ந்தபாங்கி, தலைமகளைக் குறைநயப்பிக்கத் தலைமகனது குறை கூறுநிற்றல்.

இக்கிளவி எட்டுத்துறைகளை யுடைத்து. அவைவருமாறு:—

குறிப்பறிதலோடு மென்மொழிகூறல், விரவிக்கூற லறியாள் போறல், வஞ்சித்துரைத்தல் புலந்துகூறல், வன்மொழிகூறல் மனத்தொடுநேர்தல், சொன்னவிருநான்கும் துறைகுறைநயப் பென, மன்னியபொருளில் வகுத்திசினோரே.

### குறிப்பறிதல்.

நறைவளர்கோதையைக் குறைநயப்பித்தற்
குள்ளறிகுற்றவொள் ளிழையுரைத்த து.

(எ-து.) தேன்தங்கிய மலர்மாலையையுடைய தலைமகளைக் குறைநயப்பித்தற்கு (அவளது) உள்ளக்குறிப்பை அறியவேண்டி ஒள்ளிய பூணணிந்த பாங்கி, (தானென்று மறியாதவள்போலச்) சொல்லியது.

**தா**தேய்மலர்க்குஞ்சியஞ்சிறைவண்டுதண்டேன்பருகித்
**தே**தேயெனுந்தில்லையோன்சேயெனச்சினவேலொருவர்
மாதேபுனத்திடைவாளாவருவர்வந்தியாதுஞ்சொல்லார்
யாதேசெயத்தக்கதுமதுவார்குழலேந்திழையே.

(இ - ள்.) தாது ஏய் மலர் குஞ்சி - தாதுகள் பொருந்திய பூவையணிந்த (தில்லைவாழ்வாரது) குடுமிகளில், — அம் சிறை வண்டு தண் தேன் பருகி தேதே எனும் - அழகிய சிறைகளையுடைய வண்டுகள் தண்ணியதேனை யுண்டு தேதேயென்று பாடும்,—தில்லையோன் சேயென - தில்லையை யுடையானுடைய புதல்வனாகிய முருகக்கடவுளே யென்ன,—சினம் வேல் ஒருவர் - கோபம்பொருந்திய வேலையுடைய ஒருவர், — மாதே - தையலே!— புனத்திடை வாளா வருவர் - (நம்) தினைப்புனத்தினிடத்தில் வாளாவருவார், — வந்து யாதும் சொல்லார் - வந்து யாதொன்றுஞ் சொல்லார், — மது வார் குழல் ஏந்திழையே - தேனிறைந்த நீண்ட கூந்தலையுடைய ஏந்திழாய்! செயத் தக்கது யாது - (அவரிடத்து நாம்) செய்யத்தக்கது யாது? (யாதென் றறிகிலேன்.) எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகனை மெலிதாகச்சொல்லிக் குறையயப்பித்தல்.

குஞ்சி, தில்லைவாழ்வார்குஞ்சி - மலரினது குஞ்சியென விரித்து அவ்லியென்றுரைப்பினு மமையும். (அஉ)

### மென்மொழியாற்கூறல்.

ஒளிருறுவேலவன் றளர்வுறுகின்ற மை
இன்மொழியவட்கு மென்மொழிமொழிந்தது.

(எ - து.) (உள்ளக்குறிப்பறிந்தபாங்கி, அதுவழியாகநின்று) ஒளிசெய்கின்ற வேலையுடைய தலைமகன் வருந்தித் தளர்கின்றதை இன்சொல்லையுடைய தலைமகளுக்கு மென்மையாகிய சொல்லாற் கூறியது.

வரிசேர்தடங்கண்ணிமம்மர்கைம்மிக்கென்னமாயங்கொலோ
வெரிசேர்தளிரன்னமேனியனீர்ந்தழையன்புலியூர்ப்
புரிசேர்சடையோன்புதல்வன்கொல்பூங்கணைவேள்கொலென்ன
தெரியேமுரையான்பிரியாளுெருவனித்தேம்புனமே. [த்

(இ - ள்.) வரி சேர் தடம் கண்ணி - வரிகள்பொருந்திய பெரியகண்ணை யுடையாய்!—ஒருவன் மம்மர் கைம்மிக்கு எரி சேர் தளிர் அன்ன மேனியன் - ஒருத்தன் மயக்கம் கைம்மிகுந்து நெருப்பைச்சேர்ந்த தளிரையொக்கும் உடலை யுடையவனுமாய், — ஈரம் தழையன் - குளிர்ச்சிபொருந்திய தழையை யுடையவனுமாய்,—இ தேம் புனம் பிரியான் - இந்த இனிமையான புனத்தைப் பிரிகிலன்,—உரையான் - (ஒன்றுஞ்) சொல்லுகின்ற திலன் (அவனை,)—புலியூர் புரி சேர் சடையோன் புதல்வன்கொல் பூ கணை வேள்கொல் என்ன தெரியேம் என்ன மாயங்கொல் - புலியூரிலுள்ள கட்டுதல்சேர்ந்த சடையையுடைய இறைவனது புதல்வனாகிய முருகனோ பூவாகிய அம்பையுடைய மன்மதனோ என்று (யாம்) அறியோம். ஈது என்ன மாயமோ. எ-று. மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகளை மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல்.

சடையோன் புதல்வன்கொல் என்றதனால் நம்மை யழிக்க வந்தானோ வென்றும், பூங்கணை வேள்கொல் என்றதனால் நம்மைக் காக்கவந்தானோவென்றும் கூறியவாறாயிற்று. (அஈ)

## விரவிக்கூறல்.

வன்மொழியின்மன மெலிவதஞ் சி
மென்மொழிவிரவி மிகுத்துரைத்தது.

(எ - து.) வன்மையாகிய சொல்லால் (தலைமகள்) மனமெலியா நிற்பதற்குப்பயந்து (பாங்கி)மென்மையாகிய சொற்களும் கலந்து (தலைமகனது)ஆற்றுமை மிகுத்துக் கூறியது.

**நீகண்டனையெனின்வாழலைநேரிழையம்பலத்தான்
சேய்கண்டனையன்சென்றாங்கோரலவன்றன்சீர்ப்பெடையின்
வாய்வண்டனையதோர்நாவற்கனிநனிநல்கக்கண்டு
பேய்கண்டனையதொன்றாகிநின்றானப்பெருந்தகையே.**

(இ - ள்.) நேரிழை - நேர்மையையுடைய அணியை யுடையாய், ! —அம்பலத்தான் சேய்கண்டனையன் - சிற்றம்பலத்திலுள இறைவனுடைய புதல்வனைக்கண்டாற் போன்றிருக்கு மொருவன்,—ஆங்கு ஓரலவன் தன் சீர் பெடையின் வாய் வண்டனையது ஓர் நாவற்கனி சென்று நனி நல்க கண்டு - அவ்விடத்து ஒரு நண்டானது நன்னழகிய பெடையின் வாயினிடத்து வண்டை யொத்ததாகிய ஒரு நாவற்பழத்தைப் போய் மிகவுங் கொடுக்கப் பார்த்து, — அ பெருந்தகை - அந்தப் பெருந்தன்மை யுடையோன், — பேய் கண்டனையது ஒன்றாகி நின்றான் - ஒரு வேறுபாட்டை யுடையனாகி நின்றனன், — நீ கண்டனை யெனின் வாழலை - (அந்நிலையை) நீ கண்டாயானால் (உயிர்) வாழமாட்டாய். எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம்; பயன் தலைமகளை மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல்.

பேய்கண்டனைய தென்பதற்குப் பேயைக்கண்டாற் போல்வதோர் வேறுபாடென் றுரைப்பினு மமையும். (அச)

**அறியாள்போறல்.**

அறியாள் போன்று
குறியாள் கூறியது.

(எ-து.) (விரவிக்கூறக்கேட்ட) தலைமகள் அறியாதாள்போல (இதனைக்) குறியாதவளாகித் (தான் வேறொன்று) சொல்லியது.

சங்கர்தருமுத்தியாம்பெறவான்கழிதான்கெழுமிப்
பொங்கும்புனற்கங்கைதாங்கிப்பொலிகலிப்பாறுலவு
துங்கமலிதலையேந்தலினேந்திழைதொல்லைப்பன்மா
வங்கமலிகலிநீர் தில்லைவானவனேர்வருமே.

(இ-ள்.) சங்கம் தரு முத்து யாம் பெற - சங்குகள் தருகின்ற முத்துக்களை நாம் பெற்றுக்கொள்ள,—வான் கழி தான் கெழுமி - பெரிய கழிகளைத் தான் பொருந்தி,—பொங்கும் புனல் கங்கை தாங்கி - பொங்குகின்ற நீரையுடைய கங்கையைத் தாங்கிக்கொண்டு, — பொலி கலி பாறு உலவு - மிகுந்த ஆரவாரத்தையுடைய பாறுகிய மரக்கலங்களுலாவுகின்ற, — துங்கம் மலிதலை ஏந்தலின் - அலைகளின் மிகுதியை யுடைத்தாகலின், — சங்கம் தரும் முத்தி யாம் பெற - (திருவடிக்கணுண்டாகிய) பற்றுத் தருகின்ற முத்தியை நாம் பெறும்படி, — வான் கழி தான் கெழுமி - ஆகாயத்தைக் கடந்துநின்ற தான் (ஒருவடிவுகொண்டுவந்து) பொருந்தி,—பொங்கு புனல் கங்கை தாங்கி - பொங்குகின்ற நீரையுடைய கங்கையைச்சூடி, — பொலி கலி பாறு உலவு - மிக்க ஆரவாரத்தையுடைய பாறுகிய பறவைகள் சூழாநின்ற, — துங்கம் மலி தலை ஏந்தலின் - உயர்வுமிக்க தலையோட்டை யேந்துதலின்,—ஏந்து இழை - தாங்குகின்ற அணியையுடையாய்!—தொல்லை பல் மா வங்கம் மலி கலி நீர் - பழையதாகிய பலபெரிய மரக்கலங்கள் மிகப்பெற்ற கடல், — தில்லை வானவன் - தில்லைநகரத்திலுள்ள இறைவனுக்கு,—நேர் வரும் - ஒப்பாகும். எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - அறியாள் போறல்.

தலைமகள் பெருநாணின ளாகையாலும் இவ்வொழுக்கம் களவொழுக்க மாகையாலும் முன்பாங்கியாற் கூறப்பட்ட வினைக்களுக்கு வெளிப்படையாக மறுமொழி கொடாது, ஓர்ந்து கூட்டினால் மறுமொழியாம்படி கடலின்மேல் வைத்துக்கூறினாள். அஃதென்னையெனின் பெறுதற்கரிய சங்குதருகிற முத்தை

நாம் பெறுவான் எளிதாகக் கடல் பெரிய கழியைவந்து பொருந் திறற்போல,முன்னர் நீ புரிசேர்சடையோன் புதல்வனென்றும் பூங்கணைவேள் என்றும் உயர்த்திச் சொன்னவையெல்லாம் அவ னுக்குரியன ; அப்பெரியோன் தன்மாட்டுண்டான புணர்ச்சியா ன பேரின்பத்தை நாம் பெறுகை காரணமாக இங்ஙனம் எளி வந்து சேர்ந்தான், ஆகலான் இனி உனக்கு வேண்டியது செய் வாயாக வென மறுமொழியாயிற்று. வான்கழி - சிவலோகமெ னினு மமையும். (அரு)

## வஞ்சித்துரைத்தல்.

நெஞ்சநெகிழ்வகை வஞ்சித்திவையி வை
செஞ்சடையோன்புகழ் வஞ்சிக்குரைத்தது.

(எ - து.) அறியாள்போன்று குறியாது குறித்த (தலைமகள், நாணினாற் குறைநேரமாட்டாது வருந் திப் பின்னும்) மனநெகிழும்வகை மறுமொழியை வெளிப்படையாகக் கொடாமல் இவை இவையென் று செம்மையாகிய சடையையுடைய இறைவனது புகழினைக் கொடிபோல்வாளாகிய பாங்கிக்குக் கூறி யது.

புரங்கடந்தானடிகாண்பான்புவிவிண்டுபுக்கறியா
திரங்கிடெந்தாயென்றிரப்பத்தன்னீரடிக்கென்னிரண்டு
கரங்கடந்தானென்றுசாட்டமற்றுங்கதுங்காட்டிடென்று
வரங்கிடந்தான்றில்லையம்பலமுன்றிலம்மாயவனே.

(இ-ள்.) புரம் கடந்தான் அடி காண்பான் புவி விண்டு புக்கு அறியாது - முப்புரங்களையும் வென்ற இறைவனுடைய அடிகளை க் காணவேண்டி (நெறியல்லா நெறியால்) நிலத்தைப்பிளந்து புகுந்து காணாமல்,—எந்தாய் இரங்கிடு என்று இரப்ப - (பின்வ ழிபட்டுநின்று) எந்தந்தையே ! அருள்செய்வாயென் றிரக்க,— தன் ஈரடிக்கு என் இரண்டு கரங்கள் தந்தான் - தன்னிரண்டு

திருவடிகளையும் வணங்குதற்கு என்னிரண்டு கைகளையும் தந் தவனாகிய (அவ்விறைவன்), — ஒன்று காட்ட - ஒரு திருவடியைக் காண்பிக்க,—மற்றுங்கதும் காட்டிடு என்று - மற்றொரு திருவடியையும் காட்டல்வேண்டுமென்று, — தில்லையம்பலம் முன்றில் அ மாயவன் - தில்லையினிடத்துள்ள சிற்றம்பலத்தின் முற்றத்தில் அத்திருமால், — வரம் கிடந்தான் - வரம்பெறக் கிடந்தான்போலும். எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன் - வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தல்.

மாயோன் முதலாயினார்க்கு அவ்வாறறியவாயினும் எம்மனோர்க்கு இவ்வாறெளி வந்தனனென்னுங் கருத்தால் தன்னடிக்கென்னிரண்டு கரங்கள் தந்தானென்றாள். இன்னும் வரங்கிடக்கின்றானாகலின், முன்கண்டது ஒன்றுபோலு மென்பது கருத்து. இது பாங்கிக்குத் தலைமகள் மறுமொழியாகக் கூறிய வாறென்னையெனின், மற்றுங்கது காட்டிடென்று மால்வரங் கிடந்தாற்போலத், தலைமகன் முன்னர்ப் பாங்கற்கூட்டம் பெற்றுப் பின் நின்னானாய கூட்டம்பெறுகை காரணமாக நின்னிடத்து வந்திரந்து குறையுறா நின்றான் என்பதாம். (அகூ)

## புலந்துகூறல்.

திருந்தியசொல்லிற் செவ்விபெறா து
வருந்தியசொல்லின் வகுத்துரைத்தது.

(எ - து.) (தலைமகளிடத்து) வெளிப்படையாகிய சொற்களால் மறுமொழிபெறாது, (பாங்கி தலைமகளை நோக்கி நீ சொல்லத்தகும் காதற்பாங்கியர்க்கு வெளிப்படச் சொல்லென்று) தன் வருத்தத்தை வெளிப்படுத்துஞ் சொல்லால் கேட்குமளவும் புலந்து கூறியது.

உள்ளப்படுவனவுள்ளியுரைத்தக்கவர்க்குரைத்து
மெள்ளப்படிறுதுணிதுணியேலிதுவேண்டுவல்யான்

கள்ளப்படிறர்க்கருளாவரன்றில்லைகாணலர்போற்
கொள்ளப்படாதுமறப்பதறிவிலென்கூற்றுக்களே.

(இ - ள்.) உள்ளப்படுவன உள்ளி - (இதன்கண்) ஆராய்ச்சி செய்யப் படுவனவற்றை யாராய்ச்சிசெய்து, — உரைத்தக்கவர்க்கு உரைத்து - வெளிப்படையாகச் சொல்லத்தக்கன நின்காதற் பாங்கியர்க்குச் சொல்லி, — படிறு மெள்ள துணி - (நீ) படிறென்று (நினைந்தவிதனை) மெல்லத் துணிவாய்,—துணியேல்- (அன்றித்) துணியாதொழிவாய்.—கள்ளம் படிறர்க்கு அருளா அரன் தில்லை காணலர்போல் அறிவிலேன் கூற்றுக்கள் கொள்ளப்படாது - (நெஞ்சிற்) கரவையுடைய வஞ்சகர்க்குக் கருணை செய்யாத அரனது தில்லை நகரத்தைக் காணாதவரைப்போல அறிவில்லாதேன் சொல்லிய சொற்களைக் கொள்ளத்தகாது,— மறப்பது - (அவற்றை) மறப்பாயாக. யான் வேண்டுவல் இது- யான் விரும்புவது இது. எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல்.

தில்லைக்காணலர் பாங்கிக் கூற்றிற்கு உவமை. படிறு - களவு, பொய், வஞ்சம். மறப்பது - வியங்கோள்வினைமுற்று, (அஎ)

வன்மொழியாற்கூறல்.

கடலுலகறியக் கமழலந்துறைவன்
மடலேறும்மென வன்மொழிமொழிந்தது.

(எ - து.) (புலந்துகூறிய பாங்கி, பின்னும்) கடல் சூழ்ந்த உலகமறிய மணங்கமழ்கின்ற துறையினை யுடைய தலைமகன் மடலையூர்வானென்று (தலைமகளுக்கு) வன்மொழி கூறியது.

மேவியந்தோலுடுக்குந்தில்லையான்பொடிமெய்யிற்கையி
லோவியந்தோன்றுங்கிழிநின்னெழிலென்றுனையுளதாற்

றூவியந்தோகையன்னுயென்னபாவஞ்சொல்லாடல்செய்யான்
பாவியந்தோபனைமாமடலேறக்கொல்பாவித்ததே.

(இ-ள்.) மெய்யில் அம் தோல் மேவி உடுக்கும் தில்லையான் பொடி - உடலில் (பூசியது) அழகிய தோலை விரும்பிச்சாத்தும் தில்லையானுடைய திருநீறு,— கையில் ஓவியம் தோன்றும் கிழி- கையில்(இருப்பது) சித்திரம்விளங்கும் படம்,—நின் எழில் என்று உரை உளது - (அப்படம் )உன்வடிவமென்று உரையுமுள்ளது,—தூவி அம் தோகை அன்னாய் - இறகையுடைய அழகிய மயிலையொத்தவளே!—என்ன பாவம் - இது என்னதீவினை,—சொல்லாடல் செய்யான் - யாதொன்றுஞ் சொல்லான்,—பாவி அந்தோ பனை மா மடல் ஏறக்கொல் பாவித்தது - (அவ்வாறிருந்தவாற்றான்) அந்தக்கொடியோன் ஐயோ பனைமரத்தினது பெரிய மடற்குதிரையை ஏறுதற்கோ நினைந்தது. எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன் - வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல்.

கிழி என்பது கிழிக்கணெழுதிய வடிவு. தன் குறையுறுதல் கண்டு உயிர்தாங்கலேனாக அதன்மேலும் மடலேறுதலையும் துணிகின்று னென்னுங் கருத்தால் பாவி என்றாள். இதனால் அவனாற்றாமைக்குத் தானாற்றாளாகின்றமை கூறியவாறு. (அஅ)

### மனத்தொடுநேர்தல்.

அடல்வேலவ னாற்றானெனக்
கடலமிழ்தன்னவள் காணலுற்றது.

(எ - து.) (மடலூரத் துணியாநின்றானெனக் கேட்ட) கடலமுதுபோன்ற தலைமகள், வெற்றிவேலை யுடைய தலைமகன் ஆற்றானென அவனைக் காணவேண்டி(தன் மனக்கொடிகூறி நேராநின்றாள்)

பொன்னார்சடையோன்புலியூர்புகழாரொனப்புரிநோ
யென்னாலறிவில்லையானென்றுரைக்கிலன்வந்தயலார்
சொன்னாரெனுமித்துரிசுதுன்னாமைத்துணைமனனே
யென்னாழ்துயர்வல்லையேற்சொல்லுநீர்மையினியவர்க்கே.

(இ - ள்.) பொன் ஆர் சடையோன் புலியூர் புகழாரொன - பொன்போலும் நிறைந்த சடையையுடைய இறைவனது புலியூரைத் துதியாதவரைப்போல (வருந்த),—புரி நோய் என்றால் அறிவில்லை யான் ஒன்று உரைக்கிலன் - (எனக்குப்) புரிந்தநோய் என்று அறியப்படுவதில்லை (ஆயினும்) யானொன்றுஞ் சொல்ல மாட்டேன், — துணைமனனே - (எனக்குத்) துணையாகியமன மே!—வந்து - (இப்பாங்கி) வந்து,—அயலார் சொன்னார் எனும் இ துரிசு - அயலார் சொன்னாரென்று சொல்லுகின்ற இக் குற்றம்,—துன்னாமை - என்னிடத்துப் பொருந்தாமல், — என் ஆழ் துயர் - (அவராற்றாமை கூறக்கேட்டலா லுண்டாகிய) என்னுடைய ஆழ்ந்த துன்பத்தை,—வல்லையேல் - (உள்ளவாறு சொல்ல) வல்லையானால்,—நீர்மை இனியவர்க்கு - குணத்தை யுடைய இனியவர்க்கு,—சொல்லு - (நீ) சொல்வாயாக. எ - று. மெய்ப்பாடு - அச்சம் ; பயன் - குறை நேர்தல்.

ஆழ்துயர் - ஆழ்தற்கிடமாகிய துயரம். புரிதல் - மிகுதல். சொல்லுநீர்மை யினியவர்க்கு என்பதனால் தன் துயரமும் வெளிப்படக்கூறி மடலால்வருங் குற்றமும் தன்னிடத்து வராமல் விலக்கச் சொன்னாளாயிற்று. (அசு)

குறைநயப்புக்கூறல் முற்றிற்று.

## சேட்படை.

என்பது, தலைமகளைக் குறைநயப்பித்துந் தன் ஆயவெள்ளத்திற் கூட்டலுறும் பாங்கி, தலைமகனுக்கியைய மறுத்துக் கூறுநிற்றல்.

இக்கிளவி இருபத்தாறு துறைகளை யுடைத்து. அவை வருமாறு:—

தழைகொண்டுசேறல் நகாதென்றுமறுத்தல், நிலத்தின்மைகூறல் நினைவறிவுகூறல், படைத்துமொழிதலொடு பனிமதிநுதலியை, எடுத்துநாணுரைத்த லிசையாமைகூறல், செவ்வியிலளென்றல் சேட்படைநிறுத்தல், அவ்வினியமொழிநீ யவட்குறையென்றல், குலமுறைகிளத்தல் கோதண்டத்தொழில், வலிசொல்லிமறுத்தல் மற்றவர்க்கிரங்கல், சிறப்பின்மைகூறல் சிறியளென்றுரைத்தல், மறைத்தமைகூறி நகைத்துரைசெய்தல், நகைகொண்டுமகிழ்தல் நாணவள்தன்னை, அறியேனென்றலயவங்கூறல், கண்ணயந்துரைத்தல் கையுறையெதிர்தல் முகம்புகவுரைத்தல் முகங்கண்டுகூறல், வகுத்துரைத்தலொடு வண்டழையவட்கு, மிகுத்துரைசெய்து விரும்பிக் கொடுத்தல், தழைவிருப்புரைத்தல் தாணிருபத்தா, றிழைவளர்முலையாயிவை சேட்படையே.

### தழைகொண்டுசேறல்.

கொய்ம்மலர்க்குழலி குறைநயந்தபின்
கையுறையோடு காளைசென்றது.

(எ-து.) கொய்தமலரை யணிந்த கூந்தலையுடைய பாங்கி, குறைநயந்தபின் காளைபோல்வாருகிய தலைமகன் பின்பு கையுறையுடன் சென்றது.

தேமென்கிளவிதன்பங்கத்திறையுறைதில்லையன்னீர்
பூமென்றழையுமம்போதுங்கொள்ளீர்தமியேன்புலம்ப
வாமென்றருங்கொடும்பாடுகள்செய்துநுங்கண்மலராங்
காமன்கணைகொண்டலைகொள்ளவோமுற்றக்கற்றதுவே.

(இ-ள்.) தேம் மென். கிளவிதன் பங்கத்திறை உ அன்னீர் - தேனையொத்த மென்மையாகிய மொழியையுடைய உமையாளது பங்கையுடைய இறைவன் வாழுந்தில்லையை யொப்பீர், — பூ மென் தழையும் அம் போதும் கொள்ளீர் - (யான்கொணர்ந்த) பூவையுடைய மென்மையாகிய தழையையும் அழகிய பூக்களையும் ஏற்றுக் கொள்கின்றிலீர்,—தமியேன் புலம்ப் ஆமென்று அரும் கொடும் பாடுகள் செய்து - தனியேன் துக்கிக்க வாகுமென்று பொறுத்தற்கரிய கொடுமையாகிய பாடுகளைச் (செய்யத்தகுமென்று) செய்து, — நும் கண் மலராம் காமன் கணைகொண்டு அலைகொள்ளவோ முற்றக்கற்றது - உங்கள் கண்மலராகின்ற மன்மதனுடைய அம்பைக்கொண்டு அலைத்தலைக் கொள்ளவோ முழுதுங்கற்றது. (நும்மால் அருளுமாறு கற்கப்பட்ட தில்லையோ). எ-று. மெய்ப்பாடு - அழுகை பயன் - ஆற்றுமை யுணர்த்துதல்.

பங்கத்துறை என்பதூஉம் பாடம். மேற்சேட்படை கூறுகின்றமையின் அதற்கியைவுபட ஈண்டும் குறையுறவு கூறினுன். ()

## சந்தனத் தழைதகாதென்று மறுத்தல்.

பிறைநுதற்பேதையைக் குறைநயப்பித்தபின்
வாட்படையண்ணலைச் சேட்படுத்த து.

(எ-து.) பிறைபோலு நெற்றியையுடைய பாங்கியைக் குறைநயப்பித்தபின் வாட்படையையுடைய தலைமகன் (தழையுடன்செல்ல) அவனைச் (சந்தனத் தழைதகாதெனப் பாங்கி,) மறுத்துக் கூறியது.

ஆரத்தழையராப்பூண்டம்பலத்தனலாடியன்பர்க்
காரத்தழையன்பருளிநின்றேன்சென்றமாமலயத்
தாரத்தழையண்ணறந்தாலிவையவளல்குற்கண்டா
லாரத்தழைகொடுவந்தாரெனவருமையுறவே.

(இ-ள்.) ஆரம் தழை அரா பூண்டு அம்பலத்து அனல் ஆடி - ஆரமாகிய தழைந்த பாம்பையணிந்து சிற்றம்பலத்தின்கண் அனலோடாடி, — அன்பர்க்கு ஆர தழை அன்பு அருளி நின்றோன் - அன்பராயுள்ளார்க்கு நிறையத் தழைந்த அன்பை யருளிச்செய்து நின்றவன், — சென்ற மா மலையத்து ஆரம் தழை அண்ணல் தந்தால் - சேர்ந்த பெரிய (பொதியின்) மலையிடத்து (உண்டாகிய) சந்தனத்தழைகளை அண்ணல் கொடுத்தால்,—இவை அவள் அல்குல் கண்டால் - இத்தழைகளை (பிறர்) அவளது அல்குலினிடத்துப் பார்த்தால்,—ஆர் அ தழை கொடுவந்தாரென ஐயுறவு வரும் - யாவர் (ஈண்டில்லாத) அந்தத் தழையைக் கொண்டுவந்தாரென்று சந்தேகம்வரும், (அதனால் இவைகொள்ளோம்.) எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல்.

ஆரத்தழையரா பூண்டகாலத்து ஆரத்தழைத்த அரவெனினுமமையும். அத்தழை என்றது - அம்மலையத்தழை. (கூக)

நிலத்தின்மை கூறிமறுத்தல்.

கொங்கலர் தாரோய் கொணர்ந்தகொய் தழை
எங்குலத் தாருக் கேலா தென்றது.

(எ-து.) (சந்தனத்தழைதகாதென்றதால் தலைமகன் மற்றொருதழைகொண்டுசெல்ல, பாங்கி,) மணங்கமழும் மலர்மாலையையுடைய தலைமகனே! நீகொண்டெய்திய கொய்ததழை (இக்குன்றிலில்லாதபடியால்) எங்குலத்தவருக்கு ஆகாதென்றது.

பூன்றகர்த்தெல்லாவிமையோரையும்பின்னைத்தக்கன்முத்தீச்
சென்றகத்தில்லாவகைசிதைத்தோன்றிருந்தம்பலவன்
குன்றகத்தில்லாத்தழையண்ணறந்தாற்கொடிச்சியருக்
கின்றகத்தில்லாப்பழிவந்துமூடுமென்றெள்குதுமே.

(இ - ள்.) முன் எல்லா இமையோரையும் தகர்த்து - முன்னர் (யாகத்துக்குப்போன) எல்லாத் தேவர்களையும் அடித்து, — பின்னை சென்று தக்கன் முத்தீ அகத்து இல்லாவகை சிதைத்தோன்-பின்பு போய்த் தக்கனுடைய மூன்று தீயையும் குண்டத்தின்கண் இல்லையாம்படி அழித்தவன், — திருந்து அம்பலவன் - திருத்தமாகிய அம்பலத்தை யுடையவன், — குன்றகத்து இல்லா தழை அண்ணல் தந்தால் - (அவனுடைய) மலையினிடத்து இல்லாத தழையை அண்ணல் தந்தால், — கொடிச்சியருக்கு இன்று - குறத்தியருக்கு இப்பொழுது, — அகத்து இல்லா பழி வந்து மூடும் என்று எள்குதும் - இல்லினிடத்து இல்லாத நிந்தைவந்து மூடிக்கொள்ளுமென்று கூசுகின்றேம். (அதனால் இத்தழை கொணரற்பாலீரல்லீர்). எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன்-செவ்விபெறுதல்.

குன்றகத்தில்லாத்தழை - குறிஞ்சி நிலத்தார்க்குரிய வல்லாத தழை. முன்றகர்த்தில்லா வென்பது பாடமாயின், இல்லையாம் வண்ணம் முன்றகர்த்தென் றுரைக்க. அண்ணலென்பது முன்னிலைக்கண்ணும், கொடிச்சியரென்பது தன்மைக்கண்ணும் வந்தன. (௯௨)

நினைவறிவு கூறிமறுத்தல்.

மைதழைக் கண்ணி மனமறிந் தல்லது
கொய்தழை தந்தாற் கொள்ளே மென்றது.

(எ - து.) (அந்நிலத்தில்லாத தழையை மறுத்ததனால் தலைமகன் அந்நிலத்திற்குரிய தழைகொண்டு செல்ல, பாங்கி,) மையிட்ட கண்ணையுடைய தலைமகளது நினைவறிந் தல்லாமல் நீ கொய்த தழைதந்தால் கொள்ள அஞ்சுவே மென்றது.

யாழார்மொழிமங்கைபங்கத்திறைவனெறிதிரைநீ
ரேழாயெழுபொழிலாயிருந்தோனின்றதில்லையன்ன

சூழார்குழலெழிற்றொண்டைச்செவ்வாய்நவ்விசொல்லறிந்தாற்
றுழாதெதிர்வந்துகோடுஞ்சிலம்பதருந்தழையே.

(இ - ள்.) யாழ் ஆர் மொழி மங்கை பங்கத்து இறைவன் - யாழினிசைபோலும் மொழியையுடைய உமையாளது பாகத்தையுடைய இறைவன்,—எறி திரை ஏழு நீராய் எழு பொழிலாய் இருந்தோன் - எறிகின்ற அலைகளையுடைய ஏழு கடலுமாய் ஏழுலகுமாய் இருந்தவன், — நின்ற தில்லை அன்ன - (அவன்) இருந்த தில்லையை யொக்கும்,—சூழ் ஆர் குழல் தொண்டை எழில் செவ்வாய் நவ்வி சொல் அறிந்தால் - சுருண்ட நிறைந்த கூந்தலினையும் தொண்டைக் கனிபோலும் அழகையுடைய சிவந்த வாயினையுமுடைய மானையொத்தவளது சொல்லை அறிந்தால்,—சிலம்ப - சிலம்பனே! — தரும் தழை தாழாது எதிர்வந்து கோடும் - (நீ) தருந்தழையைத் தாமதியாமல் உன்னெதிர்வந்து கொள்ளுதும். (அஃதறியாதுகொள்ள அஞ்சுதும்). எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்வி பெறுதல். (கூரு)

## படைத்துமொழியான் மறுத்தல்.

அருந்தழைமேன்மேற் பெருந்தகைகொணர ப்
படைத்துமொழிகிளவியிற் றடுத்தவள்மொழிந்தது.

(எ - து.) அருமையாகிய தழையை மேன்மேலும் தலைமகன் கொண்டெய்த (தலைமகளது நினைவறிந்தல்லது தழைகொள்ளேமென்ற பாங்கி,) படைத்துக்கூறுஞ் சொல்லால் மறுத்துக்கூறியது.

எழில்வாயிளவஞ்சியும்விரும்புமற்றிறைகுறையுண்
டழல்வாயவிரொளியம்பலத்தாடுமஞ்சோதியந்தீங்
குழல்வாய்மொழிமங்கைபங்கன்குற்றாலத்துக்கோலப்பிண்டிப்
பொழில்வாய்தடவரைவாயல்லதில்லையிப்பூந்தழையே.

(இ - ள்.) எழில்வாய் இள வஞ்சியும் விரும்பும் - (யானே யன்றி) அழகுபொருந்திய இளமையாகிய வஞ்சிக்கொடியை யொப்பவளும் விரும்புவாள், — இறை குறை உண்டு - (ஆயி னும்) சிறிது குறையுண்டு,—அழல்வாய் அவிர் ஒளி - நெருப்பி னிடத்து விளங்கு மொளியாயுள்ளவன்,—அம்பலத்து ஆடும் அம் சோதி - சிற்றம்பலத்தின்கண் ஆடுகின்ற அழகிய சோதி யாயிருப்பவன்,—அம் தீம் குழல் வாய்மொழி மங்கைபங்கன் - அழகிய இனிய குழலோசைபோலும் மொழியையுடைய உமா தேவியினது பங்கை யுடையவன், — குற்றாலத்து கோலம் பிண்டி பொழில்வாய் தடவரைவாய் அல்லது - (அவனது) குற் றாலத்தின்க ணுண்டாகிய அழகையுடைய அசோகச்சோலை பொருந்திய பெரிய தாழ்வரையிடத்தி லல்லாமல், — இ பூ தழை இல்லை - இந்தப்பூவையுடைய தழை (வேறோரிடத்தும்) இல்லை. (அதனால் இத்தழை வந்தவா றென்னென்று ஆராயப் படுமாகலான் இவை கொள்ளேம்.) எ - று. மெய்ப்பாடு - அச் சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்வி பெறுதல்.

பிறவிடத்து முள்ளதனை அவ்விடத்தல்லது இல்லையென் றமையின் படைத்து மொழியாயிற்று. இத்தழையை இளவஞ்சி யும் விரும்பு மெனினு மமையும். மற்று - அசை. (௬௪)

**நாணுரைத்து மறுத்தல்.**

வாணுதற் பேதை யை
நாணுத லுரைத்த து.

(எ-து.) (மேன்மேலும் தழையை மறுத்ததனால் தலைமகன் பூங்கண்ணி கொண்டெய்த, பாங்கி,) ஒளி பொருந்திய நெற்றியையுடைய பேதையாகிய தலை மகளது நாணுரைத்து மறுத்துக் கூறியது.

உறுங்கண்ணிவந்தகன்னியுரவோன்பொடியாயொடுங்கத்
தெறுங்கண்ணிவந்தசிற்றம்பலவன்மலைச்சிற்றிலின்வாய்

நறுங்கண்ணிசூட்டினுநாணுமென்வாணுதனுகத்தொன்பூங்
குறுங்கண்ணிவேய்ந்திளமந்திகணுணுமிக்குன்றிடத்தே.

(இ - ள்.) உறு நிவந்த கள் கணை உரவோன் - உயர்ந்த மிகுந்த தேனையுடைய மலர்க்கணையையுடைய வலிய மன்மதன்,—பொடியாய் ஒடுங்க தெறும் கண் நிவந்த சிற்றம்பலவன் - நீறாய்க்கெட அழிக்கவல்ல கண்ணோங்கிய சிற்றம்பலவனது,—மலை சிற்றிலின்வாய் நறு கண்ணி சூட்டினும் - மலையினிடத் திருக்கின்ற சிறுவீட்டினிடத்து (செவிலியர் சூட்டிய மாலையின்மேல் யானோர்) நல்ல பூமாலையைச் சூட்டினாலும்,—என் வாள் நுதல் நாணும் - (அத்துணையானே) என்னுடைய ஒளிபொருந்திய நெற்றியையுடையாள் (புதிதென்று) நாணுவாள்,—இ குன்றிடத்து நாகத்து ஒள் பூ குறு கண்ணி வேய்ந்து இளம் மந்திகள் நாணும் - (மகளிரைச் சொல்லுகின்றதென்) இம்மலையிடத்து நாகமரத்தினது ஒள்ளிய பூவினாற்செய்த குறுமையாகிய மாலையைச் சூடி (அச்சூடுதலான்) இளமையாகிய பெண்குரங்குகளும் வெட்கப்படும். எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல்.

கண்ணிவந்தகணை - கள்மிக்க கணையெனினு மமையும். தெறுங்கண்ணிவந்த என்றது அக்கண் மற்றிருகண்களுக்கும் மேலாய்நிற்குங் கண்ணெனினும், அல்லதூஉம் மேனோக்கிநிற்குங் கண்ணெனினும் அமையும். (௩௫)

## இசையாமைகூறி மறுத்தல்.

வசைதீர் குலத்திற்
கிசையா தென்றது.

(எ - து.) (நாணுரைத்து மறுத்துக்கூறிய பாங்கி,) குற்றநீங்கிய எங்குலத்தினுக்கு (இக்கண்ணி) இசையாதென மறுத்துக் கூறியது.

நறமனைவேங்கையின்பூப்பயில்பாறையைநாகநண்ணி
மறமனைவேங்கையெனநனியஞ்சுமஞ்சார்சிலம்பா
குறமனைவேங்கைச்சுணங்கொடணங்கலர்கூட்டுபவோ
திறமனைவேங்கையதளம்பலவனெடுவரையே.

(இ-ள்.) நறவு மனை வேங்கையின்பூ பயில் பாறையை - தேனுக்கிடமாகிய வேங்கைப்பூக்கள் பொருந்தியிருக்கின்ற பாறையை,—நாகம் நண்ணி மறம் மனை வேங்கை என நனி அஞ்சும் - யானைசேர்ந்து கொலைக்கிடமாகிய புலியென்று மிகவுமஞ்சுகின்ற,—மஞ்சு ஆர் சிலம்பா - மேகம்பொருந்தும் சிலம்பையுடையாய்!—திறம் மன் வேங்கை அதள் அம்பலவன் நெடு வரை-திறந்தங்கிய புலித்தோலையணிந்த சிற்றம்பலவனது நெடுமையாகிய மலையினிடத்து,—குற மனை வேங்கை சுணங்கொடு அணங்கு அலர் கூட்டுபவோ - குறவருடைய மனையிடத்து உண்டாகிய வேங்கை மரத்தினது சுணங்குபோலும் பூவோடு (தெய்வத்திற்குரிய கழுநீர்முதலாகிய பூக்களை) சேர்ப்பரோ (சேர்க்கார்.) எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன்- செவ்விபெறுதல்.

நறமனைவேங்கை - நறுமிக்க பூவெனினு மமையும். குறமனை கூட்டுபவோ - குறக்குடிக ளெவ்வாறு கூட்டுவரோ என் றுரைப்பாருமுளர். திறமனையில் - ஐகாரம் அசைநிலை, வியப்பென்பாருமுளர். திறம் - அத்தன்மைத்தாகிய அதளெனினு மமையும். வேங்கைப்பூவிற்குச் சுணங்கணிந்திருத்தல் குணமாதலால், சுணங்கணியப்பட்டதைச் சுணங்கென்றே கூறினாள். (௬௬)

## செவ்வியிலளென்று மறுத்தல்.

நவ்வி நோக் கி
செவ்வி யிலளென்றது.

(எ - து.) (கன்னியை மறுத்ததனால் தலைமகன் தழையும்மலரும் கொண்டுசெல்ல,பாங்கி,) மான்போ

னும் பார்வையையுடைய தலைமகள் செவ்விபெற்றாற் கொணருமென்று மறுத்துக்கூறியது.

கற்றிலகண் டன்னமென்னடைகண்மலர்நோக்கருளப்
பெற்றிலமென்பிணைபேச்சுப்பெறுகிள்ளைபிள்ளையின்றொன்
றுற்றிலளுற்றதறிந்திலளாகத்தொளிமிளிரும்
புற்றிலவாளரவன்புலியூரன்னபூங்கொடியே.

(இ-ள்.) கண்டு அன்னம் மெல் நடை கற்றில - அவள் (புடை பெயர்ந்து விளையாடாமையின்) நடையைப்பார்த்து அன்னப்பறவைகள் மெல்லிய நடையைக் கற்கப்பெறவில்லை,—கண்மலர் நோக்கு அருள மென்பிணை பெற்றில - கண்மலர் நோக்கங்களை (அவள்) கொடுக்க மென்மையாகிய பெண்மான்கள் பெறவில்லை, —பேச்சு கிள்ளை பெறு - (அவள் உரையாமையின் தாங்கருதும்) மொழிகளைக் கிளிப்பிள்ளைகள் பெறவில்லை,—பிள்ளை இன்று ஒன்று உற்றிலள் - (இவ்வாறு) என் குழந்தை இன்று ஒருவிளையாட்டையும் பொருந்திலள், — ஆகத்து ஒளி மிளிரும் புற்றில வாள் அரவன் - (அதுவேயுமன்றி) ஆகத்தின்கட்கிடந்து ஒளிவிளங்கும் புற்றினிடத்துளவாகிய ஒளியையுடைய பாம்பை யணிந்தவனது, — புலியூர் அன்ன பூ கொடி - புலியூரையொக்கும் பூவையுடைய கொடியை யொப்பாள்,—உற்றது அறிந்திலள்— ஈன்னிடத்து நீர் வந்தவாறும் யானுமக்குக் குறைநேர்ந்தவாறும் இன்னுமறிந்திலள், (அதனால் செவ்வி பெற்றுச் சொல்லல் வேண்டும்.) எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல்.

புற்றிலவென்பதற்கு வேள்வித்தீயிற் பிறந்து திருமேனிக்கண் வாழ்தலாற் புற்றையுடைய வல்லாத அரவென்றுரைப்பினுமமையும். ஆரத்தொளியென்பதூஉம் பாடம். கண்டென்பது கற்றலோடும், அருளவென்பது பெறுதலோடு முடிந்தன. (கூள)

## காப்புடைத்தென்று மறுத்தல்.

காப்புடைத் தென்று
சேட் படுத்த து.

(எ - து.) (செவ்விபெற்றாற் குறைபிராதெனக் கருதிநின்ற தலைமகனுக்குப் பாங்கி,) இது காவலை யுடைய தாகலான் இன்றுபோய் நாளை வாருமென்று இசைய மறுத்துக்கூறியது.

முனிதருமன்னையுமென்னையர்சாலவுமூர்க்கரின்னே
தனிதருமிந்நிலத்தன்றையகுன்றமுந்தாழ்சடைமேற்
பனிதருதிங்களணியம்பலவர்பகைசெகுக்குங்
குனிதருதிண்சிலைக்கோடுசென்றான்சுடர்க்கொற்றவனே.

(இ - ள்.) சுடர் கொற்றவன் - சுடர்களில் தலைவனாகிய சூரியன்,—தாழ் சடைமேல் பனிதரு திங்கள் அணி அம்பலவர் - தாழ்ந்த சடைமேல் குளிர்ச்சியைத்தரும் திங்களைச்சூடிய அம்பலவர்,—பகை செகுக்கும் குனிதரு திண் சிலை கோடு சென்றான் - பகைவரையழிக்கும் வளைகின்ற வலிமையையுடைய மலையாகிய மேருவினுடைய சிகரத்தை அடைந்தான்,—அன்னையும் முனிதரும் - (இனித் தாழ்ப்பின் என்னுடையதாயும்) கோபிப்பாள்,—என் ஐயர் சாலவும் மூர்க்கர் - என்னுடைய ஐயன்மார்களும் மிகவும் மூர்க்கர், — இன்னே தனிதரும் - இவ்விடமும் (இயங்குவாரின்மையின் இப்பொழுதே) தனிமையைத்தரும்,—ஐய - ஐயனே!—குன்றமும் இ நிலத்து அன்று-(உனது) மலையும் இந்நிலத்தின்கண்ணது அன்று. (அதனால் ஈண்டு நிற்கத்தகாது.) எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல்.

அம்பலவர் பகை செகுத்தற்குத்தக்க திமைமுதலாகிய இயல்பு எக்காலத்து முண்மையால் செகுக்குமென நிகழ்காலத்தாற் கூறினர். இந்நிலத் தன்றென்பது பாடமாயின் இக்குன்

மும் இவ்வாறு மகளிரும் ஆடவரும் தலைப்பெய்து சொல்லாடு நிலைமைத் தன்றென வுணர்க. (௬௮)

## நீயே கூறென்று மறுத்தல்.

அஞ்சு தும்பெரும பஞ்சின்மெல்லடியைக்
கூறுவநீயே கூறுகென்றது.

(எ - து.) (காப்புடைத்தென்று சொல்லக்கேட்ட தலைமகன் மறுநாள் வர, பாங்கி,) பெருமானே! பஞ்சினு மென்மையாகிய பாதங்களையுடைய தலைமகளை அஞ்சுவோம்; (ஆகலான்) சொல்லவேண்டுவனவற்றை நீயே சொல்லுகவென்று தா னுடம்படாது மறுத்துக்கூறியது.

அந்தியின்வாயெழிலம்பலத்தெம்பரனம்பொன்வெற்பிற்
பந்தியின்வாய்ப்பலவின்சுளைபைந்தேனொடுங்கடுவன்
மந்தியின்வாய்க்கொடுத்தோம்புஞ்சிலம்பமனங்கனிய
முந்தியின்வாய்மொழிநீயேமொழிசென்றம்மொய்குழற்கே.

(இ - ள்.) அந்தியின் வாய் எழில் - அந்திப் பொழுதினுடைய (செவ்வானின்) அழகையுடைய,—அம்பலத்து எம் பரன் அம் பொன் வெற்பில் - சிற்றம்பலத்தின்கண் உளனாகிய எம்முடைய பரமனது அழகிய பொன்னையுடைய வெற்பிடத்து,— பந்தியின் வாய் பைந்தேனொடும் பலவின் சுளை - வரிசையின்கண் பசுமையாகிய தேனோடும் பலாச்சுளையை,— கடுவன் மந்தியின் வாய் கொடுத்து ஓம்பும் சிலம்ப - ஆண்குரங்கானது பெண்குரங்கின் வாயினிடத்துக் கொடுத்துப் பாதுகாக்கும் மலையையுடையாய்!—அ மொய் குழற்கு - அந்த நெருங்கிய கூந்தலையுடையாளுக்கு,—மனம் கனிய - (அவள்) மனங்கனியும் படி,—முந்தி இன் வாய்மொழி நீயே சென்று மொழி-முற்பட்டு (இந்த) இனிய வாய்மொழிகளை நீதானே போய்ச் சொல்லுவாயாக.

எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - செவ்விபெறுதல்.

எல்லாப்பொருளையுங் கடந்தானாயினும் எமக் கணியனென்னுங் கருத்தால் எம்பரனென்றார். சிலம்பு - மலையின்பக்கத்துளதாகிய சிறுகுவடு. வாய்மொழி - மொழியென்னும் துணையாய் நின்றது. மந்தி உயிர்வாழ்வதற்குக் காரணமாகியவற்றைக் கடுவன்றானே கொடுத்து மனமகிழ்வித்தாற்போல, அவள் உயிர் வாழ்வதற்குக் காரணமாகிய நின்வார்த்தைகளை நீயேகூறி அவளை மனமகிழ்விப்பாயென உள்ளுறையுவம மாயிற்று. (௬௬)

**குலமுறைகூறி மறுத்தல்.**

தொழுகுலத்தீர் சொற்காகேம்
இழிகுலத்தே மெனவுரைத்தது.

(எ-து.) (இந்நாளெல்லாம் என்குறை முடிப்பதாகச் சொல்லி நீயே முடித்துக்கொள்ளென்று சொன்னாளெனத் தலைமகன் ஆற்றாதுநிற்ப, பாங்கி, நீர்) உயர்குலத்தீர் (யாம்) இழிகுலத்தேம், (ஆகலான்) சொல்லாடுதல் தக்கேமல்லேமென்று (குலமுறை கூறி) மறுத்துரைத்தது.

தெங்கம்பழங்கமுகின்குலைசாடிக்கதலிசெற்றுக்
கொங்கம்பழனத்தொளிர்குளிர்நாட்டினைநீயுமைகூர்
பங்கம்பலவன்பரங்குன்றிற்குன்றன்னமாபதைப்பச்
சிங்கந்திரிதருசீறூர்ச்சிறுமியெந்தேமொழியே.

(இ-ள்.) தெங்கம் பழம் கமுகின் குலை சாடி - (மூக்கூழ்த்து விழுகின்ற) தெங்கினது பழங்கள் பாக்குமரத்தின் குலையை (உதிர) மோதி,—கதலி செற்று - வாழைகளை முறித்து,—கொங்கு அம் பழனத்து ஒளிர் குளிர் நாட்டினை நீ - பூந்தாதையுடைய அழகிய வயலிடத்து (கிடந்து) விளங்குகின்ற குளிர்ந்த நாட்டினுள்ளாய் நீ, — உமைகூர் பங்கு அம்பலவன் பரங்குன்

றில் - உமைசிறந்த பாகத்தையுடைய சிற்றம்பலவனது பரங்குன் றினிடத்து,—குன்று அன்ன மா பதைப்ப சிங்கம் திரிதரு - மலை யையொத்த யானைகள் நடுங்கச் சிங்கங்கள்திரியும், — சீறூர் சிறுமி எம் தேமொழி - சிறியவூரினிடத்து உள்ளாளாகிய சிறி யள் எம்முடைய தேனையொத்த மொழியாள், (அதனால் எம் மோடு நீசொல்லாடுதல் தகாது.) எ-று. மெய்ப்பாடு - அச்சத் தைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - செவ்விபெறுதல்.

பரங்குன்றிற் சீறூரோன வியையும். பெருங்காட்டிற் சிறுகு ரம்பையென்பது போதரச் சிங்கந்திரிதரு சீறூரொன்றாள்.(கOO)

### நகையாடி மறுத்தல்.

வாட்டழையெதிராது சேட்படுத்தற் கு
மென்னகைத்தோழி யின்னகைசெய்தது.

(எ-து.) (குலமுறைகேட்ட தலைமகன் மனமகிழ்ந் து நிற்ப) ஒளியுள்ளதழையை யெதிராது சேண்படு த்தற்கு மெல்லிய நகையினளாகிய பாங்கி (அவன் சிலையின் ஆடல் சொல்லி) இனிய நகையொடு மறுத் துக்கூறியது.

சிலையொன் றுவாணுதல்பங்கன்சிற்றம்பலவன்கயிலை
மலையொன் றுமாமுகத்தெம்மையரெய்கணைமன்குளிக்குங்
கலையொன் றுவெங்கணையோடுகடுகிட்டதென்னிற்கெட்டேன்
கொலையொன் றுதிண்ணியவாறையர்கையிற்கொடுஞ்சிலையே.

(இ - ள்.) சிலை ஒன்று வாள் நுதல் பங்கன் - வில்லையொக் கும் ஒளிபொருந்திய நெற்றியையுடைய உமையாளது பங் கை யுடையவன், — சிற்றம்பலவன் - சிற்றம்பலத்தி லுள்ள வன்,—கயிலை மலை ஒன்று மா முகத்து - (அவனது) கயிலையி னிடத்து மலையை யொக்கும் யானையின் முகத்தில், — எம் ஐயர் எய் கணை மன் குளிக்கும் - எம்முடைய ஐயன்மார் எய் யும் அம்புகள் உருவி மன்னின்கன் மூழ்கும்,—கலை ஒன்று

வெம் கணையோடு கடுகிட்டதென்னின் - (அவ்வாறன்றி) ஒரு கலைமான் (இவரெய்த) வெய்ய அம்பினேடு விரைந்து ஓடிற்றுனல்,—கெட்டேன் - கெட்டேன்,—ஐயர் கையில் கொடு சிலை- இவ்வையருடைய கையிலிருக்கின்ற வளைந்தவில், — கொலை ஒன்று திண்ணியவாறு - கொலையாகிய ஒன்று வலிமையாகிய வகை (என்?), எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல்.

கைலைக்கண் மன்குளிக்குமென இயையும். கொடுஞ்சரமென்பதூஉம் பாடம். (கOக)

இரக்கந்தோடு மறுத்தல்.

கையுறையெதிராது காதற்றேழி
ஐயநீபெரி தயர்த்தனையென்றது.

(எ - து.) (நகையாடி மறுத்து) காதற்பாங்கி, ஐயனே! நீ மிகவும் பித்தழையாநிற்கின்றாயென்று சொல்லி, (அதற்கிரக்க முற்றுப் பின்னும்) தழையேலாது மறுத்துக்கூறியது.

மைத்தழையாநின்றமாமிடற்றம்பலவன்கழற்கே
மெய்த்தழையாநின்றவன்பினர்போலவிதிர்விதிர்த்துக்
கைத்தழையேந்திக்கடமாவிஞெய்க்கையில்வில்லின்றியே
பித்தழையாநிற்பராலென்னபாவம்பெரியவரே.

(இ - ள்.) மை தழையாநின்ற மா மிடறு அம்பலவன் கழற்கே - கருமைநிறம் மிகாநின்ற கரிய கண்டத்தையுடைய திருச்சிற் றம்பலவனது திருவடியினிடத்தே,—தழையாநின்ற மெய் அன்பினர்போல - பெருகாநின்ற மெய் யன்பையுடையவரைப் போல,—விதிர் விதிர்த்து கை தழை யேந்தி - நடுநடுங்கி கையினிடத்துத் தழையை யேந்திக்கொண்டு, — கடம் மா விஞெய் - (அதற்கு மாறுபட) மதத்தையுடைய யானையை விஞவிக்கொண்டு,—கையில் வில் இன்றியே - தங்கையில் வில்லில்லாம

லே,—பெரியவர் பித்தழையா நிற்பர் - இப்பெரியவர் பித்தம் மிகுந்து நின்றார்.—என்ன பாவம் - இது என்ன தீவினையோ! எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்வி பெறுதல்.

மா-கருமை. மாமிடறென்பது, பண்புத்தொகையாய் இன்ன திதுவென்னுந் துணையாய் நிற்றலானும் மைத்தழையாகின்ற என்பது அக்கருமையது மிகுதியை யுணர்த்தி நிற்றலானும், கூறியது கூறலாகாமை யறிக. மெய்த்தழையாகின்ற அன்பென்பதற்கு மெய்யாற்றழையாகின்ற அன்பெனினு மமையும். பித்து - பித்தாற்பிறந்த அழைப்பு. அழைப்பு - பொருள் புணரா வோசை. ஆல் - அசை. (௧0௨)

**சிறப்பின்மைகூறிமறுத்தல்.**

மாந்தளிரு மலர்நீலமு ம்
ஏந்தலிம்மலை யில்லையென்றது.

(எ-து.) (இரக்கமுற்று மறுத்தபாங்கி) ஏந்தலே! மாந்தளிரும் நீலமலரும், இம்மலையிலில்லை, (ஆகலான் அவற்றை யாமணியிற்கண்டா ளையுறவொன) மறுத்துக் கூறியது.

**அக்குமரவுமணிமணிக்கூத்தன்சிற்றம்பலமே**
**யொக்குமிவளதொளிருருவஞ்சிமஞ்சார்சிலம்பா**
**கொக்குஞ்சுனையுங்குளிர்தளிருங்கொழும்போதுகளு**
**மிக்குன்றிலென்றுமலர்ந்தறியாதவியல்பினவே.**

(இ-ள்.) மஞ்சு ஆர் சிலம்பா - மேகம்நிறைந்த மலையையுடையாய்!—அக்கும் அரவும் அணி மணி கூத்தன் - அக்குமணியையும் பாம்பையும் அணிகின்ற மாணிக்கம்போலுங் கூத்தனது,— சிற்றம்பலம் ஒக்கும் இவளது ஒளிர் உருவு - திருச்சிற்றம்பலத்தை ஒத்திருக்கின்ற இவளுடைய விளங்காநின்ற வடிவை,— அஞ்சி - பயந்து, — கொக்கும் சுனையும் குளிர் தளிரும் கொழு

போதுகளும் - மாமரங்களும் சுனைகளும் குளிர்ந்த தளிர்களும் கொழுமையாகிய பூக்களும்,—இ குன்றில் என்றும் மலர்ந்து அறியாத இயல்பின - இந்தமலையில் எக்காலத்தும் விரிந்தறி யாத தன்மையையுடையன, (அதுபோல ஈண்டில்லாத இவற்றை யாமணியிற் கண்டார் ஐயுறுவர்.) எ-று. மெய்ப்பாடு - அச்சத் தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல். (க0௲)

இளமைகூறி மறுத்தல்.

முளைமெயயிற் றரி வை
விளைவில வென்ற து.

(எ - து.) (சிறப்பின்மைகூறித் தழைமறுத்தபாங் கி,) முளைக்கின்ற பல்லையுடைய பேதைக்கு (நீசொல் வது) சிறிதும் இயைபுடைத்தன்றெனக் கூறியது.

உருகுதலைச்சென்றவுள்ளத்துமம்பலத்தும்மொளிபே
பெருகுதலைச்சென்றுநின்றோன்பெருந்துறைப்பிள்ளைகள்ளார்
முருகுதலைச்சென்றகூழைமுடியாமுலைபொடியா
வொருகுதலைச்சின்மழலைக்கென்னோவையவோதுவதே.

(இ - ள்.) உருகுதலை சென்ற உள்ளத்தும் - (அன்பருடைய) உருகுதலை யடைந்த உள்ளத்தினிடத்தும்,—அம்பலத்தும் - சிற் றம்பலத்தி னிடத்தும், — ஒளி பெருகுதலை சென்று நின் றோன் - (இரண்டிடத்தும் ஒப்ப) ஒளி பெருகுதலை யடைந்து நின்றவனது,—பெருந்துறை பிள்ளை - பெருந்துறைக்கணுளளா கிய (எம்) குழந்தையினுடைய,—கள் ஆர் முருகு தலைச்சென்ற கூழை முடியா - தேன் நிறைந்த வாசனையானது தம்மிடத்த டைந்த கூந்தல்கள் முடிக்கப்படா,—முலை பொடியா - முலைகள் தோன்றா,—ஒரு குதலை சின் மழலைக்கு - ஒரு குதலைச் சின் மழலைச் சொல்லையுடையாட்கு,—ஐய- ஐயனே!—ஓதுவது என் னோ - நீ சொல்லுகின்ற இது யாதாம், (சிறிதும் இயைபுடைத்

தன்று.) எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செவ்விபெறுதல்.

ஏகாரம் - அசைநிலை. கள்ளார் கூழையென இயையும். சூதலைமை - விளங்காமை. மழலை - இளஞ்சொல். (கoச)

**மறைத்தமைகூறி நகைத்தல்.**

என்னைமறைத்தபி னெண்ணியதரிதென
நன்னுதற்றோழி நகைசெய்தது.

(எ - து.) (இதுகாறு மியையமறுத்து இப்பொழுது இவளினையவளென்று இயையாமைகூறி மறுப்பதால் இனி இவ்வொழுக்கம் இவளையொழிய ஒழுகக் கடவேனெனத் தலைமகன் உட்கொண்டுநிற்ப)என்னை மறைத்தபின்னர் நீயெண்ணிய காரியம் முடியாதென நன்மையாகிய நெற்றியையுடைய பாங்கி, நகைத்துக் கூறியது.

பண்டாலியலுமிலைவளர்பாலகன்பார்கிழித்துத்
தொண்டாலியலுஞ்சுடர்க்கழலோன்றொல்லைத்தில்லையின்வாய்
வண்டாலியலும்வளர்பூந்துறைவமறைக்கினென்னைக்
கண்டாலியலுங்கடனில்லைகொல்லோகருதியதே.

(இ - ள்.) பண்டு - முற்காலத்து,—ஆல் இயலும் இலை வளர் பாலகன் - ஆலின்கண் பொருந்தும் இலையினிடத்துக் கண்வளர்கின்ற பாலகனாகிய மாயோன், — பார் கிழித்து தொண்டால் இயலும் - பூமியைப்பிளந்து (காணாமையால் பின்) அடிமைத் திறத்ததாலடையும்,—சுடர் கழலோன் - ஒளிபொருந்திய திருவடியை யுடையவனது,—தொல்லை தில்லையின்வாய் - பழமையாகிய தில்லைநகரத்தி லுண்டாகிய, — வண்டு ஆல் இயலும் வளர் பூ துறைவ - வண்டுகள் ஆலிப்போடு திரிகின்ற வளர்கின்ற பூக்களையுடைய துறையையுடையாய்!—கண்டால் என்னைமறைக்கின் - ஆராயின் என்னைமறைத்தால், — கருதியது -

நீ கருதியது,—இயலும்கடன் இல்லைகொல் - முடியுமுறைமை யில்லைபோலும். எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்தநகை; பயன் - இவள் நகுதலான் தன்குறை முடியுமெனநினைந்து ஆற்றுதல்.

பண்டுதொண்டரா லியலுமெனவும், தில்லைவரைப்பிற் றுறை யெனவு மியையும். தில்லைக்கண் துறையெனினு மமையும். ()

**நகைகண்டுமகிழ்தல்.**

**இன்னகைத் தோழி மென்னகை கண்டு**
**வண்ணக் கதிர்வே லண்ண லுரைத்தது.**

(எ - து.) (என்னைமறையா தொழிந்தால் நின்கருத்து முடியுமென் றுட்கொண்டுரைத்த) இனிமையாகிய நகையையுடைய பாங்கியினது மென்மையாகிய நகையைக்கண்டு அழகிய கதிர்வேலை யுடைய தலைமகன் (மகிழ்ந்து) கூறியது.

மத்தகஞ்சேர் தனிநோக்கினன்வாக்கிறந் தூறமுதே
யொத்தகஞ்சேர்ந்தென்னை யுய்யநின்றோன் றில்லையொத் திலங்கு
முத்தகஞ்சேர்மென்னகைப்பெருந்தோளிமுகமதியின்
வித்தகஞ்சேர்மெல்லெனேக்கமன் றேவெவ்விழுத்துணையே.

(இ - ள்.) மத்தகம் சேர் தனி நோக்கினன் - நெற்றியைச் சேர்ந்த தனிக்கண்ணை யுடையான்,—வாக்கிறந்து ஊறு அமுது ஒத்து அகம் சேர்ந்து என்னை உய்ய நின்றோன் - சொல்லளவைக்கடந்து ஊறுகின்ற அமுர்தத்தை யொத்து மனத்தைச் சேர்ந்து என்னைப் பிழைக்கும்படி நின்றவன்,—தில்லை ஒத்து இலங்கும் - (அவனது) தில்லைநகரத்தை யொத்துப் பிரகாசிக்கின்ற,—முத்து அகஞ்சேர் - முத்துப்போலும் எயிறுகள் உள்ளடங்கிய,—மெல் நகை பெரு தோளி - மெல்லிய மூரல் முறுவலையுடைய பெரிய தோளினையுடையாளது,—முக மதியின் - முகமாகிய சந்திரனிடத்துண்டாகிய,—வித்தகம் சேர் மெல்

லென் னோக்கம் அன்றோ - சதுரப்பாட்டைச் சேர்ந்த மெல்லெ ன்ற பார்வையன்றோ,—என் விழு துணை - எனது சிறந்த துணை. (ஆதலால் ஆற்றத்தகும்.) எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன்- ஆற்றாமை நீங்குதல்.

இலங்கு முகமதி என வியையும். மறுத்தாளாயினும் நங்கண் மலர்ந்தமுகத்தளென்னும் கருத்தான் இலங்கு முக மதியினென் றான். இளையளென இயையாமை கூறிமறுத்த இவ்வொழுக்கம் இனி யொழிய வொழுகக்கடவேனென்று தலைமகன் தன்மனத் திற் குறிக்க, அக்குறிப்பைப் பாங்கி யறிந்து கூறினமையின் வித்தகஞ்சேர் மெல்லெ னோக்கமன்றோ எனக்குச் சிறந்ததுணை, பிறிதில்லையெனத் தனதாற்றாமை தோன்றக் கூறினான். (க0சு)

அறியாள்போன்று நினைவுகேட்டல்.

வேந்தன்சொன்ன மாந்தளிர்மேனியை
வெறியார்கோதை யறியேனென்றது.

(எ - து.) (நகைகண்டுமகிழ்ந்த) தலைமகன் கூறிய மாந்தளிர் போலும் மேனியை யுடைய தலைமகளை மணங்கமழ்கின்ற மாலையையணிந்த பாங்கி யறியே னென்று (அவன்நினைவு) கேட்டது.

விண்ணிறந்தார்நிலம்விண்டவனென்றுமிக்காரிருவர்
கண்ணிறந்தார்தில்லையம்பலத்தார்கழுக்குன்றினின்று
தண்ணறுந்தாதிவர்சந்தனச்சோலைப்பந்தாடுகின்ற
ரெண்ணிறந்தாரவர்யார்கண்ணதேமன்னநின்னருளே.

(இ-ள்.) விண் இறந்தார் நிலம் விண்டவர் - விண்ணைக்கடந் தவர் நிலத்தைப்பிளந்தவர்,— என்று மிக்கார் இருவர் கண் இறந்தார் - என்று சொல்லப்படுகிற பெரியோராகிய (அய னரி) என்னுமிருவருடைய கண்ணைக்கடந்தார்,—தில்லையம்பலத்தார்- தில்லையம்பலத்தின்கணுள்ளார்,—கழுக்குன்றின் நின்று - (அவ

ரது) திருக்கழுக்குன்றினிடத்திருந்து,— தண் நறு தாது இவர் சந்தனம் சோலை - குளிர்ச்சிபொருந்திய நல்ல மகரந்தங்கள் பரந்த சந்தனச்சோலையினிடத்து,— எண் இறந்தார் பந்தாடுகின்றார் - அளவற்றவர் பந்தாடுகின்றனர், — மன்ன - அரசனே! நின் அருள் - உன்னுடைய அருளானது, — அவர் யார் கண்ணதோ - அவர்களில் யாரிடத்ததோ? (கூறுவாயாக.) எ - று. மெய்ப்பாடு - மருட்கையைச்சார்ந்த பெருமிதம்; பயன் - நும் மாற்கருதப்படுவாளை அறியேனென்றாளாக, என்குறை இன்னுள் கண்ணதென அறிவித்தால் இவள் முடிக்குமென நினைந்து ஆற்றுவானாம் மென்பது.

சோலைக்கணின்றென்று கூட்டினு மமையும். எண்ணிறந்தார் பலரென்பதூஉம் பாடம். (கO௭)

அவயவங்கூறல்.

அவயவ மவளு க்
கிவையிவை யென்றது.

(எ - து.) (இன்னு மவளை இப்பாங்கி யறிந்திலளாகையால் அறியின் தழையை யேற்பாளென்ப துட்கொண்டு) அவளுக்கு அவயவங்களிவையிவையென்று கூறியது.

துவவினகொங்கைகுரும்பைகுழல்கொன்றைகொவ்வைசெவ்வா [ய்
கவவினவாணகைவெண்முத்தங்கண்மலர்செங்கழுநீர்
தவவினைதீர்ப்பவன்றாழ்பொழிற்சிற்றம்பலமனையாட்
குவவினநாண்மதிபோன்றொளிர்கின்றதொளிமுகமே.

(இ-ள்.) தவ வினை தீர்ப்பவன்-(விரதங்களான் வருந்தாமல்) தவத்தொழிலை நீக்கி (அன்பர்க்கு இன்புறும்வழியை)அருள்பவனது, — தாழ் பொழில் சிற்றம்பலம் அனையாட்கு - தாழ்ந்த சோலையையுடைய திருச்சிற்றம்பலத்தை ஒப்பவளுக்கு,—குவவின கொங்கை குரும்பை - குவிந்த முலைகள் குரும்பையை

யொக்கும்,—குழல் கொன்றை - கூந்தல் கொன்றைப்பழத்தை யொக்கும்,—செவ்வாய் கொவ்வை - செவந்தவாய் கொவ்வை கனியையொக்கும்,—கவவின வாள் நகை வெள் முத்தம் - (அ ணிடத்து) இடப்பட்ட ஒளிபொருந்திய பற்கள் வெண்மைய கிய முத்தையொக்கும்,—கண் மலர் செங்கழுநீர் - கண்ணுகி மலர்கள் செங்கழுநீர்ப் பூக்களையொக்கும்,—ஒளி முகம் உவவி நாள் மதிபோன்று ஒளிர்கின்றது - ஒளிபொருந்திய முகம் பூ ணையில் உண்டாகிய செவ்விய சந்திரனையொத்துப் பிரகாசி கின்றது. எ-று. மெய்ப்பாடு-உவகையைச் சார்ந்த பெருமிதம் பயன்-ஐய மறுத்தல்.

தவவினை தீர்ப்பவ னென்பதற்கு மிகவும் வினைகளைத் தீர் பவ னெனினு மமையும். உவவினமதி-பலகலைகள் கூடிநிறைந் தன்மையை யுடைய மதி. நாண்மதி - உவாவான நாளின் மதி.(

**கண்ணயந் துரைத்தல்.**

கண்ணிணை பிறழ்வ ன
வண்ண முரைத்த து.

(எ - து.) (அவளவயங்கள் கூறியவழிக் கூறியும் அமையாமல் பின்னும் தனக் கன்று பாங்கியைக் காட் டின) கண்ணிணைகள் பிறழ்வனவாகிய வண்ணத்தை க் கூறியது.

ஈசற்கியான்வைத்தவன்பினகன்றவன்வாங்கியவென்
பாசத்திற்காரொன்றவன்றில்லையின்னொளிபோன்றவன்றோள்
பூசத்திருநீறெனவெளுத்தாங்கவன்பூங்கழல்யாம்
பேசத்திருவார்த்தையிற்பெருநீளம்பெருங்கண்களே.

(இ-ள்.) ஈசற்கு யான் வைத் ...ன்பின் அகன்று - ஈசனி த்து யான்வைத்த அன்பைப்போ..ல அகலமாய், — அவன் வா கிய என் பாசத்தின் காரொன்று-அவனால் வாங்கப்பட்ட என பாசம்போலக்கருமைநிறத்தைப்பொருந்தி,—அவன் தில்லையி

ஒளிபோன்று - அவனது தில்லைநகரத்தின் ஒளியையொத்து,— அவன் தோள் பூசு அ திருநீறென வெளுத்து -அவனது தோள் களில் சாத்தும் அந்தத்திருநீற்றைப்போல வெளுத்து,—அவன் பூ கழல் யாம் பேசு அ திருவார்த்தையின் பெருநீளம் - அவனு டைய பூப்போலுந் திருவடிகளை யாம்பேசும் அந்தத்திருவார்த் தைபோல மிகவும் நெடியவாயிருக்கும்,—பெரும் கண்கள் (என் றாற் காணப்பட்டவளுடைய) பெரியகண்கள். எ - று. மெய்ப் பாடு - உவகையைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - ஐயமறுத்தல்.

பூசத்திருநீறு வெள்ளிதாய்த் தோன்று மாறுபோல வெளு த்தென்றும், பேசத் திருவாரத்தை நெடிய வாயினாற்போலப் பெருநீள மாமென்றும், வினையெச்சமாக்கிச் சிலசொல் வருவித் துரைப்பினு மமையும். கண்ணிற்கு அகல முதலாயின கூறவே செம்மை கண்டிலே மென்பாரக்கு அவன் தோளிற் பூசத் திரு நீறென்றதனால் சிவப்பும் சொல்லிய தாயிற்று. அது செம்மை யிற் றென்றும் வரியென வறிக. ஆங்கு - அசைநிலை. (௧0௬)

தழையெதிர்தல்.

அகன்றவிடத் தாற்றாமைகண்டு
கவன்றதோழி கையுறையெதிர்ந்தது.

(எ - து.) (கன்னையர் துணைப்பக் கேட்டபின்) அவன் கருத்திற்கு மாறுபட்ட விடத்து, அவனது ஆற்றாமையைக் கண்டு கவலையடைந்த பாங்கி, கையு றை யெதிர்ந்தது.

தோலாக்கரிவென்றதற்குந்துவள்விற்குமில்லின்றொன்மைக்
கேலாப்பரிசுளவேயன்றியேலேமிருஞ்சிலம்ப
மாலார்க்கரியமலர்க்கழலம்பலவன்மலையிற்
கோலாப்பிரசமன்னாட்கையநீதந்தகொய்தழையே.

(இ-ள்.) இரு சிலம்ப - பெரிய மலையையுடையாய்!—தோலா கரி வென்றதற்கும் - (எம்மையேதஞ்செய்யவந்த) தோற்காத

யானையை நீ வெற்றிகொண்டதற்கும்,— துவள்விற்கும்-(யான் மறுப்பவும் போகாது பேரன்புடையையாய் நீ விடாது துவண்ட) துவட்சிக்கும்,—இல்லின் தொன்மைக்கு ஏலா பரிசு உளவே - (எமது) குடியின்பழமைக்கு ஏலாத இயல்பையுடையவென்று எம்மாற்செய்யப்படாதன வுளவே?—ஐய - ஐயனே!—மாலார்க்கு அரிய - திருமாலானவர்க்கு மரிய, — மலர் கழல் - மலர்போலும் திருவடியையுடைய,—அம்பலவன் மலையில்-சிற்றம்பலவனது மலையினிடத்து,—கோலா பிரசம் அன்னாட்கு-செய்யப்படாத தேனையொப்பாட்கு,—நீதந்த-நீ கொடுத்த,—கொய் தழை அன்றி ஏலேம் - கொய்யப்பட்ட தழையை பிறிதோரா ற்றால் ஏற்கமாட்டோம். எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன்-குறை நேர்தல்.

உளவே என்னும் ஏகாரம் எதிர்மறை. அஃதென்போல வெனின். "தூற்றுதே தூரவிடல்" என்பது தூற்றும் என்று பொருள்பட்ட வாறுபோல வென்றறிக. ஏலாப் பரிசுளவே என்டதற்கு எமது குடிப்பிறப்பின் பழமை பற்றி இத்தழை சுற்றத்தார் கூடி வாங்குவ தொழிந்து நாங்களாக வாங்கினால் குடிப்பிறப்புக்குப் பழிவரு மென்பது பற்றி, வாங்குவ தன்றென்பது கருத்து. உளவேயன்றி யேலோமென்பது பாடமாயின் இப்பழியாங் குற்றம் இதற் குளவாகலான் இத்தழை நீசெய்த உதவியைப்பற்றி யேற்கின்றேம் அல்லது ஏலேமென்பது கருத்து. கோலிடத்துப் பிரசமென்பது கோற்றேன். தோலாக்கா வென்றது முதலிய நிகழ்ச்சி செய்யுளின்கட் கண்டிலேமென்பார்க்கு இயற்கைப் புணர்ச்சி நீக்கத்தின்கண் நிகழ்ந்தனவென வுரைக்க: அன்றியும் படைத்துமொழி வகுத்துரை யென்பன வற்றானு மறிக. (கக0

## குறிப்பறிதல்.

தழையெதிரா தொழிவதற்கோர்
சொல்லறியேனெனப் பல்வளைக்குரைத்தது.

(எ - து.) (தழையெதிர்ந்த பாங்கி இதுகாறும் தழையேலாமைக்குத் தக்க பொய்சொல்லி மறுத்தேன், இன்று அவன் நோக்கங் கண்டபின்) தழையை யேலாது ஒழிவதற்கோர் பொய்சொல்ல வறியே னெனப் பல்வளையை யணிந்த தலைமகளுடைய குறிப்பறிந் துரைத்தது.

**கழைகாண்டலுஞ்சுளியுங்களியானையன்னான்கரத்திற்**
**றழைகாண்டலும்பொய்தழைப்பமுன்காண்பனின்றம்பலத்தா**
**னுழைகாண்டலுநினைப்பாகுமென்னோக்கிமன்னோக்கங்கண்டா**
**லிழைகாண்பணைமுலையாயறியேன்சொல்லுமீடவற்கே.**

(இ-ள்.) கழை காண்டலும் சுளியும் களி யானை அன்னான் - (குத்து)கோலைக் கண்டவளவில் கோபிக்கின்ற களிப்பையுடைய யானையை யொப்பானுடைய,—கரத்தில் தழை காண்டலும் - கையில் தழையைக்கண்டவளவில், — பொய் தழைப்ப முன் காண்பன் - (அப்பொழுது சொல்லத்தகும்) பொய்யைப்பெருக முன்னர்க் காண்பேன், — அம்பலத்தான் உழை காண்டலும் நினைப்பு ஆகும் மெல் நோக்கி - சிற்றம்பலத்தானுடைய மானைக் கண்டவளவில் நினைவுண்டாகும் மெல்லிய நோக்கத்தையுடையாய்!—மன் நோக்கம் கண்டால் - அம்மன்னனுடைய நோக்கத்தைப் பார்த்தால்,—இழை காண் பணை முலையாய் - ஆபரணங்கள் காணப்படும் பெரியமுலையை யுடையாய்!— இன்று அவற்கு சொல்லும் ஈடு அறியேன் - இன்று அவனுக்குப் பொய் சொல்லுநெறியை அறிகின்றிலேன். (இனியாது சொல்வாம்.) எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன்-குறை நயப்பித்தல். (கககூ)

**குறிப்பறிந்து கூறல்.**

**ஏழைக் கிருந்த ழை**
**தோழிகொண் டுரைத்தது.**

(எ - து.) (தலைமகளது முகக்குறிப்பறிந்து, அது வழியாகநின்று) பாங்கி, இருந்தழையைக் கைக்கொண்டு தலைமகட்குக் கூறியது.

துவளத்தநீறணியுந்தடந்தோளண்ணறன்னொருபா
லவளத்தனுமகனுந்தில்லையானன்றுரித்ததன்ன
கவளத்தயானைகடிந்தார்கரத்தகண்ணார்தழையுந்
துவளத்தகுவனவோசுரும்பார்குழற்றூமொழியே.

(இ - ள்.) சுரும்பு ஆர் குழல் தூ மொழி - வண்டுகள் பொருந்திய கூந்தலையுடைய சுத்தமான மொழியையுடையாய்!—துவளத்த நீறு அணியும் தடம் தோள் அண்ணல் - வெண்மையையுடைய திருநீற்றையணியும் பெரிய தோள்களையுடைய பெரியோன்,—தன் ஒருபால் அவள் அத்தனும் மகனும் தில்லையான்-தன தொருபாகத்துள்ளாளாகிய அவளுக்குத் தந்தையுமாகும் மகனுமாகும் தில்லை நகரத்துள்ளான்,—அன்று உரித்தது அன்ன - (அவன்) அன்றுரித்த யானையையொக்கும்,—கவளத்த யானை - கவளத்தை யுண்ணுதலையுடைய யானையை,—கடிந்தார் கரத்த - (நம்மேல்) வாராமல்துரத்தினவருடைய கையின் கணுள்ள,—கண் ஆர் - கண்ணிற்குநிறைந்த, — தழையும் துவளத்தகுவனவோ - தழையும் வாடத்தக்கனவோ? (தகா). எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன்-குறை நயப்பித்தல்.

சிவதத்துவத்தி னின்றுஞ் சத்திதத்துவந் தோன்றுதலின் அவளத்தனு மென்றும், சத்தி தத்துவத்தினின்றுஞ் சதாசிவ தத்துவந் தோன்றுதலின் மகனுமென்றுங் கூறினர். "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன்" என்பதூஉம் அப்பொருண்மேல் வந்தது. யானைகடிந்த பேருதவியார் கையனவுந் துவளத்தகுவனவோ என்றதனால் அவருள் ளமுந் துவளாமற் குறைமுடிக்க வேண்டுமென்பது குறிப்பாற் கூறினள். (ககஉ)

### வதுத்துரைத்தல்.

*கடித்தழைகொணர்ந்தகாதற்றோழி*
*மடக்கொடிமாதர்க்குவருத்துரைத்தது.*

(எ-து.) மணங்கமழ்கின்ற தழையைக் கொணர்ந்த காதற்பாங்கி, (நாணத்தால் தழைவாங்க மாட்டாது நிற்கும்) இளங்கொடிபோன்ற தலைமகட்கு, அவள் தழையை யேற்றலே கருமமென்று சொன்னது.

*ஏறும்பழிதழையேற்பின்மற்றேலாவிடின்மடன்மா*
*வேறுமவனிடபங்கொடியேற்றிவந்தம்பலத்து*
*ளேறுமரன்மன்னுமீங்கோய்மலைநம்மிரும்புனங்காய்ந்*
*தேறுமலைதொலைத்தாற்கென்னையாஞ்செய்வதேந்திழையே.*

(இ-ள்.) ஏந்திழை - தாங்குகின்ற அணியையுடையாய்!— தழையேற்பின் பழி ஏறும் - தழையை யேற்றுக்கொண்டால் (நமக்குப்) பழியேறும்,— ஏலாவிடின் மடல் மா அவன் ஏறும் - (தழையை) ஏலாவிட்டால் பனைமடலாற் செய்தகுதிரையை அவனேறுவான்,—இடபம் கொடி ஏற்றி வந்து அம்பலத்துள் ஏறும் - (தருமவடிவாகிய) இடபத்தைக் கொடியின்கண் வைத்து (நமது பிறவித்துன்பத்தை நீக்க ஒருப்பட்டு) வந்து சிற்றம்பலத்தின்கண் ஏறும், — அரன் மன்னும் ஈங்கோய் மலை-அரன் தங்கும் ஈங்கோய்மலையில்,—நம் இரும் புனம் காய்ந்து - நமது பெரியபுனத்தை அழித்து,—ஏறும் மலை தொலைத்தாற்கு (நம்மை நோக்கிக்கொண்டு) ஏறுகின்ற மலையையொத்த யானையையும் தோற்பித்தவற்கு,—யாம் செய்வது என்னை - நாம்செய்வதென்னோ? (அதனையானறிகின்றிலேன்). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - கையுறையேற்பித்தல்.

மற்று வினைமாற்று. மடன்மாவேறு மவனென்று தழையேலாவிடினும் பழியேறு மென்பது படக்கூறி னமையாலும், ஏறு

மலை தொலைத்தாற்கென அவன் செய்த வுதவி கூறினமையா னும் தழையையேற்பதே கருமமென்பது படக் கூறினாளாம். ()

## தழையேற்பித்தல்.

கருங்குழன் மடந்தைக் கரும்பெறற் றோழி
இருந்தழை கொள்கென விரும்பிக் கொடுத்தது.

(எ-து.) (தழை யேலாமையாற் பழியேறுமாயின் தழை யேற்பதே காரியமென வுட்கொண்டு நிற்கும்) கருமையாகிய கூந்தலையுடைய தலைமகட்குப் பெற லருஞ் செல்வம்போன்ற பாங்கி, பெருமை பொருந் திய தழையைக் கொள்கவென்று விரும்பிக் கொடு த்தது.

தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்ட
செவ்வரை மேனியன் சிற்றம் பலவன் செழுங்கயிலை
யவ்வரை மேலன்றி யில்லை கண் டாயுள்ள வாறருளா
னிவ்வரை மேற்சிலம் பன்னெளி திற்றந்த வீர்ந்தழையே.

(இ-ள்.) உள்ளவாறு அருளான் - உள்ளபடி (நம்மிடத்துண்டாகிய) கிருபையால்,—இவ்வரைமேல் - இம்மலையினிடத்து,— சிலம்பன் - சிலம்பனுனவன், — எளிதில் தந்த ஈரம் தழை - எளிதாகக்கொண்டுவந்து கொடுத்த குளிர்ச்சிபொருந்திய இத் தழையானது,—தெவ்வரை மெய்யெரி - பகைவரை உடலெரித் த,—காய் - காய்கின்ற,—சிலை ஆண்டு - மேருமலையாகிய வில் லைப் பணிகொண்டு,—என்னை யாண்டுகொண்ட - (பின்) என்னை அடிமைகொண்ட, — செவ்வரை மேனியன் சிற்றம்பலவன் - சிவந்தமலைபோலும் திருமேனியையுடைய சிற்றம்பலவனது,— செழும் கயிலை அவ்வரைமேலன்றி-செழுங்கைலையாகிய அம்மலை யிடத்தல்லாமல்,—இல்லை - (வேறோரிடத்தும்) இல்லை. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - கையுறை யேற்பித்தல்.

தெவ்வனை யென்பதில் ஐகாரத்தை யசைநிலையாக்கித் தெவ்வர் மெய்யெரிதற்குக் காரணமாம் சிலையெனினு மமையும். வலியன வற்றை வயமாக்கிப் பயின்று பின் என்னை யாண்டானென்பது போதரா காய்சிலையாண்டென்னை யாண்டுகொண்டவென்றார். கையிலைத்தழையை எளிதிற் றந்தா னென்றதனால் வரைவுவேண்டிய வழித் தமர் மறுப்பின் வரைந்து கொள்ளும் தாளாண்மைய னென்பது கூறினாளாம். கண்டாய் முன்னிலை யசைச்சொல். (கக௪)

தழைவிருப்புரைத்தல்.

விருப்பவ டோழி
பொருப்பற் குரைத்தது.

(எ - து.) (தலைமகளைத் தழையேற்பித்த) பாங்கி, அவள் விருப்பினைத் தலைமகனுக்குக் கூறியது.

பாசத்தளையறுத் தாண்டுகொண் டோன்றில்லையம்பலஞ்சூழ்
தேசத்தனசெம்மனீ தந்தனசென்றியான்கொடுத்தேன்
பேசிற்பெருகுஞ்சுருங்குமருங்குல்பெயர்ந்தரைத்துப்
பூசிற்றிலளன்றிச்செய்யா தனவில்லைபூந்தழையே.

(இ-ள்.) பாசம் தளை அறுத்து ஆண்டுகொண்டோன் - பாசமாகிய விலங்கை அறுத்து (என்னை) அடிமையாகக்கொண்டவனது,—தில்லையம்பலம் சூழ் தேசத்தன - தில்லையம்பலத்தைச் சூழ்ந்த தேசத்தின்கணுள்ளன;— செம்மல் நீ தந்தன-(அச்சிறப்பேயன்றி) அரசனே உன்னாற்றரப்பட்டன; — சென்று யான் கொடுத்தேன்-(அத்தழைகளை) போய் அவளுக்கு யான் கொடுத்தேன்,—பேசின் பெருகும்-(ஆங்கு நடந்தவைகளைச்) சொல்லலுறின் விரியும், — சுருங்கு மருங்குல் - சுருங்கிய இடையையுடையாள், — பெயர்த்து அரைத்து பூசிற்றிலள் அன்றி - பெயர்த்து அரைத்து (தன் மேனியெங்கும்) பூசிக்கொள்ளவில்லையே

யன்றி,—பூ தழை செய்யாதன இல்லை-(அந்தப்) பூந்தழையைச் செய்யாதவைகளொன்றுமில்லை. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகனை யாற்றுவித்தல்.

பெயர்த்தென்பது பெயர்ந்தென மெலிந்து நின்றது. பெயர்ந்தனைத் தென்பதற்குப் பிசைந்தனைத்தென்று பாட. மோதுவாரு முளர். (கக௫)

சேட்படை முற்றிற்று.

---

# பகற்குறி,

என்பது, தலைமகனைத் தழையேற்பித்த பாங்கி, தலைமகனைப் பகற்குறிக்கண் தலைப்பெய்வியா நிற்றல்.

இக்கிளவி முப்பத்திரண்டு துறைகளை யுடைத்து. அவைவருமாறு:—

குறியிடங்கூற லாடிடம்படர்தல், குறியிடைச்சேற லிடத்துய்த்துநீங்கல், உவந்துரைத்தலொடு மருங்கணைதல்லே, அறிவறிவித்த லவனுண்மகிழ்தல், ஆயத்துய்த்தல் தோழிவந்து கூடல், ஆடிடம்புகுதல் தனிகண்டுரைத்தல், தடமென்முலையாள் பருவங்கூறி, வரவுவிலக்கன் வரைவுடம்படாது, மிகுத்துரைத்தலொடு மெய்ம்மையுரைத்தல், வருத்தங்கூறல் தாயச்சங்கூறல், இற்செறிவறிவித்தல் தமர்நினைவுரைத்தல், எதிர்கோள்கூற லேறுகோள்கூறல், ஏதிலார்தம்முரை கூறலவளொடு, கூறுவாள்போன்று தினைமுதிர்வுரைத்தல், பகல்வரல் விலக்கல் பையுளெய்தித், தினையொடுவெறுத்தல் சிறைப்புறமாக, வேங்கையொடுவெறுத்தல் வெற்பமர்நாடற்குக், கழுமலுற்றிரங்கல் கடிப்புனங்கையறக், கொய்தமைகூறல் பிரிவருமைகூறல், மயிலொடுகூறல் வறும்புனங்காண்டல், பயில்பதிநோக்கிப் பதிமிசைவாடல், சொன்னநாலெட்டுந் தோன்றுமியற்கை, மன்னியபகற்குறி வகையாகும்மே.

### குறியிடங்கூறல்.

வாடிடத்தண்ணல் வண்டழையெதிர்ந்தவள்
ஆடிடத்தின்னியல் பறியவுரைத்த து.

(எ - து.) (தழை விருப்புரைக்கக் கேட்டுத்) தலைமகன் வருந்தியவிடத்து வண்மையாகிய தழையை யெதிர்ந்த தலைமகள் விளையாடுமிடத்து (வருவாயாகவெனப் பாங்கி,) அதன் இயல்பினைத் தெரியவுரைத்தது.

வானுழைவாளம்பலத்தரன்குன்றென்றுவட்கிவெய்யோன்
றானுழையாவிருளாய்ப்புறநாப்பண்வண்டாரகைபோற்
றேனுழைநாகமலர்ந்துதிகழ்பளிங்கான்மதியோன்
கானுழைவாழ்வுபெற்றாங்கெழில்காட்டுமொர்கார்ப்பொழிலே.

(இ-ள்.) வானுழை வாள் - (இருட்கு அப்பாலாகிய) வானிடத்துண்டாகிய ஒளியையுடையான்,— அம்பலத்தரன் - (இவ்வண்ணஞ் சேயனாயினும் அணியனாய்) சிற்றம்பலத்தில் வாழும் அரன், — குன்றென்று வட்கி - (அவனது) மலையென்று கூசினாற்போல, — புறம் வெய்யோன் தான்நுழையா இருளாய் - புறமெங்கும் சூரியன் தானுழையாத இருளாய், — நாப்பண் வண்தாரகைபோல் தேன் நுழை நாகம் மலர்ந்து - நடுவில் வளப்பம் பொருந்திய விண்மீன்போல வண்டுகள் நுழையும் நாகப்பூ மலர்ந்து, — திகழ் பளிங்கால் மதியோன் கான் உழை வாழ்வு பெற்றாங்கு-பிரகாசிக்கும் பளிங்குக்கல்லினால் சந்திரன் (வானிடத்து வாழ்வை யொழித்து) காட்டினிடத்து வாழ்வைப் பெற்றாற்போல,—ஓர் கார்பொழில் - ஒரு கரியசோலை,—எழில்காட்டும் - (தனது) அழகைப்புலப்படுத்தும். எ-று. மெய்ப்பாடு - உவகை ; பயன்-குறியிட முணர்த்துதல்.

'அண்டமாயிரு ளூடுகடந்தும்ப - ருண்டுபோலுமோ ரொண்சுடர்' என்றதூஉம் அப்பொருண்மேல் வந்தது. வட்கி என்றதனால் முன் பல் பறி யுண்டானதல் விளங்கும். (கககூ)

## ஆடிடம்படர்தல்.

வண்டழையெதிர்ந்த வொண்டொடிப்பாங்கி
நீடமைத்தோளியொ டாடிடம்படர்ந்தது.

(எ-து.) வண்மையாகிய தழையைத் தலைமகனிடம் பெற்று (அவனுக்குக் குறியிடங்கூறினை)ஒண்மையாகிய தொடியையுடைய பாங்கி, நீண்ட மூங்கில்போலுந் தோளையுடைய தலைமகளுடன் விளையாடுமிடம்போகா நிற்றல்.

புயல்வளருசன்முன்னுடிப்பொன்னேபின்னேப்போய்ப்பொலியு
மயல்வளர்குன்றினின்றேற்றுமருவிதிருவுருவிற்
கயல்வளர்வாட்கண்ணிபோதருகாதரந்தீர்த்தருளுந்
தயல்வளர்மேனியனம்பலத்தான்வரைத்தண்புனத்தே.

(இ-ள்.) பொன்னே - பொன்னையொப்பாய்!—காதரம் தீர்த்தருளும்-(பிறவி காரணமாகவரும்) பயத்தை நீக்கியருள் செய்யும்,—தயல் வளர் மேனியன் அம்பலத்தான் - உமாதேவிதங்குகின்ற திருமேனியை யுடையவனாகிய திருச்சிற்றம்பலத்தானது,—வரை தண் புனத்து - மலையின்கணுள்ள குளிர்ந்த புனத்தினிடத்து,—புயல் வளர் ஊசல் முன் ஆடி - மேகந்தங்கும் ஊசலை முன்னே யாடி,—பின்னே போய் - பின்னர்ப்போய்,—அயல் பொலியும் வளர் குன்றில் நின்று அருவி ஏற்றும் - அதற்கு அயலாகிய பிரகாசிக்கின்ற உயர்ந்த மலையின்கண் நின்று அருவியையேற்போம்,—திரு உருவின் கயல்வளர் வாள் கண்ணி - திருப்போல வடிவினையும் கயல்மீனைப்போலும் வாட் கண்ணையுமுடையாய்!—போதரு - நீ போதுவாயாக. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம், உவகையுமாம்; பயன்-குறியிடத்துப் போதருதல்.

தண்புனத்துப் போதரு என இயைட்பினு மமையும். உயர்ந்த வழைமரத்தில் தொடுத்தலால் புயல் வளருசலென்றாள்.()

### குறியிடத்துக் கொண்டு சேறல்.

அணிவளராடிடத் தாயவெள் ள.
மணிவளர்கொங்கையை மருங்ககன்றது.

(எ-து.) (ஆடிடம் படர்ந்த பாங்கி, தலைமகனுக்குத் தான் சொன்ன குறியிடத்துத் தலைமகளைக் கொண்டு சென்றுய்க்கும்போது, ஆயத்தாரைத் தம்மிடத்தில் நின்றும் நீக்கவேண்டுதலின் தினைக்காத்தல் முதலாகிய விளையாட்டுக்களைத் தான்கூறவே) அழகு வளரு மாடிடத்து (அவ்வவ் விளையாட்டுக்குரிய) ஆய வெள்ளமானது, மணியாரந் தங்கிய கொங்கையை யுடைய தலைமகளை (பின்னே வருவளெனக் கருதி) ஆங்கே விடுத்தகன்றது.

**தினைவளங்காத்துச்சிலம்பெதிர்கூஉய்ச்சிற்றின்முற்றிழைத்துச்**
**சுனைவளம்பாய்ந்துதுணைமலர்கொய்துதொழுதெழுவார்**
**வினைவளநீறெழநீறணியம்பலவன்றன்வெற்பிற்**
**புனைவளர்கொம்பரன்னாயன்னகாண்டும்புனமயிலே.**

(இ - ள்.) தொழுது எழுவார் வினை வளம் நீறெழ - தொழாநின்று துயிலெழுவாருடைய வினையினதுபெருக்கம் பொடியாக,— நீறு அணி அம்பலவன்தன் வெற்பில்-திருநீற்றை யணிந்த சிற்றம்பலவனது மலையிடத்து, — புனை வளர் கொம்பர் அன்னாய் - அலங்கரிக்கப்பட்ட வளர்கின்ற கொம்பை யொப்பாய்! — தினை வளம் காத்து - தினையாகிய வளத்தைக் காத்தலைச்செய்து, — சிலம்பு எதிர் கூய் - மலைக்கெதிர் அழைத்து, — சிற்றில் முற்றிழைத்து-சிறுவீட்டினை மிகவுஞ்செய்து,— சுனை வளம் பாய்ந்து - சுனைநீரில் மூழ்கி,—துணை மலர் கொய்து - ஒத்த பூக்களைப் பறித்து—அன்ன புனமயில் காண்டும் - அத்தன்மையவாகிய புனத்தின்கணுள்ளமயிலைக் காண்போம் (யாம்). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம், உவகையுமாம்; பயன்-ஆயம்பிரிதல்.

தினைவளம் என்றது - தினையினது மிகுதியெனினும் மலைக்கு வளமாதல் நோக்கி எனினும் அமையும். தொழுதெழுவாரென்றது - துயிலெழுங் காலத்தல்லது முன்னுணர் வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் என்பதாம். வினைவள நீறெழ நீறணியம்பலவன் என்றது—நீறணிந்தகோலம் நெஞ்சம் பிணிக்கு மெழிலுடைமையான் அக்கோலந் தொழுதெழுவாருள்ளத்து நீங்காது நிற்றலான் ஆண்டுள்ள வினை நீறுமென்னுங் கருத்தாம். புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாற்போலத் தொழுதெழுவார் வினைக்குத் தான் நீறணிந்தா னென்பாருமுளர். வெற்பின் என்புழி வெற்பைத் தினைகாத்தல் முதலிய தொழிற்கு இடமாக வுரைப்பினு மமையும். அன்னபுனமயிலென்றது—இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கண் பாங்கி தனது வாட்டத்தை வினவியபோது யானோர் இளமயிலாலுவதுகண்டேன், அதனை நீயுங் காணப் பெற்றிலையென்று வாடினேனென்றுரைப்பக் கேட்டாளாதலான் அதனைப்பற்றி அம்மயிலைக் காண்டுமென்றுளாயிற்று. (கக௮)

## இடத்துய்த்து நீங்கல்.

மடத்தகைமாதனை யிடத்தகத்துய்த்து
நீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

(எ - து.) மடப்பத்தையுடைய தலைமகளைக் குறியிடத்து நிறுத்தி நீங்குகின்ற பாங்கி, சொல்லியது.

நரல்வேயினநின தோட்குடைந்துக்கநன்முத்தஞ்சிந்திப்
பரல்வேயறையுறைக்கும்பஞ்சடிப்பரன்றில்லையன்னாய்
வரல்வேய்தருவனிங்கேநிலுங்கேசென்றுன்வார்குழற்கீர்ங்
குரல்வேயளிமுரல்கொங்கார்தடமலர்கொண்டுவந்தே.

(இ-ள்.) பரன் தில்லை அன்னாய் - பரனதுதில்லையை யொப்பாய்!—உங்கே சென்று-(யான்) அங்கேபோய்,—ஈரம்குரல் வேய் அளி முரல் கொங்கார் தடமலர் - குளிர்ச்சியையுடைய பூங்

கொத்தை மூடிய வண்டுகள் ஒலிக்கும் தாதுநிறைந்த பெரியபூக்களை,—கொண்டுவந்து உன்வார்குழற்கு வேய்தருவன் - பறித்துக்கொண்டுவந்து உன்னுடைய நீண்ட கூந்தலுக்குச் சூடுவேன்,—நரல் வேயினம் - (காற்றொன்றோடொன்று தேய்ந்து) ஒலிக்கின்ற மூங்கிலினங்கள்,— நின் தோட்கு உடைந்து உக்க நல் முத்தம் சிந்தி - உன்னுடையதோளுக்கு அஞ்சி உதிர்ந்த நல்லமுத்துகள் சிதறுதலால்,—பரல் வேய் அறை பஞ்சடி உறைக்கும் - பருக்கைமூடிய பாறை (உனது பஞ்சடியினிடத்து உறுத்தும்,—வரல்- (அதனால் என்னோடு ஆண்டு) வரற்பாலையல்லை,— இங்கே நில் - இவ்விடத்தில் நிற்பாயாக. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; உவகையுமாம்; பயன் - தலைமகளைக் குறியிடத்துய்த்து நீங்குதல்.

குரல்-பூங்கொத்து. தடமலர் என்பதற்கு தடத்து மலரொன்றுரைப்பாரு முளர். (கககூ)

**உவந்துரைத்தல்.**

களிமயிற் சாயலை பொருசிறைக் கண்ட
ஒளிமலர்த் தாரோ னுவந்துரைத் தது.

(எ-து.) களிப்பினையுடைய மயில்போலுஞ் சாயலையுடையா ளாகிய தலைமகளை (பாங்கி குறியிடத்து நிறுத்தி நீங்கியபின்) ஒரு சிறைப்புறத்திற் கண்ட ஒளியையுடைய மலர்மாலை யுடையானாகிய தலைமகன் மகிழ்ந் துரைத்தது.

படமாசுணப்பள்ளியிக்குவடாக்கியப்பங்கயக்க
ணெடுமாலெனவென்னைநீநினைந்தோ நெஞ்சத்தாமரையே
யிடமாவிருக்கலுற்றோதில்லைநின்றவனீரங்கயிலை
வடமார்முலைமடவாய்வந்துவைகிற்றிவ்வார்பொழிற்கே.

(இ-ள்.) வடம் ஆர் முலை மடவாய் - மணிவடம் பொருந்திய முலையையுடைய மாதே!—தில்லை நின்றவன் ஈரம் கயிலை - தில்

லைக்கண்ணின்றவனது குளிர்ந்த கைலைக்கண்,—வார் இ பொழி ற்கு வந்து வைகிற்று - நீண்ட இச்சோலையினிடத்து வந்து தங் கியது, — இ குவடு படம் மாசுணம் பள்ளி ஆக்கி - இந்த மலை யைப் படத்தையுடைய பாம்பாகிய சயனமாக்கி,—என்னை பங் கயம் கண் அ நெடுமாலென நீ நினைந்தோ - என்னை (அச்சய னத்திற்றங்கும்) தாமரைப் பூப்போலும் விழியையுடைய அந் நெடிய திருமாலென்று நீ நினைந்தோ? —நெஞ்சம் தாமரையே இடமா இருக்கலுற்றே - (நெடுமாலின் மார்பினன்றித் தாமரை யினு மிருத்தலான் யான் நீங்கினும்) என்மனமாகிய தாமரைப் பூவையே நினக்கிடமாக இருக்க நினைந்தோ? (கூறுவாயாக.) எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகளைக் கண்டு தன் காதன் மிகுதியாற் றோன்றிய பேருவகையை ஆற்றகில்லான் ஆற்றுதல்.

மாசுணப்பள்ளி - மாசுணத்தாணியன்ற பள்ளியெனினு மமை யும். என்னெஞ்சத் தாமரைக்கண் இருக்கலுற்றே என்றது இப்பொழிற்கண் வந்து நின்ற நிலை ஒருக்காலும் என்னெஞ்சை விட்டகலாதெனெ உவந்து கூறியதாம். வான்பொழி லெனப தாஉம் பாடம். (௪உ0)

### மருங்கணைதல்.

வாணுதலரிவை நாணுதல்கண்ட
கோதைவேலவ னாதரவுரைத்தது.

(எ-து.) (உவந்துரைப்பக் கேட்ட) ஒள்ளிய நுத லையுடைய தலைமகளது நாணுதலைக் கண்ட மாலையை யணிந்த வேலையுடையனாகிய தலைமகன், ஆதரவுகூறி (இறுமருங்குல் தாங்குவானாகிச் சென்று சாருவது).

தோத்தீன்மலர்ப்பொழிற்றில்லைத்தொல்லோனருளென்னமுன்
முத்தீன்குவளைமென்காந்தளின்மூடித்தன்னேரளப்பா [னி
னொத்தீர்ங்கொடியினொதுங்குகின்றீண்மருங்குன்னெருங்கப்
பித்தீர்பணைமுலைகாளென்னுக்கின்னும்பெருக்கின்றதே.

(இ-ள்.) தொத்து ஈன் மலர் பொழில் தில்லை தொல்லோன் கொத்துக்களைத்தருகின்ற பூஞ்சோலையையுடைய தில்லைநக தின்கணுள்ள பழையோனது,—அருள் என்ன முன்னி - அரு போல வந்தெதிர்ப்பட்டு,—முத்து ஈன் குவளை மெல் காந்தளி மூடி - (நீர்த்துளியாகிய) முத்தைச் சிந்துகின்ற (கண்ணாகி குவளைப்பூக்களை (கையாகிய) மெல்லிய காந்தட்பூவால் மூடி கொண்டு,—தன் ஏர் அளப்பாள் ஒத்து - தன்னழகை அளவி வாளையொத்து,—ஈரம் கொடியின் ஒதுங்குகின்றாள் - குளிர் பொருந்திய கொடியினிடத்து (நாணி) மறைகின்றவளுை ய, — மருங்குல் நெருங்க - இடையானது நெருங்குண்ண,- பணை முலைகாள் - பருத்த முலைகளே!— பித்தீர் - (நீர்) பித் டையீர், — இன்னும் பெருக்கின்றது என்னுக்கு - இன்னு பெருத்துக்கொண்டு வருகின்றது எதற்கு? (இது நன்றன்ற எ-று. மெய்ப்பாடு - உவகை ; பயன் - சார்தல்.

முலைகள் இடையைத் தமக்காதாரமென்று கருதாது அட கின்றமை நோக்கிப் பித்தீரென்றான். ஈன்கொடி - மலரீன் கொடி. (கஉ

**பாங்கியறிவுரைத்தல்.**

நெறிகுழற் பாங் கி
அறிவறி வித்த து.

(எ-து.) (மருங்கணைந்த தலைமகன் இவ்வொழுக் கம்) நெறித்தகுழலையுடைய பாங்கி யறிந்தவறிவென் று தலைமகளுக் கறிவித்தது.

அளிநீடளகத்தினட்டியதாதுமணியணியு
மொளிநீள்சுரிகுழற்சூழ்ந்தவொண்மாலையுந்தணணறவுண
களிநீயெனச்செய்தவன்கடற்றில்லையன்னாய்கலங்க
றெளிநீயனையபொன்னேபன்னுகோலந்திருநுதலே.

(இ-ள்.) நீதண் நறவு உண் களி என செய்தவன்-நீ குளிர்ந்த கள்ளையுண்ணும் களியை யுடையானென்று (பிறர்) சொல்லும் வண்ணம் (எனக்கின்பத்தைச்) செய்த இறைவன், — கடல் தில்லையன்னாய் - கடலையுடைய தில்லையை யொப்பாய்!—அளி நீடு அளகத்தின் அட்டியதாதும் - வண்டுகள் மிகவுந் தங்கு கின்ற கூந்தலினிடத்து அப்பியதாதும், — அணி அணியும் - அணிந்த ஆபரணங்களும்,—ஒளி நீள் சுரி குழல் சூழ்ந்த ஒள் மாலையும் - ஒளியையுடைய நீண்ட சுரிந்த கூந்தலினிடத்துச் சுற்றிய ஒள்ளிய பூமாலையும் (ஆகிய இவையெல்லாம்),—நீ அனைய பொன்னே பன்னு கோலம் - நின்னோடொத்த பாங்கியே ஆராய்ந்து (செய்யும்) கோலமே,—திரு நுதல் - அழகிய புருவத்தையுடையாய்,—கலங்கல் - (யான் பிறிதோர் கோலஞ் செய்தேனென்று) கலங்கவேண்டா.—தெளி-தெளிவாயாக. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன்-பாங்கியறிந்தமை தலைமகட் குணர்த்துதல்.

பொன்னே யென்பதில் ஏகாரம் பிரிநிலை. அணியணியும் என்பதூஉம் பாடம். (கஉஉ)

தண்மலர்க் கோதை யை
உண்மகிழ்ந் துரைத்த து.

(எ-து.) (பாங்கியறிவு உரைப்பக்கேட்டு இனி நமக்கொரு குறையில்லையென முகமலர்ந்துநின்ற) தண்ணிதாகிய மலர்மாலையணிந்த தலைமகளை (தலைமகன்) உள்ள மகிழ்ந்து கூறியது.

சேழ்நீர்மதிக்கண்ணிச்சிற்றம்பலவன்றிருக்கழலே
கெழுநீர்மையிற்சென்றுகிண்கிணிவாய்க்கொள்ளுங்கள்ளகத்த
கழுநீர்மலரிவள்யானதன்கண்மருவிப்பிரியாக்
கொழுநீர்நறப்பருகும்பெருநீர்மையளிகுலமே.

## தோழிவந்துகூடல்.

*நெறியுறுகுழலியை நின்றிடத்துய்த்துப்*
*பிறைநுதற்பாங்கி பெயர்ந்தவட்குரைத்தது.*

(எ-து.) பிறைபோலு நெற்றியையுடையபாங்கி, நெறிந்த கூந்தலையுடைய தலைமகளைக் குறியிடத் துய்த்து நீங்கிநின்று (தலைமகன் பிரிந்தபின்) மீண்டு சென்று அவளுக்குச் சொன்னது.

**பொ**ன்னனையான்றில்லைப்பொங்கரவம்புன்சடைமிடைந்த
மின்னனையானருண்மேவலர்போன்மெல்விரல்வருந்த
மென்னனையாய்மறியேபறியேல்வெறியார்மலர்க
ளின்னனயான்கொணர்ந்தேன்மணந்தாழ்குழற்கேய்வனவே. ௱௩

(இ-ள்.) ஆய் மறியே - ஆராயப்பெற்ற மானையொப்பாய் பொன் அனையான் - பொன்னை யொப்பான். — தில்லை பொ[ங்கு] அரவம் புல் சடை மிடைந்த மின் அனையான் - தில்லை யுறைவோனாகிய வெகுளாநின்ற பாம்பு புல்லிய சடையின் னெருங்கிய மின்னையொப்பான். — அருள் மேவலர்போல (அவனது) அருளைப் பொருந்தாதவரைப்போல,—மென் விர[ல்] வருந்த - மென்மையாகிய விரல்கள் வருந்த,—மென் அனை ப[றி]யேல் - மெல்லிய முகைகளைப் பறியாதொழிவாயாக,— மண[ம்] தாழ் குழற்கு ஏய்வன வெறி ஆர் மலர் - (நின்) மணந்தங்கிய கூந்தலுக்குப் பொருந்துவனவாகிய வாசனை நிறைந்த மல[ர்]கள், — இன்னன யான் கொணர்ந்தேன் - இத்தன்மையனவ[ற்]றை யான் கொண்டுவந்தேன். எ - று. மெய்ப்பாடு - பெருமி[த]ம் ; பயன் - தலைமகளை யாற்றுமை நீக்குதல்.

இவள் மலரைப்பறியாமல் மொட்டைப் பறிப்பாளே னெ[ன்]னின், இவள் தலைமகனைப்பிரிந்த பிரிவாற்றுமையாலும், தலை[]மகன் புணர்ச்சி நீக்கத்தின்கண் செய்த கோலத்தைப் பாங்கி கண்டனளென்னும் பெருநாணினானும், ஆற்றுளாய் மலரை[ப்]

பறிக்கின்றவள் மயங்கி மொட்டைப் பறித்தாளென வறிக. மொட்டுக்களைப் பறியாதொழி நின்குழற்கு நறுமலர் கொண்டு வந்தேன் என்பதனான் இவ்வொழுக்கம் யானு மறிவேனென உடம்பாடு கூறியவாறாயிற்று. என்னனையாய் கொணர்ந்தேன் என்பதூஉம் பாடம். மிடைந்த என்னும் பெயரெச்சம், மின்ன னையாளென்னும் நிலப்பெயர் கொண்டது. அரவஞ்சடைமிடை தலை மின்மே லேற்றி இல்பொரு ளுவமையாக வுரைப்பாரு முளர். இல்பொருளுவமை யெனினும், அபூதவுவமை யெனினு மொக்கும். (கஉரு)

## ஆடிடம்புகுதல்.

தனிவிளையாடிய தாழ்குழற் றோழி
பனிமதி நுதலியோ டாடிடம்படர்ந்தது.

(எ - து.) தனித்துவிளையாடிய தாழ்ந்த கூந்தலை யுடையபாங்கி (கொய்துவந்தமலரை) குளிர்ச்சிபொ ருந்திய மதிபோலு நெற்றியையுடைய தலைமகளுக் (கணிந்து) அவளோடு ஆடிடம் புகுந்தது.

அறுகானிறைமலரைம்பானிறையணிந்தேனணியார்
துறுகான்மலர்த்தொத்துத்தோகைதொல்லாயமெல்லப்புகுக
சிறுகான்மருங்குல்வருந்தாவகைமிகவென்சிரத்தி
னுறுகால்பிறர்க்கரியோன்புலியூரன்னவொண்ணுதலே.

(இ-ள்.) என் சிரத்தின் மிக உறு கால் பிறர்க்கு அரியோன்- என்தலையினிடத்து மிகவும் பொருந்தியதிருவடிகளை பிறர்க்கு (அளிக்க) அரியவனது, — புலியூரன்ன ஒள் நுதல் - புலியூரை யொத்த ஒள்ளிய நெற்றியையுடையாய்! — அறுகால் நிறை மலர் ஐம்பால் - வண்டுகள்நிறைந்த மலரையுடைய (உன்) கூந் தலினிடத்து, — அணி ஆர் துறு கான் மலர்தொத்து நிறை அணிந்தேன் - அழகுநிறைந்த நெருங்கிய வாசனையையுடைய பூங்கொத்துக்களை நிறையப் புனைந்தேன்,—தோகை - தோகை

யையொப்பாய்! — சிறுகால் மருங்குல் வருந்தாவகை - சிறி இடத்தையுடைய இடையானது வருந்தாதவண்ணம்,—தொ ஆயம் மெல்ல புகுக - பழையதாகிய மகளிர் கூட்டத்தி மெல்லச் சேர்வாயாக. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் பயன் - தலைமகளை யாற்றுமை நீக்குதல்.

அறுகாணிறை மலரை யணிந்தேனென்றும், மலர்க்கொத்து களையுடைய தோகாயென்றும், உரைப்பாருமுளர். நிறையவெ பது நிறையெனக் குறைந்து நின்றது. கால்என்னுஞ் சினைவினை பிறர்க்கரியோ னென்னும் தன்வினைக்கேலா வெழுத்துக்கெ ண்டது. (கஉகூ

### தனிகண்டுரைத்தல்.

வேயொத்ததோளியை யாயத்துய்த்துக்
குனிசிலையண்ணலைத் தனிகண்டுரைத்தது.

(எ - து.) மூங்கில் போன்ற தோளையுடைய தலை மகளை ஆயத்திற் செலுத்தி, வளைந்த வில்லையுடைய தலைமகனைத் தனிமையாகக்கண்டு கூறியது.

தழங்குமருவியெஞ்சீறூர்பெருமவிதுமதுவுங்
கிழங்குமருந்தியிருந்தெம்மொடின்றுகிளர்ந்துகுன்றர்
முழங்குங்குரவையிரவிற்கண்டேகுகமுத்தன்முத்தி
வழங்கும்பிரானெரியாடிதென்றில்லைமணிநகர்க்கே.

(இ - ள்.) பெரும - பெருமையை யுடையாய்!—தழங்கும் அருவி இது எம் சீறூர் - ஒலிக்கும் அருவியையுடைய இஃது எமது சிறிய ஊர், — மதுவும் கிழங்கும் அருந்தி - (இந்தன்கண் யாமருந்தும்) தேனையும் கிழங்கையும் (நீயும்) உண்டு,— இரு ந்து எம்மொடு இன்று - இன்று எம்மோடுதங்கி, — குன்றர் கிளர்ந்து முழங்கும் குரவை இரவில் கண்டு - குறவர் எழுந்து ஒலிக்கின்ற (இந்நிலத்து விளையாட்டாகிய) குரவையாடலை

இரவிலேபார்த்து,—முத்தன் - (இயல்பாகவே பாசங்களை) நீங்கினவன்,—முத்தி வழங்கும் பிரான் - மோக்ஷத்தை அன்பர்க்களிக்கு முதல்வன்,—எரி ஆடி - ஊழித்தீயின்கண் ஆடுவான்,—தென்தில்லை மணிநகர்க்கு ஏகுக - (அவனது) தெற்கின்கண் உள்ள தில்லையாகிய (நினது) அழகிய நகரத்திற்கு (நாளை) போவாயாக. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - குறிப்பினாற் பிறிவாற்றாமை கூறிவரைவு கடாதல். ஏற்பார் மாட்டொன்றுங் கருதாது கொடுத்தலின் வழங்குமென்றார். (கஉ௭)

### பருவங்கூறி வரவுவிலக்கல்.

மாந்தளிர்மேனியை வரைந்தெய் தா
தேந்தலில்வா றியங்கலென்றது.

(எ-து.) (உலகியல் கூறுவாள்போன்று குறிப்பால் வரைவுகடாய பாங்கி) மாந்தளிர்போலும் மேனியையுடைய தலைமகளை வரைந்தடையாது தலைமகனே இவ்வண்ண மொழுகவேண்டா மென்றது.

தள்ளிமணிசந்தமுந்தித்தறுகட்கரிமருப்புத்
தெள்ளிநறவந்திசைதிசைபாயுமலைச்சிலம்பா
வெள்ளிமலையன்னமால்விடையோன்புலியூர்விளங்கும்
வள்ளிமருங்குல்வருத்துவபோன்றவனமுலையே.

(இ-ள்.) மணி தள்ளி - மணிகளைத்தள்ளி,—சந்தம் உந்தி - சந்தனமரங்களை உந்திக்கொண்டு,—தறுகண் கரி மருப்பு தெள்ளி - பகைமையையுடைய யானையின் கொம்புகளைக் கொழித்து,—நறவம் திசைதிசை பாயும் - தேன் திசைதோறும் பாய்கின்ற,—மலைச்சிலம்பா - மலையையுடைய சிலம்பனே!—வெள்ளிமலை அன்ன மால்விடையோன் - (தனது) வெள்ளிமலையாகிய கைலையையொக்கும் பெரிய இடபத்தை யுடையவனது,—புலியூர் விளங்கும் வள்ளி மருங்குல் - புலியூரைப்போல் பிரகாசியாநின்ற குறத்தியினது இடையினை, — வன முலை வருத்துவ

போன்ற - அழகிய முலைகள் (வளராநின்றபடியால்) வருத்து வனபோன்றன. (இனிவரைந் தெய்துவாயாக.) எ - று. மெய்ப் பாடு - அச்சம்; பயன்வரைவு கடாதல்.

சிலம்பனென்பது அதனை யுடையானென்னும் பொருளுணர் காது ஈண்டுப்பெயராய் நின்றது. புலியூர் புரையுமென்பதூஉம் பாடம். யாவருமறியா இம்மலைக்கண் வைத்ததேன் முதிர்ந்து சிந்த அருவிபோன் றெல்லாருங் காணத்திசை திசைபரந் தாற்போல மறைந்த காமம் இவள் கதிர்ப்புவேறுபாட்டால் புறத்தார்க்குத்தெரிய வெளிப்படா நின்றதெனஉள்ளுறை யுவமையாயிற்று. (கஉஅ

**வரைவுடம்படாது மிகுத்துக்கூறல்.**

வரைவுகடாய வாணுதற் றோழிக் கு
விரைமலர்த்தாரோன் மிகுத்துரைத்தது.

(எ-து.) (பருவங்கூறி) வரைவுகடாய ஒளியமைந்த நெற்றியையுடைய பாங்கிக்கு மணங்கமழும் மலர் மாலையணிந்த தலைமகன் வரைவுடம்படாது தலை மகளை மிகுத்துக் கூறியது.

மாடஞ்செய்பொன்னகருந்நிகரில்லையிம்மாதர்க்கென்னப்
பீடஞ்செய்தாமரையோன்பெற்றபிள்ளையையுள்ளலைக்
கீடஞ்செய்தென்பிறப்புக்கெடத்தில்லைநின்றோன்கயிலைக்
கூடஞ்செய்சாரற்கொடிச்சியென்றோநின்றுகூறுவதே.

(இ-ள்.) மாடம் செய் பொன்னகரும் - மாடமாகச் செய்யப் பட்ட அமராவதிக்கண்ணும்,— இ மாதர்க்கு நிகரில்லை என்ன இம்மாதர்க்கு ஒப்பில்லையென்று சொல்லும்படி,—பீடம் செய் தாமரையோன் பெற்ற பிள்ளையை - தாமரைப்பூவி லிருக்கின்ற நான்முகன் ஈன்ற குழவியாகிய (இவளை), — உள்ளலை கீடம் செய்து - தன்னை நினையாதாரைப் புழுக்களாகச் செய்து,—என் பிறப்பு கெட தில்லை நின்றோன் - (நான் தன்னை நினைவேனாக

செய்து அதனால்) என் பிறவி அழியத் தில்லைக்கண்ணின்றவனது, — கயிலை கூடம்செய் சாரல் - கைலைக்கண் கூடமாகச் செய்யப்பட்ட சாரலிடத்தி லிருக்கின்ற, — கொடிச்சியென்றே நின்று கூறுவது - குறத்தியென்றே (நீ) நின்று சொல்லுவது (இவ்வாறு சொல்லற்பாலையல்லை). எ - று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - தலைமகனது விருப்புணர்த்துதல்.

கூடமென்றது மன்றாகச் செய்யப்பட்ட தேவகோட்டத்தை, கூடஞ்செய்சார லென்பதற்கு மரத்திரளாற் கூடஞ்செய்தாற் போலுஞ் சாரலெனினும், கூடஞ்செய்தாற்போலு முழைகளை யுடைய சாரலெனினு மமையும். (கஉ௬

## உண்மைகூறிவரைவுகடாதல்.

கல்வரைநாட னில்லதுரைப்
ஆங்கவளுண்மை பாங்கிபகர்ந்தது.

( எ - து. ) சிலம்பனாகிய தலைமகன் வரைவுடம்படாது மிகுத்துக்கூறப் பாங்கி, தலைமகளது உண்மையைக்கூறி வரைவு கடாயது.

வேய்தந்தவெண்முத்தஞ்சிந்துபைங்கார்வரைமீன்பரப்பிச்
சேய்தந்தவானகமானுஞ்சிலம்பதன்சேவடிக்கே
யாய்தந்தவன்புதந்தாட்கொண்டவம்பலவன்மலையிற்
றாய்தந்தைகானவனேனலெங்காவலித்தாழ்வரையே.

(இ-ள்.) வேய்தந்த வெள்முத்தம் சிந்து பை கார் வரை-மூங்கில்தந்த வெண்மையாகிய முத்துகள் சிந்திய (சோலைகளால்) பசிய கருமையாகிய தாழ்வரை,—மீன் பரப்பி சேய் தந்த வானகம் மானும் - நக்ஷத்திரங்களைப் பரப்பிச் சேய்மையைப்புலப்படுத்திய ஆகாயத்தையொக்கும், — சிலம்ப - மலையையுடையாய்!—தாய்தந்தை - (எமக்கு) தாயுந்தந்தையும், — தன் சே அடிக்கு ஆய்தந்த அன்பு தந்து - தனது சிவந்ததிருவடிக்கு ஆராயப்பட்ட அன்பைக் கொடுத்து, — ஆட்கொண்ட அம்பலவன்

மலையில் - (என்னை) அடிமையாகக்கொண்ட சிற்றம்பலவ
மலையிலிருக்கின்ற,—கானவர் - குறவரே,—இ தாழ்வரை ஏ
எம்காவல்-இந்தத் தாழ்வரையிலுண்டாகிய தினை எமதுகாவ
யிருக்கும் ; (அதனால் நீவரைவு வேண்டாமையின் புணர்ந்து க
வேண்டுவதில்லை). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயல்
வரைவு கடாதல். வினைமுதலல்லாத கருவிமுதலாயின அவ்வி
முதல் வினைக்குச் செய்விப்பனவா மாதலின் பரப்பி எனச் செ
ய்விப்பதாகக் கூறினார். (கரு

## வருத்தங்கூறிவரைவுகடாதல்-

கனங்குழைமுகத்தவண்மனங்குழைவுணர்த்தி
நிரைவளைத்தோளிவரைவுகடாயது.

(எ-து.) கனமாகிய குழையை யணிந்த முகத்தை யுடைய தலைமகளது மனத்தின் குழைவினை (தலைமகனுக்கு) அறிவித்து நிரைவளையணிந்த கையையுடைய பாங்கி தன் வருத்தங்கூறி வரைவு கடாயது.

மன்னுந்திருவருந்தும்வரையாவிடினீர்வரைவென்
றுன்னுமதற்குத்தளர்ந்தொளிவாடுதிரும்பரொலாம்
பன்னும்புகழ்ப்பரமன்பரஞ்சோதிசிற்றம்பலத்தான்
பொன்னங்கழல்வழுத்தார்புலனென்னப்புலம்புவனே.

(இ - ள்.) வரையாவிடின் மன்னும் திரு வருந்தும் - விவாகஞ் செய்யாவிட்டால் மிகவும் திருமகளையொப்பாள்வருந்துவாள்,— நீர் வரைவென்று உன்னுமதற்கு தளர்ந்து ஒளி வாடுதிர் - நீயிர் கலியாணமென்று நினைக்குமதற்கு மனந்தளர்ந்து ஒளிவாடாநின்றீர் (இவ்வாறு நும்முள்ளம் மாறுபட நிகழ்தலின்),—உம்பரொலாம் பன்னும் புகழ் பரமன் - தேவரெல்லாம் ஆராய்கின்ற புகழையுடைய பரமன்,—பரஞ்சோதி - (எல்லாப்பொருட்கும்) அப்பாலாகியவொளி, — சிற்றம்பலத்தான் - (அன்பர்க்கு இப்பாலாய்) சிற்றம்பலத்தின்கண் உள்ளவன்,—பொன்னங்கழல்-

(அவனது) பொன்னையொக்குந்திருவடியை, — வழுத்தார் புல னென்ன - துதியாதவருடைய அறிவுபோல,—புலம்புவன்- (யா ன்தனிமையுற்று) வருந்துவேன். எ-று. மெய்ப்பாடு - அச்சம் ; பயன் - வரைவு கடாதல்.

மன்னுந் திருவென்பதற்கு நிலைபெறுந் திருவென் றுரைப் பாருமுளர். மன்னுமென்பது ஓரிடைச்சொல். புலனென்னவெ ன்பதற்குச் சுவைமுதலாகிய தம்பொருள் பெறாது வழுத்தாதா ரைம்பொறியும் புலம்புமாறுபோல வெனினுமமையும். இருவ ருள்ள நெகிழ்ச்சியுங் கூறுவாள்போன்று தலைமகள் தாழ்வுரை கூறி வரைவு கடாயது. (கூ.ச)

## தாயச்சங்கூறிவரைவுகடாதல்.

மடத்தகைமாதர்க் கடுப்பனவறியா
வேற்கட்பாங்கி யேற்கவுரைத்தது.

(எ - து.) (எம்முடையஅன்னை) மடப்பம்பொருந் திய தகைமையையுடைய தலைமகளது பருவங்கண்டு (மகட்பேசுவார்க்கு இனி கொடுக்கவுங் கூடுமென) வேல்போலுங் கண்ணையுடைய பாங்கி, அறிந்து தலை மகனுக்கு முற்பட வரைவாயென வுரைத்தது.

பனித்துண்டஞ்சூடும்படர்சடையம்பலவன்னுலகந்
தனித்துண்டவன்றொழுந்தாளோன்கயிலைப்பயில்சிலம்பா
கனித்தொண்டைவாய்ச்சிகதிர்முலைப்பாரிப்புக்கண்டழிவுற்
றினிக்கண்டிலம்பற்றுச்சிற்றிடைக்கென்றஞ்சுமெம்மனையே.

(இ-ள்.) பனி துண்டம் சூடும் படர் சடை அம்பலவன் - பனி யையுடைய துண்டமாகியபிறையைச்(சூடும்) பரவிய சடையை யுடைய சிற்றம்பலவன்.—உலகம் தனித்து உண்டவன் தொழும் தாளோன் - உலகத்தைத் தனித்துநின்று உண்டவனாகியதிரு மால் வணங்கும் திருவடியை யுடையவன்.—கயிலை பயிலும் சி லம்பா - (அவனது) கைலாயமலையினிடத்து வாசஞ்செய்கின்ற

சிலம்பனே! — கனி தொண்டை வாய்ச்சி கதிர் முலை பாரிப்பு கண்டு - தொண்டைக் கனிபோலும் வாயை யுடையாளுடைய பிரகாசிக்கின்ற முலைகளது பாரித்தலைக்கண்டு, — அழிவுற்று - (நெஞ்சம்) அழிந்து,—எம் அன்னை-எம்முடைய அன்னை,—சிற்றிடைக்கு இனி பற்று கண்டிலம் என்று அஞ்சும் - இவள் சிறிய இடைக்கு இனி ஒருபற்றுக்கோடுங் கண்டிலேம் என்றஞ்சுகின்றனள். (இனி அடுப்பனவறியேன்). எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - செறிப்பறி வுறுத்து வரைவுகடாதல்.

துண்டம் ஒருபொருளினது கூறு. பாரிப்பு - அடியிடுதலெனினு மமையும். இளமைப்பருவம் புகுந்தமையான் மகட்கூறுவார்க்கு அன்னைமறுக்காது கொடுக்கும், ஆகலான் நீமுற்பட்டு வரைவாயாகவெனத் தோழியேற்கக் கூறியபடியாம். (கரு௨)

### இற்செறிவறிவித்துவரைவுகடாதல்.

விற்செறி நுதலி யை
இற்செறி வுரைத்தது.

(எ-து.) (தாயச்சங்கூறி வரைவுகடாயபாங்கி) விற்போலு நெற்றியையுடைய தலைமகளைப் புறம்போக வேண்டாவெனத் தாய் கூறினமையால் இனி இல்லில்லின்க ணிருக்கச்செய்வாள் போலுமெனத் (தலைமகளுக்கு) அறிவித்து வரைவு கடாயது.

ஈவிளையாடநறவிளைவோர்ந்தெமர்மால்பியற்றும்
வேய்விளையாடும்வெற்பாவுற்றுநோக்கியெம்மெல்லியலைப்
போய்விளையாடலென்றாளன்னையம்பலத்தான்புரத்திற்
றீவிளையாடநின்றேவிளையாடி திருமலைக்கே.

(இ-ள்.) ஈ விளையாட நறவு விளைவு ஓர்ந்து - தேனீக்கள்பறந்து விளையாட (அவ்விளையாட்டான்) தேனினது விளைவை யறிந்து,—எமர் மால்பு இயற்றும் வேய் விளையாடும் - எம்முடைய

வர் கண்ணேணியைச் செய்கின்ற மூங்கில்கள் அசைந்தா டும்,—வெற்பா - மலையையுடையாய்!—உற்று நோக்கி - குறித் துப்பார்த்து, — எம் மெல்லியலை - எம்முடைய மிருதுவாகிய இயல்பையுடையாளை, — அன்னை - தாயானவள், — அம்பலத் தான் - அம்பலத்தினிடத்துள்ளான், — புரத்தில் தீ விளையாட நின்று - முப்புரத்தினிடத்தில் நெருப்பை விளையாடும்படி நின் று,—ஏ விளையாடி - அம்புத்தொழிலால் விளையாடுவான்,—திரு மலைக்கு-(அவனது)திருமலைக்கு,—போய் விளையாடல் என்றுள்- (புறம்) போய் விளையாடவேண்டாமென்று சொன்னுள். எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செ றிப்பறிவுறுத்து வரைவு கடாதல்.

போய்விளை யாடுகென்று ளென்பது பாடமாயின், உற்று நோக்கி, இன்றுபோய் விளையாடுக வென்றுள். அக்குறிப்பால் நாளை இற்செறிப்பாள் போலுமென வுரைக்க. ஈவிளையாட்டாற் றேன்விளைவை யோர்ந்து எமர்மால் பியற்று மாறுபோல, கதிர்ப் பு வேறுபாட்டால் இவளுள்ளத்துக்கரந்த காம முணர்ந்து மேற் செய்வன செய்யக் கருதாநின்றுளென உள்ளுறை காண்க. எமர்மால்பியற்றும் வெற்பா என்றதனுல் தாம் அந்நிலத்து மக்க ளாதலும் அவன் தலைவனாதலுங் கூறினுளாம். (கருரு)

## தமர்நினைவுரைத்து வரைவுகடாதல்.

விற்செறி நுதலியை யிற்செறி விப்பரொன்
ருளிவேலவற்கு வெளியே யுரைத்தது.

(எ - து.) (இற்செறிவித்து வரைவுகடாயபாங்கி) விற்போலு நெற்றியையுடைய தலைமகளை (தமர்) இற்செறி விப்பரொன்று ஒளிவேலையுடைய தலைமகனு க்குரைத்து அயலவரும்மகட் பேசாநின்றுரொனத்தம் மவர் நினைவை வெளிப்படக் கூறி வரைவு கடாயது.

சுற்றுஞ்சடைக்கற்றைச்சிற்றம்பலவற்றொழாதுதொல்சீர்
கற்றுமறியலரிற்சிலம்பாவிடைகைவருகண்
டெற்றுந்திரையின்னமிர்தையினித்தமரிற்செறிப்பார்
மற்றுஞ்சிலபலசீறூர்பகர்பெருவார்த்தைகளே.

(இ-ள்.) சிலம்பா - வெற்பனே!—சுற்றும் சடை கற்றை சிற்றம்பலவன் தொழாது - சுற்றப்பட்ட சடைத்திரளையுடைய சிற்றம்பலவனை (முற்பிறவிகளில்) வணங்காமையால், — கற்றும் தொல் சீர் அறியலரின் - (நூல்களைப்) படித்தும் (அவனது) பழமையாகிய புகழை அறியாதாரைப்போல,—இடை கைவரு கண்டு - மருங்குலானது (முலையைத் தாங்கலாற்றாது) வருந்துதலைக்கண்டு,—எற்றும் திரை இன் அமிர்தை - அடிக்கின்ற திரையையுடைய கடலிற் பிறந்த இனிய அமிர்தத்தை யொப்பாளை,—இனி தமர் இல் செறிப்பார் - இப்பொழுது சுற்றத்தார் இல்லின்கண் தங்கியிருக்கச் செய்வார், — மற்றும் சீறூர் பகர் பெருவார்த்தைகள் சிலபல - இதுவுமன்றி இச்சிறியவூரார் சொல்லும் பெரியமொழிகள் சிலபல வுள்ளன. எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செறிப்பறிவுறுத்து வரைவு கடாதல்.

சீறூர்ப்பகரென்பதூஉம் பாடம். எற்றுந்திரையென்பது சினையாகிய தன்பொருட்கேற்ற வடையடுத்து நின்றதோராகுபெயர். இற்செறிப்பாரென்பது ஆரீற்றுமுற்றுச்சொல். சிலபலவென்பது பத்தெட்டுள வென்பதுபோலத் துணிவின்மைக்கண் வந்தது. (கருச)

### எதிர்கோள்கூறி வரைவுகடாதல்.

ஏந்திழைத்தோழி யேந்தலைமுன்னிக்
கடியாமாறு நொடிகென்றது.

(எ-து.) ஏந்துகின்ற ஆபரணங்களையுடைய பாங்கி, தலைமகனை முற்பட வரைவுடன் வருவாயாக வெனச் சொல்லியது.

வழியும துவன்னையென்னின்மகிழும்வந்தெந்தையுநின்
மொழியின்வழிநிற்குஞ்சுற்றமுன்னேவயமம்பலத்துக்
குழியும்பரேத்துமெங்கூத்தன்குற்றாலமுற்றும்மறியக்
கெழியும்மவேபணைத்தோள்பலவென்னேஞெளக்கின்றதே.

(இ-ள்.) வழியும் அது - (இவளை நீ யெய்துதற்கு) முறைமையும் வரைவுவேண்டுதலே,—அன்னை என்னின் மகிழும் - (இவள் நலத்துக்குத் தக்க கணவனை வேண்டுவளாகலின் நீ வரைவுவேண்டிடத்து) தாயாரனவள் என்னைப்போல மகிழ்வாள்,—வந்து எந்தையும் நின்மொழியின்வழி நிற்கும் - (தகுதிநோக்கி) வந்து என்பிதாவும் உன்னுடைய சொல்லின்வழியே நிற்பான்,—சுற்றம் முன்னே வயம் - (இவளோடு நின்னிடை நிகழ்ந்தது குறிப்பானறிந்த) சுற்றத்தாரும் (நீ வரைவுவேண்டுதன்) முன் உனக்கு வசமாயிருப்பர்,—பல கிளக்கின்றது என் - பல சொல்லுகின்றதென்,—குழி உம்பர் ஏத்தும் அம்பலத்து எம் கூத்தன் - கூடித் தேவர்களாற் றுதிக்கப்படும் அம்பலத்தின்கணுளனாகிய எம்முடைய கூத்தனது,—குற்றாலம் முற்றும் அறிய கெழிய - குற்றாலமுழுதும் அறியப் பொருந்திய,—உம்மவே பணைத் தோள்-உம்முடையனவே பருத்ததோள்கள். (ஐயுறவேண்டா.) எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த பெருமிதம்; பயன் - செறிப்பறிவுறுத்து வரைவு கடாதல்.

குற்றால முற்றுமறியக் கெழியென்பதற்கு மறைந்தொழுகாது எல்லாரு மறிய வரைவொடு வருவாயாக வென்றுரைப்பாருமுளர். கெழீஇய என்பது கெழியெனக்குறைந்தது.

கஉஎ - முதல் கஙரு-வரையில் செறிப் பறிவுறுத்து வரைவு கடாயின வென்பது. இவையெல்லாம் தோழியிற் கூட்டமும் தோழியிற் கூட்டத்தின் விகற்பமுமென வறிக. எந்தையுமென்பது இறந்தது தழீஇய எச்சவும்மை. வழியுமென்பது உபாயமாதலே யன்றியென்றறிக. முன்னே வயமென வேறுபடுத்துக்

கூறலால் சுறறமுமென வும்மைகொடாது கூறினாள். நலமுங் குலமு முதலியவற்றால் நேராராயினும் வடுவையஞ்சி நோவனோன் பது பயப்பக் குற்றலமுற்று மறியக் கெழீஇய என்றாள். கெழீஇய ∘ என்றது குறைந்து நின்றது. நின்மொழியென்று உம்மவேயென்றது * 'என்னீரறியாதீர்போல விவைகூற, னின்னீரவல்ல நெடுந்தகாய்' என்பதுபோல ஈண்டும் பன்மையுமொருமையும் மயங்கிநின்றன. (கரு௫)

## ஏறுகோள்கூறி வரைவுகடாதல்.

என்னையர் து ணிவி
வின்ன தென்ற து.

(எ - து.) (எதிர்கோள்கூறி வரைவுகடாயபாங்கி) என்னையன்மாரது துணிவு (விடையின் மருப்பைத் திருத்தி விடுதலெனக்) கூறி வரைவு கடாயது.

படையார்கருங்கண்ணிவண்ணப்பயோதரப்பாரமுநுண்
ணிடையார்மெலிவுங்கண்டண்டர்களீர்முல்லைவேலியெம்மூர்
விடையார்மருப்புத்திருத்திவிட்டார்வியன்றென்புலியூ
ருடையார்கடவிவருவதுபோலுமுருவினதே.

(இ-ள்.) படை ஆர் கரு கண்ணி - படைக்கலத்தை யொத்த கரிய கண்ணை யுடையாளுடைய,—வண்ணம் பயோதரம் பாரமும் - நிறம்பொருந்திய முலைகளின் பாரத்தையும், — நுண் இடையார் மெலிவும் கண்டு - நுட்பமாகிய இடையாரது மெலிவையும் பார்த்து,—அண்டர்கள் - (என்னையராகிய) இடையர்கள்,—ஈரம் முல்லை வேலி எம்மூர் - குளிர்ச்சி பொருந்திய முல்லையாகிய வேலியையுடைய எம்மூரினிடத்து,—விடை ஆர் மருப்பு திருத்தி விட்டார் - எருதினது நிரம்பிய கொம்பைத் திருந்தச்செய்து விட்டார்கள்,—வியன் தென் புலியூருடையார்

* கலித்தொகை. செய்யுள்-கூ. வரி-எ-அ.

கடவி வருவதுபோலும் உருவினது-(அவ்விடை) அகன்ற தென்புலியூரை யுடையவர் செலுத்திவரும் இடபத்தை யொக்கும் வடிவத்தை யுடையது (இனி என் நிகழும்). எ - று. மெய்ப்பாடு-அச்சத்தைச்சார்ந்த பெருமிதம் ; பயன்-ஏறுகோளுணர்த்தி வரைவு கடாதல்.

இயல்வதுமேற் கொள்ளாமையின் இடையாரென விழித்துக் கூறினாள். முல்லையையுடைய வேலியெனினு மமையும். விடையார் மருப்புத் திருத்திவிட்டார் நினக்குற்றது செய்யென்பதனைக் கேட்டுத் தலைமகனுள்ளம் வாடினான். அஃதெற்றிற்கெனின் ஏறுதழுவிக் கோடல் தங்குலத்திற்கு மரபாகலானும், தமக்குப் பொதுவர் பொதுவியரென்று பெயராகலானும், அவ்வேற்றைத் தன்னின் முற்பட்டானொருவன் தழுவவுந் தகுமென் றுள்ளம் வாடினான். அதனைப் பாங்கிகண்டு அவ்வேறு புலியூருடையார் கடவிவருவதுபோலு முருவினதென்றாள். எனவே அதன்வெம்மை சொன்னவாறன்று, இவ்வொழுக்கம் புலியூருடையார் அருளான்வந்த தாகலின் அவ்வேறு நினக்கே வயப்படுவதன்றி மற்றொருவரானு மணுகற் கரிது ஆகலான் நீ கடிதுவிரைந்துசெய், அஞ்சவேண்டா வென்றாளாயிற்று. இது முல்லைத்திணை. முல்லைத் திணைக்கு மரபாவது ஓரிடத்தொரு பெண்பிறந்தால் அப்பெண்ணைப் பெற்றவர் தந்தொழுவில் அன்றுபிறந்த சேவின்கன்றுகளையெல்லாம் தன்னாட்டியாக விட்டுவளர்த்து அவற்றினொன்றைத் தழுவினா னொருவனுக்கு அப்பெண்ணைக் கொடுத்தலென்பதாம். (கங௬)

அயலுரையுரைத்துவரைவுகடாதல்.

கயல்புரை கண்ணியை
அயலுரை யுரைத்தது.

(எ - து.) (ஏறுகோள்கூறி வரைவுகடாயபாங்கி) கயல்போலுங் கண்ணையுடைய தலைமகளை வேண்டி

அயலவர் மகட்பேசாநின்று ரென்று அவரொருப்
பட்ட வுரை கூறி வரைவு கடாயது.

உருப்பனையன்னகைக்குன்றொன் றுரித்துரவூரெரித்த
நெருப்பனையம்பலத்தாதியையும்பர்சென்றேத்திநிற்குந்
திருப்பனையூரனையாளைப்பொன்னாளைப்புனைதல்செப்பிப்
பொருப்பனைமுன்னின்றென்னோவினையேன்யான்புகல்வதுவே.

(இ-ள்.) பனை உரு அன்ன கை குன்றொன்று உரித்து - பனை யின் வடிவையொக்கும் கையையுடைய மலையையொத்த யானையொன்றை யுரித்து,—உரம் ஊர் எரித்த நெருப்பனை-வலிமை யுடைய முப்புரங்களை எரித்தழித்த நெருப்பையுடையவனை,— அம்பலத்து ஆதியை - சிற்றம்பலத்தினிடத் துள்ள முதல்வனை,—உம்பர்சென்று ஏத்தி நிற்கும் திருப்பனையூர் அனையாளை - தேவர்கள் சென்று வாழ்த்தி நிற்பதற்கு இடமாகிய திருப்பனை யூரையொப்பாளை,—நாளை பொன் புனைதல் செப்பி - (அயலார்) நாளை பொன்னுபரணங்களை யணிதலைச்சொல்லி,—வினையேன் யான் முன் நின்று பொருப்பனை புகல்வது என்னோ - தீவினை யேனாகிய நான் முன்னர் நின்று சிலம்பனைச் சொல்லுவது யாது. எ-று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம்; பயன் - வரைவு கடாதல்.

அயனுரை - தலைமகட்கியாதும் இயைபில்லாதவுரை. அயலா ரொருப்பட்டவுரை யெனினு மமையும். பொருப்பனென்பது தலைமகன்முன்னிலையாகக் கூறினு ளெனினு மமையும். எரித்த நெருப்பனென்ற சொற்களி னாற்றலான், எரித்தது நெருப்பா னென்றது போதரும். புகல்வ தென்றது வரைந்து எய்துவா யாக என்று பின்னும் சொல்லப்படும் காரியமாம். இது சிறைப் புறம். (கருஎ)

**தினைமுதிர்வுரைத்துவரைவுகடாதல்.**

*ஏனல்விளையாட் டினியில்லையெ ன*
*மானற்றோழி மடந்தைக்குரைத்த து.*

(எ - து.) தினைப்புனத்தினில் விளையாட லினி யில்லையாமென (அயலுரையுரைத்த) மான்போலும் நற்பாங்கி, தலைமகட்குச் (சிறைப்புறமாகக் கூறுவாள் போன்று) தினைமுதிர்வுரைத்து வரைவு கடாயது.

மாதிடங்கொண்டம்பலத்துநின்றோன்வடவான்கயிலைப்
போதிடங்கொண்டபொன்வேங்கைதினைப்புனங்கொய்கவென்
றாதிடங்கொண்டுபொன்வீசித்தன்கள்வாய்சொரியநின்று [மு
சோதிடங்கொண்டிதெம்மைக்கெடுவித்ததுதூமொழியே.

(இ - ள்.) தூமொழியே - தூயமொழியை யுடையாய்! — மாது இடங்கொண்டு அம்பலத்து நின்றோன்-மாதேவியை இடப்பக்கத்துக்கொண்டு அம்பலத்தின்கணின்றவனது,—வட வான் கயிலை போதிடங்கொண்ட - வடக்கின்கணுள்ள பெரிய கைலைமலைக்கணுளதாகிய பொருப்பிடங்கொண்ட, — பொன் வேங்கை - பொன்போலு மலரையுடைய வேங்கைமரங்கள்,—தினைப்புனம் கொய்கவென்று-தினைப்புனத்தைக் கொய்கவென்று,— தாது இடங்கொண்டு பொன் வீசி - தாதுகளைத் தன்னிடத்தே கொண்டு பொன்போலுமலரை (எல்லாருக்கும்) கொடுத்து,— தன்கள் வாய்சொரிய நின்று - தனதுதேனைப் பூத்தவிடஞ் சொரிய நின்று,— சோதிடம் கொண்டு - சோதிடஞ்சொல்லுதலைப் பொருந்தி,—இது எமைக் கெடுவித்தது - இஃதெம்மைக் கெடுத்தது (இனியென்செய்தும்). எ - று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - செறிப்பறி வுறுத்தல்.

பொன்னைக் கொடுத்துப் பிறர்க்கடிமையாதலைப் பொருந்தித் தானிழிந்த சாதியாதலாற் றனக்குரியகள்ளை வாய்சொரிய நின்றெனச் சிலேடைவகையா னிழித்துக் கூறினளாகவ மமைக்க.(१

## பகல்வரல்விலக்கி வரைவுகடாதல்.

அகல்வரை நாடனைப்
பகல்வர லென்ற து.

(எ-து.) (தினைமுதிர்வுரைத்தபாங்கி) அகன்றமலை நாடனாகிய தலைமகனை (இனி) பகல்வரவேண்டாவெனப் பகல்வரல் விலக்கி வரைவு கடாயது.

வடிவார்வயற்றில்லையோன்மலயத்துநின்றும்வருதேன்
கடிவார்களிவண்டுநின்றலர்தூற்றப்பெருங்கணியார்
நொடிவார்நமக்கினிநோதகயானுமக்கென்னுரைக்கேன்
றடிவார்தினையெமர்காவேம்பெருமவித்தண்புனமே.

(இ - ள்.) வடிவு ஆர் வயல் தில்லையோன் - அழகுநிறைந்த வயல்சூழ்ந்த தில்லையையுடையவனது, — மலயத்து நின்றும் வருதேன் - பொதியிலினிடத்தி லிருந்தும் வராநின்ற தேன்களும்,—கடி வார் களி வண்டு-வாசனையைத் தேருகின்ற நெடிய களிவண்டுகளும்,—நின்று அலர் தூற்ற - இருந்து அலர்களைக் குடைந்து தூற்ற,—பெரு கணியார் நமக்கு இனி நோதக நொடிவார் - (வேங்கையாகிய) பெரியகணியார் எமக்கு இப்பொழுது நோவுபொருந்த (பருவம்) சொல்லுவாரா யிருந்தார், — யான் நுமக்கு என் உரைக்கேன் - நான் உமக்கு என்னசொல்லுவேன்,—தினை எமர் தடிவார் - (கணியார் சொல்லுதலால்) தினையை எம்முடையவர் அறுப்பார்,— பெரும இ தண் புனம் காவேம் - (அதனால்) பெருமானே! இந்தக் குளிர்ச்சி பொருந்திய புனத்தை (யாம்) காக்கமாட்டேம் (நீ பகல்வரவேண்டா). எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - பகற்குறிவிலக்கல்.

வடிவார் தில்லையென்றியைப்பினு மமையும். மலயத்துவாழ்வார் பிறர்க்கு வருத்தஞ்செய்யாராகலின் மலயத்து நின்றுமென்று உம்மை கொடுத்தார். மலயத்து நின்றும் வருந்தே

னென் றுரைப்பாருமுளர். கடி புதுமையுமாம். வண்டொழுங் கினது நெடுமைபற்றிவார்களிவண்டென்றாள். தம்மொடு பயின் முறைக்கண்ணேட்ட மின்றி அலர்தூற்றி வருத்துவாரைப்போல் நாம் கூடுமிடத்திருந்த வேங்கை மலர்தூற்றி வருத்தா நின்ற தென்று முரைக்க. (கருசு)

### தினையொடுவெறுத்து வரைவுகடாதல்.

தண்புனத்தோடு தளர்வுற்றுப்
பண்புனைமொழிப் பாங்கிபகர்ந்தது.

(எ - து.) (பகல்வரல்விலக்கிய) பண்ணையொத்த மொழியையுடைய பாங்கி, தண்புனத்தால் தளர்வடைந்து சிறைப்புறமாகத் தினையொடு வெறுத்து வரைவு கடாயது.

தினைவித்துத்தன்னையென்னெஞ்சத்திருந்தம்பலத்துநின்று
புனைவித்தவீசன்பொதியின்மலைப்பொருப்பன்விருப்பிற்
றினைவித்திக்காத்துச்சிறந்துநின்றேமுக்குச்சென்றுசென்று
வினைவித்திக்காத்துவிளைவுண்டதாகிவிளைந்ததுவே.

(இ-ள்.) தன்னை நினைவித்து - (தானே வந்திருந்து திருத்தல் வேண்டுதலின்) தன்னை (யான்) நினையும் வண்ணஞ் செய்து,— என் நெஞ்சத்து இருந்து - என்னெஞ்சத்துப் புகுந்திருந்து,— அம்பலத்து நின்று புனைவித்த ஈசன் - திருச்சிற் றம்பலத்தின் கணின்று (என்னாலே தன்னைப்) புகழ்வித்த ஈசனது,—பொதி யின்மலை பொருப்பன் விருப்பின் - பொதியின்மலை யிடத்துள்ள சிலம்பன்மேல் வைத்த விருப்பத்தினால்,—தினை வித்தி - தினை யை விதைத்து,—காத்து - காத்தலைச்செய்து, — சிறந்து நின் றேமுக்கு - சிறப்புற்று நின்ற எமக்கு, — சென்று சென்று அத்தினைக் காவல்போய்,—வினை வித்தி காத்து விளைவு உண்ட தாகி விளைந்தது - தீவினையை விதைத்து அதைக் காவல்செய்து

அதன் விளைவுமுண்டதாகி முடிந்தது. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - பகற்குறி விலக்கல்.

நினைவித்துத் தன்னை என்னெஞ்சத் திருந்தென்பதற்கு ஒருகால் தன்னை நினைவேனாகவுஞ் செய்து அந்நினைவே பற்றுக்கோடாகத்தான் புகுந்திருந் தெனினு மமையும். பொருப்பன் விருப்பு என்றதனை நீர்வேட்கைபோலக் கொள்க. நினைவித்தியபோது இத்தினைக்காவல் தலைக்கீடாக அவனை எதிர்ப்படலாமென்று மகிழ்ந்து அதற் குடம்பட்டாராகலின் தாம் வித்தினாற்போற் கூறினர். (கரு0)

### வேங்கையோடுவெறுத்து வரைவுகடாதல்.

நீங்குகவினி நெடுந்தகையென
வேங்கைமேல்வைத்து விளம்பியது.

(எ - து.) (தினையொடுவெறுத்தபாங்கி) இந்நெடுந்தகையாகிய தலைமகன் கவினழியுமென வேங்கை யரும்பினமையான் அதனுடன் வெறுத்து வரைவு கடாயது.

கனைகடற்செய்தநஞ்சுண்டுகண்டார்க்கம்பலத்தமிழ்தாய்
வினைகெடச்செய்தவன்விண்டோய்கயிலைமயிலனையாய்
நனைகெடச்செய்தனமாயினமைக்கெடச்செய்திடுவான்
றினைகெடச்செய்திடுமாறுமுண்டோவித்திருக்கணியே.

(இ - ள்.) கனை கடல் செய்த நஞ்சு உண்டு - ஒலிக்கின்ற கடலினிடத் துண்டாக்கப்பட்ட விடத்தையுண்டு, — அம்பலத்து கண்டார்க்கு அமிழ்தாய் - சிற்றம்பலத்தின்க ணின்று கண்டார்க்கு அமுர்தமாய், — வினை கெட செய்தவன் - (நம்) இருவினை கெடச்செய்தவனது, — விண் தோய் கயிலை மயில் அனையாய் - ஆகாயத்தை யளாவிய கைலையினிடத்துள்ள மயிலையொப்பாய்! — நனை கெட செய்தனமாயின் - அரும்புகள் (அரும்

பியனூன்றே ) அவைகளைக் கெடும்வண்ணஞ் செய்தோமா னல்,—நம்மை கெட செய்திடுவான் - நம்மைக் கெடும்படி செய்யும்பொருட்டு,—இ திரு கணி - இத் திருவாகிய வேங்கை யென்னுங் கணி,—தினை கெட செய்திடுமாறும் உண்டோ - தினைகெட முயற்சிசெய்யுமாறு முண்டோ! (யாம் அது செய் யப் பெற்றிலோம்). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - பகற்குறி விலக்கல்.

கனைகடற்செய்த வென்றதனுன் நஞ்சின்பெருமை கூறினூர். செய்யாத நஞ்சினும் செய்த நஞ்சு கொடிதாகலின் அதன்கொடு மை விளங்கச்செய்த நஞ்சென்முர். அமிழ்தாதல் - அமிழ்தின் காரியத்தைச் செய்தல். கண்டார்க் கென்றதனுன் அல்லாத வமிழ்தொடு இவ்வமிழ்திற்கு வேற்றுமை கூறியவாறும். கெ டச் செய்திடுவானென்னுஞ் சொற்கள் ஒரு சொன்னீரவாய் கெடுப்பானென்னும் பொருள்பட்டு நம்மையென்னு மிரண் டாவதற்கு முடிபாயின. கணி - தொழிற்பெயர். (கசுக)

**இரக்கமுற்று வரைவுகடாதல்.**

செழுமலை நாடற்கு க்
கழுமலுற் றிரங்கியது.

(எ - து.) (வேங்கையொடு வெறுத்து தலைமகனை யெதிர்ப்படுவதற்காகப் பாங்கி, இன்புற்று வளர்த்த தினைத்திர ளில்லனவாயிருந்தன, இனி அவனை யெ திர்ப்படுத லெவ்வாறோ வெனச் சிறைப்புறமாக) செழிய மலைநாட்டையுடைய தலைமகனுக் கிரக்கமுற் றிரங்கியது.

**வழுவாவியலெம்மலையர்விதைப்பமற்றியாம்வளர்த்த**
**கொழுவார்தினையின்குழாங்களெல்லாமெங்குழாம்வணங்குஞ்**
**செழுவார்கழற்றில்லைச்சிற்றம்பலவனைச்சென்றுநின்று**
**தொழுவார்வினைநிற்கிலேநிற்பதாவதித்தொல்புனத்தே.**

(இ - ள்.) வழுவா இயல் எம் மலையர் விதைப்ப - (பருவமறிந்து) வழுவாமற்செய்யு மியல்பினையுடைய (எம்மவராகிய) குறவர் விதைக்க,—யாம் வளர்த்த கொழு வார் தினையின்குழாங்களெல்லாம் - யாம்வளர்த்த செழுமையாகிய நெடிய தினையின் திரள்களெல்லாம்,—எம் குழாம் வணங்கும் - எம்முடைய கூட்டத்தார் தொழும்,—செழும் வார் கழல் தில்லை சிற்றம்பலவனை - செழுமையாகிய நெடிய கழலையுடைய தில்லைச் சிற்றம்பலத்தை யுடையானை,—சென்று நின்று தொழுவார் வினை நிற்கிலே - போய்நின்று வணங்குவாருடைய வினை (அவர்களிடத்தில்) நில்லாததுபோல,—இ தொல்புனத்து நிற்பதாவது- இப்பழைய புனத்தில் நிற்கின்றதாவது (இனி நில்லாது.) எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - பகற்குறி விலக்கல்.

நிற்பதென்பது - நிற்றலென்னும் பொருட்டு. நிற்பதாவ வென்பது பாடமாயின் ஆவ, வென்பதிரங்கற் குறிப்பாக வுரைக்க. நிற்ப, வென்பதூஉம் பாடம். குழுவாதினையென்பதூஉம் பாடம். (௧௭௨)

**கொய்தமைகூறி வரைவுகடாதல்.**

நீடிரும்புனத் தினி யாடேமென்று
வரைவுதோன்ற வுரைசெய்தது.

(எ - து.) (இரக்கமுற்றபாங்கி) இந்நீண்டபெரிய புனத்துள்ளது (கொய்தற்றமையால் இனிப்புனங் காவலில்லை அதனால்) ஆடவுஞ் செய்யோமென்று வரைவுதோன்றத் தினைகொய்தமை கூறியது.

பொருப்பர்க்கியாமொன்றுமாட்டேம்புகலப்புகலெமக்காம்
விருப்பர்க்கியாவர்க்குமேலர்க்குமேல்வருமூரெரித்த
நெருப்பர்க்குநீடம்பலவருக்கன்பர்குலநிலத்துக்
கருப்பற்றுவிட்டெனக்கொய்தற்றதின்றிக்கடிப்புனமே.

(இ - ள்.) எமக்கு புகல் ஆம் விருப்பர்க்கு - எமக்கு அடைக் கலத்தானமாவதற்குக் (காரணமாகிய) விருப்பத்தை யுடைய வருக்கு,—யாவர்க்கும் மேலர்க்கு - எல்லார்க்கும் மேலானவரு க்கு,—மேல் வரும் ஊர் எரித்த நெருப்பர்க்கு - ஆகாயத்தினி டத்துச் செல்லும் முப்புரங்களை யெரித்த நெருப்பை யுடைய வருக்கு,—நீடு அம்பலவருக்கு - நிலைபெற்ற சிற்றம்பலத்தை யுடையவருக்கு,— அன்பர் குலம் - அன்பரா யிருப்பவருடைய கூட்டங்கள்,—நிலத்து கரு பற்று விட்டாலெனை-உலகத்தில் பிற விக்காரணத்தைப் பற்றுவிட்டு நீங்கினாற்போல,—இ கடி புனம்- இந்தக் காவலையுடைய தினைப்புனம்,—இன்று கொய்தற்றது - இப்பொழுது (தொடர்பறக்) கொய்யப்பட்டது,—பொருப்பர் க்கு யாம் ஒன்று புகல மாட்டேம் - (அதனால்) சிலம்பர்க்கு யா மொன்றுஞ் சொல்ல மாட்டோம். எ-று. மெய்ப்பாடு - அழு கை ; பயன் - பகற்குறி விலக்கல்.

யாமொருகுணமில்லே மாயினும் தமது விருப்பினு லெமக் குப் புகலிடமாயினு ரென்னுங் கருத்தால், புகலெமக்காம் விரு ப்பர்க் கென்றார். எம்மால் விரும்பப்படுவார்க் கென்பாருமு ளர். வீடென வென்பதூஉம் பாடம். (கசாஙா)

பிரிவருமைகூறி வரைவுகடாதல்.

மறைப்புறக் கிளவியி ற்
சிறைப்புறத் துரைத்தது.

(எ - து.) (கொய்தமை கூறிய பாங்கி, இப்புனத் துப் பயின்ற கிளிகள் தமக்குத் துப்பாகாக் கால த்து மிதனை விடாதிரா நின்றன, இனி நங்காதலர் நம்மாட் டென்செய்வரொன்னுங் கருத்தினுலாகிய) மறைப்புறக் கிளவியால் சிறைப்புறமாகக் கூறியது.

பரிவுசெய்தாண்டம்பலத்துப்பயில்வோன்பரங்குன்றின்வா
யருவிசெய்தாழ்புனத்தைவனங்கொய்யவுமிவ்வனத்தே

பிரிவுசெய்தாலரிதேகொள்கபேயொடுமென்னும்பெற்றி
யிருவிசெய்தாளினிருந்தின்றுகாட்டுமிளங்கிளியே.

(இ-ள்.) பரிவுசெய்து ஆண்டு - (எம்மைப்) பரிந்தாட்கொண்டு,—அம்பலத்து பயில்வோன் பரங்குன்றின்வாய் - சிற்றம்பலத்தின்கண் வாழ்கின்றவனது பரங்குன்றி னிடத்து,—அருவி செய் தாழ் புனத்து - அருவிநீராற் செய்யப்பட்ட தாழ்ந்த புனத்தின்க ணுண்டாகிய,—ஐவனம் கொய்யவும் - ஐவனமென்னும் நெல்லினை யறுக்கவும்,—இ வனத்து - இக்காட்டி னிடத்து,— பேயொடும் செய்தால் பிரிவு அரிது - பேயோடாயினும் (நட்புச்) செய்தால் பிரிதல் அரிது,—கொள்க என்னும் பெற்றி - (இதனை) உள்ளத்துக் கொள்க என்னுந் தன்மையை,— இளங்கிளி - இளமையாகிய கிளிகள், — இருவி செய்தாளில் இருந்து இன்றுகாட்டும் - கதிரறுக்கப்பட்ட தினைத்தாளில் இருந்து கொண்டு இப்பொழுது காட்டாநிற்கும். எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - பகற்குறி விலக்கல்.

பேயோடாயினும் பிரிவு செய்தா லாற்றுத லரிதென் றுனைப் பினு மமையும். இருவி என்பது-கதிர்கொய்த தட்டை. தாளென்பது - கதிர்கொய்யாத முன்னுஞ் சொல்வதோர் பெயர். ()

மயிலோடுகூறி வரைவுகடாதல்.

நீங்கரும்புனம்விடு நீள்பெருந்துயரம்
பாங்கிபகர்ந்து பருவரலுற்றது.

(எ - து.) நீங்குதற் கருமையாகிய தினைப்புனம் விட்டு நீங்கும் நீண்ட பெருந் துயரத்தைப் (பிரிவருமைகூறி வரைவுகடாய பாங்கி, (மயிலொடு) கூறித் துன்புற்றது.

கணியார்கருத்தின்றுமுற்றிற்றியாஞ்சென்றுங்கார்ப்புனமே
மணியார்பொழில்காண்மறத்திர்கண்டீர்மன்னுமம்பலத்தோ

னணியார்கயிலைமயில்காளயில்வேலொருவர்வந்தாற்
றுணியா தன துணிந்தாரென்னுநீர்மைகள்சொல்லுமினே.

(இ - ள்.) கணியார் கருத்து இன்று முற்றிற்று யாம் சென்றும் - வேங்கையாரது எண்ணம் இன்று முடிந்தது (அதனால்) யாங்கள் போகாநின்றேம்,—கார் புனமே - கரிய புனமே!—மணி ஆர் பொழில்காள் - மணிகளார்ந்த பொழில்காள்!—மறந்திர் கண்டீர் - (வேங்கையொடு பயில்கின்றீராகலின் நீர் எம்மை) மறப்பீர்,—மன்னும் அம்பலத்தோன்-நிலைபெறும் அம்பலத்தையுடையவனது,—அணி ஆர் கயிலை மயில்காள் - அழகார்ந்த கைலையினின்றும் வந்தமயில்காள்!—அயில் வேல் ஒருவர் வந்தால்- அயில்வேல் துணையாகத் தனிவருமவர் (ஈண்டு) வந்தால்,—துணியாதன துணிந்தாரென்னு நீர்மைகள் - (அன்புடையார்) துணியாதன வற்றைத் துணிந்தாரென்னு நீர்மைகளை,—சொல்லுமின் - அவருக்குச் சொல்லுங்கள். (நீவிர் கைலையி னுள்ளீராகலின் கண்ணோட்டமுடையீர் நீரிவ்வாறு சொல்லின் அவர் ஆற்றுவர்). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - பகற்குறி விலக்கல்.

நீர்மை - ஈண்டு வியப்பு. துணியாதனவாவன - பிரிதலும், வரையுந்துணையும் ஆற்றி யிருத்தலுமாம். புனமே, பொழில்காள், மயில்காள் ஒன்றுகூட்டி, நீரெம்மை மறப்பீராயினும் மறவாது சொல்லுமினென் றுரைப்பாரு முளர். கார்ப்புன மென்பதற்குக் கார்காலத்துப் பொலியும் புனமெனினு மமையும். ()

### வறும்புனங்கண்டு வருந்தல்.

மென்புனம்விடுத்து மெல்லியல்செல்ல
மின்பொலிவேலோன் மெலிவுற்ற து.

(எ - து.) மென்மையாகிய தினைப்புனத்தை விட்டுத் தலைமகள் (பாங்கியோடு) காவலொழிந்து போகாநிற்க, மின்னலைப்போல் விளங்கும் வேலையுடைய

தலைமகன் (அப்புனத்தின் பொலிவழிவுகூறி) வருந்தியது.

போதுவினிற்றீர்த்தென்னை யாண்டோன்புலியூரரன்பொருப்
பிதுவெனிலென்னின்றிருக்கின்றவாறெம்மிரும்பொழிலே [பே
யெது நுமக்கெய்தியதென்னுற்றனிரறையீண்டருவி
மதுவினிற்கைப்புவைத்தாலொத்தவாமற்றிவ்வான்புனமே.

(இ - ள்) பொதுவினில் தீர்த்து என்னை ஆண்டோன் - (அதுவோ இதுவோ வழியென்று மயங்கிப்) பொதுவாக நின்ற நிலைமையை நீக்கி என்னையாண்டவன்.—புலியூர் அரன் - புலியூரில் வாழும் அரன்.—பொருப்பே யெனில் - (அவனது) பொருப்பாய் (யான் முன் பயின்ற) இடமேயாயின்,—இது இன்று இருக்கின்றவாறு என் - இஃது இன்று இருக்கின்ற முறைமை யென்னை? — எம் இரும்பொழிலே - எம்முடைய பெரிய பொழிலே!—நுமக்கு எது எய்தியது - நுமக்குத்தான் (இன்று) வந்தது யாது? — என்னுற்றனிர் - (நீர்) என்னுற்றீர்?— இ வான் புனம் அறை யீண்டு அருவி மதுவினில் - (அன்றியும்). இப்பெரியபுனம் ஒலியாநின்ற பெருகிய அருவியாய்விழும் மதுவின்கண்,—கைப்பு வைத்தால் ஒத்தவா (என்) - (அதன் இன்சுவையைமாற்றி) கைப்பாகிய சுவையை வைத்தா லொத்தவாறென்? எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமை நீங்குதல்.

மற்றென்பதசைநிலை. எல்லாரையும் ஆளும் பொதுவாகிய முறைமையினின்றுநீக்கி என்னை யுளநெகிழ்விப்பதோருபாயத்தான் ஆண்டவனென் றுரைப்பினு மமையும். இன்பஞ்செய்வதும் துன்பஞ்செய்வதும் ஒன்றுக மாட்டாதென்னுங் கருத்தாற் புலியூரரன் பொருப்பே யிதுவெனிலென்றுன். அறையீண்டருவிகாள் நீரென்னுற்றீ ரென்றும், அறையீண்டருவிப் புனமென்றும் உரைப்பாருமுளர். (கசுசு)

## பதிநோக்கி வருந்தல்.

மதிநுதலரிவை பதிபுகலரிதென
மதிநனிகலங்கிப் பதிமிகவாடியது.

(எ - து.) (வறும்புனங்கண்டுவருந்திய) தலைமகன் மதியைப்போலு நெற்றியையுடைய தலைமகளிருக்கும் பதியை யடைவதரிதென்று தன்னறிவு மிகக் கலங்கி மிகவும் வாட்டமுற்றது.

ஆனந்தமாக்கடலாடுசிற்றம்பலமன்னபொன்னின்
றேனுந்துமாமலைச்சீறூரிதுசெய்யலாவதில்லை
வானுந்துமாமதிவேண்டியழுமழப்போலுமன்றே
நானுந்தளர்ந்தனனீயுந்தளர்ந்தனைநன்னெஞ்சமே.

(இ - ள்.) ஆனந்தம் மா கடல் ஆடும் சிற்றம்பலம் அன்ன - ஆனந்தமாகிய நீரால் (நிறைந்ததோர்) பெரியகடலானது நின்றாடும் சிற்றம்பலத்தை யொக்கும்,—பொன்னின் தேன் உந்தும் மா மலை - பொன்னினது தேன் தத்திப்பாயும் பெரிய மலைக்கணுண்டாகிய,—சிறு ஊர் இது - சிறிய ஊர் இது,—செய்யலாவது இல்லை - (இவ்வா றணித்தாயினும்) நம்மாற் செய்யலாவதொன்றில்லை.—வான் உந்து மா மதி வேண்டி அழும் மழவு போலும் - (அதனால்) வானின்கட் செல்லும் பெரிய மதியை (கொள்ள) வேண்டி (அதனருமை யறியாது) அழும் குழவியைப் போல (எய்தற் கரியாளை விரும்பி)—நல் நெஞ்சமே-நல்லநெஞ்சமே!—நீயும் தளர்ந்தனை - நீயுந் தளர்ந்தாய்,—நானும் தளர்ந்தனன் - (நீயவ்வரும் பொருள் விரும்புதலான்) யானுந்தளர்ந்தேன். எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன்—ஆற்றாமை நீங்குதல்.

தேனையுமிழு மாமலையெனினு மமையும். மழவைநெஞ்சத்திற்கேயன்றித் தலைமகனுக் குவமையாக வுரைப்பினு மமையும்.

நெஞ்சத்தைத் தன்னோடு படுத்தற்கு நன்னெஞ்சமெனப் புனைந்து கூறினான். இது பாங்கி தலைமகளை இற்செறிவிக்கின்ற காலத்து ஆற்றாளாகிய தலைமகன் அப்பாங்கிகேட்பத் தன்னெஞ்சிற் குச் சொல்லியது. மன்னும் ஓவும் அசைநிலை. (கசுஎ)

பகற்குறி முற்றிற்று.

---

# இரவுக்குறி.

என்பது, பகற்குறி புணர்ந்து விலக்கப்பட்ட தலைமகன், பின்னையும் பாங்கியைத் தலைப்பட்டு "களவினுட்டவிர்ச்சி கிழவோற் கில்லை" என இரவுக்குறிவேண்டிச் சென்றெய்துதல்.

இக்கிளவி முப்பத்துமூன்று துறைகளை யுடைத்து. அவை வருமாறு:—

இரவுக்குறிவேண்ட லாற்றருமைகூறல், நின்றுநெஞ்சுடைதல் நிலைகண்டுநேர்தல், உட்கோள்வினாத லுட்கொண்டுவினாதல், குறியிடங்கூறல் குறியேற்பித்தல், இரவரவுரைத்த லேதங்கூறல், குறைநேர்தலோடு குறைநயப்புரைத்தல், மயின்மேலிசைத்து வரவுணர்ந்துரைத்தல், தாய்துயிலறிதல் தலைவிதுயிலெடுத்தல், இடத்துயித்துநீங்கல் தளர்வகன்றுரைத்தல், மருங்கணைதலோடு முகங்கண்டுமகிழ்தல், பள்ளியிடத்துய்த்தல் பள்ளிடத்துய்த்து, வரைவுகடாவி வரைவுவிலக்கல், வரைவுடம்படா தாற்றதுரைத்தல், அதரிடைச்சிலவிற் கிரக்கங்கூறல், இருளறநிலவு வெளிப்படவருந்தல், வேற்றுக்குறிகூறல் கடலிடைவைத்து, துயிலறிவித்தல் தோழியுமின்றித், தானேகிடந்து தனிமையுற் ற்றும், காமமிக்க கழிபடர்கிளவி, காப்புச்சிறைமிக்க கையறு கிளவி, ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி, தன்னுட்கையா றெய்தி டுகிளவி, நிலைகண்டுரைத்தல் நெடுங்கடற்சேர்த்தல், அலரறிவித் தலோ டாறைம்மூன்றும், இரவுக்குறியிவை யென்றிசினோரே.

## இரவுக்குறி வேண்டல்.

நள்ளிருட்குறியை வள்ளனினைந் து
வீங்குமென்முலைப் பாங்கிக்குரைத்தது.

(எ-து.) நள்ளிரவின்குறியை (பதிநோக்கி வருந் தாநின்ற) வள்ளன்மையுடைய தலைமகன் எண்ணிப் பருத்தமென்முலையையுடைய பாங்கிக்குரைத்தது.

மருந்துநம்மல்லற்பிறவிப்பிணிக்கம்பலத்தமிர்தா
யிருந்தனர்குன்றினின்றேங்குமருவிசென்றேர்திகழப்
பொருந்தினமேகம்புதைந்திருடூங்கும்புனையிறும்பின்
விருந்தினன்யானுங்கள்சீறூரதனுக்குவெள்வளையே.

(இ - ள்.) வெள் வளையே நம் அல்லல் பிறவி பிணிக்கு மருந்தாய் - வெண்மையாகிய வளையை யுடையாய்! நம்முடைய அல்லலைச் செய்யும் பிறவியாகிய பிணிக்கு (அருந்து) மருந்தாய் வைத்தும்,—அம்பலத்து அமிர்தாய் இருந்தனர் - அம்பலத்தின் கண் (சுவையால்) அமிர்தமுமாயிருந்தவரது,—குன்றின் நின்று ஏங்கும் அருவி சென்று-மலையின்கணின்று ஒலிக்கும்அருவிகள் பாய்ந்து,—ஏர் திகழ - அழகு விளங்கும் வண்ணம்,—மேகம் பொருந்தின - மேகம் வந்து பொருந்தின.—புதைந்து இருள் தூங்கும் புனை இறும்பின் -(அதனால் மேகத்தின்கண்) புதைந்து இருள் செறியும் செய்காட்டையுடைய,—உங்கள் சிறு ஊர் அதனுக்கு - நும்முடைய சிறியவூருக்கு, — விருந்தினன் யான் - விருந்தினன் யான், (என்னையேற்றுக் கொள்வாயாக). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - இரவுக்குறிநேர்தல்.

மேகம்வந்து பொருந்தின வென்றதனால், தன்னூர்க்குப்போதலருமை கூறுவான்போன்று இரவுக்குறிமாட்சிமைப்படு மென்றனும். இருள்தூங்கும் புனையிறும்பென்றதனால், யாவருங் காணாராகலின் ஆண்டுவந்து நிற்கின்றே னென்றுனும். மாலை விருந்தினரை மாற்றுதல் அறனன்றென்பது தோன்ற விருந்தின

னென்றான். குன்றினின் றேங்கு மருவி ஏர்திகழச்சென்று பொருந்தின மேகமென்க. அருவி ஏர் பெற மேகம் பொருந்தினவூர் நின்னூர், ஆகலான் என் னினைப்பற்று யானும் நின்னைவந்து சேர்ந்தே னென்பது போதரும். (கசஅ)

**வழியருமைகூறி மறுத்தல்.**

இரவரலேந்தல் கருதியுரைப்பப்
பருவரற்பாங்கி யருமையுரைத்தது.

(எ-து.) இரவுக்குறியை வேண்டித் தலைமகனென்ணிக்கூறத் துன்பமெய்திய பாங்கி, வழியருமை கூறி மறுத்தது.

விசும்பினுக்கேணிநெறியன்னசின்னெறிமேன்மழைதூங்
கசும்பினிற்றுன்னியளைநுழைந்தாலொக்குமையமெய்யே
யிசும்பினிற்சிந்தைக்குமேறற்கரிதெழிலம்பலத்துப்
பசும்பனிக்கோடுமிலைந்தான்மலயத்தெம்வாழ்பதியே.

(இ - ள்.) ஐய-ஐயனே!—விசும்பினுக்கு ஏணி நெறி அன்ன-ஆகாயத்திற்கிட்ட தோர் ஏணிநெறிபோலும்,—சில் நெறிமேல் மழைதூங்கு - இடுக்குவழியின் மழையிடையறாது நிற்றலான்,—அசும்பினில் துன்னி - வழுக்கு நிலத்தின்கண் சென்று பொருந்தி (ஏறுமிடத்து),—அளை நுழைந்தாலொக்கும் - மலைக்குகையுள் நுழைந்தாற்போன் றிருக்கும்.—எழில் அம்பலத்து-(அதுவேயுமன்றி) அழகுபொருந்திய அம்பலத்தின்கணுளனாகிய,—பசு பனி கோடு மிலைந்தான் - குளிர்ந்த பனியையுடைத்தாகிய பிறையைச் சூடியவனது,—மலயத்து - (தென்) மலயத்தின்கணுண்டாகிய, — எம் வாழ் பதி - எம்முடைய வாழ் பதியானது,—இசும்பினில் சிந்தைக்கும் ஏறற்கு அரிது - வழுக்கினால் சிந்தைக்கும் ஏறுதற் கரிதெனல், — மெய்யே - உண்மையே, (அதனாலாண்டுவரத்தகாது). எ-று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - இரவுக்குறி மறுத்தல்.

இசும்பு - ஏற்றிழிவு முதலாயின குற்றமென்பாருமுளர். அசும்பு - சிறுதிவலை. இசும்பினிற் சிந்தைக்கு மேறற்கரிதென்ற வதனுன் எமதுவாழ்பதி இவ்வொழுக்கத்தைச் சிறிதறியுமாயிற் சிந்தையானு நினைத்தற்கரிய துயரத்தைத் தருமாதலால், தாஞ் செத்துல காள்வாரில்லை, அதுபோல இவ்வொழுக்க மொழுகற் பாலீரல்லீரென்று மறுத்துக்கூறிய வாறுயிற்று. பசுமை - செவ்வியுமாம், அதனைக் கோட்டின்மே லேற்றுக. கோட்டை யுடைமையாற் கோடெனப் பட்டது. (கசுசு)

நின்றுநெஞ்சுடைதல்.

பாங்கிவிலங்கப் பருவரைநாட ன்
நீங்கிவிலங்காது நெஞ்சுடைந்தது.

(எ-து.) பாங்கிவிலங்க (வழியருமை கூறக்கேட்ட) பருவரை நாடனுகிய தலைமகன், நீங்கி (உள்ளஞ்செல்கின்ற செலவினின்றும்) விலங்காது (அடைதற் கரியாளை விரும்பி நீ மெலிவதற்கு ஆற்றேனென்று) தன்னெஞ் சுடைந்து வருந்தியது.

மாற்றேனெனவந்தகாலனையோலமிடவடர்த்த
கோற்றேன்குளிர்தில்லைக்கூத்தன்கொடுங்குன்றினீள்குடுமி
மேற்றேன்விரும்புமுடவனைப்போலமெலியுநெஞ்சே
யாற்றேனரியவரிவைக்குநீவைத்தவன்பினுக்கே.

(இ - ள்.) மாற்றேன் என வந்த காலன் - (ஒருவரானும்) மாற்றப்படேனென்று (வழிபடுவோனது உயிரை வௌவ) வந்த இயமனை,—ஓலம் இட அடர்த்த கோல் தேன் - (அவன்) ஓலமிடும் வண்ணம் கொன்ற கோற்றேன்.—குளிர் தில்லை கூத்தன்- குளிர்ந்த தில்லைக்கணுளனுகிய கூத்தன்.—கொடும் குன்றின் நீள் குடுமி மேல் தேன் - அவனுடைய கொடுங்குன்றினது நீண்ட உச்சியின்மேலுண்டாகிய தேனை,—விரும்பும் முடவனைப் போல - விரும்புகின்ற முடவனைப் போல,—மெலியும் நெஞ்

சே - (எய்துதற் கருமையை நினையாது) மெலிகின்ற நெஞ்ச மே!—அரிய அரிவைக்கு நீ வைத்த அன்பினுக்கு ஆற்றேன் - அரியளாகிய அரிவையிடத்து நீ வைத்த அன்பால் (யான்) ஆற் றேன். எ-று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - இரவுக்குறி நயப்பித்தல்.

மாற்றேனென்பது செயப்படு பொருட்கண் வந்தது. மா றேனென்பது விகாரவகையான் மாற்றேனெனநின்றதெனினு மமையும். சுவை மிகுதியுடைமையிற் கோற்றேனென்றார். நீ வன்கண்மையை யாதலின் இவ்வாறுமெலிந்து முயிர்வாழ் தி, யா னத்தன்மையேனல்லேனாகலான், இறந்து படுவேனென் னுங் கருத்தான்மெலியு நெஞ்சே யானுற்றேனென்றார். (கரு0)

## இரவுக்குறிநேர்தல்.

தடவரைநாடன் றளர்வுதீ ர
மடநடைப்பாங்கி வகுத்துரைத்தது.

(எ - து.) விசாலமாகிய மலைநாட்டையுடையதலை மகன் (நெஞ்சுடைந்து தளர்ந்துநிற்பக்கண்ட) மட நடையையுடைய பாங்கி, அத்தளர்ச்சிநீங்க, (மறு த்த வாய்ப்பாட்டால்) இரவுக்குறி நேர வகுத்துக் கூறியது.

கூளிநிரைக்கநின்றம்பலத்தாடிகுரைகழற்கீழ்த்
தூளிநிரைத்தசுடர்முடியோயிவடோணசையா
லாளிநிரைத்தடலானைகடேருமிரவில்வந்து
மீளியுரைத்திவினையேனுரைப்பதென்மெல்லியற்கே.

(இ-ள்.) கூளி நிரைக்க - (கூத்தின்கட் சுவையால்) பேய்க ளும் போகாது நிரைத்து நிற்ப,—நின்று அம்பலத்து ஆடி குரை கழல் கீழ் - நின்று அம்பலத்தின்கண் ஆடுவானது ஒலிக்குங் கழ லையுடைய திருவடிக்க ணுண்டாகிய,—தூளி நிரைத்த சுடர்முடி யோய் - தூளிமொய்த்த சுடர்வீசும் முடியை யுடையோய்!—

இவள் தோள் நசையால்-இவள் தோள்மேலுண்டாகிய விருப்பி னல்,—ஆளி நிைத்து அடல் ஆனைகள் தேரும் - ஆளிகள் நிை த்து வலியையுடைய யானைகளைத் தேடும்,—இரவில் வந்து மீளி உைத்தி - இரவின்கண் வந்து மீளுதலைச் சொல்லாநின் றாய்;—மெல்லியற்கு - (இனி) மெல்லியலுக்கு, — வினையேன் உைப்பது என் - தீவினையேன் சொல்லுவதென்? எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - இரவுக்குறி நேர்தல்.

தூளிநிைத்த சுடர்முடியோ யென்றதனல், பாங்கி யிரவுக் குறி யுடம்படாளாகலின் அரையிருளின் வருதலான், வரும் ஏத த்தை அத்தூளி காக்குமென்று கூறினளாம். வந்து மீளியென் பதற்கு வந்து போதலையுடைய இரவுக்குறி யென்பாருமுளர் உடம்படவு மறுக்கவுமாட்டாது இடையேநின்று வருந்துதலின் வினையேனென்றாள். மீடல் மீளியென நின்றது. (கஶுக)

## உட்கோள் வினுதல்.

நெறிவிலக்குற்றவ னுறுதுயர்நோக்கி
ஆங்கொருசூழல் பாங்கிபகர்ந்த து.

(எ-து.) நெறிவிலக்குற்ற தலைமகனுறுகின்ற துய ரத்தை நோக்கி (வினவுவோமாயின்) இத்தலைமக னென்றனை யுட்கொள்ளுமென்று (இரவுக்குறி நேர் ந்த) பாங்கி, ஒரு சூழலைக் கூறியது.

வளையன்றொருகாலிருகால்வளையநிமிர்த்துவட்கார்
நிையன்றழலெழவெய்துநின்றோன்றில்லையன்னநின்னூர்
விளையென்னமென்னிழலென்னவெறியுறுதாதிவர்போ
துளையென்னவோசிலம்பாநலம்பாவியொளிர்வனவே.

(இ - ள்.) சிலம்பா - மலையை யுடையவனே!—அன்று ஒரு கால் - முன்னொருகாலத்து,—வளை இருகால் வளைய நிமிர்த்து- மலையை இரண்டுகாலும் வளையும் வண்ணம் (மார்பையும் தோ ளையும்) நிமிர்த்து,—வட்கார் நிை அழல் எழ அன்று எய்து

நின்றேன் - பகைவராது நினை யை யழவெழும்படி அன்று எய்து நின்றவனது,—தில்லை அன்ன - தில்லையையொக்கும்,—நின் னூர் நலம்பாவி ஒளிர்வன - நின்னூரின் நலம்பரந்து விளங்குவ னவாகிய (ஆண்டையார்),—விளை என்ன - (பூசும்)சாந்தெத்தன் மைய?—மெல் நிழல் என்ன - (அவர்) விளையாடும் மெல்லிய நி ழலெத்தன்மைய?—இவர் வெறி உறு தாது போது என்ன-அவர் (சூடும்) நறுநாற்றம் பொருந்திய தாது பரந்த போதுகள் எத்த ன்மைய?—உரை - உரைப்பாயாக. எ-று. மெய்ப்பாடு. பெரு மிதம்; பயன் - பாங்கி தலைமகளுல் தன்னை வினவுவித்தல்.

மெல்லிய நிலத்தையுடைய நிழலை மென்னிழலென்ருள். அன் று நிமிர்ந்தெனவும், அன்றெய்து நின்றேனெனவும் இயையும். இது குறிப்பெச்சம். வன்றழ லென்பதூஉம் பாடம். (௧௫௨)

உட்கோண்டு வினுதல்.

தன்னைவினவத் தானவள்குறிப்பறி ந்
தென்னைநின்னுட் டியலணியென்றது.

(எ - து.) (தலைமகன்) தன்னைப்பாங்கிவினவத் தா னவள் குறிப்பை யுட்கொண்டு (அப்பாங்கியை) நின் னூட்டு இயலும் அணியும் யாவையென வினுவியது.

சேம்மலராயிரந்தூய்கருமாதிருக்கண்ணணியு
மொய்ம்மலரீர்ங்கழலம்பலத்தோன்மன்னுதென்மலயத்
தெம்மலர்சூடிநின்றெச்சாந்தணிந்தென்னநன்னிழல்வா
யம்மலர்வாட்கணல்லாயெல்விவாய்நுமராடுவதே.

(இ-ள்.) அம் மலர் வாள் கண் நல்லாய் - அழகிய மலர்போ லும் ஒளிபொருந்திய கண்ணையுடைய நல்லாய்!—ஆயிரம் செ ம்மலர் தூய் - ஆயிரம் சிவந்த தாமரைமலர்களைத் தூவி (ஒருநா ளைற்று ஒன்று குறைய),—கருமால் திரு கண் அணியும் - கரிய மாலானவர் (அவற்றோடொக்கும் தனது) திருக்கண்ணை யிடந்தணியும்,—மொய் மலர் ஈரம் கழல் - பெரிய மலர்போ

லம் செய்த்த (சிறத்தைப் பொருந்திய) திருவடியையுடைய,— அம்பலத்தோன் மன்னும் - சிற்றம்பலத்தான் தங்கும்,—தென் மலயத்து - தென்மலயத்திடத்து,— எல்லிவாய் - இராப்பொழுதின்கண்,—நுமர் ஆடுவது - நும்மவர் விளையாடுவது,— எம்மலர் சூடிநின்று - எந்தமலரைச் சூடிநின்று,—எச்சாந்து அணிந்து - எந்தச் சாந்தையணிந்து,—என்ன நல் நிழல் வாய் - எந்த நல்நிழலின்கீழ் (கூறுவாயாக). எ-று. மெய்ப்பாடு-பெருமிதம்; பயன் குறியிடமுணர்த்துதல்.

வாள்உவமை யெனினுமமையும். நுமரென்றது அவரோடொருநிலத்தாராகிய மக்களை. திருமாலென்பதூஉம் பாடம். நிழல் அணியன்றெனினும் பன்மைபற்றி அணியென்றார். (கருஅ)

குறியிடங்கூறல்.

இரவுக்குறியிவ ணென்றுபாங் கி
யரவக்கழலவற் கறியவுரைத்தது.

(எ - து.) (உட்கொண்டுவினவிய) ஒலியையுடைய கழலையணிந்த தலைமகனுக்குப் பாங்கி, இரவுக்குறியிடம் இதுகாணென் றறியச்சொன்னது.

பனைவளர்கைம்மாப்படாத்தம்பலத்தரன்பாதம்விண்ணோர்
புனைவளர்சாரற்பொதியின்மலைப்பொலிசந்தணிந்து
அனைவளர்காவிகள்சூடிப்பைந்தோகைதுயில்பயிலுஞ்
சினைவளர்வேங்கைகள்யாங்கணின்றுடுஞ்செழும்பொழிலே.

(இ-ள்.) பனை வளர் - பனைபோலும் நெடிய,—கைம்மா படாத்து - துதிக்கையையுடைய யானையின் (தோலாகிய) போர்வையையுடைய,—அம்பலத்து அரன் பாதம் விண்ணோர் புனை- அம்பலத்திலுள்ள சிவனுடைய பாதங்களை விண்ணோர் பரவுதற் கிடமாகிய,—வளர் சாரல் - வளருஞ் சாரலையுடைய,— பொதியின் மலை பொலி சந்துஅணிந்து - பொதியின் மலைக்கண் பொலியும் சந்தனச் சாந்தையணிந்து,—சுனைவளர் காவிகள் சூடி யாங்கள்

நின்றாடும் செழும் பொழில் - சுனைக்கண் வளரும் காவிகளைச் சூடி யாங்கள் நின்று விளையாடும் வளவிய பொழில்,—பைந் தோகை துயிலும் சினை வளர் வேங்கைகள் - பசிய மயில்கள் துயில் செய்யும் கோடு வளரும் வேங்கைப்பொழில். (நீயுமவ் வாறு சாந்தணிந்து காவிசூடி வேங்கைப் பொழிற்கண் வந்து நின்வரவறிய மயிலெழுப்புவா யாக.) எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - இரவுக்குறியிட முணர்த்துதல். (கடுச)

## இரவுக்குறி யேற்பித்தல்.

அரவக்கழலவை னாற்றானெ ன
இரவுக்குறி யேற்பித்த து.

(எ-து.) (தலைமகனுக்குக் குறியிடங்கூறிய பாங்கி, தலைமகளிடஞ்சென்று) ஒலியையுடைய கழலையணி ந்த தலைமகன் ஆற்றானென்று (அந்தலைமகளை) யிர வுக்குறி யேற்பித்தது.

மலவன்குரம்பையைமாற்றியம்மான்முதல்வானர்க்கப்பாற்
செலவன்பர்க்கோக்குஞ்சிவன்றில்லைக்கானலிற்சீர்ப்பெடையோ
டலவன்பயில்வதுகண்டஞர்கூர்ந்தயில்வேலுரவோன்
செலவந்திவாய்க்கண்டனனென்னதாங்கொன்மன்சேர் துயிலே.

(இ-ள்.) மலம் வல் குரம்பையை மாற்றி - மலங்களையுடைய வலிய (யாக்கையாகிய) கூட்டை மாற்றி,— மால் முதல் அ வான வர்க்கு அப்பால் - திருமால் முதலாகிய அவ்வானவர்களுக்கு மேலாகிய பதங்களில்,—செலவு - செல்லும் செலவை,— அன் பர்க்கு ஒக்கும் - அன்பராயினோர்க்கென்று பார்த்துவைக்கும்,— சிவன் தில்லை கானலில் - சிவனது தில்லையைச் சூழ்ந்த கானலி டத்து,—சீர் பெடையோடு அலவன் பயில்வது கண்டு-நல்ல பெ ட்டையோடு ஆண் நண்டு பயின்று விளையாடுவதனைக்கண்டு,— அஞர் கூர்ந்து - வருத்தமிகுந்து,—அயில் வேல் உரவோன் - கூர் மைபொருந்திய வேலையுடைய வலியோன்,—அந்திவாய் செல

கண்டனன் - அந்திப்பொழுதின்கண் செல்ல (அவனைக்) கண்டேன்,—மன் - (பின்) அம்மன்னன்,—சேர் துயில் என்னதாம் - கொண்ட சேர்துயிலானது எத்தன்மைத்தாம்? (அறியேன்). எ-று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த இளிவரல்; பயன் - தலைமகளை யிரவுக்குறி நேர்தல்.

அப்பாற் செலவு-மால் முதலாயினார்க் கப்பாற்பட்ட பதங்கள். அன்பருட்போக வேட்கையையுடையார் அவற்றைப் பெற்று போகந் துய்ப்பாராகலின் செலவன்பர்க்கோக்கு (உவக்கு) மென்றார். பேடையொடு பயிலு மலவனைக் கண்டும் உயிர்தாங்கிச் சென்றானுதலின் உரவோனென்றாள். (கருரு)

இரவரவுரைத்தல்.

குரவரு குழலிக்
கிரவர வுரைத்தது.

(எ-து.) (இரவுக்குறியேற்பித்து இன்முகங்கண்ட பாங்கி), குராமலரையணிந்த கூந்தலையுடைய தலைமகளுக்குத்(தலைமகன்)இரவின்கண் வருதலை யுரைத்தது.

மோட்டங்கதிர்முலைப்பங்குடைத்தில்லைமுன்னோன்கழற்கே
கோட்டந்தருநங்குருமுடிவெற்பன்மழைகுழுமி
நாட்டம்புதைத்தன்னநள்ளிருணகநங்கச்சிங்கம்
வேட்டந்திரிசரிவாய்வருவான்சொல்லுமெல்லியலே.

(இ-ள்.) மெல்லியலே - மெல்லியலாய்!—மோடு அம் கதிர் முலை பங்குடை தில்லை முன்னோன், — பெரிய அழகிய கதிர்முலையை யுடையதோர் கூற்றையுடைய தில்லைக்கணுளனாகிய எல்லாப் பொருட்கு முன்னாயவனது,—கழற்கு - திருவடியொன்றற்குமே,—கோட்டம் தரும் குரு முடி நம் வெற்பன் - வணங்குதலைச் செய்யும் குருநிறம்வாய்ந்த முடியையுடைய நம் மலைநாடன்,—மழை குழுமி நாட்டம் புதைத்தது அன்ன நள் இருள் - முகில்கள் திரளுதலான் நாட்டத்தைப் புதைத்தாற்போலிருக்

கும் செறிந்த இருளின்கண்,—நாகம் நடுங்க சிங்கம் வேட்டம் திரி சரிவாய் - யானைகள் நடுங்க சிங்கம் வேட்டந் திரியும் மலைச்சரியிடத்து (வரவேண்டிச் செல்லாநின்றான், இனியென்செயத்தகும்). எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த இளிவரல்; பயன் - தலைமகனை யிரவுக்குறி நேர்வித்தல்.

முன்னோன் கழற்கல்லது பிறிதோரிடத்துந் தாழ்ந்து நில்லாப் பெரியோன் தாழ்ந்து வேண்டுவதனை மறுத்தலரிதென்பது போதர முன்னோன் கழற்கே கோட்டந்தரு நங்குரு முடிவெற்பனென்றான். குரு - நிறம். ஆற்றின்கண்வரு மறியினும் அவனது வேட்கைமிகுதியா லென்னுமொன்றுங் கூறுவதரிதாயிற்றென்பது போதர, நள்ளிருணாக நடுங்கச்சிங்க வேட்டந்திரிசரிவாயென்றாள். (கசுசு)

ஏதங்கூறி மறுத்தல்.

இழுக்கம்பெரி திரவரினென
அழுக்கமெய்தி யரிவையுரைத்தது.

(எ-து.) (தலைமகன் இரவரவுகேட்ட) தலைமகள் தனக்கவன்செய்த தலையளியு முதவியு நினைந்து இரவின்கண்வரிற் பெரிது மேதமென்று அதனாலுண்டாகிய வருத்தமடைந்து ஏதங் கூறியது.

செழுங்கார் முழவதிர்சிற்றம்பலத்துப்பெருந்திருமால்
கொழுங்கான்மலரிடக்கூத்தயர்வோன்கழலேத்தலர்போன்
முழுங்காரிருள்வாரணவேட்டைசெய்மொய்யிருள்வாய்
வழங்காவதரின்வழங்கென்றுமோவின்றெம்வள்ளலையே.

(இ - ள்.) செழு கார் முழவு அதிர் - வளவிய மேகம்போலக் குடமுழா முழங்கும், — சிற்றம்பலத்து - சிற்றம்பலத்தின்கண்ணே,—பெரு திருமால் கால் கொழு மலர் இட - பெரிய திருமால் நறுநாற்றத்தையுடைய கொழுவிய மலரையிட்டுப் பரவ,—கூத்து அயர்வோன் - கூத்தை விரும்பிச் செய்வா

னது,— கழல் ஏத்தலர்போல் - திருவடிகளை யேத்தாதாரைப் போல வருந்த,—முழங்கு ஆர் அரி முரண் வாரணம் வேட்டை செய் - முழங்காநின்ற இட்டுதற்கரிய சீயம் முரணையுடைய யானை வேட்டையைச் செய்யும்,—மொய் இருள்வாய் - வல்லிருளின்கண்,—வழங்கா அதரின் -(யாவரும்) வழங்காதவழியிடத்து-எம் வள்ளலை இன்று வழங்கு என்றுமோ - எம்முடைய வள்ளலை இன்று வழங்குவாயாகவென்று சொல்லுதுமோ? (அவருழை யாஞ் சேறலொழிந்து அவனை வரச்சொல்லக் கடவோமோ!) எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - இரவுக்குறி நேர்தல்.

ஏத்தலனையானைக் குவமையாக வுரைக்க. ஏத்தலர்போல் வழங்கென்றுமோ வென்றுகூட்டி யுரைப்பாரு முளர். முழங்காரரி யென்பதற்கு முழங்குதலார்ந்த வரியென்பாரு முளர். தனக்கவன்செய்த தலையளியு முதவியு நினையாநின்ற வுள்ளத்தளாக லின் வள்ளலென்றாள். எம்மைந்தனை யென்பது பாடமாயின் ஆண்மைத்தன்மை தோன்றநின்றதாக வுரைப்பாருமுளர். ()

## துறைநேர்தல்.

அலைவேலண்ண னிலைமைகேட்டுக்
கொலைவேற்கண்ணி குறைநயந்தது.

(எ - து.) (ஏதங்கூறிமறுத்த) கொலைத்தொழிலை மேற்கொண்ட வேல்போலுங் கண்ணையுடைய தலைமகள், வருத்தும் வேலையுடையனாகிய தலைமகனது (ஆற்றானாகிய) நிலைமை கேட்டு (பேருதவிசெய்த அவனுக்குச் சிறியேன் சொல்லுவதறியே னென்ன) உடம்பட்டு நேர்ந்தது.

இங்குமொருவிடமுண்டம்பலத்தும்பருய்யவன்று
தாங்குமொருவன்றடவரைவாய்த்தழங்கும்மருவி
வீங்குஞ்சுனைப்புனல்வீழ்ந்தன்றழுங்கப்பிடித்தெடுத்து
வாங்குமவர்க்கறியேன்சிறியேன்சொல்லும்வாசகமே.

(இ-ள்.) ஓங்கும் ஒருவிடம் உண்டு - (உலகமுழுதையுஞ் சுடு ம்வண்ணம் மேன்மேலும்) வளராநின்றதோர் விடத்தைத் தா னுண்டு,—உம்பர் உய்ய அன்று தாங்கும் - தேவர்களெல்லாம் பிழைக்க அந்நாளிற்றாங்கிய,—அம்பலத்து ஒருவன் - அம்பலத் திருக்கும் ஒப்பற்றவனது,—தடம் வரைவாய்-பெரிய வரையிட த்து,—தழங்கும் அருவி வீங்கும் சுனே புனல் - ஒலியா நின்ற அருவியாற் பெருகுகின்ற சுனைப் புனலின்கண்,—அன்று வீழ்ந்து அழுங்க - அன்று யான் விழுந்து கெடப்புக,—பிடித்து எடுத்து வாங்கும் அவர்க்கு - பற்றியெடுத்துக் கரைக்கணுய்த்த அப்பெ ரியோருக்கு,—சிறியேன் சொல்லும் வாசகம் அறியேன் - சிறி யேனாகிய யான் சொல்லுவதோர் மாற்றமறியேன். எ - று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - இரவுக்குறி நேர்தல்.

ஒரு நஞ்சென்பதற்கு ஒப்பில்லாத நஞ்செனினுமாம். சுனைப் புனல்வாய் வீழ்ந்தழுங்கஅன்று தாமே வந்தெடுத் துய்வித்தாற் போல வழங்காத அதரில் தாம் வருதலால் எனக்குவரும் இடுக்கணையும் தானே நீக்கினல்லது யான் அறிவது ஒன்றில்லை யென்னும் கருத்தால் "சுனைப்புனல் வீழ்ந்தன் றழுங்கப் பிடித் தெடுத்து வாங்குமவர்க்" கென்றாள். ஆற்றினேதம் நினைந்து இரவுக்குறி மறுத்த தலைமகள் அவன்செய்த உதவியை நினைந்து பின் உடம்பட்டாளாதல் பொருந்தாமை யறிந்துகொள்க. இக் கருத்தேபற்றி உதவிநினைந்து குறைநயந்த தென்னாது அவ னது ஆற்றுமை நிலைமைகேட்டுக் குறைநயந்ததென்றார். அவன் செய்த பேருதவி சொல்லுகைபால் அவன்செய்த வுதவிக்குக் கைம்மாறுவது நா னவனிடஞ் செல்லலேயென்ப துடம்பா டாயிற்று. பிறவிக் குட்டத்தில் யான் விழுந்து கெடப்புகத் தாமேவந்து பிடித்தெடுத்து அதனின்றும் வாங்கியபேருதவி யார்க்குச் சிறியேனாகிய யான் சொல்லுவ தறியேனென்று வேறுமொரு பொருள் தோன்றியவாறு காண்க. (கடுஅ)

## துறைநேர்ந்தமைகூறல்.

குறைநயந்தன ணெறிகுழலியென
எறிவேலண்ணற் கறியவுரைத்தது.

(எ - து.) (குறைநயப்பித்த) பாங்கி, நெறிப்பட்ட கூந்தலையுடைய தலைமகள் (யான்சொன்னதுகேட்டுக் குறைநேர்ந்தனள் என்று) எறிகின்ற வேலையுடைய தலைமகனுக் கறியக்கூறியது.

ஏனற்பசுங்கதிரொன்றாழ்ந்கழியவெழிலியுன்னிக்
கானக்குறவர்கள்கம்பலைசெய்யும்வம்பார்சிலம்பா
யானிற்றையாமத்துநின்னருண்மேனிற்கலுற்றுச்சென்றேன்
றேனக்ககொன்றையன்றில்லையுரார்செல்லுஞ்செல்லல்களே.

(இ-ள்.) ஏனல் பசு கதிர் என்றாழ்க்கு அழிய - தினையினது பசியகதிர் கோடையாலழிய,—எழிலி உன்னி - (அஃதழியாமல்) மழைபெறக் கருதி,—கான குறவர்கள் கம்பலை செய்யும் - கானகத்துவாழுங் குறவர்கள் (தெய்வத்துக்குப் பலிகொடுத்து) ஆரவாரிக்கும்,—வம்பு ஆர் சிலம்பா-புதுமை நிறைந்த சிலம்பையுடையாய்!—இற்றை யாமத்து - இன்றிரவின் கண்,—யான் - நான்,—நின் அருள்மேல் நிற்கல் உற்று-நின் ஏவலின்மேல் நிற்க வேண்டி,—தேன் நக்க கொன்றையன் - தேனொடு மலர்ந்த கொன்றை மாலையை யுடையானது, — தில்லை உறார் - தில்லையைப் பொருந்தாதார்,—செல்லும் செல்லல்கள் சென்றேன் - அடையுந் துன்பத்தை யடைந்தேன். (நீகருதியதூஉ முடிந்தது). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகற்குக் குறைநயந்தமை யுணர்த்துதல்.

வம்பு - காலமல்லாத காலத்துப் பெய்தமழை. யாமமு நின்னருளே என்பதூஉம் பாடம். கானக்குறவர்கள் தமக்குணவாகிய தினைக்கதிர்கோடையா லழியத் தெய்வத்தைப் பராவி மழைபெய்விக்க முயல்கின்றாற்போல, நினக்குத் துப்பாகிய

இவள்நலம் அலர்முதலாயினவற்றால் தொலையாமல் முயன்று பாதுகாப்பாயென உள்ளுறையாமாறு காண்க. (கருக)

### வரவுணர்ந்துரைத்தல்.

வளமயிலெடுப்ப விளமயிற்பாங்கி
செருவேலண்ணல் வரவுரைத்தது

(எ-து.) மயிலினந் துயில்பெயரா நிற்பன (என்ன காரணமோ) வென்று (தலைமகனுக்குக் குறைநயப்புக் கூறிய) இளமயிற் சாயலையுடைய பாங்கி, (தலைமகளுக்குப்) போர்வேலையுடைய தலைமகனது வரவறிந்து கூறியது.

முன்னுமொருவரிரும்பொழின்மூன்றற்குமுற்றுமிற்றாற்
பின்னுமொருவர்சிற்றம்பலத்தார்தரும்பேரருள்போற் [ன்
றுன்னுமொரின்பமென்றேகைதந்தோகைக்குச் சொல்லுவபோ
மன்னுமரவத்தவாய்த்துயில்பேருமயிலினமே.

(இ-ள்.) இரு பொழில் மூன்றற்கு முன்னும் ஒருவர் - பெரிய வுலகங்கள் மூன்று முளவாதற்கு முன்னுந்தாமொருவருமே யாகியுள்ளார்,—முற்றும் இற்றால் - அவ்வுலக முழுதும் மாய்ந்தால்,—பின்னும் ஒருவர் - பின்னும் தாமொருவருமே யாகியுள்ளார்,—சிற்றம்பலத்தார் - சிற்றம் பலத்தின் கண்ணார்,—தரும் பேரருள் போல் - (அவர்) தரும்பெரிய அருள்போல,— ஒரின்பம் துன்னும் என்று-(இவ்வில்லின்கண்) ஒரின்பம் வந்துபொருந்து மென்று,—தம் தோகைக்கு ஓகை சொல்லுவபோல்,—மன்னும் அரவத்தவாய் - இடைவிடாது நிகழும் ஆரவாரத்தையுடையவாய்,—மயிலினம் துயில்பேரும் - மயிலினம் துயில் பெயரா நின்றன. (இஃதென்னோ?)எ-து. மெய்ப்பாடு-பெருமிதம்; பயன் - தலைமகன் வரவுணர்த்துதல்.

சிற்றம்பலத்தா ரென்பதற்கு உலகங்களுளவாய்ச் செல்லுங் காலத்துச் சிற்றம்பலத்தின் கண்ணுரென்றுரைப்பினு மமையும்.

ஒருகால் வெருவித்தாமே துயிலெழூந் துணையன்று, இஃது தலைமகன்செய்த குறியென்பது போதர, மன்னு மரவத்தவா வென்றாள். (கசுo)

## தாய்துயிலறிதல்.

ஊசன்மிசைவைத் தொள்ளமளியிற்

றாயதுதுயி றனறிந்த து.

(எ-து.) (தலைமகன் வரவுணர்ந்த பாங்கி யாம் விளையாடுகின்ற பொழிலில் யானை நின்றூசலைத் தள்ளா நின்றதெனை) ஊசன்மேல் வைத்து ஒள்ளிய படுக்கையிற்கிடந்த தாயது துயிலையறிந்தது.

கூடாரரணெரிகூடக்கொடுஞ்சிலைகொண்டவண்டன்
சேடார்மதின்மல்லற்றில்லையன்னாய்சிறுகட்பெருவெண்
கோடார்கரிகுருமாமணியூசலைக்கோப்பழித்துத்
தோடார்மதுமலர்நாகத்தைதூக்குநஞ்சூழ்பொழிற்கே.

(இ-ள்.) கூடார் அரண் எரி கூட - கூடாதாருடைய அரண் களை எரிசென்று கூட,—கொடு சிலை கொண்ட அண்டன் - வளை ந்த சிலையைக் கைக்கொண்ட இறைவனது,—சேடார் மதில் மல்லல் தில்லையன்னாய் - பெருமை பொருந்திய மதிலையும் வள ப்பத்தையுமுடைய தில்லையையொப்பாய்!— சிறுகண் - சிறிய கண்ணையுடைய,—பெரு வெண்கோடு ஆர் கரி - பெரிய வெண் கோடு நிரம்பிய யானையானது,—நம் சூழ் பொழிற்கு-நமது சூழ் ந்த பொழிலின்கண்,—குரு மாமணி ஊசலைக் கோப்பழித்து - நிறத்தையுடைய உயர்ந்த மணிகளாற் செய்யப்பட்ட ஊசலைச் சீரழித்து,—தோடு ஆர் மது மலர் நாகத்தை - இதழையுடைய மதுமலர்களையுடைய (அவ்வூசலைத் தொடுத்த) நாகமரத்தை,— தூக்கும் - தூக்காநின்றது (இதற்கென்செய்வேன்). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - இடையீடாராய்தல்.

சூழ்பொழிலே என்பதூஉம் பாடம். இவ்வாறு கூறவும் வாளாகிடப்பின் தாய் துயின்றாளென்றறிதல் பயன். சூழ்பொழிற் றென்னு நான்கனுருபு ஏழாவ தன்பொருட்கண் வந்தது. (கசுக)

## துயிலெடுத்துச் சேறல்.

தாய்துயிலறிந் தாய்தருபவன்
மெல்லியற்குச் சொல்லிய து.

(எ-து.) தாயது துயிலறிந்து தலைமகளைப் (புறத்துக்கொடுபோம்) உபாய மாராயும் பாங்கி) தலைமகட்குக் கூறித் (துயிலெடுத்துச் சென்றது.)

விண்ணுக்குமேல்வியன்பா தலக்கீழ்விரிநீருடுத்த
மண்ணுக்குநாப்பணயந் துதென்றில்லைநின்றோன்மிடற்றின்
வண்ணக்குவளைமலர் கின்றனசினவாண்மிளிர்நின்
கண்ணொக்குமேற்கண்டுகாண்வண்டுவாழுங்கருங்குழலே.

(இ - ள்.) வண்டு வாழும் கரு குழலே - வண்டுகள்வாழும் கரியகுழலையுடையாய்! — விண்ணுக்குமேல் - (எல்லாப் பொருளுக்கு மேலாகிய) விண்ணுக்கும் மேலாயவன், — பாதலம் கீழ் - (எல்லாப்பொருளுக்குங் கீழாகிய) பாதாலத்திற்குங் கீழாயவன்,—விரிநீர் உடுத்த மண்ணுக்கு நாப்பண் - கடலையுடுத்த மண்ணுலகத்துக்கு நடுவாயவன்,—நயந்து தென் தில்லை நின்றோன் - விரும்பித் தென்றில்லைக்க ணின்றோன்,— மிடற்றின் வண்ணம் குவளை மலர்கின்றன - (அவனது) கண்டத்தின் (நீல) வண்ணத்தை யுடைய குவளைப்பூக்கள் மலர்கின்றவை,—சினவாள் மிளிர்- சினவாண்பிரகாசித்தல்போலப் பிரகாசிக்கும்,— நின் கண் ஒக்குமேல் - நின்கண்களை யொக்குமாயின்,—கண்டு காண் - காண்பாயாக. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளைக் குறியிடத்துய்த்தல்.

மண்ணினுள்ளு முளவாதலின், மண்ணுக்கு நாப்பணென்றார். மண்முழுதுக்கு மிடையாயுள்ள தில்லையை நயந்து அதன்கணி

ன்றேனென் றுரைப்பாருமுளர். சினவாண் மிளிர்கின்கண்ணெ
ன்குமே லென்புழி ஒத்த பண்பு வேறுபட்டமையான் உவமைக்
குவமை யன்றென்க. கண்டு காணென்ப தொருசொல். ஆய்த
நபவள் - புறத்துக்கொடுபோ முபாயமாராய்பவள். (கசஉ)

## இடத்துய்த்துநீங்கல்.

மைத்தடங்கண்ணியையுய்த்திடத்தொருபா
னீங்கலுற்றபாங்கி பகர்ந்த து.

(எ-து.) (தயிலெடுத்துக் கொண்டுசென்று) மைய
ணிந்த தடங்கண்ணையுடைய தலைமகளை, அக்குறி
யிடத்துய்த்து ஒருபால்நீங்கநினைந்தபாங்கி கூறியது.

நந்தீவரமென்னுநாரணனுண்மலர்க்கண்ணிற்கெஃகந்
தந்தீவரன்புலியூரனையாய்தடங்கண்கடந்த
விந்தீவரமிவைகாணின்னிருள்சேர்குழற்கெழில்சேர்
சந்தீவரமுறியும்வெறிவீயுந்தருகுவனே.

(இ - ள்.) நந்தீ வரம் என்னும் நாரணன் - (கண்ணை யிடந்தி
ட்டு) நந்தீ! வரந்தரவேண்டுமென்னும் நாரணனது, — நாள்
மலர் கண்ணிற்கு - புதுமலர்போலும் கண்ணினுக்கு,—எஃகம்
தந்து ஈவு அரன் புலியூரனையாய்-ஓர் சக்கரத்தைப்(படைத்துக்)
கொடுத்த அவனது புலியூரை யொப்பாய்!—தடம் கண் கடந்
த இந்தீவரம் - (இவை நின்) பெரிய கண்கள்கடந்த குவளைம
லர்கள்,—இவை காண் - இவற்றைக் காண்பாயாக,—நின் இரு
ள் சேர் குழற்கு - நினது கருமைசேர்ந்த கூந்தலுக்கு,—சந்து
ஈ எழில் சேர் வரம் முறியும் - சந்தனமரம் தரும் அழகுபொ
ருந்திய நல்ல தழைகளையும்,—வெறி வீயும் - நறுநாற்றத்தை
யுடைய பூக்களையும்,—தருகுவன் - (யான்) கொணர்ந்து தரு
வேன். (நீ நிலைப்பூக்களையுங் கண்டு இங்கு நிற்பாயாக). எ - று.
மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளைக் குறியிடத்து
நிறீஇ நீங்குதல்.

நந்தியென்பது ஒரு திருநாமம். அனையாயுடைய தடங்கண்க ளென் றுரைப்பாருமுளர். இந்தீவர மிவைகா ணென்பதற்கு நின்கண்களை வென்ற இந்தீவரமாவன இவைகா ணென்றுரைப் பினு மமையும். இது குறிப்பெச்சம். (கசுரு)

**தளர்வகன்றுரைத்தல்.**

வடுவகிரனைய வரிநெடுங்கண்ணியைத்
தடுவரியன்பொடு தளர்வகன்றுரைத்தது.

(எ-து.) (பாங்கி குறியிடத்துய்த்து நீங்காநிற்ப) மாவடுவகிரன்ன செவ்வரிபரந்த நெடுங்கண்ணையு டைய தலைமகளைத் தலைமகனெதிர்ப்பட்டுத் தடுத்த லருமையாகிய அன்பொடு (சூரியன் வருவதன்முன் நும்முடைய கமலக்கோயிலை நீரோ திறந்துகொண் டோ வந்தது எனப் பெரும்பான்மைகூறித்) தளர்வு நீங்கியுரைத்தது.

காமனைவென்றகண்ணோன்றில்லைப்பல்கதிரோனடைத்த
தாமரையில்லினிதழ்க்கதவந்திறந்தோ தமியே
பாமரைமேகலைபற்றிச்சிலம்பொதுக்கிப்பையவே
நாமரையாமத்தென்னோவந்துவைகியந்ததுவே.

(இ-ள்.) காமனை வென்ற கண்ணோன் தில்லை - (நிறையழிக்க வந்த காமனைவென்ற கண்ணையுடையவனது தில்லைக்கண், — பல் கதிரோன் அடைத்த தாமரை இல்லின் - பல கிரணங்களை யுடைய சூரியனாகிய வாயிலோன் அடைத்துவைத்த தாமரை யாகிய (நும்) இல்லின்கண், — இதழ் கதவம் திறந்தோ போந் தது - இதழாகிய கதவத்தை (அவ்வாயிலோன் வருவதன்முன் நீரோ) திறந்துகொண்டோ போந்தது? (இதுகிடக்க), — பா வும் அரை மேகலை பற்றி சிலம்பு ஒதுக்கி - பரந்த அரையின் மேகலையை (யொலியாமற்) பிடித்துச் சிலம்புகளை மேலேறக்க டுக்கி, —தமியே பைய அரை யாமத்து நாம் வந்து வைகி நயந்

தது என்னோ - தனியே மெல்ல அர்த்தராத்திரியில் நாம் ஈண்டு வந்து தங்கி விரும்பியது என்னோ? (இதனைக் கூறுவீராமின்). எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகளைக் கண்டு தோன்றிய வுவகையைப் பரிக்கலாற்றாத தலைமகனுற்றுதல்; தலைமகளை மகிழ்வித்தலுமாம்.

காமமொன்னும் ரகரவீறு - இழிவின்கண் வந்தது. எல்லாரானுந் திருமகள் நயக்கப்படினல்லது திருமகள் தன்னால் நயக்கப்படுவ தொன்றில்லை யென்னுங் கருத்தால், திருமகளை யொப்பாய் நாம் நயந்ததென்னோ வென்றான். நாமென்னுமுன்னிலை யுளப்பாட்டுத் தன்மை உயர்வுதோன்ற முன்னிலைக்கண் வந்தது. (கசுச)

### மருங்கணைதல்.

அன்புமிகுதியி னளவளாயவளைப்
பொன்புனைவேலோன் புகழ்ந்துரைத்தது.

(எ - து.) (பெரும்பான்மை கூறக்கேட்ட தலைமகள் பெருநாணினளாகலின் தன்முன்னிற்கலாது நாணித் தலையிறைஞ்சி வருந்தாநிற்ப) அன்புமிகுதியானவளை யளவளாவிப் பொன்னுபரண மணிந்த வேலையுடைய தலைமகன் புகழ்ந்து கூறியது.

அகிலின்புகைவிம்மியாய்மலர்வேய்ந்தஞ்சனமெழுதத்
தகிலுந்தனிவடம்பூட்டத்தகாள்சங்கரன்புலியூ
ரிகலுமவரிற்றளருமித்தேம்பலிடைஞெமியப்
புகிலுமிகவிங்கனேயிறுமாக்கும்புணர்முலையே.

(இ-ள்.) அகிலின் புகை விம்மி ஆய் மலர் வேய்ந்து - (குழலின்கண்) அகிற்புகை விம்ம ஆராயப்பட்ட மலர்களைச் சூடி,— அஞ்சனம் எழுதத்தகிலும் தனி வடம் பூட்டத்தகாள் - (கண்மலர்க்கு) அஞ்சனமெழுதத் தகுவாளாயினும் ஒரு தனிவடத்தைப்

பூட்டத் தருவாளல்லள்,—சங்கரன் புலியூர் இகலுமவரின் தளரும் இ தேம்பல் இடை - சங்கரனது புலியூரின் பெருமையுணராத அதனோடுமாறுபடுவோரைப்போலத் தளராநின்ற இத் தேய்த்தலை யுடைய இடையானது, — ஞெமியப் புகினும் - நெரிந்தொடியப் புகினும்,—புணர் முலை - (அதனை யுணராது) இப்புணர் முலைகள்,—இங்ஙனே மிக இறுமாக்கும் - இவ்வண்ணமே மிகவும் விம்மா நின்றன. (இஃ தென்னாய் முடியும்!) எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகளைச் சார்தல்.

தேம்பலிடை - இருபெயர்ப் பண்புத் தொகை யெனினுமமையும். ஆய்மலராய்ந்தென்பதுபாடமாயின் ஆராய்ந்து சூட்டியெனச் சூட்டுதலை ஆற்றலான் வருவித்துரைக்க. புகலு மென்பது பாடமாயிற் புகுதலுமெனவுரைக்க. அளவளாய் என்பது மிகுதிக்க ணிரட்டித்தது. (கசரு)

### முகங்கண்டுமகிழ்தல்.

முகையவிழ்குழலி முகமதிகண்டு
திகழ்வேலண்ணல் மகிழ்வுற்றது.

(எ - து.) (மருங்கணைவிறுதிக்கண்) அரும்பவிழ்ந்த கூந்தலையுடைய தலைமகளது முகமாகிய மதியின்மலர்ச்சி கண்டு, விளங்குகின்ற வேலையுடைய தலைமகன் (இவளும் யானும் மலரு மதியுமெனத் தன்னயப் புணர்த்தி) மகிழ்ந்தது.

அழுந்தேனரகத்தியானென்றிருப்பவந்தாண்டுகொண்ட
செழுந்தேன்றிகழ்பொழிற்றில்லைப்புறவிற்செறுவகத்த
கொழுந்தேன்மலர்வாய்க்குமுதமிவள்யான்குருகூச்சுடர்கொண்
டெழுந்தாங்கதுமலர்த்தும்முயர்வானத்திளமதியே.

(இ-ள்.) யான் அழுந்தேன் நரகத்து என்று இருப்ப - நானினி நரகத்துப் புக்கழுந்தே னென்று செம்மாந் திருக்கும்

வண்ணம்,—வந்து ஆண்டுகொண்ட செழு தேன் திகழ் பொழில் தில்லை - (தானே)வந் தாண்டுகொண்ட செழுந்தேன் போல்வா னது விளங்கும் பொழிலையுடைய தில்லையைச் சூழ்ந்த,—புற வில் செறுவகத்த கொழு தேன் - (இளங்) காட்டிற் செய்யின் கண்ணவாகிய கொழுவிய தேனையும்,—மலர் வாய்-மலராநின்ற வாயையு முடைய,—குமுதம் இவள் - குமுதமலர் இவள்,— குரு சுடர் கொண்டு எழுந்து - நிறத்தையுடைய நிலாவைக்கொ ண் டெழுந்து,—அது மலர்த்தும் உயர் வானத்து இள மதி யான் - அக் குமுதத்தை மலர்த்தும் உயர்ந்த வானத்தின்கண் திகழும் இளஞ் சந்திரன் நான். எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - நயப்புணர்த்துதல்.

நரகம் - பிறவி. வீடு பேற்றின்பத்தோடு சாராத நரகமுஞ் சுவர்க்கமு மொரு நிகரன வாகலின் நரகமென்றார். ஆண்டு கொண்டா னென்பது பாடமாயின் செழுந்தேனைப் பொழிலின் மேலேற்றுக. செறு - நீர் நிலையுமாம். வாய் - முகம். மலர்வா ய்க்குமுதம் - கிண்கிணிவாய்க் கொள்ளு நிலைமை; அதனா லிவ ளது பருவம் விளங்கும். குருஉச் சுடர்கொண்டு மலர்த்து மெ னக் கூட்டிக் குருஉச்சுடரான் மலர்த்துமென் றுரைப்பினுமமையும்; அதனால், தலைப்பெய்தமை யானன்றிக் கண்ட துணை யான் அவள் மகிழ்தலைக் கூறினானும். இவ்வின்பம் வழிமுறை யாற் பெருகுமென்பது போதர இளமதியென்றான். (கசுசு)

## பள்ளியிடத்துய்த்தல்.

பிரிவது கருதிய பெருவரை நாடன்
றொள்ளிழைப்பாங்கியொடு பள்ளிகொள் கென்றது.

(இ - ள்.) (மலர்மதிமேல் வைத்துக்கூறிப்) பிரி தலைக் கருதிய பெருமலை நாடனாகிய தலைமகன், (த லைமகளை நோக்கி) ஒள்ளிழையை யணிந்த பாங்கியி டஞ் சென்று துயில் பயில்வாயென்றது.

சுரும்புறுநீலங்கொய்யற்றமிநின்றுதுயில்பயின்மோ
வரும்பெறற்றோழியொடாயத்துநாப்பணமரரொன்னு
ரிரும்புறுமாமதிற்பொன்னிஞ்சிவெள்ளிப்புரிசையன்றோர் [கே.
துரும்புறச்செற்றகொற்றத்தெம்பிரான்றில்லைச்சூழ்பொழிற்

(இ-ள்.) அமரர் ஒன்னார் - தேவர்களுக்குப் பகைவராயினாருடைய,—இரும்பு உறு மா மதில் - இரும்பினாற் செய்யப்பட்ட பெரிய மதிலையுடைய(ஊரும்),—பொன் இஞ்சி - பொன் மதிலையுடைய (ஊரும்),—வெள்ளி புரிசை - வெள்ளி மதிலையுடைய (ஊரும்),—அன்று ஓர் துரும்பு உற - அன்று ஓர் துரும்பின்தன்மையைப் பொருந்தும்படி,—செற்ற கொற்றத்து எம்பிரான் - எரித்த வெற்றியையுடைய எம்பிரானது, — தில்லை சூழ் - தில்லைக்கண் சூழ்ந்த,—பொழிற்கு - பொழிலிடத்து,—தமி நின்று சுரும்பு உறு நீலம் கொய்யல்-தனியேநின்று வண்டுகள்பொருந்திய நீலப்பூக்களைக் கொய்யாதொழி,— அரு பெறல் தோழியொடு - பெறுதற்கரிய (நின்) தோழியுடனே, — ஆயத்து நாப்பண் துயில் பயில் - ஆயத்தினிடை நித்திரை செய்வாயாக. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - புறத்தாரறியாமைப் பிரிதல்.

மோரீ - அசை. சுரும்புறு நீலம் - மேலாற் சுரும்புவந்து பொருந்து நீலமலர். பொழிற் கென்பது - வேற்றுமை மயக்கம். பொழிலே யென்பதூஉம் பாடம். (கசுஎ)

### வரவுவிலக்கல்.

தெய்வமன்னாளைத் திருந்தமளிசேர்த்தி
மைவளைநாடனை வரவுவிலக்கியது.

(எ-து.) (பாங்கி), தெய்வம் போன்றுளாகிய தலைமகளைத் திருந்திய பள்ளியிடத்துச் சேர்த்துப் பின்னுஞ் சென்று மேகங்கள் தவழும் மலைநாடனாகிய

தலைமகனை இவ்வாறொழுக வேண்டாமென வரைவு
பயப்பக்கூறி அவனதுவரவு விலக்கியது.

நற்பகற்சோமனெரிதருநாட்டத்தன்றில்லையன்ன
விற்பகைத்தோங்கும்புருவத்திவளின்மெய்யேயெளிதே
வெற்பகச்சோலையின்வேய்வளர்தீச்சென்றுவிண்ணினின்ற
கற்பகச்சோலைகதுவுங்கன்னாடவிக்கல்லதரே.

(இ - ள்.) வெற்பகம் சோலையின் வேய் வளர் தீ - வெற்பிடத்துச் சோலையின்கணுண்டாகிய மூங்கிலினிடத்துப் பிறந்து வளருந் தீயானது,—விண்ணில் நின்ற கற்பகம் சோலை சென்று கதுவும் - விண்ணின்கணின்ற கற்பகச் சோலையைச் சென்று பற்றும்,—கல் நாட - மலைநாடனே !,— இ கல் அதர் - இக் கல்லையுடைய சிறுநெறியானது (உனக்கு),—நல் பகல் சோமன் எரி தரும் நாட்டத்தன் - நல்ல ஞாயிறும் திங்களும் தீயுமுண்டாக்கிய (மூன்று) நாட்டத்தையு முடையவனது,— தில்லை அன்ன வில் பகைத்து ஓங்கும் புருவத்து இவளின் - தில்லையையொக்கும் வில்லைப் பகைத்து அதனின் மிகும் புருவத்தையுடைய இவள் காரணமாக,—மெய்யே எளிது - மெய்யாகவே எளிதாயிற்று. (ஆயினும் நீ வரற்பாலை யல்லை). எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரவுவிலக்கி வரைவுகடாதல்.

தில்லையன்ன விலவெனவியையும். இவளின்மெய்யே யெளிதே யென்பதற்கு இவள் காரணமாக எளிதாமோ எளிதன்றென வெதிர்மறையாக்கி யுரைப்பினு மமையும். வேயிற்பிறந்த தீ ஆண்டடங்காது சென்று தேவருலகத்தினின்ற கற்பகச் சோலையைக் கதுவினாற்போல நின்வரவினால் அயலாரிடத்துப் பிறந்த அலர்பெருகி நின்னூருமறியப்பரந்து நின்பெருமையைச் சிதைக்குமென உள்ளுறைவகையான் அலரறிவுறுத்த வாறாயிற்று. இவனுக்குப் பெருமையாவது இவன்வழியிற் பிதிர்கள் கொண்டாட்டம். சிதைத்தலாவது இகலோக பரலோக மிரண்டையுஞ் சிதைத்தல், மன் விகாரவகையால் வலிந்து நின்றது.

## ஆற்றதுரைத்தல்.

வரைவுகடாய வாணுதற் றோழிக்
கருவரைநாட னாற்றாதுரைத்தது.

(எ-து.) வரைவுகடாவி வரவுவிலக்கிய வாணுதற் பாங்கிக்கு (அவ்வரை வுடம்படாமல் பின்னுங் களவொழுக்கமே வேண்டி) அருமையாகிய மலைநாடனாகிய தலைமகன் தன்னாற்றாமை தோன்றக்கூறியது.

பைவா யரவரை யம்பலத் தெம்பரன் பைங்கயிலைச்
செவ்வாய்க் கருங்கட் பெரும்பணைத் தோட்சிற் றிடைக்கொடியை
மொய்வார் கமலத்து முற்றிழை யின்றென் முன்னைத் தவத்தா
லிவ்வா றிருக்குமென் றேநிற் பதென்று மென்னின் னுயிரே.

(இ-ள்.) பை வாய் அரவு அரை - படத்தையும் (பெரிய) வாயையுமுடைய அரவை யணிந்த அரையையுடைய,— அம்பலத்து எம் பரன் - அம்பலத்தின்கண் ணுளனாகிய எம்முடைய பரனது,— பை கைலை-(சோலையாற்) பசிய கைலைக்கணுள்ள,— செவ்வாய் கருங்கண் பெரு பணைத்தோள் சிற்றிடை கொடியை - செய்ய வாயையும் கரிய கண்ணையும் பெரிய மூங்கில் போலும் தோள்களையும் சிறிய இடையையு முடைய கொடி போல்வாளை,—மொய்வார் கமலத்து முற்றிழை - பெரிய (நீ)ளத்தால் நீண்ட கமலத்துவாழும் திருமகள்,—என் முன்னை தவத்தால் இன்று இவ்வாறு இருக்குமென்றே-எனது முற்பிறப் பின்க ணுண்டாகிய தவப்பயனால் (எனக்கெய்தலாம் வண்ணம்) இன்றிவ்வாறு(கொடிச்சியாய்) இருக்குமென்று கருதியே,—என் இன் உயிர் என்றும் நிற்பது - என்னுடைய இன்னுயிர் என்றும் நிற்பது. (இத்தன்மையாளை யான்வரையுந் துணை வெளியளாக நீ கூறுகின்றதென்?) எ-று. மெய்ப்பாடு-உவகை; பயன்-வரைவுடம் படாமை.

கைலைக்கொடியென வியையும். கொடியையென்னு மிரண்டாமுருபு என்றுகருதியென வெஞ்சிநின்ற வினையொடு முடியும்.()

## இரக்கங்கூறி வரைவுகடாதல்.

அதிர்கழலவ னகன்றவ ழி
யெதிர்வதறியா திரங்கியுரைத்தது.

(எ - து.) (களவுவிரும்பி ஆற்றுதரைத்த) ஒலிக்கின்ற கழலையுடைய தலைமகன் நீங்கியபின் அவன் செல்லும் வழியில் இடையூறுண்டாமென்னு மச்சத்தால் அழுதிரங்கா நிற்கின்றாளென்று பாங்கி, தலைமகனுக்குத் தலைமக ளிரக்கங் கூறியது.

பைவாயரவுமறியுமழுவும்பயின்மலர்க்கை
மொய்வார்சடைமுடிமுன்னவன்றில்லையின்முன்னினக்காற்
செவ்வாய்கருவயிர்ச்சேர்த்திச்சிறியாள்பெருமலர்க்கண்
மைவார்குவளைவிடுமன்னநீண்முத்தமாலைகளே.

(இ-ள்.) மன்ன - மன்னனே! (நீ செல்லுமார்க்கத்தில் நினக்கிடையூறுண்டாகுமென்னும் அச்சத்தால்),—சிறியாள் பெருமலர் கண் மை வார் குவளை-இச்சிறியாளுடைய பெரியமலர்போலும் கண்களாகிய கருமையையுடைய நெடிய குவளைகள்,—நீள் முத்தம் மாலைகள் விடும்-நீண்ட முத்தமாலைகளைப்புறப்பட விடாநிற்கும்(ஆகலான்),—பை வாய் அரவும் மறியும் மழுவும் பயில்மலர் கை-படத்தையும் பெரிய வாயையுமுடைய அரவும் மான் குட்டியும் மழுவாயுதமும் விடாது நிகழும் மலர்போலுங் கையையும்,—மொய் வார் சடை முடி - நெருங்கிய நீண்டசடைகளாகிய முடியையுமுடைய,—முன்னவன் - (எல்லாப் பொருட்கு) முன்னுயவனது,—தில்லையின் முன்னினக்கால் செவ்வாய் கருவயிர் சேர்த்து - தில்லையின் எல்லையில் சென்று கிட்டினும் நின் செய்யவாயைக் கரிய கொம்பின்கண் சேர்த்து ஊதவேண்டும். எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவு கடாதல்.

கண்ணாகிய குவளைப்பெருமலரென்று கூட்டுவாரும், மலர் நிலையுடைய கண்ணெனப்பாருமுளர். குறிஞ்சி நிலத்திற்குரிய

கோலத்தனாய் வருதலின் வயிர் கூறப்பட்டது. மலர்க்கண் என்றது உவமை கருதாது கண் என்னுந்துணையாய் நின்றது. (கஎ0)

## நிலவு வெளிப்படவருந்தல்.

தனிவேலவற்குத் தந்தளர்வறியப்
பனிமதிவிளக்கம் பாங்கிபகர்ந்து.

(எ - து.) (இரக்கங்கூறி வரைவுகடாய) பாங்கி, ஒப்பிகந்த வேலையுடைய தலைமகனுக்கு, குளிர்மதி வெளிப்பட்டால் அதனால் தமக்குண்டாந் தளர்ச்சியைச் சிறைப்புறமாக அறியக்கூறியது.

நாகந்தொழவெழிலம்பலநண்ணிநடநவில்வோ
னாகமிதுமதியேமதியேநவில்வேற்கையெங்க
ணாகம்வரவெதிர்நாங்கொள்ளுநள்ளிருள்வாய்நறவார்
நாகமலிபொழில்வாயெழில்வாய்த்தநின்னாயகமே.

(இ-ள்.) நவில் வேல் கை எங்கள் நாகம் வர - பயிலப்பட்ட வேலேந்திய கையையுடைய எங்கள்யானைவர,—நாம் எதிர்கொள்ளும் நள் இருள்வாய் - நாங்க ளெதிர்கொள்ளும் செறிந்த இருளிடத்து,—நறவு ஆர் நாகம் மலி பொழில்வாய் - (அவ்விருளைச் சிதைத்து) தேன்பொருந்திய நாகமலர் நிறைந்த பொழிலிடத்து (நின்று),—எழில் வாய்த்த நின் நாயகம் - (நீசெய்கின்ற) அழகுவாய்த்த நினது முதன்மை, — மதியே - திங்களே !,— மதியே - (நீ) அறிந்து செய்யுங் காரியமே,—நாகம் தொழ எழில் அம்பலம் நண்ணி - (பதஞ்சலி யாகிய) நாகந்தொழ அழகு பொருந்திய அம்பலத்தை யடைந்து, — நடம் நவில்வோன் - கூத்தைப் பயில்வானது, — நாகம் இது - மலை யிஃது. (இதனைக் கடைப் பிடிப்பாயாக.) எ - று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - இடையீ டறிவித்தல்.

நாகத்தான் விழுங்கப்படும் நீ நாகந்தொழ வம்பலத்து நடம் பயில்வோனது மலைக்கட் புகுந்து எமக்கு வருத்தமுண்டாகும்

படி விளங்கி வீற்றிருத்தல் நினக்கு நன்றி பயவாதென்பது கருத்து. அறிவு என்றது ஈண்டறிந்து செய்யப்படுங்காரியத்தை. தனிநாயகமென்பது உம்பாடம். (கஎக)

## அல்லகுறியறிவித்தல்.

வல்லியன்ன வளல்லகுறிப் பா
டறைப்புனற்றுறைவற்குச் சிறைப்புறத்துரைத்தது.

(எ - து.) குறியல்லாத குறி யெதிர்ப்பட்டதைக் கொடிபோல்வாளாகிய பாங்கி, அறைதலை யுடைய புனலையுடைய துறைவனாகிய தலைமகனுக்குச் சிறைப்புறத்திற் கூறியது.

மின்னங்கலருஞ்சடைமுடியோன்வியன்றில்லையன்ன
யென்னங்கலமரலெய்தியதோவெழின்முத்தந்தொத்திப்
பொன்னங்கலர்புன்னைச்சேக்கையின்வாய்ப்புலம்புற்றுமுற்று
மன்னம்புலருமளவுந்துயிலாதழுங்கினவே.

(இ-ள்.) மின் அங்கு அலரும் சடை முடியோன் - ஒளி அவ்விடத்து விரியும் சடையா னியன்ற முடியை யுடையவனது,— வியன் தில்லை அன்னாய் - அகன்ற தில்லையை யொப்பாய் !,— எழில் முத்தம் தொத்தி அங்கு பொன் அலர் - அழகையுடைய (அரும்பாகிய) முத்தங்கள் தொத்தி யவ்விடத்து (தாதாகிய) பொன்மலரும்,—புன்னை சேக்கையின் வாய் - புன்னைமரத்தின் கணுள்ள தம்படுக்கையிடத்து,—அன்னம் முற்றும் புலம்புற்று-அன்னங்களெல்லாம் துன்பமுற்று,—புலரும் அளவும் துயிலாது அழுங்கின - புலரியளவும் துயிலாது ஆர வாரித்தன, — அங்கு எய்தியது அலமரல் என்னோ - அவ்விடத் தெய்தியதாகிய வருத்தம் என்னும் ? (அறிகின்றிலேன்). எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - அல்லகுறிப் பட்டமை தலைமகனுக் குணர்த்துதல்.

மின்னங்கலரு மென்பதற்கு மின் அவ்விடத் தலர்ந்தாற் போலுஞ் சடையெனினு மமையும். என்னங்கலமா லெய்திய தோ வென்பதற்கு என்ன வலமரலாண் டெய்திற்றோ வென்று கூட்டி யுரைப்பினு மமையும். நெடும்பொழுது துயின்றிலவென் பாள் புலருமளவுமென்றாள். பிற்றைஞான்று பகற்குறிவந்து நிற்பக் கூறினளெனினு மமையும். அழுங்கல் இரக்கமெனினு மமையும். இனித்திணை செய்தல். (கஎஉ)

### கடலிடைவைத்துத் துயரறிவித்தல்.

எறிகடன்மேல்வைத் திரவருதுயரம்
அறைகழலவற் கறியவுரைத் தது.

(எ-து.) (அல்லகுறியறிவித்தபாங்கி,) ஒலிக்கின்ற கழலையுடைய தலைமகனுக்குச் சிறைப்புறமாக அலையெறிகின்ற கடலின்மேல்வைத்து இரவில்வருந் துயர மறியச்சொன்னது.

சோத்துன்னடியமென்றோரைக்குழுமித்தொல்வானவர்சூழ்
தேத்தும்படிநிற்பவன்றில்லையன்னாளிவளை
வார்த்துன்னமிழ்துந்திருவுமதியுமிழந்தவநீ
பேர்த்துமிரைப்பொழியாய்பழிநோக்காய்பெருங்கடலே.

(இ-ள்.) பெருங்கடலே - பெரிய சமுத்திரமே !—ஆர்த்து உன் அமிழ்தும் திருவும் மதியும் இழந்தவன் - (முற்காலத்து யிவ்வாறு) ஒலித்து உன் அமிர்தத்தையும் திருவையும் திங்களையும் இழந்தவனாயிருந்தும்,—பேர்த்தும் - பின்னும் (ஒருபயனு மின்றியே),—சோத்தம் உன் அடியம் என்றோரை தொல் வானவர் குழுமி சூழ்ந்து ஏத்தும் படி நிற்பவன் - சோத்தம் உன்னடியம் என்றொருகாற் சொன்னோரைப் பழையராகிய வானவர் கூடிப் பரிவாரமாய்ச் சூழ்ந்து நின்றேத்தும் வண்ணம் நிற்கும்மவனது,—தில்லை அன்னாள் இவள் துவள - தில்லையை யொத்தவளாகிய இவள் வாட,—நீ இரைப்பு ஒழியாய்-நீ ஒழியாதிரைகின்றாய்,—பழிநோக்காய் - (காரணமின்றிப் பிறரை வருத்துதல்

லான்வரும்) பழியையும் நோக்காய். (நினக்கிது நன்றோ?) எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - அல்ல குறிப்பட்டமை தலைமகனுக் குணர்த்துதல்.

சோத்தம் - இழிந்தார் செய்யுமஞ்சலி, அது சோத்தெனக் கடைக்குறைந்து நின்றது. சோத்த மடியமென்பதூஉம், அடிய மெனிற் குழுமித்தொல்லை வானவ ரென்பதூஉம், 'குழீஇத் தொல்லை வானவர்சூழ்ந் தேத்தும்படி வைப்பவ னென்பதூஉம் பாடம். "இருவு மதியுமென்பது செல்வமு மறிவுமென வேறு மொருபொருள் தோன்ற நின்ற தென்பாரு முளர். இராக்குறி நின்றது. (கஎங)

## காமமிக்ககழிபடர்கிளவி.

தாமமிக்க தாழ்குழலேழை
காமமிக்க கழிபடர்கிளவி.

(எ-து.) (தலைமகனைக் காணலுற்று வருந்தாநின்ற) மாலையணிந்த தாழ்குழலையுடைய தலைமகள், வேட்கை மிக்குச் சிறப்பச் சிந்தித்துச் சொல்லுஞ் சொல்.

மாதுற்றமேனிவளையுற்றவில்லிதில்லைநகர்சூழ்
போதுற்றபூம்பொழில்காள்கழிகாளெழிற்புள்ளினங்கா
ளேதுற்றழிதியென்னீர்மன்னுமீர்ந்துறைவர்க்கிவளோ
தீதுற்றதென்னுக்கென்னீரிதுவோநன்மைசெப்புமினே.

(இ-ள்.) மாது உற்ற மேனி - மாது பொருந்திய மேனியை யுடைய,—வளை உற்ற வில்லி - வளையாகிய மிக்க வில்லையுடையவனது,—தில்லை நகர் சூழ் போது உற்ற பூம் பொழில்காள் - தில்லை நகரைச் சூழ்ந்த அரும்பு பொருந்திய மலர்களை யுடைய பொழில்காள்!—கழிகாள் - (அப்பொழிலைச் சூழ்ந்த) கழிகாள்!—எழில் புள்ளினங்காள் - (அக்கழிகளிற் பயிலும்) அழகை யுடைய பறவைக் கூட்டங்காள்!—ஏது உற்று அழிதி என்னீர்- (என்னை நீங்கள் யாதனை யுற்றழிகின்றாயென்று ஒருகாற் கூறு

இன்றிலீர்,—ஈரம் துறைவர்க்கு - குளிர்ந்த துறைவருக்கு,— இவள் தீது உற்றது என்னுக்கு என்னீர் - இவள் குற்றஞ்செய்தது எதுக்கென்று கூறுகின்றிலீர்,—இதுவோ நன்மை - இதுவோ (நம்மாட்டுறும்) காதன்மை, — செப்புமின். - சொல்லுங்கள். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - அயர்வுயிர்த்துத் தானே ஆற்றுதல். மன்னும் - ஓவும் - அசைநிலை.

மாதுற்ற மேனியென்பது ஆகுபெயராய் மேனியை யுடையான்மேல் நின்றதெனினு மமையும். வரையுற்ற வில்லியென்பதற்கு வரைத்தன்மையைப் பொருந்திய வில்லையுடையானெனினு மமையும். இதுவோ நன்மை என்பதற்குத் தில்லையைச் சூழ்ந்தவிடத் துள்ளீராகலின் உமக்குண்டாகிய சிறப்புடைமையிதுவோவெனினுமமையும். அழுதியென்பதூஉம்பாடம். (கஎச)

## காப்புச்சிறைமிக்க கையறுகிளவி.

மெய்யறு காவலிற்
கையறு கிளவி.

(எ - து.) (காமமிக்கு எதிர்ப்படவிரும்பாநின்ற தலைமகள்) பிழையாத மிக்க காவலாற் கையற்றுச் சொல்லுஞ் சொல்.

இன்னறவார்பொழிற்றில்லைநகரிறைசீர்விழவிற்
பன்னிறமாலைத்தொகைபகலாம்பல்விளக்கிருளின்
றுன்னறவுய்க்குமில்லோருந்துயிலிற்றுறைவர்மிக்க
கொன்னிறவேலொடுவேந்திடின்ஞாளிகுரைதருமே.

(இ - ள்.) இன் நறவு ஆர் பொழில் தில்லை நகர் இறை சீர் விழவில் - இனிய தேன் நிறைந்த பொழிலை யுடைய தில்லை நகர்க்கிறைவனது சீரை யுடைய திருவிழாவின் கண்,—பல் நிறம் மாலை தொகை பகலாம் - பல நிறங்களையுடைய (மாணிக்க முதலிய மணிகளாற் றொடுக்கப்பட்ட) மாலைகளின் தொகைகளான்

இராப்பொழுதும்) பகலாகா நிற்கும்,—பல் விளக்கு தன் இருளின் அற உய்க்கும் - (அதுவேயு மன்றி) பலவாகிய விளக்குகள் பொருந்திய இருளை யறத்தூரக்கும்,—இல்லோரும் துயிலின் - இவ்விடை யீடேயன்றி யொருபொழுதுந் துயிதாத) இல்லோரும் ஒருகாற் றுயில்வாராயின்,—துறைவர் மிக்க கொன் நிறம் வேலொடு வந்திடின் - துறைவர் (அச்சத்தைச் செய்யும்) மிக்க நிறத்தை யுடைய வேலோ டொருகால் வருவாராயின்,—ஞாளி குரைதரும் - அப்பொழுது நாய் குரையா நிற்கும். (அதனால் அவரை நா மெதிர்ப்படுத லரிது போலும்). எ-று. மெய்ப்பாடு- அழுகை; பயன் - அயர்வுயிர்த்துத் தானே ஆற்றுதல்.

மாலைத் தொகையும் இராப்பக லாகா நிற்கும், பலவிளக்கும் இருளைத் தூரக்குமென் றுரைப்பினு மமையும். இல்லோருந் துயிலினென் றதனன், அதுவு மோரிடை யீடுகூறப் பட்டதாம். மிக்கவேலென் றியைப்பினு மமையும். (கஎரு)

## ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

நாறுவார்குழ லவ்விநோக் கி
ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

(எ - து.) மணங்கமழ்கின்ற நீண்ட குழலையும் மான்போலு நோக்கமுமுடைய பாங்கி, தலைமகன் வந்த வழிக்குப் பரிவுற்றுக் குறிப்பின்றியே வருவதோர் நடுக்கத்தாற் சொல்லுஞ் சொல்.

தாருறுகொன்றையன்றில்லைச்சடைமுடியோன்கயிலை
நீருறுகான்யாறளவிலநீந்திவந்தானினது
போருறுவேல்வயப்பொங்குருமஞ்சுகமஞ்சிவருஞ்
சூருறுசோலையின்வாய்வரற்பாற்றன்றுதூங்கிருளே.

(இ - ள்.) தார் உறு கொன்றையன் - தாராகிய மிக்க கொன்றையை யடையவன்,—தில்லை சடை முடியோன் - தில்

லேக்க ணுளனுகிய சடையானியன்ற முடியையுடையவன்,— கயிலே நீர் உறு கான் யாறு அளவில நீந்தி வந்தால் - (அவனது) கைலேயின் நீரான் மிக்க எண்ணிறந்த கானுறுகளை நீந்திவந் தால்,—வயம் பொங்கு உரும் - (அவ்விடத்து) வலியையுடை ய பொங்கும் இடியேறு, — நினது போர் உறு வேல் அஞ்சக- நினது போர்மிக்க வேலேயஞ்சிநின்பால் வராதொழிக,—சூர் உறு மஞ்சு இவரும் சோலேயின்வாய் - (ஆயினும்) தெய்வம் பொருந் தும் மஞ்சு பரக்கும் சோலேயிடத்து, — தூங்கு இருள் - செ றிந்த இருட்கண்,—வரற்பாற்றன்று - வரும்பான்மைத் தன்று. (அத்தெய்வங்களை யாமஞ்சுதும்). எ-று. மெய்ப்பாடு-அச்சம்; பயன் - வரைவுகடாதல்.

தாருறை கொன்றைய னென்பது பாடமாயின், தார் தங்கு கொன்றையனென முதலாகிய தன்பொருட் கேற்ற வடை யடுத்து நின்றதாக வுரைக்க. இப்பாடத்திற்கு ஏனை மூன்றடியும் உறையென்றேதும். வரற்பாற்றன்றென்பதுவிளிமேனின்றது()

**தன்னுட்கையாறெய்திடுகிளவி.**

மின்னுப்புரையு மருங்குல்
தன்னுட்கையா றெய்திடுகிள வி.
(எ-து.) மின்னலேப்போலு மழகிய நுட்பமாகிய
இடையையுடைய தலேமகள், தன்னுட்கையாற்றினை
யே இல்லதொன்றன்மேலிட்டுச்சொல்லுஞ்சொல்.

விண்டலேயாவர்க்கும்வேந்தர்வண்டில்லேமெல்லங்கழிசூழ்
கண்டலேயேகரியாக்கன்னிப்புன்னேகலந்தகள்வர்
கண்டிலேயேவரக்கங்குலெல்லாமங்குல்வாய்விளக்கு
மண்டலமேபணியாய்தமியேற்கொருவாசகமே.

(இ - ள்.) கங்குலெல்லாம் மங்குல் வாய் விளக்கும் மண்ட லமே - இராமுழுதும் ஆகாயத் திடத்தை விளக்கும் (மதி மண்டலமே!,—விண் தலே யாவர்க்கும் வேந்தர் வண் இல்லே

மெல்லங் கழி சூழ் - விண்ணிடத் துள்ளாராகிய எல்லார்க்கும் வேந்தரா யுள்ளாரது வளவிய தில்லை வரைப்பின் மெல்லிய கழி சூழ்ந்த,—கன்னி புன்னை கண்டல் கரியாக கலந்த கள்வர்- இளைய புன்னைக்கண் (இத்) தாழை சான்றாகக்கொண்டு என்னைக் கலந்த கள்வர்,—வரக் கண்டிலையே - (ஒருக்கால்) வரக் கண்டிலையோ?—தமியேற்கு ஒரு வாசகம் பணியாய் - துணையில்லா தோருக் கொருசொல் லருளாய். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - அயர்வுயிர்த்தல்.

மென்மை-நிலத்தின் மென்மை. கழிசூழ் புன்னையெனக் கூட்டுக. கரியாகக் கொண்டென வொருசொல் வருவித்து இரண்டாவதாக வுரைப்பினு மமையும். எஞ்ஞான்றும் மனத்ததொன்றாகத் தாமொன்று மொழிந்தானொன்றுஞ் செருந்தாத் தன்மையொன்றுள். கள்வர்க் கண்டிலையே யென்பது பாடமாயின் இரண்டாமுருபுவிரிக்க. கங்குலெல்லாங் கண்டிலையே யென்று கூட்டி யுரைப்பினுமமையும். கண்டலை - ஐ-அசைநிலை. (௧௭௭)

நிலைகண்டுரைத்தல்.

மின்னினழிந்தனன் மின்னிடைமாதென
வரைவுதோன்ற வுரைசெய்த து.

(எ - து.) (தலைமகள் மதியொடுகூறி வருந்தாநின்றமை தலைமகன் சிறைப்புறமாகக் கேட்டு வருந்த, பாங்கி தலைமகனை நோக்கி) உன்னா லழிந்தனள்மின் போலு மிடையையுடைய தலைமகளென வரைவுதோன்றக் கூறியது.

பற்றொன்றிலார்பற்றுந்தில்லைப்பரன்பரங்குன்றினின்ற
புற்றொன்றரவன்புதல்வனெனநீபுகுந்துநின்றான்
மற்றுன்றுமாமலரிட்டுன்னைவாழ்த்திவந்தித்தலன்றி
மற்றொன்றுசிந்திப்பரோல்வல்லளோமங்கைவாழ்வகையே.

(இ - ள்.) பற்று ஒன்று இல்லார் பற்றும் தில்லைப்பரன் - (துறக்கப் படுவனவற்றின் மேல்) பற்றொன்று மில்லாதவர்கள் அறிந்து பற்றும் தில்லைக்க ணுளனாகிய பரன், — பரங்குன்றில் நின்ற புற்று ஒன்று அரவன் புதல்வன் என - பரங்குன்றின்கண் நின்ற புற்றொன் றரவையணிந்த அப்பரனது புதல்வனாகிய முருகவேளைப்போல,—நீ புகுந்து நின்றால்-நீ(இவ் வரைப்பிற்) புகுந்து நின்றால்,—மல்லல் துன்று மா மலர் இட்டு வாழ்த்தி-(கண்டவர்கள் இந்நிலத்திற் குரிய முருகவேளெனக் கருதி) வளத்தையுடைய நெருங்கிய பெரியமலர்களையிட்டு வாழ்த்தி,— உன்னை வந்தித்தல் அன்றி மற்று ஒன்று சிந்திப்பரோல் - நின்னை வணங்காதே பிறி தொன்றை நினைவாராயின்,— மங்கை வாழ் வகை வல்லளோ - மங்கை யுயிர்வாழும் வகை வல்லளோ?— (அதனாலிவ்வாறு ஒழுகற்பாலையல்லை). எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவுகடாதல்.

பரங்குன்றினின்ற புதல்வனென வியையும். மல்லல் - கடைக்குறைந்து நின்றது. மற்றொன்று சிந்தித்தல் இவள் காரணமாக வந்தானென்று கருதுதல். முருகனென்றலே பெரும்பான்மை யாகலின், உண்மை யுணர்தலை மற்றொன் றென்றாள். ஏதஞ் செய்யக் கருதுத லென்பாரு முளர். (௧௭௮)

## இரவுறுதுயரங் கடலொடுசேர்த்தல்.

எறிவேற்கண்ணி யிரவுறுதுயரஞ்
செறிகடலிடைச் சேர்த்தியுரைத்தது.

(எ-து.) (தலைமகனை யெதிர்ப்படமாட்டாது வருந்தாநின்ற) எறிகின்ற வேல்போலுங் கண்ணினளாகிய தலைமகள் இரவின்கண் தானுற்ற துன்பத்தை எல்லைகடவா நிலைமையையுடைய கடலிடைச் சேர்த்திக் கூறியது.

பூங்கணைவேளைப்பொடியாய்விழவிழித்தோன்புலியூ
ரோங்கணைமேவிப்புரண்டுவிழுந்தெழுந்தோலமிட்டுத்
திங்கணைந்தோ ரல்லுந்தேறாய்கலங்கிச்செறிகடலே
யாங்கணைந்தார்நின்னையும்முளரோசென்றகன்றவரே.

(இ - ள்.) பூ கணை வேளை - பூவாகிய கணையையுடைய மன்மதனை,—பொடியாய் விழ விழித்தோன் - பொடியாய் விழும்வண்ணம் விழித்தவனுடைய,—புலியூர் செறி கடலே - புலியூர் வரைப்பிற் செறிந்த கடலே!—ஓங்கு அணை மேவி புரண்டு விழுந்து எழுந்து ஓலமிட்டு திங்கு அணைந்து ஓர் அல்லும் கலங்கித் தேறாய் - (நீ) யோங்கியவணைந்த கரையைப் பொருந்திப் புரண்டு விழுந்தெழுந்து கூப்பிட்டுத் துன்பமுற்று ஓரிரவுங் கலங்கித் தெளிகின்றிலை.—அணைந்தார் - (ஆகலான்) அணைந்தவர்,—நின்னையும் அகன்று சென்றவர் - நின்னையும் விட்டுப் போனவர்,—ஆங்கு உளரோ - அவ்விடத் துளரோ? (உரைப்பாயாக). எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - அயர்வுயிர்த்தல்.

புலியூர்க் கடலே கலங்கித் தேறுயென்று கூட்டினு மமையும். பிரிவாற்றுதார்க்கு அணைமேவுதல் பஞ்சியணைமேவுதல். அணைந்தா ரென்பதூஉம் சென்றகன்றவ ரென்பதூஉம் அடுக்காய் உளரோ வென்னும் பயனிலைகொண்டன. ஆங்கு அசைநிலையுமாம். (கஎகூ)

அலரறிவுறுத்தல்.

அலைவேலண்ணலன் மனமகிழரு ள்
பலராவறியப் பட்டதென்ற து.

(எ - து.) (தலைமகளது துயரத்தைச் சிறைப்புறமாகக்கேட்டுக் குறியிடைச் சென்றுநின்ற தலைமகனை நோக்கிப் பாங்கி) பிறரைவருத்து மியல்பையுடைய வேலேந்திய தலைமகனே! யாவரு மனமகிழாநின்ற அருளாவது பலராலு|மறியப்பட்டதென்று கூறியது.

அலராயிரந்தந்துவந்தித்துமாலாயிரங்கரத்தா
லலரார்கழல்வழிபாடுசெய்தாற்களவில்லொளிக
ளலராவிருக்கும்படைகொடுத்தோன்றில்லையானருள்போன்
றலராய்விரிகின்றதம்பல்கைம்மிக்கையமெய்யருளே.

(இ - ள்.) மால் - திருமால்,—அலர் ஆயிரம் தந்து வந்தித்து - தாமரை மலர் ஆயிரங்கொண்டு அருச்சித்து வணங்கி,—ஆயிரம் கரத்தால் - (தனது) ஆயிரம் கைகளாலும்,—அலர் ஆர் கழல் வழிபாடு செய்தாற்கு - மலர்போலும் கழலை வழிபடுதலைச் செய்தவற்கு,—அளவில் ஒளிகள் அலரா இருக்கும் படை கொடுத்தோன் - அளவில்லாத ஒளிகள் விரியாநிற்கும் ஆழியாகிய படையைக் கொடுத்தவன்,—தில்லையான் - தில்லையிலுள்ளான்,—அருள் போன்று - (அவனது) அருள்போல,—ஐய-ஐயனே! — மெய் அருள் - (நின்னுடைய) மெய்யாகிய அருளானது,—அம்பல் கை மிக்கு அலராய் விரிகின்றது - அம்பல் கைமிக்கலராய் விரியாநின்றது, (இனித்தக்கது செய்வாயாக). எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - அலரறிவுறீஇ வரைவு கடாதல்.

அலராவிருக்கு மென்பது ஓர் நிகழ்காலச்சொல். தில்லையானருள்பெற்றார் உலகியல்பினராய் நில்லாமையின், அவ்வருளுலகத்தார்க் கலராமென்பது கருத்து. * "நாடவர்நந்தம்மையார்ப்பவார்ப்ப" என்றதூஉம் அக்கருத்தே பற்றிவந்தது. அம்பல் - பரவாதகளவு, பழிமொழி.

† 'அம்பலுமலருங்களவு' என்பவாகலின். (கஅ0)

இரவுக்குறி முற்றிற்று.

* திருவாசகம் - திருப்பொற்சுண்ணம், செய்யுள் - எ.
† இறையனாரகப்பொருள். சூ - உஉ.

# ஒருவழித்தணத்தல்.

இவ்வா றிரவுக்குறிபுணர்ந்து அலரெழுந்ததென்று விலக்கப் பட்டபின் தெருண்டு வரைதலைத் தெருளானாயின் அவ்வல ரடங்க ஒருவழித்தணத்தல், உடன்கொண்டுபோதல், வரைவு முடுக்கம், ஆகிய இம்மூன்றனு ளொன்று முறையென்ப. அவற் றுள் ஒருவழித்தணத்த லென்பது தலைமகன் சிலநா ளொரு வழித்தணர் துறைதல்.

இக்கிளவி பதின்மூன்று துறைகளையுடைத்து, அவை வரு மாறு:—

அகன்றணைவுகூற லாழியொடுகேட்டல், ஆழியொடு புலந்து லன்னமோடாய்தல், ஆழிக்குரைத்த லாழியிழைத்தல், சுட ரொடுபுலம்பல் பொழுதுகண்டுமயங்கல், பையுளெய்தல் பரி வுற்றுரைத்தல், அன்னமோடழிதல் வரவுணர்ந்துரைத்தல், வரு த்தங்கூறல் வருபதின்மூன்றும், திருந்தியவொருவழித் திறனா கும்மே.

### அகன்றணைவுகூறல்.

வழிவேறு படமன்னு ம்
பழிவேறு படுமென்ற து.

(எ-து.) (அலரறிவுறுத்த பாங்கி தலைமகனை நோ க்கி) இவளையெய்து முபாயம் களவன்றி வரைவாய் வேறு படுமாயின் இவளுக்குப் பழித்தன்மை திரிந்து கெடும், அதனால் நீ அகன்றணைவாயென்று கூறியது.

புகழும்பழியும்பெருக்கிற்பெருகும்பெருகின்று
நிகழுநிகழாநிகழ்த்தினல்லாலிதுநீகிளேட்பி
னகழுமதிலுமணிதில்லையோனடிட்போதுசென்னித்
திகழுமவர்செல்லல்போலில்லையாம்பழிசின்மொழிக்கே.

(இ - ள்.) புகழும் பழியும் - (காரண வசத்தாற் பிறந்த) புகழும் பழியும்,—பெருக்கில் பெருகும் - (அக்காரணங்களைச் செய்தொருவன்) வளர்க்குமாயின் தாம் வளரும்,—நிகழ்த்தின் - (அக்காரணங்களை யிடையறாமற் செய்து) நிகழ்த்துவானாயின்,—பெருகி நின்று நிகழும் - (அவ்வாறு) வளர்ந்து நின்று மாயாது உளவாய்ச் செல்லும்,— அல்லால் நிகழா - (இவ்வாறல்லது அவை தாமாக) நிகழமாட்டா,—இது நீ நினைப்பின் - (அதனால்) இப்பெற்றியை நீ கருதுவையாயின்,—அகழும் மதிலும் அணி தில்லையோன் - அகழையும் மதிலையும் அணிந்த தில்லையானுடைய,— அடிபோது சென்னி திகழுமவர் - அடியாகிய மலர்கள் தஞ்சென்னிக்கண் விளங்கும் பெரியோரது, — செல்லல் போல் - பிறவித் துன்பம்போல,—சின்மொழிக்கு பழி இல்லையாம் - இச்சின்மொழிக்குப் பழி யிப்பொழுதே யில்லையாம். (நீ நினையாமையிற் பழியாகா நின்றது). எ-று. மெய்ப்பாடு - அச்சம் ; பயன் - அலரறிவுறீஇ வரைவுகடாதல். (சஅக)

## கடலொடுவரவுகேட்டல்.

மணந்தவரொருவழித் தணந்ததற்கிரங்கி
மறிதிரைசேரு மெறிகடற்கியம்பியது.

(எ-து.) தலைமகள் தன்னை மணந்தவர் ஒருவழித் தணத்தற்காற்றாது வருந்தி மடங்குந் திரைகள் எறியுங் கடலொடு தலைமகன் வரவுகேளா நிற்றல்.

ஆரம்பரந்துதிரைபொருநீர்முகின்மீன்பரப்பிச்
சீரம்பரத்திற்றிகழ்ந்தொளிதோன்றுந்துறைவர்சென்றா
போரும்பரிசுபுகன்றனரோபுலியூர்ப்புனிதன்
சீரம்பர்சுற்றியெற்றிச்சிறந்தார்க்குஞ்செறிகடலே.

(இ - ள்.) புலியூர் புனிதன் சீர் அம்பர் சுற்றி - தில்லையின்கணுளனாகிய தூயோனது புகழையுடைய அம்பலைச் சூழ்ந்து,—

எற்றி சிறந்து ஆர்க்கும் - (கரையை) மோதி மிக்கொலிக்கும்,— செறி கடலே - கரையில்லாத கடலே!—ஆரம் பரந்து திரை பொரு நீர் - முத்துப் பரந்து திரைகள் தம்முட்போர் செய்யும் (கடல்) நீர்,—முகில் மீன் பரப்பி - மேகத்தையும் மீனையும் தன் கண் பரப்பி,—சீர் அம்பரத்தில் திகழ்ந்து - அழகிய ஆகாயமே போல விளங்கி,—ஒளி தோன்றும் துறைவர் - ஒளி புலப்படுத்தும் துறையையுடையவர்,—சென்றார் - நம்மைவிட்டுச் சென்றவர்,—போரும் பரிசு புகன்றனரோ - மீண்டு வரும் பரிசு உனக்குக் கூறினரோ? (சொல்வாயாக). எ-று.

போதரும் - போருமென இடைக்குறைந்து நின்றது. பரப்பி என்னும் வினையெச்சம் சீரம்பரமென்னும் வினைத்தொகையின் முன்மொழியோடு முடிந்தது. பரப்பி விளங்குமென ஒருசொல் வருவித்து முடிப்பினுமாம். ஈண்டேனையுவமமுண்மையின் உள்ளுறையுவம மின்மையறிக. திகழ்ந்தென்றதனுன் ஒளிமிகுதி விளங்கும். (கஅ௨)

கடலொடுபுலர்த்தல்.

செறிவளைச் சின்மொ ழி
எறிகடற் கியம்பிய து.

(எ - து.) கையிற்செறிந்த வளையலையும் சின்மையாகிய சொல்லையுமுடைய (கடலொடுவரவுகேட்ட) தலைமகள் (தன்வளைகொண்டார் திறங்கேட்கத்தனக்கு அது வாய்திறவாமையின்) அலையெறிகின்ற அக் கடலொடு புலந்து கூறியது.

பாணிகர்வண் டினம்பாடப் பைம்பொன் றருவெண் கிழிதஞ்
சேணிகர் காவின் வழங்கும்புன்னைத் துறைச்சேர்ப்பர் திங்கள்
ஊணிகர் வெள்வளைகொண்டகன்றார் திறம்வாய் திறவாய்
பூணிகர் வாளரவன்புலியூர்சுற்றும்போர்க்கடலே.

(இ-ள்.) பூண் நிகர் வாள் அரவன் - ஆபரணத்தை யொத்த வொளியையுடைய அரவை யணிந்தவனது,—புலியூர் சுற்றும் போர் கடலே - தில்லையைச் சூழ்ந்த பொருதலையுடைய கடலே! — பாண் நிகர் வண்டு இனம் பாட - பாணரை யொக்கும் வண்டினங்கள் சென்று பாட,—பைம்பொன் தரும் - (தாதாகிய) பசும் பொன்னைச் சொரியும்,—வெண் கிழி - (போதாகிய) வெண்கிழியை,—தம் சேண் நிகர் காவின் வழங்கும் - தமது சேய்மைக்கண் விளங்குங் காவினின்று கொடுக்கும்,—புன்னை துறை சேர்ப்பர் - புன்னை மரங்களையுடைய துறையையணைந்த நெய்தனிலத்தலைவர்,—திங்கள் வாள் நிகர் வெள் வளை கொண்டு அகன்றார் - திங்களினது ஒளிபோலும் ஒளியையுடைய (என்) வெண்மையாகிய வளையலைத் தம்மொடு கொண்டுபோனார்,—திறம் வாய் திறவாய் - (அவரது) திறத்தை யெனக்குக் கூறுகின்றிலை. (நீ கூற தொழிகின்றதென்). எ - று.

கிழிதமென்று கிழிக்கும்பெயராக வுரைப்பாருமுளர். வாய்திறவா யென்பதற்குக் கூறுவாயாக வென்றுரைப்பினுமமையும்.()

### அன்னமோடாய்தல்.

மின்னிடை மடங் லை
அன்னமோ டாய்ந்த து.

(எ - து.) (கடலொடு புலந்துகூறிய) மின்போலு மிடையையுடைய தலைமகள், என்னையகன்றவ ரகன்றே யொழிவரோ யானறியேன், நீயேனுஞ் சொல்லென அன்னத்தோ டாராய்ந்து அவரது வரவு கேட்டது.

பகன்றுமனைக்கண்கெடக்கடந்தோன்புலியூர்ப்பழனத்
தகன்றுமனையன்னமேவண்டுநீலமணியணிந்து [யா
முகன்றுழ்குழைச்செம்பொன்முத்தணிபுன்னையின்னும்முனை
தகன்றாகன்றேயொழிவர்கொல்லோநம்மகன்றுறையே.

(இ-ள்.) பகன் - ஆதித்தனது,—தாமரை கண் கெட கடந்தோன் - தாமரைபோலுங் கண்கெட அவனை வென்றவனது,—புலியூர் பழனத்து - தில்லையைச் சூழ்ந்த பழனத்தின்கணுண்டாகிய,—அகல் தாமரை அன்னமே - அகன்ற தாமரைக்கண் வாழும் அன்னமே!—வண்டு நீலம் மணி அணிந்து - வண்டாகிய நீல மணியை யணிந்து,—செம்பொன் முத்து அணி - (தாதாகிய) செம்பொன்னையும் (அரும்பாகிய) முத்தையு மணிந்த,—முகம் தாழ் குழை புன்னை - முகத்துத் தாழ்ந்த குழையையுடைய புன்னை,—இன்னும் உரையாது - இந்நிலைமைக் கண்ணும் (ஒன்று) சொல்லுகின்ற தில்லை.—அகன்றார் - அகன்றவர்,—நம் அகல் துறை - நமதகன்ற துறையை,—அகன்றே ஒழிவர் கொல்லோ - அகன்றே விடுவரோ? (அறியேன் நீயுரைப்பாயாக). எ-று.

முகன்றாழ் குழை யென்றது இரண்டு பொருள்பட நின்றது. யானித்தன்மையேனாகவும் மணியணிந்தின் புற்று நிற்கின்ற புன்னை எனக்கொன்று சொல்லுமோ, அன்னமே எனக்கு நீ கூறென்பது கருத்து. ஈண்டுநம்மோடு தாம் விளையாடும் விளையாட்டை மறந்தே விடுவரோவென்னுங் கருத்தான் நமகன்றுறையை யகன்றே யொழிவர்கொல்லோ வென்றாள். ()

## தேர்வழிநோக்கிக் கடலொடுகூறல்.

மீன்றோய்துறைவர் மீளுமள வு
மான்றேர்வழியை யழியேலென்ற து.

(எ-து.) (அன்னத்தைக்கேட்க, அது வாய்திறவாமையான் எம்முயிர்க்குப் பற்றுக்கோடு இனி யிதுவேயென) மீன்தோய்கின்ற துறையையுடைய தலைவர் மீளும்வளையும் குதிரைபூட்டிய தேர்சென்ற வழியைத் தூரலென்று கடலொடு கூறியது.

உள்ளுமுருகியுரோமஞ்சிலிர்ப்பவுடையவனாட்
கொள்ளுமவரிலொர்கூட்டந்தந்தான்குனிக்கும்புலியூர்
விள்ளும்பரிசுசென்றார்வியன்றேர்வழிதூரற்கண்டாய்
புள்ளுந்திரையும்பொரச்சங்கமார்க்கும்பொருகடலே.

(இ-ள்.) புள்ளும் திரையும் பொர சங்கம் ஆர்க்கும் பொரு கடலே - புள்ளும் திரையும் தம்முட்பொர சங்குகளொலிக்கக் கரையோடு போர்செய்யுங் கடலே!—உள்ளும் உருகி உரோமம் சிலிர்ப்ப - உள்ளுமுருகி மெய்ம்மயிர் சிலிர்ப்ப,—உடையவன் ஆள் கொள்ளுமவரில் - உடையவனாகியதான் ஆட்கொள்ளும் அடியாருள்,—ஓர் கூட்டம் தந்தான் - எமக்கோர் கூட்டத்தைத் தந்தவன்,—குனிக்கும் புலியூர் - நின்று கூத்தாடுந் தில்லையை,—விள்ளும் பரிசு சென்றார் - நீங்கும் வண்ணஞ் சென்றவரது,—வியன் தேர் வழி - பெரிய தேர்போன வழியை,—தூரல் - (நின் திரைகளால்) தூராதொழிய வேண்டும், (எம்முயிர்க்குப் பற்றுக்கோடினி யிதுவே). எ-று.

உள்ளும் என்னு மும்மையால்புறத்துக் கண்ணீர் தழுவப்பட்டது. ஆட்கொள்ளுமவர் பெருமை தோன்ற உடையவனென்றார். விள்ளுதல் செலவான் வருங்காரிய மாகலின் விள்ளும் பரிசு சென்றாரென்றாள். குனிக்கும் புலியூர்நுகர்ச்சியை நினையாது நீங்கிய வன்கணாளர் இனிவருவரொன்னும் நசையிலம், அதனால் அவர் தேர்ச்சுவடாயினும் யாம்காண நீயதனை யழியாதொழியென்பது கருத்து. விள்ளும் பரிசுசென்றா ரொன்பதற்குப் புலியூரை நீங்கினாற்போல யான் துன்புறும் வண்ணமெனினு மமையும். விள்ளுதல் - வாய்திறத்தலென்று, அலர்கூறி நகும் வண்ணஞ் சென்றவரெனினு மமையும்.

கூட்டந்தந்தாரென்று பாடமோதி ஆட்கொள்ளு மவரைப் போ லின்புற எமக்கோர் புணர்ச்சியைத் தந்தாரெனத் தலை

மகன்மேலேற வுரைப்பாரு முளர். சுண்டாய்-முன்னிலையசைச்சொல். அல்பொருட்டற் குறிப்பேற்ற மென்னுமணி. (கஅரு)

கூடலிழைத்தல்.

நீடலந் துறையி ற்
கூட லிழைத்த து.

(என-து.) (தேர்வழிநோக்கிக் கடலொடு கூறுகின்ற தலைமகள், இம்மணற்குன்றின்கண் நீத்தகன்ற தலைமகனை மனநெகிழ்த்து இங்கேதரவல்லையோவென) மணங்கமழ்கின்ற துறையிற் கூடற்றெய்வத்தை வாழ்த்திக் கூடலிழைத்து வருந்தியது.

ஆழிதிருத்தும்புலியூருடையானருளினளித்
தாழிதிருத்துமணற்குன்றினீத்தகன்றார்வருகென்
றூழிதிருத்திச்சுழிக்கணக்கோதிநையாமலைய
வாழிதிருத்தித்தரக்கிற்றியோவுள்ளம்வள்ளலையே.

(இ-ள்.) ஆழி திருத்தும் புலியூருடையான் அருளின் - சமுத்திரம் (சூழ்ந்த மண்முழுதையுந்) திருத்தும் புலியூருடையவனது அருள் போல,—அளித்து - (இன்புற) அளித்து,—ஆழிதிருத்தும் மணல் குன்றின் - கடல்வந்து திருத்து மணற்குன்றின்கண்,—நீத்து அகன்றார் வருகென்று - (என்னை நீத்தகன்றவர் வரவேண்டுமென்று,—ஆழிதிருத்தி சுழி கணக்கு ஓதி நையாமல் - கூடலையிழைத்துச் சுழிக்கணக்கைச் சொல்லி யான் வருந்தாமல், — உள்ளம் திருத்தி - அவனுள்ளத்தை நெகிழ்த்து,—வள்ளலை தரக்கிற்றியோ - வள்ளலை யீண்டு தரவல்லையாயின்,—ஐய வாழி - அய்யனே! வாழ்வாயாக,—(யானிரக்கின்றேன்). எ-று. முதற்கணாழி - ஆகுபெயர்.

திரைவந்துபெயரும் பெருமணலடைகரையைப் பின்னிலையாத கொடியோர் இனி வருதல் யாண்டையதென்னுங் கருத்

தான் ஆழிதிருத்து மணற்குன்றினீத்தகன்றானென்றாள். ஐய என்றது கூடற்றெய்வத்தை. (கஅ௬)

## சுடரோடுபுலம்பல்.

குணகட லெழுசுடர் குடகடற் குளிப்ப
மணமலி குழலி மனம்புலம்பியது.

(எ-து.) (கூடலிழைத்துவருந்தாநின்ற) இயற்கை மணங்கமழும் கூந்தலையுடைய தலைமகள் (துறைவர் போக்கும் தில்லைப்பொழிலின்கண் அவர்சூளறவும் தன்னை வருத்துவதனால்) கீழ்த்திசைக்கடலி லெழுந்த சூரியன் மேற்கடலிலாழக்கண்டு மனம் வருந்தியது.

கார்த்தரங்கந்திரைதோணிசுறுக்கடன்மீனெறிவோர்
போர்த்தரங்கந்துறையானுந்துறைவர்தம்போக்குமிக்க
தீர்த்தரங்கன்றில்லைப்பல்பூம்பொழிற்செப்பும்வஞ்சினமு
மார்த்தரங்குஞ்செய்யுமாலுய்யுமாறென்கொலாழ்சுடரே.

(இ - ள்.) கார் தரங்கம் திரை தோணி சுறு மீன் எறிவோர் - கரிய திரையும், திரையாநின்ற தோணியும், சுறுமச்சமும் மீன் பிடிப்போரும்,—கடல் போர் தரு அங்கம் துறை யானும் துறைவர்தம் போக்கும் - கடலும் போரைத்தரும் அங்கங்களையும் போர்க்களத்தையும் ஒக்குந் துறையையுடையவரது பிரிவும்,— மிக்க தீர்த்தர் அங்கன் தில்லை - சிறந்த தூயோராகிய (அரியயர்களுடைய) என்பை யணிந்தவனது தில்லை வரையின்கணுள்ள,—பல்பூம் பொழில் செப்பும் வஞ்சினமும்-பல்பூஞ் சோலைக்கண் (நின்னிற் பிரியேனென்று) சொல்லும் வஞ்சினமும்,— ஆர்த்தர் அங்கம் செய்யும் - (என்மேனியை) நோயுற்றார் மேனியாகச் செய்யாநின்றன.—ஆழ் சுடரே உய்யுமாறு என்கொல் - (ஆகலான் குடகடலில்) வீழாநின்ற சூரியனே! யானுய்யு நெறியென்னோ? (கூறுவாயாக). எ-று.

குதிரைத்திரள் தரங்கத்திற்கும், தேர்தோணிக்கும், யானை சுறவுக்கும், காலாள் மீனெறிவோர்க்கும், போர்க்களம் கடற்கும், உவமானமாகக் கூறப்பட்டுள்ளன. தரங்க முதலியவற்றால் போரைத்தரும் அங்கத்தையுடைய களத்தையொக்கும் துறையென மூன்றுவது விரித்துரைப்பாரு முளர். அங்கத்துறை என்றது மெலிந்து நின்றது. (௪அஎ)

## பொழுதுகண்டுமயங்கல்.

மயறருமாலை வருவதுகண்டு
கயறருகண்ணி கவலையுற்றது.

(எ-து.) (கடலொடு புலம்பாநின்ற) கயற்கண்டை போலுங் கண்ணையுடைய தலைமகள் மயக்கந்தரு மாலைப்பொழுது வருவது கண்டு வருந்தியது.

பகலோன்கரந்தனன்காப்பவர்சேயர்பற்றற்றவர்க்குப்
புகலோன்புகுநர்க்குப்போக்கரியோனெவரும்புகலத்
தகலோன்பயிறில்லைப்பைம்பொழிற்சேக்கைகளேக்கினவா
லகலோங்கிருங்கழிவாய்க்கொழுமீனுண்டவன்னங்களே.

(இ - ள்.) பகலோன் கரந்தனன் - சூரியன் மறைந்தான்,— காப்பவர் சேயர் - (இம்மாலைக் காலத்துவருந் துன்பத்தைக்) காக்குமவர் சேயராயிருந்தார், — அகல் ஓங்கு இரும் கழிவாய் - அகன்று நீருயர்ந்த பெரிய கழியிடத்து,—கொழுமீன் உண்ட அன்னங்கள் - கொழு மீனையுண்ட அன்னங்கள் (இவ்விடத்தை விட்டு),—பற்று அற்றவர்க்கு புகலோன் - புலன்களிற் பற்றற்றவர்க்குப் புகலிடமாயுள்ளவன், — புகுநர்க்கு போக்கு அரியோன் - தன்கட் புகுவார்க்குப் பின் போதரவரியவன்,— எவரும் புகல தகலோன் - எல்லாரும் ஏத்தத் தகுதலையுடையவன்,— பயில் தில்லை பைம்பொழில் - (அவன்) பயிலும் தில்லை வரைப்பிலுள்ள பசிய சோலையின்க ணுளவாகிய,—சேக்

கைகள் நோக்கின - தம்படுக்கைகளை நோக்கின, (இனி என் செய்வேன்). எ-று.

கொழுமீனென்பது ஓர் சாதி. ஆல் - அசை. ஓங்குதல் - ஓதமெறிநீருயர்தல். (கஅஅ)

பறவையோடு வருந்தல்.

செறிபிணிகைம்மிகச் சிற்றிடைப்பேதை
பறவைமேல்வைத்துப் பையுளெய்தியது.

(எ-து.) (பொழுதுகண்டு மயங்காநின்ற) சிறிய இடையை யுடைய தலைமகள் செறிந்த நோய்மிகலால் வண்டானப் பறவைமேல்வைத்துத் துன்பமடைந்தது.

பொன்னுமணியும்பவளமும்போன்றுபொலிந்திலங்கி
மின்னுஞ்சடையோன்புலியூர்விரவாதவரினுள்ளோ
யின்னுமறிகிலவாலென்னைபாவமிருங்கழிவாய்
மன்னும்பகலேமகிழ்ந்திரைதேரும்வண்டானங்களே.

(இ-ள்.) இரு கழிவாய் - (என் றுற்றுமைக்குப் பரிகாரமாவது யாதுஞ் சிந்தியாது) பெரிய கழியிடத்து,—பகலே மகிழ்ந்து - பகலே புகுந்து விரும்பி,—இரை தேரும் வண்டானங்கள் - தமக்குணவு தேடும் வண்டான மென்னும் பறவைகள்,—பொன்னும் மணியும் பவளமும் போன்று பொலிந்து இலங்கி மின்னும் சடையோன் - பொன்போலப் பொலிந்து மாணிக்கம்போல விட்டு விளங்கிப் பவளப்போல மின்னுஞ் சடையையுடையவனது,—புலியூர் விரவாதவரின் - புலியூரைக் கலவாதவரைப்போல,—உள் நோய் - (யானுறும்) உள்நோயை,—இன்னும் அறிகில - இந்நிலைமைக் கண்ணும் அறிகின்றன வில்லை,—என்னை பாவம் - இஃதென்னபாவம். எ-று. ஆல் - மன்னும் - அசைநிலை.

புலியூனை விரவாதார் கண்ணோட்ட மில்லாராகலிற் புலி யூனை விரவாதவரினின்று மறிகிலவென் றியைத்துரைப்பினு மமையும். கஅகூ)

## பங்கயத்தோடுபரிவுற்றுரைத்தல்.

முருகவிழ் கா ன
லொடுபரி வுற்ற து.

(எ - து.) (பறவையொடு வருந்தாநின்ற தலைமகள் இப்பங்கயம் என் வருத்தங்கண்டு ஞாயிற்றை நோக்கி விரையவரவேண்டுமென்று தங்கை குவியாநின்றமையா லென்னிடத் தன்புடையன போலுமென) கானலின் வாசனைவீசும் வனசங்களோடு பரிவுற்றுக் கூறியது.

கருங்கழிகாதற்பைங்கானலிற்றில்லையெங்கண்டர்விண்டா
ரொருங்கழிகாதரமூவெயில்செற்றவொற்றைச்சிலைசூழ்ந்
தருங்கழிகாதமகலுமென்றாழென்றலந்துகண்ணீர்
வருங்கழிகாதல்வனசங்கள்கூப்புமலர்க்கைகளே.

(இ - ள்.) தில்லை எம் கண்டர் - தில்லைக்கணுளராகிய எம்முடைய கண்டர்,—விண்டார் ஒருங்கு அழி காதரம் மூ எயில் செற்ற - பகைவர் ஒருங்கே அழியும் அச்சத்தையுடைய மூவெயிலைச்செற்ற,—ஒற்றை சிலை சூழ்ந்து-தனிவில்லைச் சூழ்ந்து,—அரு கழி காதம் அகலும் என்று - அரியவாகிய மிக்ககாதங்களைப் போகாநின்றது என்று,—ஊழ் என்று அலந்து-(ஆகலான்) ஊழ் இனியிவளெங்ஙன மாற்றுமென்று வருந்தி,—கருகழி காதல் பை கானலில் - கருங்கழியின் கண்ணும் காதலையுடைய பசிய கானலின் கண்ணுமுள்ளவாகிய, — கண் நீர் வரும் கழி காதல் வனசங்கள் - கண்ணீர் வாராநின்ற கழிகாதலையுடைய தாமரைகள் (விரைந்து வரவேண்டுமென்று அஞ்ஞாயிற்றைநோக்கி),—மலர் கைகள் கூப்பும் - (தம்) மலராகிய கைகளைக் கூப்பி யிரவாநின்றன. (இவை யென்மாட் டன்புடைய போலும்). எ-று.

கானலிற் கைகூப்புமென வியைப்பினுமமையும். கதிரோன் றம்மைப்பிரிய வாற்றாது கடிது வரவேண்டுமென வனசங்கள் கைகூப்பா நின்றனவென்று அவற்றிற் கிரங்கினளாக வுரைப்பி னுமமையும். அலர்ந்தவென்பது பாடமாயின் அலர்ந்த வனச மென வியையும். (கக0)

அன்னமோடழிதல்.

இன்னகையவ ளிரவருதுய ர
மன்னத்தோ டழிந்துரைத்தது.

(எ-து.) இன்னகையை யுடைய தலைமகள் (பங்கய த்தோடு பரிவுற்ற பின்பு) இரவில்வருந் தன் துயரத் தை (அவர்க்குச் சொல்லாது துயிலா நின்றதென) அன்னத்தோ டழிந்து கூறியது.

மூவறழீஇயவருண்முதலோன்றில்லைச்செல்வன்முந்நீர்
நாவறழீஇயவிந்நானிலந்துஞ்சுநயந்தவின்பச்
சேவறழீஇச்சென்றுதான்றுஞ்சும்யான்றுயிலாச்செயிரெங்
காவறழீஇயவர்க்கோதாதளியகளியன்னமே.

(இ - ள்.) மூவல் தழீஇய அருள் முதலோன் - மூவலென் னுந் திருப்பதியைப் பொருந்திய அருளையுடைய முதல்வன்,— தில்லை செல்வன் - தில்லைக்கண் உளனாகிய செல்வன், — முந் நீர் நாவல் தழீஇய - அவனுடைய கடலாற் சூழப்பட்ட நாவ லைப் பொருந்திய,—இ நால் நிலம் துஞ்சும் - இந்தநானில முழு துந் துஞ்சாநின்றது,—யான் துயிலா செயிர் - (இப்பொழுதி னும்) யான் துயிலாமைக்குக் காரணமாகிய வருத்தத்தை,— எம் காவல் தழீயவர்க்கு ஓதாது - எமது காவலைப் பொருந்தின வருக் குரையாமல்,—அளிய களி அன்னம் - அளித்தாகிய களி யன்னம்,—சென்று - இவ்விடத்தினின்றும் போய்,—தான் நய ந்த இன்பம் சேவல் தழுவி - தான் நயந்த இன்பத்தைச் செய் யுஞ் சேவலைத் தழுவி,—துஞ்சும் - (ஒரு கவலையின்றித்) துயி

லா நின்றது. (இனியிது கூறுவார் யாவர்). எ-று. பரந்துமுதல் இப்பத்து பாட்டுக்கும் மெய்ப்பாடு - அழுகை ; பயன் - அயர்வுயிர்த்தல்.

பாலைக்கு நிலமின்மையின் நானிலமெனப் பட்டது. ஓதாதென்பதனை முற்றுகவுரைப்பினு மமையும். நெய்தற் றிணைகூறுவார் 'சோத்துன் னடிய' மென்பது தொடட்டுப் 'புகழும்பழியு' மென்னுங்காறும் இரங்க னிமித்தமாகக் கூறி ஒருவழித்தணத்தல் துறையிடத்து 'ஆரம்பரந்'தென்பது தொட்டு இதன்காறும் இரங்கலே கூறுதலால் திணை நெய்தல். கைகோள்—கற்பு. (கசுக)

### வரவுணர்ந்துரைத்தல்.

சென்றவாவர வுணர்ந்து நின்றவணிலை மை
சிறப்புடைப்பாங்கி சிறைப்புறத்துரைத்தது.

(எ - து.) (தலைமகள் அன்னத்தோ டழிந்து வருந்தாநிற்ப) தலைமகன் ஒருவழித்தணந்து வந்தமை சிறப்பினையுடைய பாங்கி சிறைப்புறந்தறிந்து தலைமகள்நிலைமையையவனுக்குச்சொல்வாயென மதியொடுகூறியது.

நில்லாவளைநெஞ்சநெக்குருகுந்நெடுங்கண்டுயிலைக்
கல்லாகதிர் முத்தங்காற்றுமெனக்கட்டுரைக்கதில்லைத்
தொல்லோனருள்களில்லாரிற்சென்றார்சென்றசெல்லல்கண்டா
யெல்லார்மதியேயிதுநின்னையானின்றிரக்கின்றதே.

(இ - ள்.) எல் ஆர் மதியே - ஒளிபொருந்திய சந்திரனே!— தில்லை தொல்லோன் அருள்கள் இல்லாரின் சென்றார் - தில்லைக்கணுளனாகிய தொல்லோனது அருளுடையரல்லாதாரைப் போலக் கண்ணோட்டமின்றிப்போனவர், — சென்ற செல்லல் கண்டாய் - போதலானுண்டாகிய இன்னாமையை நீயேகண்டாய் (யான் சொல்லவேண்டுவதில்லை), — வளை நில்லா - வளை

கள் நிறுத்தநிற்கின்றனவில்லை,—நெஞ்சம் நெக்குருகும் - நெஞ்சம் நெகிழ்ந்துருகாநின்றது,—நெடு கண் துயிலக்கல்லா - நெடிய கண்கள் துயிலாவாய்,—கதிர்முத்தம் கான்றும் என்ன (கண்ணீர்த் துளியாகிய) கதிர்முத்தங்களை விடாநின்றனவென்று,—கட்டுரைக்க - (அவர்க்குச்) சொல்வாயாக,—நின்னை யான் இரக்கின்றது இது - நின்னையான் இரக்கின்றது இதுவே. எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவுகடாதல்.

முத்தங்காலு மென்பதூஉம் பாடம். எல்லாமதியே யென்பது பாடமாயிற் செல்ல லெல்லாமென்று கூட்டியுரைக்க. துயிலக்கல்லாவென்பது ஒருசொல். (௧௧௨)

வருத்தமிகுதிகூறல்.

நீங்கியணைந் தவற்கு
பாங்கி பகர்ந்த து.

(எ - து.) (சிறைப்புறமாக மதியொடுவருத்தங்கூறிய) பாங்கி, தலைமகளையொருவழித்தணந்தணைந்த தலைமகனுக்கு அவளதுவருத்தமிகுதிகூறியது.

வளருங்கறியறியாமந்திதின்றுமம்மர்க்கிடமாய்த்
தளருந்தடவரைத்தண்சிலம்பாதனதங்கமெங்கும்
விளரும்விழுமெழும்விம்முமெலியும்வெண்மாமதிநின்
றொளிருஞ்சடைமுடியோன்புலியூரன்னவொண்ணுதலே.

(இ-ள்.) வளரும் கறி அறியா மந்தி தின்று மம்மர்க்கு இடமாய் தளரும் - வளராநின்றமிளகுக்கொடியைத் தமக்குணவென்றறியாத இளையமந்திதின்று வருத்தத்திற்கிடமாய் நிலை தளரும்,— தடம் வரை தண் சிலம்பா - பெரியவரைகளையுடைய தண்சிலம்பையுடையாய்! — வெள் மா மதி நின்று ஒளிரும் சடை முடியோன் - வெள்ளியபெரியமதி நின்றுவிளங்குஞ் சடையாணியன்றமுடியையுடையவனது, — புலியூர் அன்ன ஒள்

துதல் - புலிநூனை யொக்கும் ஒள்ளிய நுதலையுடையாள்,—தளை அங்கம் எங்கும் விளரும் - தன்மேனிமுழுதும் பசக்கும்,—விழும் - (அமளியின்கண்) விழாநிற்கும், — எழும் - எழாநிற்கும்,—விம்மும் - பொருமாநிற்கும், — மெலியும் - (நின் வன்கண்மையை நினைந்து) மெலியாநிற்கும். (அதனால் அவள் இன்னாநிலைமையளென்று என்னாற்சொல்லப்படாது. எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - வரைவு கடாதல்.

வளருமிளங்கறி கண்ணிற்கினிதாயிருத்தலின் இதுமக்குத் துய்க்கப்படாதென் றுணராத இளமந்தி அதனைத்தின்று வருந்துமாறுபோலக் கண்ணு மனமு மகிழு முருவினையாகிய நின்னை நின்பெருமை யுணரா தெதிர்ப்பட்டு வருந்தா நின்றாளென வுள்ளுறை காண்க.

இவ்வாறு ஒருவழித்தணந்து வந்து வரைவுமாட்சிமைப்படவும்பெறும். அன்றியுமுடன்போக்குநிகழப்படும். (கசுரு.)

ஒருவழித்தணத்தல் முற்றிற்று.

---

## உடன்போக்கு.

இவ்வாறு ஒருவழித்தணத்தல் நிகழாதாயின் உடன்போக்கு நிகழும். உடன்போக்கென்பது தலைமகளைத் தலைமகன் உடன்கொண்டுபோதல்.

இக்கிளவி ஐம்பத்தாறு துறைகளையுடைத்து. அவை வருமாறு :—

பருவங்கூறல் படைத்துமொழிதலொடு, மருவமர்கோதை மை மகட்பேச்சுரைத்தல், பொன்னணிவுரைத்தல் பொருள் விலைகூறல், அன்னமென்னடையா ளருமைகேட்டழிதல், தளர்வறிந்துரைத்தல் தாழ்குழலாடன்,உளநினைவுரைத்த லுடன்கொண்டுசேறற், கருமையுரைத்த லாதரங்கூறல், மருவியதடங்கயல் வாழாளென்றல், பொருவருகற்பின் புனைநலனுரைத்தல், துணிக்

தமைகூறல் துணிவுகேட்டடல், துணிவறிவித்தல் தொல்லைநாண் விடல், துணிவெடுத்துரைத்தல்கொண் டகலெனவுரைத்தல், அடிவழிநினைந்தின் றவனுளம்வாடல், கொடியிடையாளைக் கொண்டுசென்றுய்த்தல், ஓம்படுத்துரைத்தல் வழிப்படுத்துரைத்தல், தேம்படுகோதையைத் திறலடுவேலோன், டையக்கொண்டேகல் பயங்கெடவுரைத்தல், மையமர்கண்ணியை வழியயர்வகற்றல், நெறிவிலக்கல்லொடு நெறியிடைக்கண்டவர், செறிவெடுத்துரைத்தல் சேயிழையாளுடன், வழிவிளையாடல் வழியெதிர்வருவோ, ரொழினகரணிமை யிதுவெனவுரைத்தல், நகர்காட்டல்லொடு நகரிடைப்புக்குப், பதிபரிசுரைத்தல் பாங்கியைக்கிட்டி, மதிநுதலாளை வளர்த்தவள்கேட்டல், அறத்தொடுநிற்ற லதுகேட்டழுங்கல், திறப்பாடுன்னிச் செவிலிகவன்றுரைத்தல், அடிநினைந்திரங்க லதுதாய்க்குரைத்தல், மடவரல்போகவாடியுரைத்தல், கிளிமொழிக்கிரங்கல் கிளர்சூர்ப்பராய்தல், அளிபெறுபருவத்திற் கவள்கவன்றுரைத்தல், நாடத்துணிதல் நற்றுய்நயந்தவர், சூடக்கரையெனக் கொடிக்குறிபார்த்தல், சோதிடங்கேட்டல் சுவடுகண்டறிதல், ஏதுமுற்றவைகண் டிரங்கியுரைத்தல், வேட்டமாதரைக் கண்டுவினவல், புறவொடுபுலத்தல் குரவொடுவருந்தல், திறலருந்தவத்தொடு செல்லாநின்ற, மாவிரதியரை வழியிடைவினவல், வேதியர்தம்மை விரும்பிவினவல், புணர்ந்துடன்வருவோரைப் பொருந்திவினவல், மணந்தருகுழலாள் மன்னியநிலையொடு, வேங்கைபட்டது கண்டுவியத்தல், ஆங்கவரியையபணி யவட்கெடுத்துரைத்தல், மீளவுரைத்தல் மீளாதவளுக், கூழ்முறையிதுவென வுலகியல்புரைத்தல், அழுங்குதாய்க்குரைத்த லைம்பதோடாறு, முழுங்கொலைவேலோ னுடன்போக்காகும்.

பருவங்கூறல்.

உருவது கண்ட வ
ளருமை யுரைத்த து.

(எ - து.) (அலரறிவுறுத்த) பாங்கி, (இவள்முலை முதிர்வு கண்டமையால் மகட்பேசுவார்க்கு மாறுத தொடுக்கவுங்கூடும், அஃதுண்டாகாமல்நிற்க, நீ முற் பட்டுவரைகவெனத்) தலைமகளது பருவத்தினருமை கூறியது.

ஓராகமிரண்டெழிலாயொளிர்வோன்றில்லையொண்ணுதலங்
கராகம்பயின்றமிழ்தம்பொதிந்தீர்ஞ்சுணங்காடகத்தின்
பராகஞ்சிதர்ந்தபயோதரமிப்பரிசேபணைத்த
விராகங்கண்டால்வள்ளலேயில்லையேயெமரொண்ணுவதே.

(இ - ள்.) ஒரு ஆகம் இரண்டு எழிலாய் ஒளிர்வோன் - ஒரு மேனி பெண்ணழகு மாணழகுமாகிய இரண்டழகாய் விளங்கு மவனது, — தில்லை ஒள் நுதல் - தில்லைக்கணுள்ளளாகிய ஒள்ளியநுதலையுடையவளது, — அங்கராகம் பயின்று அமிழ்தம் பொதிந்து - பூசப்படுவனபூசி அமிர்தத்தைப்பொதிந்து,—ஈரம் சுணங்கு ஆடகத்தின் பராகம் சிதர்ந்த பயோதரம் - நெய்த்த சுணங்காகிய செம்பொன்னின் பொடியைச்சிதறின முலைகள்,— இ பரிசே பணைத்த இராகம் கண்டால் - இப்படியே பெருத்த கதிர்ப்பைக் கண்டால்,—வள்ளலே - வள்ளலே !—எண்ணுவது இல்லை - இவள்மாட்டு (எமர்) நினைப்பதொன்றுமில்லை, (ஆயினும் சிலவுளவாம்). எ - று. மெய்ப்பாடு - அச்சம் ; பயன் - வரைவுகடாதல்.

இராகம் - வடமொழிச்சிதைவு, ஈண்டுநிறமென்னும்பொருட்டு. இராகம் - முடுகுதலென்பாருமுளர். தில்லையொண்ணுத விராகமென வியையும். (கககச)

## மகட்பேச்சுரைத்தல்.

பணைத்துமொழிகிளவியிற் பணிமொழிப்பாங்கி
அடற்கதிர்வேலோற் கறியவுரைத்த ரு.

(எ-து.) படைத்துமொழியால் பணிவைப்புலத்து மொழியையுடையபாங்கி, வெற்றியையுமொளியை யுமுடைய வேலைத்தாங்கியதலைமகனுக்கு (விரைய வரைவொடுவருவாயாதல், அன்றி வுடன்கொண்டு போவாயாதல், இரண்டிலொன்று துணிந்துசெய்யக் கருதுவாய்; அதனை யின்றேசெய்வாயாகவென அய லவர் மகட்பேசுதலை) அறியக்கூறியது.

மணியக்கணியுமரனஞ்சமஞ்சிமறுகிவிண்ணோர்
பணியக்கருணைதரும்பரன்றில்லையன்னாடிறத்துத்
துணியக்கருதுவதின்றேதுணிதுறைவாநிறைபொன்
னணியக்கருதுகின்றார்பலர்மேன்மேலயலவரே.

(இ-ள்.) துறைவா - துறைவனே!—அக்குமணி அணியும் அரன் - அக்குமணியணியும் அரனானவன்,—நஞ்சம் அஞ்சி விண்ணோர் மறுகி பணிய - நஞ்சையஞ்சித் தேவர் கலங்கிச்சுழன்று சென்றுபணிய, — கருணை தரும் பரன் - (அந்நஞ்சான்வரும் இடர்க்கு மருந்தாகத்தன்) கருணையைத்தரும் பரன்,—தில்லை அன்னாள் திறத்து - (அவனது) தில்லையை யொப்பாள் திறத்து,—துணிய கருதுவது இன்றே துணி - நீ துணிந்து செய்யக் கருதுவதனை யின்றே செய்வாயாக.—அயலவர் பலர் - அயலவரிற் பலர், — நிறை பொன் மேல் மேல் அணிய கருதுகின்றார் - நிறைந்தபொன்னை மென்மேலும் அணியக்கருதுகின்றார். எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாதல்.

அக்குமணியெனினு மமையும். அலங்காரம் - ஒற்றுமைக் கொளுதல். (கசரு)

பொன்னணி வுரைத்தல்.

புலபரிசினுறு மலர்நெடுங்கண்ணி யை
நன்னுசுற்பாங்கி பொன்னணிவொன்றது.

(எ - து.) பலபரிசிறுதுமலர்ந்த நெடுங்கண்ணிணை யுடைய தலைமகளை படைத்துமொழியான் மகட்பே சல்கூறின நன்னுதலையுடையபாங்கி, தலைமகனுக்கு அயலவர் பொன்னணிவு வென்றது.

பாப்பணியோன்றில்லைப்பல்பூமருவுசில்லோதியைநற்
காப்பணிந்தார்பொன்னணிவாரினிக்கமழ்பூந்துறைவ
கோப்பணிவான்றோய்கொடிமுன்றினின்றிவையேர்குழுமி
மாப்பணிலங்கண்முழங்கத்தழங்குமணமுரசே.

(இ - ள்.) கமழ் பூந்துறைவ - பரிமளிக்கின்றபூந்துறைவனே!—பாம்பு அணியோன் தில்லை - பாம்பாகிய அணியையுடையவனது தில்லைக்கண்ணுளளாகிய,—பல் பூ மருவும் சில் ஓதியை - பலவாகிய பூக்கள்பொருந்திய நுண்ணியகூந்தலையுடையாளை,—நல் காப்பு அணிந்தார் - நல்ல காப்பையணிந்தார்கள்,—இனி பொன் அணிவார் - இனிப்பொன்னையணிவார்கள்,—கோப்பு அணி வான் தோய் கொடி முன்றில் நின்று - (கலியாணத்துக்குப்பொருந்திய) கோப்புகளையணிந்த ஆகாயத்தையளாவிய கொடிகளையுடைய முன்றிற்கணின்று,—மணம் முரசு இவை - மணமுரசங்களாகிய இவை,—ஏர் குழுமி மா பணிலங்கள் முழங்க தழங்கும் - ஏரொடுகுழுமிப்பெரியசங்கங்கள்முழங்கத் தாமொலியாநின்றன. (இனியடுப்பது செய்வாயாக). எ-று. மெய்ப்பாடு - பெருதம் ; பயன் - வரைவு கடாதல்.

தில்லைப்பல்பூவென்றியைப்பினுமமையும். காப்பு - காவல். அணிவார் - முற்றுச்சொல். கோப்பணி முன்றிலெனவியையும்.

அருவிலையுரைத்தல்.

பேதையரறிவு பேதைமையுடைத்தெனு
ஆதரத்தோழி யருவிலையுரைத்தது.

(எ - து.) (பொன்னணிவுரைப்பக்கேட்டதலைமகன், யான் வரைவொடுவருதற்குவிலைப்பரிசங்கூ

றுவாயாகவென) தமரதறிவு பேதைமையுடையதெ
ன வாதரவையுடையபாங்கி விலையருமைகூறியது.

எலும்பாலணியிறையம்பலத்தோனெல்லைசெல்குறுவோர்
நலம்பாவியமுற்றுநல்கினுங்கல்வரைநாடரம்ம
சிலம்பாவடிக்கண்ணிசிற்றிடைக்கேவிலைசெப்பலொட்டார்
கலம்பாவியமுலையின்விலையென்னீகருதுவதே.

(இ - ள்.) சிலம்பா - மலையையுடையவனே! — எலும்பால் அணி இறை - எலும்புகளான் அலங்கரிக்கப்படும் இறைவன்,— அம்பலத்தோன் - அம்பலத்தின் கண்ணுன்,—எல்லை செல்குறுவோர் - (அவனது) எல்லைக்கண் செல்லக்கருதுவாரது,— நலம் பாவிய முற்றும் நல்கினும் - நன்மைபரந்த வுலகமுழுதையும் நீகொடுப்பினும்,—கல்வரை நாடர் - (எமதுதமராகிய) கல்வரை நாடர்,—வடி கண்ணி சிற்றிடைக்கே விலைசெப்பல் ஒட்டார் - வடுவகிர்போலுங்கண்ணையுடையாளது சிறிய இடைக்கே விலையாகச் சொல்லுதல் இசையார்,—கலம் பாவிய முலையின் விலை என் நீ கருதுவது - ஆபரணந்தரித்தமுலையின் விலையாக யாதனைநீகருதுவது. (ஒன்றற்கும் அவருடம்படார்). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளதருமையுணர்த்தல்.

எலும்பாற்செய்த வணியென்று ஒருசொல் வருவித்துரைப்பாருமுளர். எல்லைசேறல் - அறிவாலவனையணுகுதல். தில்லையெல்லையெனினுமமையும். அவர்நலம்பாவாவிடமின்மையின் எஞ்சாமைமுழுதுமென்பார் நலம்பாவியமுற்றுமென்றுர். எனவே அவர்சீவன்முத்தரர்யிருத்தல். அஃதாவது சீவனுடனிருக்கும்போதேமுத்தியை யடைந்திருத்தல். இது அகண்ட பரிபூரணமொன்றபடி. முத்தி - எங்குமொக்க வியாத்தியையடைந்திருத்தல். அம்ம - கேளென்னுங்குறிப்பின்கண்வந்தது. சிற்றிடைக்கேயென்னுமேகாரம்பிரிநிலை. இவ ளுயர்ந்ததலைமகளுதலால், தன்தமரைக்கல்வரைநாடரென்றுகூறினுள். கஉஎ)

## அருமைகேட்டழிதல்.

பெருமை நாட்டத்த வ
ளருமைகேட் டழிந்த து.

(எ-து.) (அருவிலைகேட்டதலைமகன்) அவளருமை யைக்கேட்டு வருந்தியது.

விசும்புற்றதிங்கட்கழுமழப்போன்றினிவிம்மிவிம்மி
பசும்புற்றகண்ணோடலறாய்கிடந்தரன்றில்லையன்னாள்
நுயம்புற்றரவிடைகூரெயிற்றூறல்குழன்மொழியி
னயம்பற்றிநின்றுநடுங்கித்தளர்கின்றநன்னெஞ்சமே.

(இ - ள்.) அரன் தில்லையன்னாள் குயம் - அரனதுதில்லை யொப்பாளுடையமுலை,—புற்று அரவு இடை - புற்றின்கண் வாழும் பாம்புபோலுமிடை,— கூர் எயிற்று ஊரல் - கூரிய பல்லின்கண் ஊறிய நீர்,—குழல் மொழி - குழலோசைபோலு மொழி,—நயம்பற்றி - (ஆகிய இவற்றின்கட்கிடந்த) இன்பத்தை யேகருதி,—நின்று - விடாதுநின்று,—நடுங்கி தளர்கின்ற நல் னெஞ்சமே - (அவளதருமை கருதாயாய்) நடுங்கி வருந்தாநின்ற நல்ல நெஞ்சமே!—விசும்பு உற்ற திங்கட்கு - விசும்பைப் பொருந்திய திங்களைத் தரவேண்டி,—அழும் மழவு போன்று - அழு ங்குழவியையொத்து,—அசும்பு உற்ற கண்ணோடு - நீரறாமை யைப்பொருந்தியகண்ணையுடையையாய்,—விம்மி விம்மி - பொருமிப்பொருமி,—இனி கிடந்து அலராய் - இனிக்கிடந்தலறுவா பாக. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங் குதல்.

குழன்மொழியினென்னும் இன் - பலபெயரும்மைத்தொகை யிறுதிக்கண்வந்த சாரியை. (௧௬அ)

## தளர்வறிந்துரைத்தல்.

தண்டுறைவன் றளர்வறிந் து
கொண்டுநீங்கெனக் குறித்துரைத்தது.

(எ - து.) (பாங்கி,) தலைவனது மனத்தளர்ச்சியை யுணர்ந்து (வரைவுமாட்சிப்படாதாயினும்) தலைமகளை யுடன்கொண்டு போவென்பதுதோன்ற, அவளது வருத்தங்கூறியது.

மைதயங்குந்திரைவாரியைநோக்கிமடலவிழ்பூங் [ப்
கைதையங்கானலைநோக்கிக்கண்ணீர்கொண்டெங்கண்டர்தில்லை
பொய்தயங்குந்நுண்மருங்குனல்லாரையெல்லாம்புல்லினள்
பைதயங்கும்மரவம்புரையும்மல்குற்பைந்தொடியே.

(இ - ள்.) பை தயங்கும் அரவம் புரையும் - படம்விளங்கும்பாம்பையொக்கும்,— அல்குல் பைந்தொடி - அல்குலையுடைய பைந்தொடி,— மை தயங்கும் திரை வாரியை நோக்கி - கருமைவிளங்குந்திரையையுடையகடலையும்நோக்கி,—மடல் அவிழ் பூம் கைதையம் கானலை நோக்கி - மடலவிழாநின்றபூவையுடையதாழையையுடையகானலையும்நோக்கி, — கண் நீர் கொண்டு - கண்ணீரைக்கொண்டு,—எம் கண்டர் - (பின்) எம்முடையகண்டரது, — தில்லை - தில்லைக்கணுளராகிய, — பொய் தயங்கும் நுண் மருங்குல் - பொய்யாதல்விளங்கும் நுண்ணியமருங்குலையுடைய,—நல்லாரை எல்லாம் - தன்னாயத்தாராகியபெண்களையெல்லாம்,—புல்லினள் - தழுவிக்கொண்டாள். (அவள்கருதிய தொன்றுண்டுபோலும்). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன்போக்குணர்த்துதல்.

கண்ணீர்கொண்டென்றது - பெண்களுக் கியல்பானகுணமொன்று, நெடுங்காலங்கூட மருவினரைவிட்டுநீங்குகின்றதுயரத்தாற்றோன்றியதொன்று, இக்காலமெல்லாமுங்களைச்சேர்ந்துபோந்தபெருநலத்தான் உடன்போக்காகிய இப்பெருநலம்பெற்றேனென்னுமுவகைக் கண்ணீரொன்று; ஆகலின் நல்லாரையெல்லாம் புல்லிக்கொண்டு கண்ணீர்கொண்டாள். பொய்போது மசைபு மருங்குலெனினு மமையும். (உகஅ)

## குறிப்புரைத்தல்.

நறைக்குழ லி
குறிப்புரைத்த து.

(எ - து.) (பாங்கி, தலைமகனுக்கு) மணங்கமழுங் கூந்தலையுடைய தலைமகளது உடன்போக்குக் குறிப் பினையெடுத்துக் கூறியது.

மாவைவந் தாண்டமென் னோக்கிதன் பங்கர்வண் டில்லைமல்லற்
கோவைவந் தாண்டசெவ் வாய்க்கருங் கண்ணிகுறிப்பறியேன் [டு
பூவைதந் தாள்பொன்னம் பந்துதந் தாளென்னைப் புல்லிக்கொண்
பாவைதந் தாள்பைங் கிளியளித் தாளின்றென் பைந்தொடியே.

(இ-ள்.) என் பைந்தொடி - என்னுடைய பைந்தொடியை யுடையாள்,—இன்று என்னைப் புல்லிக்கொண்டு - இன்று என் னைத்தழுவிக்கொண்டு,—பூவை தந்தாள் - தன் நாகணவாய்ப் புள்ளை (என்கையில்) தந்தாள்,—பொன்னம் பந்து தந்தாள் - பின் பொற்றகட்டாற்புனைந்தபந்தைத்தந்தாள், — பாவை தந் தாள் - பின் தன்சித்திரப்பாவையைத்தந்தாள், — பைங்கிளி அளித்தாள் - பின் தன்கிளியையுந்தந்தாள், — மாவை வந்து ஆண்ட மென் நோக்கிதன் பங்கர் - மானைச்சென்றடிமைகொ ண்ட மெல்லியநோக்கையுடையாளுடைய ஓர்பாகத்தையுடை யவரது,—வண் தில்லை - வளவியதில்லைவரைப்பினுண்டாகிய,— மல்லல் கோவை வந்து ஆண்ட செவ்வாய் - வளத்தையுடைய கொவ்வைக்கனியைச்சென்றாண்ட செவ்வாயையுடைய,—கருங் கண்ணி - இக்கருங் கண்ணியது, — குறிப்பு அறியேன் - கருத் தறிகின்றிலேன். (நின்னுடன் செல்லப்போலும்). எ-று. மெய் ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன்போக்குணர்த்துதல்.

புல்லிக்கொண்டுபாவையைத்தந்தாளென்றியைத்து, பாவை மேலுள்ளவன்பால் அதனைத்தருவுழிப் புல்லிக்கொண்டு தந்தா ளென்றுரைப்பாருமுளர். (உ00)

## அருமையுரைத்தல்.

கானின்கடுமையு மானின்மென்மையும்
பதியின்சேட்சியு மிதுவெனவுரைத்தது.

(எ - து.) (குறிப்புரைத்துப் போக்குடம்படுத்திய பாங்கிக்குத் தான்செல்லும்) கானினது கடுமையும், மான்போல்வாளாகிய தலைமகளது மென்மைத்தன்மையும், தன்பதியின்சேய்மையு மிது விதுவெனத் தலைமகன் தன்போக்கருமை கூறியது.

மெல்லியல்கொங்கைபெரியமின்னேரிடைமெல்லடிபூக்
கல்லியல்வெம்மைக்கடங்கடுந்தீக்கற்றுவானமெல்லாஞ்
சொல்லியசீர்ச்சுடர்த்திங்களங்கண்ணித்தொல்லோன்புலியூ
ரல்லியங்கோதைநல்லாயெல்லைசேய்த்தெம்மகனகரே.

(இ - ள்.) வானம் எல்லாம் கற்று சொல்லிய சீர் - வானுலகெங்கும்(ஆண்டையாரால்)கற்றுச்சொல்லப்பட்டபுகழையும்,— சுடர் திங்கள் அம் கண்ணி - சுடரையுடையதிங்களாகிய அழகிய கண்ணியையுமுடைய, — தொல்லோன் - பழையோனது,— புலியூர் - புலியூரில்,—அல்லியம் கோதை நல்லாய் - அல்லியங்கோதையையுடையநல்லாய்,—மெல்லியல் கொங்கை பெரிய - மெல்லியலுடையகொங்கைகள்பெரியன, — இடை மின் நேர் - அவற்றைத்தாங்குமிடைநுடக்கத்தால் மின்னுக்குநேராயிருந்தது,—மெல் அடி பூ - மெல்லிய அடிகள் பூவேயாயிருந்தன,— கல் இயல் வெம்மை கடம் கடு தீ - கல்லின்கணுண்டாகியவெம்மையையுடையகாடு அவ்வடிக்குத்தகாததாய் கடுந்தீயாயிருந்தது,—எம் அகல் நகர் எல்லை சேய்த்து - (அதன்மேல்) எம்முடைய அகன்றநகரும் எல்லைதூரத்தது, (அதனால் நீ கருதியது பெரிதுமரிது). எ-று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - தலைமகணிலைமை யுணர்த்துதல்.

கல்லானியன்றகடமெனவியைப்பினுமமையும். வானவரெல் லாமென்பதூஉம் பாடம். எல்லைசேய்த்தென்பன ஒருசொன்னீர் மைப்பட்டு அகனகரொன்றுமெழுமாய்க்குமுடிபாயின. (உ0க)

## ஆதரங்கூறல்.

அழற்றடம்புரையு மருஞ்சுரமதுவு
நிழற்றடமவட்கு நின்னொடேகினென்றது.

(எ - து.) (போக்கருமைகூறிய தலைமகனுக்குப்பா ங்கி,) அழலானிரைந்து வோமகுண்டத்தையொக்கும் அரியபாலைநிலமும், நின்னோடுவரினவளுக்கு மருத நிலமும் பொய்கையுமா மென்றுதரங்கூறியது.

பிணையுங்கலையும்வன்பேய்த்தேரினைப்பெருநீர்நசையா
லணையுமுரம்புநிரம்பியவத்தமுமையமெய்யே
யிணையுமளவுமில்லாவிறையோனுறைதில்லைத்தண்பூம்
பணையுந்தடமுமன்றேநின்னொடேகினெம்பைந்தொடிக்கே.

(இ - ள்.) பிணையும் கலையும் - பிணையும் கலையும்,—பெரு நீர் நசையால்,— மிக்க நீர்வேட்கையால்,—வன் பேய் தேரினை அணையும்,—பெரியபேய்த்தேரினைச்சென்றணுகும், — முரம்பு நிரம்பிய - முரம்பால்நிரம்பிய, — அத்தமும் - சுரமும்,— அய்ய - அய்யனே!—நின்னொடு ஏகின் - நின்னோடுசெல்லின்,— மெய்யே - மெய்யாக,—எம் பைந்தொடிக்கு - எம்முடையபை ந்தொடியையுடையாளுக்கு,—இணையும் அளவும் இல்லா - ஒப் பும் எல்லையுமில்லாத,—இறையோன் உறை - இறையவனுறை கின்ற,—தில்லை - தில்லைவளைப்பின்,—பூம் - பூக்களையுடைய,— தண் - குளிர்ச்சிபொருந்திய, — பணையும் தடமும் அன்றே - மருத நிலமும் பொய்கையு மல்லவோ? (நீ யிவ்வாறு கூறுவ தென்?) எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன் போக்கு வற்புறுத்தல்.

முரம்பு - கல்விரவியுயர்ந்திருக்குங்கலம். அழற்றடம் - தீக்கா லங்கலம், விகாரவகையால் தடா - தடமெனநின்றது. அழலை விறைந்தபொய்கையெனினு மமையும். அலங்காரம் - புகழாப் புகழ்ச்சி. (உ0உ)

## இறந்துபாடுரைத்தல்.

கார்த்தடமுங் கயலும்போன்றீ
வார்த்தடமுலையு மன்னனுமென்றது.

(எ-து.) (ஆதரங்கூறியபாங்கி, தலைமகனைநோக்கி, நீ தலைமகளையுடன்கொண்டுபோகாயாயின்) வாரை யணித்ததடமுலையாளாகிய அவள் கயலும், மன்ன னாகிய நீபெரும்பொய்கையும், போன்று (நடந்து றந்த கயல்போல்) அவளிறந்துபடுமென்றது.

இங்கயலென்னீபணிக்கின்றதேந்தலிணைட்பதில்லாக்
கங்கையஞ்செஞ்சடைக்கண்ணுதலண்ணல்கடிகொடில்லைப்
பங்கயப்பாசடைப்பாய்தடநீயப்படாதடத்துச்
செங்கயலன்றேகருங்கயற்கண்ணித்திருநுதலே.

(இ - ள்.) இணைப்பது இல்லா கங்கை அம் செஞ்சடை கண் ணுதல் - ஒப்பில்லாதகங்கையையுடைய அழகியசெஞ்சடையை யும் கண்ணையுடையநுதலையுமுடைய, — அண்ணல் - அண்ண லது,—கடிகொள் தில்லை - காவலைப்பொருந்திய தில்லைவரைப் பில்,—பங்கயம் பாசடை பாய் தடம் நீ - தாமரையின் பசிய இலைகளையுடைய பரந்தபொய்கைநீ, — கரு கயல் கண் இ திரு நுதல் - கருங்கயல்போலுங்கண்ணையுடைய இத்திருநுதலா ள்,—படர் தடத்து செம் கயலன்றே - அகன்ற அப்பொய் கைக்கண்வாழுஞ் செங்கயலன்றோ? — ஏந்தல் - (அதனால்) அர சனே,—இங்கு - இவ்விடத்து,—நீ அயல் பணிக்கின்றது என் - (நின்றோடேகுமிடத்து வேறொன்றான் ஒருதுன்பம்வருவதாக) நீ வேற்றுமை கூறுகின்றதென் ? (செங்கயற்குப் பங்கயத்தட

மல்லது வேறு வேண்டப்படுவ தொன்றுண்டோ). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன் போக்குவற்புறுத்தல்.

கண்ணுதலாகியவண்ணலெளினுமமையும். உடன்கொண்டு போகாராயின், அலராலுங் காவன்மிகுதியாலும் நின்னைத்தலைப்படுதலரிதாகலின் தடந்துறந்தகயல்போல இவளிறந்துபடும் என்பது கருத்து. உ0௯)

## கற்புநலனுரைத்தல்.

பொய்யொத்தவிடை போக்குத்துணிய
வையத்திடை வழக்குரைத்த து.

(எ - து.) (தலைமகனைப் போக்குடம் படுத்தியபாங்கி,) பொய்போலு மிடையையுடைய தலைமகள் போக்குத் துணியும் வண்ணம் வையத்தின்கண் உலகியல் கூறுவாள்போல் அவள் உடன்போக்குத்துணியக் கற்புநலங் கூறியது.

தாயிற்சிறந்தன்றுநாண்டையலாருக்கந்நாண்டகைசால்
வேயிற்சிறந்தமென்றோளிதிண்கற்பின்விழுமிதன்றீங்
கோயிற்சிறந்துசிற்றம்பலத்தாடுமெங்கூத்தப்பிரான்
வாயிற்சிறந்தமதியிற்சிறந்தமதிநுதலே.

(இ - ள்.) ஈங்கோயிற் சிறந்து - ஈங்கோயிடத்துப்பொலிந்து மேவி,—சிற்றம்பலத்து ஆடும் - சிற்றம்பலத்தின்கணின்றாடும்,—எம் கூத்தப்பிரான் - எம்முடைய கூத்தனாகியபிரானது,—வாயில் - வாயின்கண், — சிறந்த - (எப்பொழுதும்வந்து) சிறத்தற்குக் காரணமாகிய), — மதியில் சிறந்த - அறிவிற்சிறந்த,—மதிநுதலே - மதிபோன்றநுதலையுடையாய்! —தையலாருக்கு தாய் நாணில் சிறந்தது அன்று - மகளிர்க்கு (பழிநீங்கிப் பாதுகாத்தலில்) தாய் நாண்போற்சிறந்ததன்று,—அநாண் - அத்தன்மைத்தாகியநாண்,—தகை சால் வேயில் சிறந்த மெல் தோளி அழகமைந்த வேய்போலச்சிறந்த மெல்லிய தோள்களையுடை

யாய்!,—திண் கற்பின் விழுமிது அன்று - திண்ணிய கற்புப்போலச்சீரிதன்று. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளை யுடன்போக்கு நேர்வித்தல்.

தாயிற்சிறந்ததன்று நாணென்றுரைப்பினு மமையும். தாய் போல நாண்சிறத்தலும், நாணிற்கற்புசிறத்தலும், ஆகிய இரண்டும், கூத்தப்பிரான் வாயிற்சிறந்த நூல்களும் அந்நூல்களிடத்துச் சிறப்புடையபொருளும் என்றுரைப்பினு மமையும்.(உ0ச)

## துணிந்தமைகூறல்.

பொருவேலண்ணல் போக்குத்துணிந்தமை
செருவேற்கண்ணிக்குச் சென்றுசெப்பியது.

(இ-ள்.) (உலகியல் கூறுவார்போன்று கற்புவழிநிறுத்தி) போர்செய்யும்வேலையுடைய தலைமகன் தானுடன்போக்குத்துணிந்தமை வேற்படையன்னகண்ணையுடைய தலைமகட்குரைத்து நின் கருத்தென்னவென்றுகூறியது.

குறப்பாவைநின்குழல்வேங்கையம்போதொடுகோங்கம்விராய்
நறப்பாடலம்புனைவார்நினைவார்தம்பிரான்புலியூர்
மறப்பானடுப்பதொர்தீவினைவந்திடிற்சென்றுசென்று
பிறப்பானடுப்பினும்பின்னுந்துன்னத்தகும்பெற்றியரே.

(இ - ள்.) குறப்பாவை - குறப்பாவாய்,—தம்பிரான் புலியூர் மறப்பான் அடுப்பது ஒரு தீவினை வந்திடில் - தம்பிரானது புலியூரை மறக்கக் கூடுவதொரு தீவினைவிளைவு வருமாயின்,— சென்றுசென்று பிறப்பானடுப்பினும் - பல யோனிகளினும் சென்று சென்று பிறக்கக்கூடினும்,—பின்னும் துன்னத்தகும் பெற்றியர் - பின்னுஞ்சென்று சேரத்தகுந் தன்மையையுடையவர்,—நின் குழல் - நின் குழலின்கண்ணுள்ள,—வேங்கை யம் போதொடு - வேங்கைப் பூவோடு,—கோங்கம் விராய் - கோங்கம் பூவைவிரவி,—நறவு பாடலம் புனைவார் - தேனையுடைய

பாதிரிமலரைப்புனைவாராய் (உடன்கொண்டுபோதலை),— நினை வார் - நினையாநின்றார். எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகன் உடன்போக்குநேர்ந்தமை யுணர்த்துதல்.

கோங்கம்விராய்ப் பாடலம்புனைவார்நினைவா ரென்றதனான், நீரிலாற்றிடை நின்றெடுசெல்லலுற்று ரென்பது கூறினாளாம். புலியூரையுணர்ந்தார்க்குப் பின்னைமறத்தலரிதென்னுங் கருத்தான், மறப்பானடுப்பதோர்தீவினைவந்திடினென்றாள். புலியூரை யொருகாலுணர்ந்ததுணையானே பிறவிகெடுமென்றே, அவ்வாறன்றி யதனை மறந்தவாற்றானே பிறக்கக்கூடினுமென்னுங் கருத்தால் 'பிறப்பானடுப்பினு' மென்றாள். அவர்நாணி உடன்போகாது ஈண்டு இற்செறிக்கப்பட்டு அவரையெதிர்ப்படாதிருத்தல் அன்பன்றென்னுங்கருத்தால், பிறப்பானடுப்பினும் பின்னுந் துன்னத்தகும்பெற்றியரென்றாள். உன்னத்தகும்பெற்றியரொன் பதூஉம் பாடம். (உ0௫)

துணிவோடுவினவல்.

சிலம்பன்றுணிவொடு செல்சுரநினைந்து
கலம்புனைகொம்பர் கலக்கமுற்றது.

(எ - து.) (தலைமகனினைவுகேட்ட) ஆபரணமணிந்ததலைமகள் அவனினைவின்படியே துணிந்துநின்று, அவர் நம்மை யுடன்கொண்டு சுரத்திற்போகக் காரணமென்னோவென்று கலக்கமுற்றுப் (பாங்கியை) வினவியது.

நீழற்றலைநீநெறிநீரில்லைகானகமோரிகத்து
மழற்றலைவெம்பரற்றென்பரொன்னோதில்லையம்பலத்தான்
கழற்றலைவைத்துக்கைப்போதுகள்கூப்பக்கல்லாதவர்போற்
குழற்றலைச்சொல்லிசெல்லக்குறிப்பாகுநங்கொற்றவர்க்கே.

(இ - ள்.) நிழல்தலை நீ நெறி - நிழலிடம் நீயோடொக்கு நெறி,—நீர் இல்லை - (அந்நெறி) நீருடைத்தன்று,—ஓரி கத்தும்

கானகம் - (இருமருங்கும்) நரி கூப்பிடுங் காடு,—அழல்தலை வெம் பரற்று என்பர்-(அக்காடு) அழற்கொழுந்துபோலும் முனையை யுடைய வெய்ய பரலையுடைத்தென்று சொல்லுவர்,—தில்லையம்பலத்தான் - தில்லையம்பலத்தில் வீற்றிருப்பவனது,—கழல் தலை வைத்து கை போதுகள் கூப்ப கல்லாதவர்போல் - கழல்களைத் தலைமேல் வைத்துக் கையாகியபோதுகளைக் குவிக்கப் பயிலாதவரைப்போல,—குழல்தலை. சொல்லி - குழலிடத்துச் சொற்போலும் சொல்லை யுடையாய்!—நம் கொற்றவர்க்கு - நம்முடைய கொற்றவருக்கு,—செல்ல குறிப்பாகும் - (இத்தனிமைத்தாகிய நெறிக்கண்) செல்லக் குறிப்பாகின்றது,—என்னோ- இஃதென்னோ? எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - ஆற்றாமைநீங்குதல்.

நெறிக்க ணீரில்லையென விரிப்பினு மமையும். (உ0சு)

## போக்கறிவித்தல்.

பொருசுடர்வேலவன் போக்குத்துணிந்தமை
யரிவைக்கவ ளறியவுரைத்த து.

(எ - து.) (இப்பொழுது அவர்போகைக்குக்காரணமென்னோவென்றுகேட்ட தலைமகளுக்குப்பாங்கி, நின்னை நமர் கொடாமையே காரணமென்று) அவளறியத் தலைமகனது போக்கை யறிவித்தது.

காயமுமாவியுநீங்கள்சிற்றம்பலவன்கயிலைச்
சீயமுமாவும்வெரீஇவரலென்பல்செறிதிரைநீர்த்
தேயமும்யாவும்பெறினுங்கொடார்நமரின்னசெப்பிற்
றேயமுநாடுமில்லாச்சுரம்போக்குத்துணிவித்தவே.

(இ-ள்.) நீங்கள் காயமும் ஆவியும் - நீங்கள் உடம்புமுயிரும் போல (ஒருவரையொருவர் இன்றியமையாத அன்புடையீர், இத்தன்மைத்தாகிய நுங்காதலை நினையாது),—சிற்றம்பலவன் கயிலை-சிற்றம்பலத்தான் கைலையில்,—சீயமும் மாவும் வெரீஇ -

சியத்தையும் மற்றவிலங்கையும் அஞ்சி,—வரல் என்பல்-(யான் அவனை)வரற்பாலை யல்லையென்று கூறுவேன்.—செறி திணை நீர் தேயமும் யாவும் பெறினும் - (அவ்வாறு வருதலையொழிந்து உன்னை மணம்புரிய வேண்டின்) நெருங்கிய திணைகளையுடைய கடலாற் சூழப்பட்ட இந்நிலத்தையும் (பொன்முதலிய) எல்லா வற்றையும் பெறினும்,—நமர் கொடார் - நமர் (நின்னைக்) கொடார்கள்.—தோயமும் நாமும் இல்லா - (அதனால்) நீரும் மக்கள் வாழுமிடமும் இல்லாத,—சுரம் போக்கு துணிவித்த - சுரங்களிற் போதலைத் துணிவித்தனவற்றை,— செப்பின் - சொல்லுமிடத்து,—இன்ன - (அவை) இத்தன்மையனவன்றோ. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - உடன்போக்கு மாட்சிமைப் படுத்தல்.

நீங்கள் காயமுமாவியும்போல இன்றியமையாமையின் அவற் குவருமேதம் நினைதென்றஞ்சி அவன்வரவு விலக்குவேனென்று ளாக வுரைப்பினு மமையும். துணிவித்ததென்பது பாடமாயின், துணிவித்ததனைச் செப்பினின்னவெனக் கூட்டியுரைக்க.(உ0எ)

**நாணிகழ்ந்துவருந்தல்.**

கற்புநாணினு முற்சிறந்தமையி ற்
சேணெறிசெல்ல வாணுதறுணிந்தது.

(எ - து.) (உடன்கொண்டுபோகைக்குக் காரண மறிந்த) ஒள்ளியநெற்றியையுடைய தலைமகள், கற்பானது ஒருநாளுந்தன்னைவிட்டுநீங்காமலுடன்வளர்ந்த நாணினுமிகச்சிறந்தமையால் சேணெறிசெல்லத் துணிந்தது.

மற்பாய்விடையோன்மகிழ்புலியூரென்னொடும்வளர்ந்த
பொற்பார்திருநாண்பொருப்பர்விருப்புப்புகுந்துநுந்தக்
கற்பார்கடுங்கால்கலக்கிப்பறித்தெறியக்கழிக
விற்பாற்பிறவற்கவேழையர்வாழியெழுமையுமே.

(இ - ள்.) மல்லல் பாய் விடையோன் மகிழ் புலியூர் - வளத்தையுடைய பாயும்விடையையுடையவன் விரும்பும்புலியூரில்,— என்னொடும் வளர்ந்த தொற்பு ஆர் திரு நாண் - என்னொடுந் தோன்றிவளர்ந்த பொலிவார்ந்த திருவையுடைய நாணனது,— பொருப்பர் விருப்பு புகுந்து நுந்த - பொருப்பர்மேல் யான் வைத்தவிருப்பம் இடையேபுகுந்து தள்ள,—கற்பு ஆர் கடு கால் கலக்கி பறித்து எறிய - கற்பாகிய நிறைந்த கடியகாற்று அலைத்துப்பிடுங்கிப்புறத்தெறிய, — கழிக - என்னைக் கழிவதாக. — ஏழையர் - (ஆகலான் இனி) மகளிர்,—எழுமையும் - எழுபிறப்பின்கண்ணும்,—இற்பால் பிறவற்க - குடியிற் பிறவாதொழிக. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - உடன்போக்கு வலித்தல்.

நாண்கழிகவென வினையும். வாழி - அசைநிலை. கற்பாங்கடுங்காலென்பதூஉம் பாடம். முற்சிறந்தமை - முன்னெண்ணச்சிறந்தமை. மல்லல் - கடைக்குறைந்து நின்றது. (உ0அ)

## துணிவெடுத்துரைத்தல்.

செல்வமாதர் செல்லத்துணிந்த மை
தொல்வரைநாடற்குத் தோழிசொல்லியது.

(எ-து.) (தலைமகளைக்கற்புவழி நிறுத்திச்சென்று) பெரியவரை நாடனாகிய தலைமகனுக்குத் தலைமகள் உடன்செல்லத்துணிந்தமையைப் பாங்கியறிவித்தது.

கம்பஞ்சிவந்தசலந்தரனாகங்கறுத்ததில்லை
நம்பன்சிவநகர்நற்றளிர்கற்சுரமாகுநம்பா
வம்பஞ்சியாவம்புகமிகநீண்டரிசிந்துகண்ணாள்
செம்பஞ்சியின்மிதிக்கிற்பதைக்கும்மலர்ச்சீறடிக்கே.

(இ-ள்.) நம்பா - நம்பா !—அம்பு அஞ்சி ஆவம் புக மிக நீண்டு அரி சிந்து கண்ணாள் - அம்புகள் அஞ்சித் தூணியிற்புக்கொளிப்ப மிகவும்நீண்டு செவ்வரிசிந்திய கண்களையுடையாளது,—

செம்பஞ்சியின் மிதிக்கில் பதைக்கும் மலர் சிறு அடிக்கு - செம்பஞ்சியின் மிதிப்பினும் நடுங்கும் மலர்போலுஞ் சிறியவடிக்கு,—கல் சுரம்-நீசெல்லுங் கல்லையுடைய சுரமானது (இவளது துணி விருந்த வாற்ருன்),—கம்பம் சிவந்த - அச்சத்தால் வரும் நடுக்கத்தைக் கெடுத்த,—சலந்தரன் ஆகம் கறுத்த - சலந்தரனுகத்தைமுனிந்த,—தில்லை நம்பன் - தில்லைக்கணுள்ள நம்பனது,—சிவநகர் - சிவநகரின்,—நல் தளிர் ஆகும் - நல்ல தளிராம்போலும். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - உடன்போக்கு வற்புறுத்தல்.

சிவநகரென்பது ஒரு திருப்பதி. அரிசிந்து கண்ணுள் மலர்ச் சீறடியென்று கூட்டுவாருமுளர். தொல்வனை - பெரியவனை. ()

## துறியிடங்கூறல்.

மன்னியவிருளிற் றுன்னியகுறியிற் [து.
கோங்கிவர்கொங்கையை நீங்குகொண்டென்றென்ற

(எ - து.) (துணிவெடுத்துக்கூறியபாங்கி, தலைமகனைநோக்கி) நிலைபெற்ற இவ்விருட்பொழுதில் நீமுன் புவர்திவளை யெதிர்ப்பட்டகுறியிடத்தில் கோங்கமலரன்ன முலையையுடைய தலைமகளைக்கொண்டுபோவாயாக வென்றது.

முன்ஞேன்மணிகண்டமொத்தவனம்பலந்தம்முடிதாழ்த்
துன்னுதவர்வினைபோற்பரந்தோங்குமெனதுயிரே
யன்னுளரும்பெறலாவியன்னுயருளாசையினும்
பொன்னூர்மணிமகிழ்ப்பூவிழயாம்விழைபொங்கிருளே.

(இ-ள்.) எனது உயிர் அன்னுள் அரும் பெறல் ஆவி அன்னுய்-எனதுயிரையொப்பாளது அரிய பெறுதலை யுடைய ஆவியையொப்பாய்! — அருள் ஆசையினுல் - நினதருண்மேலுள்ள ஆசையால்,—பொன் ஆர் - பொன்போலும் நிறைந்த,—மணி - அழகிய,—மகிழ் பூ விழ-மகிழின் பூவிழ (அவை விழுகின்றவோ

சையை நீசெய்யுங்குறியாக வோர்ந்து),—யாய் விழை பொங்கு இருள் - யாம்விரும்பு மிக்கவிருள்,—முன்னோன் மணி கண்டம் ஒத்து - எல்லோருக்கும் முன்னுயவனது அழகிய மிடற்றை யொத்து,—அவன் அம்பலம் தம் முடி தாழ்த்து உன்னாதவர் வினைபோல் - அவனதம்பலத்தைத் தம்முடிகளைத் தாழ்த்து நினையாதவரது தீவினைபோல, — பரந்து ஓங்கும் - (கருமை யோடு) பரந்து மிகும். எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - குறியிட முணர்த்துதல்.

ஆவியன்னுயதருளென் றுரைப்பாருமுளர். மணிமகிழ்பூவிழ வென்பதுபாடமாயிற் பூவிழவென்னுஞ்சொற்கள் ஒருசொன் னீர்மைப்பட்டு மணிமகிழென்னுமெழுவாயை யமைத்தனவாக வுரைக்க. (உகூ௦)

அடியோடுவழிநினைந் தவனுளம்வாடல்.

நெறியுறுகுழலியொடு நீங்கத்துணிந்த
உறுசுடர்வேலோ னுள்ளம்வாடிய து.

(எ - து.) (பாங்கி குறியிடங்கூறிப்போகாநிற்ப) நெறிந்தகுழலையுடைய தலைமகளோடு நீங்கத்துணிந்த மிக்கசுடரையுடைய வேலையுடைய தலைமகன், தான் செல்லும்வழியைநினைந்து உள்ளம்வாட்டமடைந்தது.

பனிச்சந்திரனொடுபாய்புனல்சூடும்பரன்புலியூ
ரனிச்சந்திகழுமஞ்சீறடியாவவழல்பழுத்த
கனிச்செந்திரளன்னகற்கடம்போந்துகடக்குமென்று
னிச்சந்தமேகலையாட்கென்கொலாம்புகுந்தெய்துவதே.

(இ - ள்.) பனி சந்திரனொடு - குளிர்ச்சியையுடைய மதி யோடு, — பாய் புனல் சூடும் - பரந்த புனலையுடைய கங்கை யைச்சூடும், — பரன் புலியூர் - பரனது புலியூரில், — அனிச் சம் திகழும் அம் சீறடி - அனிச்சப்பூப்போலும் அழகிய சிறிய அடிகள்,—அழல் பழுத்த கனி செம் திரள் அன்ன கல் கடம் -

தீயின்கண்பழுத்த பழத்தினது சிவந்த திரள்போலும் கற்றிரளை யுடைய காட்டை, — போந்து கடக்குமென்றால் - (இங்கு நின்றும்) போந்து கடக்குமாயின்,—சந்தம் மேகலையாட்கு - நிறத்தையுடைய மேகலையுடையாட்கு, — இனி புகுந்து எய்தவது என்கொல் - இனி என்காரணமாக வந்தெய்தும் துன்பம்வேறென். எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - நெஞ்சொடு சாவுதல்.

ஆவ - இரங்கற்குறிப்பு. (உ௩௧)

## கொண்டுசென்றுய்த்தல்.

வண்டமர் குழலியைக்
கண்டுகொள் கென்றது.

(எ - து.) (தலைமகன் குறியிடைநின்று அடியொடு வழிநினைந்துள்ளம்வாடாநிற்ப, அந்நிலைமைக்கண் பாங்கி தலைமகனை நேர்ந்து நின்னுள்ளத்துக் கருதிய) வண்டமருங்குழலையுடையாளைக் கண்டுகொள்ளெனத் தலைமகளைக்கொண்டு சென்றவனொடுங் கூட்டியது.

வைவந்தவேலவர்சூழ்வரத்தேர்வரும்வள்ளலுள்ளந்
தெய்வந்தருமிருணேங்குமுழுதுஞ்செழுமிடற்றின்
மைவந்தகோன்றில்லைவாழ்த்தார்மனத்தின்வழுத்துநர்போன்
மொய்வந்தவாவிதெளியுந்துயிலுமிம்மூதெயிலே.

(இ-ள்.) செழு மிடற்றின் மை வந்த கோன் தில்லை - வளவிய கண்டத்தின்கண் கருமையுண்டாகிய கோனது தில்லையை,— வாழ்த்தார் மனத்தின் முழுதும் இருள் தூங்கும் - வாழ்த்தாதாருடைய மனம்போல உலகமுழுது மிருள் செறியா நின்றது,— வழுத்துநர்போல் மொய்வந்த வாவி தெளியும் - அத்தில்லையை வாழ்த்துவாருடைய மனம்போலப் பெருமையுண்டாகிய பொய்கைகள் கலக்கமற்றுத் தெளியாநின்றன,—இ மூதெயில் துயிலும்-இம்முதியவூர் துயிலா நின்றது (அதனால்),—வை வந்த வேல

வர் சூழ்வர தேர் வரும் வள்ளல் - கூர்மையுண்டாகியவேலை யுடைய இளையர்சூழத் தேரின்கண்வரும் வள்ளலே!—உள்ளம்-நினதுள்ளத்திற் கருதியதனை, — தெய்வம் தரும் - தெய்வம் இப்பொழுதே நினக்குத்தரும். (என் தோழியைக் கொணர்ந் தேன் காண்பாயாக.) எ-று. மெய்ப்பாடு-பெருமிதம்; பயன்-தலைமகளைத் தலைமகனுடன் படுத்தல்.

வள்ளலதுள்ளமென்று விரித்துரைப்பினுமமையும். சூழ்வரத் தோவருமென்று பாடமோதி ஊர்காக்குமிளையர் ஊரைச்சூழ் வரும் வரவு மினியொழியுமென் றுரைப்பாரு முளர். (உகஉ)

**ஒம்படுத்துரைத்தல்.**

தேம்படு கோதை யை
யோம்ப டுத்த து.

(எ - து.) (தலைமகளைப்பாங்கிகொண்டுசென்று ய்த்து இருவரையும்வலஞ்செய்துநின்று தலைமகனை நோக்கி) வண்டுகள்நிறைந்தகுழலையுடைய இவளி டத்து (நின்னருளென்றுந்திரியாது காப்பாயெனத் தலைமகளைத் தலைமகனுக்கு) ஓம்படுத்துரைத்தது.

பறந்திருந்தும்பர்பதைப்பப்படரும்புரங்கரப்பச்
சிறந்தெரியாடிதென்றில்லையன்னாடிறத்துச்சிலம்பா
வறந்திருந்துன்னருளும்பிறிதாயினருமறையின்
றிறந்திரிந்தார்கலியும்முற்றும்வற்றுமிச்சேணிலத்தே.

(இ - ள்.) சிலம்பா - சிலம்பனே!—இருந்து உம்பர் பதைப்ப பறந்து படரும் புரம் கரப்ப - இருந்து தேவர் (இடைவிடாது) நடுங்கப்பறந்துசெல்லும் புரங்கள் கெட, — சிறந்து எரி யாடி தென் தில்லையன்னாள் திறத்து - பொலிந்து எரியான்விளை யாடுமவனது தெற்கின்கணுண்டாகிய தில்லையை யொப்பாளிடத்து,— அறம் திருந்து - அறந்திருந்துதற்குக் காரணமாகிய,— உன் அருளும் பிரிதாயின் - உனதருளும் வேறுபடுமாயின்,—

இ சேண் நிலத்து - இவ்வகன்றநிலத்து,—அரு மறையின் திறம் திரிந்து ஆர்கலியும் முற்றும் வற்றும் - அரியமறைகளின் முறைமைபிறழ கடலும் அஞ்சாதுவற்றும். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - ஓம்படுத்தல்.

அறந்திரிந்தென்பது பாடமாயின், அறந்திரிந் தருமறையின் திறந்திரிந்தென மாற்றியுரைக்க. அறந்திரிந்தாற்போல நின்னருளும் பிறிதாயினென வொருசொல் வருவித் துரைப்பினு மமையும். அருமறையு மென்பதூஉம் பாடம். (உ௩௩)

## வழிபடுத்துரைத்தல்.

மதிநுதலியை வழிப்படுத்து
பதிவயிற்பெயரும் பாங்கிபகர்ந்தது.

(எ-து.) (ஓம்படுத்துரைத்துத்) தன்பதிக்குச்செல்லும் பாங்கி, மதிபோலு நுதலினையுடையாளை வழிப்படுத்துச் செல்லுமினென் றிருவரையுநோக்கிக் கூறியது.

ஐயன்டொல்லையாயமுமௌவையுநீங்கவிவ்வூர்க்கவ்வைதீர்த்
தாண்டொல்லைகண்டிடக்கூடுகநும்மையெம்மைப்பிடித்தின்
றுண்டெல்லைதீரின்பந்தந்தவன்சிற்றம்பலநிலவு
சேண்டில்லைமாநகர்வாய்ச்சென்றுசேர்கதிருத்தகவே.

(இ-ள்.) எம்மை பிடித்து ஆண்டு இன்று எல்லை தீர் இன்பம் தந்தவன் - எங்களை வலிந்துபிடித்தாண்டு இன்றெல்லைநீங்கிய இன்பத்தைத்தந்தவனது, — சிற்றம்பலம் நிலவு சேண் தில்லை மா நகர்வாய் - சிற்றம்பலம் நிலைபெற்ற சேய்த்தாகியதில்லையாகிய பெரியநகரிடத்து, — திருத்தக சென்று சேர்க - (நீர்) பொலிவுதகச்சென்று சேர்வீராயின், — ஆயமும் அவ்வையும் ஈண்டு நீங்க - மகளிர்கூட்டமும் அன்னையும் பின்வராது இவ்விடத்தேநீங்க,—இவ்வூர் கௌவை ஒல்லை தீர்த்து - இவ்வூரின்

கனுண்டாகிய அலனை (ஒருவாற்ருன்) விளையநீக்கி, — ஆங்டு நும்மை ஒல்லை கன்டிடக்கூடுக - ஆண்டுவேந்துங்களை விளையக் காணக்கூடுவதாக. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - அச்சந்தவிர்த்தல்.

சேண்டில்லை யென்பதற்கு மதின்முதலாயினவற்று ணுயர்ந்த தில்லை யெனினு மமையும். (உ௧௪)

## மெல்லக்கொண்டேகல்.

பஞ்சிமெல்லடிப் பணைத்தோளியை
வெஞ்சுரத்திடை மெலிவகற்றியது.

(எ - து.) (பாங்கியைநீங்கி யுடன்கொண்டுசெல்லுந்தலைமகன்) பஞ்சிபோலுமென்மையாகிய அடியையும் வேய்போலுந்தோளையுமுடையாளாகிய தலைமகளை (தன்னுயவெள்ளத்தோடும் விளையாடுமாறு போன்று) மெல்லக்கொண்டு சென்றது.

பேணத்திருத்தியசீறடிமெல்லச்செல்பேரரவம்
பூணத்திருத்தியபொங்கொளியோன்புலியூர்புரையு
மாணத்திருத்தியவான்பதிசேருமிருமருங்கும்
காணத்திருத்தியபோலுமுன்னுமன்னுகானங்களே.

(இ-ள்.) பேர் அரவம் பூண திருத்திய - பெரிய அரவங்களைப பூணும்வண்ணம் ( அவற்றின் தீத்தொழிலை ) நீக்கிய,— பொங்கு ஒளியோன் புலியூர் புரையும் - பெருகும் ஒளியையுடையவனது புலியூரை யொக்கும்,—மாண திருத்திய வான் பதி - மாட்சிமைப்படக் குற்றங்கடிந்து செய்யப்பட்ட பெரிய ஊர்கள்,— சேரும் இரு மருங்கும் - (நாம்) செல்லுநெறியின் இருபக்கமும் (ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும்),—முன்னும் மன்னு கானங்கள் காண திருத்தியபோலும்-முன்னுளவாகிய காடுகள் (நாம்சென்று) காணும்வண்ணந் திருந்தச் செய்யப்பட்டன போலும்.— பேண - ( அதனுல்யாம் ) விரும்பும் வண்ணம், — திருத்திய

சீறடி - (கைபுனையப்பட்ட) சிறியஅடியையுடையாய்!—மெல்ல செல் - பையச்செல்வாயாக. எ - று. மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைமகளை யயர்வகற்றுதல்.

அரவாந் திருத்திய வெளவியையும், வான்பதிசேருமென்பதற்குப் பதிநெறியைச்சேர்ந்திருக்குமென்றுரைப்பினுமமையும்.

அடலேடுத்துரைத்தல்.

வரிசிலையவர் வருகுவரென ப்
புரிதருகுழலிக் கருளவனுரைத்த து.

(எ-து.) (மெல்லக்கொண்டுசெல்கின்றதலைமகன், சேய்த்தாகவரும்) வரிசிலையவ ரின்றுரெனப்புரிகுழலையுடையதலைமகளுக்கு (அவளச்சந்நீரத் தன்னடலெடுத்) துரைத்தது.

கொடித்தேர்மறவர்குழாம்வெங்கரிநிரைகூடினென்கை
வடித்தேரிலங்கெஃகின்வாய்க்குதவாமன்னுமம்பலத்தோ
னடித்தேரலரென்னவஞ்சுவனின்னையரென்னின்மன்னுங்
கடித்தேர்குழன்மங்கைகண்டிடிவ்வின்டோய்கனவரையே.

(இ-ள்.) நின் ஐயர் என்னின்-நின்னுடைய ஐயன்மாராயின், மன்னும் அம்பலத்தோன் அடி தேரலர் என்ன அஞ்சுவன் - நிலைபெறும் அம்பலத்தின்கண்ணனுடைய அடிகளையாராய்ந் துணரார் தாரைப்போல வஞ்சுவேன்,—கொடி தேர் - (அல்லது) கொடியையுடைய தேரும்,—மறவர் குழாம் - வீரருடைய திரளும்,—வெம் கரி நிரை - வெய்யயானைக்கூட்டமும்,—கூடின் - அனைத்துந் திரண்டுவரினும்,—என் கை வடித்து ஏர் இலங்கு எஃகின் வாய்க்கு உதவா - என்கையில் வடிக்கப்பட்டு அழகு விளங்கா நின்ற வேலாயுதத்தினது வாய்க்கு இரையாகமாட்டா, — மன்னும் கடி தேர் குழல் மங்கை - நிலைபெற்ற நாற்றத்தை (வண்டுகள்) ஆராயும் கூந்தலையுடைய மங்காய்!—விண் தோய் - ஆகாயத்தை யளாவிய,—இ கன வரை கண்டிடு - இப்பெரியவரை

யிடத்து (யான்செய்வதனைக்) காண்பாயாக. எ - று. மெய்ப் பாடு - பெருமிதம்; பயன் - தன்வலியுணர்த்தி யாற்றுவித்தல்.

கூடினென்பதற்கு - என்னைக்கிட்டி னென்றுரைப்பினு மமை யும். அடித்தேர்பவனொன்பது பாடமாயின் என்னவென்பதனை உவமவுருபாக்காது இவரையடித்தேர்பவனொன்று பிறர்கருத வென்றுரைக்க. கண்டிடினொன்பதூஉம் பாடம். இடைச்சுரத்து அவளுடையதமர் எதிர்படைதொடர்ந்துநிற்ப, வழிவருவார்வி லக்கி லளைவித்துக்கொடுப்ப இதனை 'இடைச்சுரமருங்கின்' என் னுஞ் சூத்திரத்தானு மறிக. தொல் - பொருள் - செய்-கக௯. ()

அயர்வகற்றல்.

இன்னல்வெங்கடத் தெறிவேல வ
னன்னமன்னவ ளயர்வகற்றிய து.

(எ - து.) (அடலெடுத்துரைத்து அச்சந்தீர்த்து) துன்பம்விளைக்கும் வெம்மையாகியகாட்டிற்செல்லும் எறிவேலையுடையதலைமகன் இனி நமக்குக்குறையில் லையென அன்னம்போல்பவளாகிய தலைமகளது வழி வருத்தந் தீரக்கூறியது.

முன்னோனருண் முன்னுமுன்னாவினையின்முனகர் துன்னு
மின்னாக்கடறிதிப்போழ்தேகடந்தின்றுகாண்டுஞ்சென்று
பொன்னாரணிமணிமாளிகைத்தென்புலியூர்புகழ்வார்
தென்னாவெனவுடையானடமாடுசிற்றம்பலமே.

(இ - ள்.) முன்னோன் அருள் முன்னும் உன்னா வினையின் முனகர் துன்னும் இன்னா கடறு - (இது) எல்லார்க்கும் முன்னாய வனதருளை முற்பிறப்பின்கண்ணும் நினையாத தீவினையையுடை யகீசர் சேருந் துன்பத்தைச்செய்யும் பாலைநிலம்,—இது இப் போழ்தே கடந்து - இதனை இப்பொழுதே கடந்து, — பொன் ஆர் அணி மணி மாளிகை தென்புலியூர் - பொன்னிறைந்த வழ கையுடைய மணியால் விளங்கும் மாளிகைகளையுடைய தென்

புலி யூரின்கண்,—புகழ்வார் தென்னுவென உடையான் நடம் ஆடும் - புகழ்ந்துரைப்பார் தென்னனேயென்றுபுகழ என்னையு டையான் நின்றுகூத்தாடும், — சிற்றம்பலம் இன்று சென்று காண்டும் - சிற்றம்பலத்தை யின்றுசென்றுகாண்பேம். (இது வன்றோ நமக்குவரும் இன்பம்). எ-று. மெய்ப்பாடு-பெருமிதம்; பயன் - தலைமகளை யயர்வகற்றுதல்.

தென்புலியூர்ச்சிற்றம்பலமென வியையும். உடையானென் பது பாடமாயின், தென்னனேயென்றுபுகழ வொரு சிறப்புடை யானென் றுரைப்பினுமமையும். கடறு - காடு. அலங்காரம் - கூற்றிடத்திருபொருட்கண்வந்த உயர்ச்சிவேற்றுமை. (உ௪எ)

## நெறிவிலக்கிக்கூறல்.

சுரத்திடைக்கண் டவர் சுடர்க்குழைமா தொடு
சரத்தணிவில்லோய் தங்குகென்ற து.

(எ-து.) (அயர்வகற்றிக்கொண்டு செல்லும்போது இனிச்செல்லும்வழியில் நன்மக்களில்லை, நீ தனியை, இவள்வாடினுள், பொழுதுஞ்சென்றதெனச்) சுரத் திடைக்கண்டோர், ஒளியுள்ள குழையையுடைய மா துடன் வாளியைத்தொடுக்கும் அழகிய வில்லையுடை ய தலைமகனை வழிவிலக்கி இங்கே தங்கிப்போவெ ன்றது.

விடலையுற்றாரில்லைவெம்முனைவேடர்தமியைமென்பூ
மடலையுற்றார்குழல்வாடினண்மன்னுசிற்றம்பலவர்க்
கடலையுற்றாரினெறிப்பொழிந்தாங்கருக்கன்சுருக்கிக்
கடலையுற்றான்கடப்பாரில்லையின்றிக்கடுஞ்சுரமே.

(இ - ள்.) விடலை - விடலாய்!—உற்றார் இல்லை - (இனிச்செ ல்லுநெறிக்கண்) நன்மக்களில்லை,—வெம் முனை வேடர் - (உள் ளார்) வெய்யமுனையிடத்து வேடரே,—தமியை - நீ தனியை.—

மென் பூ மடலை உற்று ஆர் குழல் வாடினள் - மெல்லியபூவின் இதழைப்பொருந்தி நிறைந்த குழலையுடையாள் (வழிவந்த வருத்தத்தால்) வாடினுள், — மன்னு சிற்றம்பலவர்க்கு அடலை உற்றுரின் - நிலைபெற்றசிற்றம்பலத்தை யுடையவருக்கு ஆட்ப டுந்தன்மையில்லாரைப்போல, — எறிப்பு ஒழிந்து ஆங்கு அருக் கன் சுருக்கி கடலை உற்றுன் - விளக்கமொழிந்து அவ்விடத்து அருக்கன் (தன்கதிர்களைச்) சுருக்கிக் கடலைச்சென்றுற்றுன்,—இ கடு சுரம் இன்று கடப்பார் இல்லை-இக்கடியசுரத்தை இப்பொ ழுது கடப்பாருமில்லை. (அதனுலீண்டுத் தங்குவாயாக). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - நெறிவிலக்குதல்.

வேடரொடுசாராத நன்மக்கள் இவர்க்கணியராதலின் அவ ரை உற்றுரொன்றுர். வேடரி லுற்றுரில்லையென்று நன்றிசெய்யா ரொன்பது பயப்பவுரைப்பினு மமையும். மடலென்றது - தா ழம்பூ மடல். (உகஅ)

**கண்டவர்மகிழ்தல்.**

மண்டழற் கடத்துக்
கண்டவ ருரைத்தது.

(ஏ - து.) (நெறிவிலக்குற்று வழிவருத்தந் தீர்ந்து ஒருவரையொருவர் காணலுற்று இன்புற்றுச்செல் கின்ற இருவரையும்) நெருங்கிய அழலைச்சொரியுஞ் சுரத்திற்கண்டவர் இன்புற்றுமகிழ்ந்துகூறியது.

அன்பணைத் தஞ்சொல்லிபின்செல்லுமாடவனீடவன்றன்
பின்பணைத்தோளிவருமிப்பெருஞ்சுரஞ்செல்வதன்று
பொன்பணைத்தன்னவிறையுறைதில்லைப்பொலிமலர்மே
னன்பணைத்தண்ணறவுண்ணளிபோன்றெளிர்நாடகமே.

(இ - ள்.) அன்பு அணைத்து அம் சொல்லிபின் - (சிறுபுறமும் அசைநடையுங் காண்டற்கு) அன்பானணைத்து அழகிய சொல் லையுடையாளது பின்னே, — ஆடவன் செல்லும் - ஆடவன்

(ஒருகாற்) செல்லா நின்றான்,—அவன் தன்பின் - (முன்செல்
நாணிப் புறக்கொடையும் வலிச்செலவுங்காண) அவனது பின்
னே, — பணை தோளி நீடு வரும் - வேய்போலுந் தோள்களை
யுடையாள் நெடும்பொழுது செல்லாநின்றாள்,—இ பெரு சுர
செல்வது அன்று - (இவ்வாறிருந்தவர்ற்றான் இயராதுசெயல்
இப்பெரியசுரத்தைச் செல்கையன்று: (மற்றென்னெனின்),—
பொன் பணைத்தால் அன்ன இறை உறை தில்லை - பொன்னொ
வடிவுகொண்டு பெருத்ததுபோலும் இறையுறைகின்ற தில்லை
வளைப்பின்,—நல் பணை பொலி மலர்மேல் தண் நறவு உண் அ
போன்று - நல்ல பணையிற்பொலிந்த மலரிடத்துக்குளிர்ந்தமது
வையுண்ட வண்டுகளையொத்து,—ஒளிர் நாடகம் - (இப்பக்க
யான் மயங்கி) விளங்குவதாகிய ஒரு நாடகம். எ - று. மெய்ப
பாடு - அழுகை ; பயன் - நெறிவிலக்குதல்.

பெருஞ்சுரஞ்செல்வதன்றென்பதற்குப் பெருஞ்சுரந் தொலை
வதன்றெனினு மமையும். பொன்பணைத்தாற்போலு மிறைெ
ன்பாரு முளர். கண்டார்க்கின்பஞ் செய்தலின் நாடகமென்றா

### வழிவிளையாடல்.

வன்றழற்கடத்து வடிவேலண்ண ல்
மின்றங்கிடையொடு விளையாடிய து.

(எ-து.) (கண்டவர்மகிழ) வன்மையாகிய அழலைச்
சொரிகின்ற சுரத்திற்கொண்டு செல்கின்ற வடித்த
வேலையுடைய தலைமகன் மின்போலு மிடையையுடை
ய தலைமகளோடு விளையாடியது.

கண்கடம்மாற்பயன்கொண்டனங்கண்டினிக்காரிகைநின்
பண்கடமென்மொழியாரப்பருகவருகவின்னே
விண்கடநாயகன்றில்லையின்மெல்லியல்பங்கனெங்கோன்
றண்கடம்பைத்தடம்போற்கடுங்கானகந்தண்ணெனவே.

(இ - ள்.) கண்டு கண்கள்தம்மால் பயன் கொண்டனம் - (நெறி செல்வருத்தத்தினெகிழ்ந்த மேனியையாகிய நின்னைக்) கண்டு கண்களாற்கொள்ளும் பயன்கொண்டனம்,— காரிகை - பெண்ணே !—விண்கள் தம் நாயகன் - விண்ணுலகங்களுக்குத் தலைவன்,—தில்லையின் மெல்லியல் பங்கன் - தில்லைக்கணுளளாகிய மெல்லியல் கூற்றையுடையான்,—எம் கோன் - எம்முடைய இறைவன், — தண் கடம்பை தடம்போல - (அவனது) குளிர்ச்சிபொருந்திய கடம்பையிற் பொய்கைபோல, — கடு கானகம் தண்ணென - கடியகானகங் குளிருமளவும், — இனி நின் பண்கள்தம் மெல் மொழி ஆர பருக - இனி (சிறிதிருந்து) நினதுபண்ணினது முறைமையையுடைய மெல்லியமொழியைச் (செவிநிறையப்) பருக,—இன்னே வருக - இவ்விடத்து வருவாயாக. எ - று. மெய்ப்பாடு - உவகை ; பயன் - மகிழ்தல்.

தண்ணென வின்னேவருகவென வியையும். கடம்பையென்பது ஒருதிருப்பதி. கடம்பைத் தடம்போற் கடுங்கானகங்குளிரும்வண்ணம் நின்மொழியைப் பருகவென்று கூட்டினுமமையும். (உஉ0)

**நகரணிமைகூறல்.**

வண்டமர் குழலியொ டு
கண்டவ ருரைத்த து.

(எ - து.) (தம்முளின்புற்றுச்செல்லும்) வண்டமருங்குழலையுடையதலைமகளோடு தலைமகனைக்கண்டவர் நகரணிமை கூறியது.

**மின்றங்கிடையொடுநீவியன்றில்லைச்சிற்றம்பலவர்**
**குன்றங்கடந்துசென்றானின்றுதோன்றுங்குரூஉக்கமலந்**
**தன்றங்கிடங்குந்துறைதுறைவள்ளைவெள்ளைநகையார்**
**சென்றங்கடைதடமும்புடைசூழ்தருசேணகரே.**

(இ-ள்.) மின் தங்கு இடையொடு - மின்போலும் இடையை யுடையாளோடு, — நீ வியன் தில்லைச்சிற்றம்பலவர் குன்றம் கடந்து சென்றால் - நீ அகன்றதில்லையிற் சிற்றம்பலத்தை யுடையவரது குன்றத்தைக்கடந்து அப்பாற் சிறிதுதூரஞ்சென்றால்,—குரு கமலம் துன்று அம் கிடங்கும் - நிறத்தையுடைய தாமரைப்பூநெருங்கிய அழகியகிடங்கும், — வள்ளை வெள்ளை நகையார் துறை துறை சென்று அங்கு அடை தடமும் - வள்ளைப்பாடலைப்பாடும் வெள்ளைமுறுவலையுடைய மகளிர் துறை தொறுந் துறைதொறுஞ்சென்று அவ்விடத்துச்சேரும்பொய் கைகளும்,—புடை சூழ்தரு - பக்கத்துச்சூழ்ந்த,—சேண் நகர்- (அத்தில்லையாகிய) உயர்ந்தநகர்,—நின்று தோன்றும் - இடையறாது தோன்றும், (அத்துணையுங் கடிதுசெல்வாயாக). எ-று. மெய்ப்பாடு-பெருமிதம்; பயன் - இடமணித்தென்றல். (உஉக)

**நகர்காட்டல்.**

கொடுங்கடங்கடந்த குழைமுகமாதர்க்குத்
தடங்கிடங்குசூழ் தன்னகர்காட்டியது.

(எ - து.) (நகரணிமை கூறக்கேட்டு இன்புறக் கொண்டுசெல்லுந்தலைமகன்) கொடுமையாகியசுரத் தைக்கடந்த குழையாடாநின்றமுகத்தையுடைய தலைமகளுக்குத் தடங்கிடங்குசூழ்ந்த தன்னகரைக்காட்டியது.

மின்போல்கொடிநெடுவானக்கடலுட்டிரைவிரிப்பப்
பொன்போல்புரிசைவடவரைகாட்டப்பொலிபுலியூர்
மன்போற்பிறையணிமாளிகைசூலத்தவாய்மடவாய்
நின்போனடையன்னந்துன்னிமுன்றோன்றுநன்னீணகரே.

(இ - ள்.) நின்போல் நடை அன்னம் துன்னி - நின்னுடைய நடைபோலும் நடையையுடைய அன்னங்கள் நெருங்கி,— மன்

போல் பிறை அணி மாளிகை - மன்னனைப்போலப் பிறையை யணிந்த மாளிகைகள்,—சூலத்தவாய்-(அவனைப்போலச்) சூலத்தை யுடையனவுமாய்,—முன் தோன்றும் நல் நீள் நகர் - முன் தோன்றுகின்ற நல்ல பெரியநகர், — மடவாய் - பெண்ணே!— மின்போல் கொடி - (ஒளியானும் நுடக்கத்தானும்) மின்னை யொக்கும் கொடிகள்,—நெடு வானம் கடலுள் திரை விரிப்ப - பெரியவானமாகியகடலுள் திரையைப்பரப்ப,—பொன் போல் புரிசை வடவரை காட்ட - பொன்னுணியன்ற புரிசை மேருவைக் காட்ட, — பொலி புலியூர் - பொலியும் புலியூர்காண், (தொழு வாயாக). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - இடங் காட்டுதல்.

போலென்பது - அசைநிலை. நிறத்தாற் பொன்போலும் புரிசையென்பாருமுளர். (உஉஉ)

## பதிபரிசுரைத்தல்.

**கண்ணிவர் வளநகர் கண்டுசென் றடைந் து பண்ணிவர்மொழிக்குப் பதிபரிசுரைத்தது.**

(எ - து.) கண்ணுக்கினிய தோற்றத்தையுடைய வளநகரைக்காட்டி அந்நகருட்சென்றெய்திப் பண் போலுமொழியையுடைய தலைமகளுக்குத் தன்பதி பரிசுகாட்டியது.

**செய்குன் றுவையிவைசீர் மலர்வாவிவிசும்பியங்கி**
**நைகின் றதிங்களெய்ப்பா றும்பொழிலவைஞாங்கரெங்கும்**
**பொய்குன் றவேதியரோதிடமுந் திடமிந்திடமு**
**மெய்குன் றவார்சிலையம்பலவற்கிடமேந்திழையே.**

(இ-ள்.) உவை செய் குன்று-உவை செய்குன்றுகள்,—இவை சீர் மலர் வாவி-இவை நல்லமலரையுடைய தடாகங்கள்,—அவை விசும்பு இயங்கி நைகின்ற திங்கள் எய்ப்பு ஆறும் பொழில்

அவை ஆகாயத்தின்கண் இயங்குதலான்வருந்தாந் திங்கள் இளை ப்பாறும் பொழில்கள்,—உந்திடம் ஞாங்கர் எங்கும் பொய் குன் றவேதியர் ஓதிடம் - உவ்விடம் மிசையெங்கும் உலகத்தில் பொ ய் (முதலிய குற்றங்) கெட மறையவர் வேதம் ஓதுமிடம்,—ஏந் திழையே-ஏந்திழாய்!—இந்தடமும் எய் குன்றம் யார் சிலை அம் பலவற்கு இடம் - இவ்விடமும் எய்தற்குக் (கருவியாகிய) குன் றமாகிய நீண்டவில்லையுடைய அம்பலவற்கிருப்பிடம், (இத்தன் மைத்திவ்வூர்). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - இட ங்காட்டுதல்.

இவையென்பது தன் முன்னுள்ளவற்றை, உவை யென்பது முன்னின்றவற்றிற் சிறிது சேயவற்றை, அவையென்பது அவற் றினுஞ் சேயவற்றை. முன் சொல்லப்பட்டவையேயன்றி இந் நிலையுங்கூறுகின்றேனென்பதுகருத்தாகலின் இந்தடமுமென்னு மும்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. உந்திடம் இந்திட மெனச் சுட்டீறுதிரிந்து நின்றன. (உஉ௲)

## சேவிலிதேடல்.

கவலையுற்ற காதற்றோழியைச்
செவிலியுற்றுத் தெரிந்துவினயது.

(எ - து.) (இருவரையும்வழிப்படுத்திவந்து பிரி வாற்றாது) கவலாநின்ற காதற்பாங்கியைச் செவிலி (நீ கவல்வதற்குக் காரணமென்னேவென்று வினு வித் தலைமகளைத்தேடாநிற்றல்.

மயிலெனப்பேர்ந்திளவல்லியினெல்கிமென்மான்விழித்துக்
குயிலெனப்பேசுமெங்குட்டனெங்குற்றதென்னெஞ்சகத்தே
பயிலெனப்பேர்ந்தறியாதவன்றில்லைப்பல்பூங்குழலா
யயிலெனப்பேருங்கண்ணுயென்கொலாமின்றயர்கின்றதே.

(இ . ள்.) மயிலெண பேர்ந்து - மயில்போலப் புடைபெயர்ந்து,—இள வல்லியின் ஒல்கி - இளைய கொடிபோல நுடங்கி,—மெல் மான் விழித்து-மெல்லியமான்போல விழித்து,—குயிலென பேசும் எம் குட்டன் எங்குற்றது - குயில்போலப்பேசும் எங் குழந்தை யெங்கிருக்கின்றது?—என் நெஞ்சகத்தே பயிலென பேர்ந்து அறியாதவன்-என்னெஞ்சின்கண்ணே தனக்குப்பயிற்சி யென்று பலர்சொல்லும்வண்ணம் (என்னெஞ்சினின்று) நீங்கி யறியாதவனது,—தில்லை பல் பூ குழலாய்-தில்லையின்கணுளவாகிய பலவித பூக்களையுடைய குழலையுடையாய்!—அயிலென பேரும் கண்ணாய்-வேல்போலப் பிறழுங்கண்ணையுடையாய்!—இன்று அயர்கின்றது என்கொல் - இன்று வருந்துகின்ற தென்னோ? எ - று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - தலைமகட்குற்றது ணர்தல்.

எங்குற்றதென்பதொருசொல். என்னெஞ்சகத்தே பயிலெனப்பேர்ந்தறியாதவனென்பதற்கு என்னெஞ்சின்கண்ணே நீ பயிலவேண்டுமென் றொருகால்யான்கூறப் பின்னீங்கியறியாதவ னென்றுரைப்பினு மமையும். கண்ணிக்கென்பதுபாடமாயின் அவள் காரணமாகப் போலும் இவள்வருந்துகின்றதென்று உய்த்துணர்ந்து அவட்கு நீ வருந்துகின்றதென்னென வினாவிற் றாகவுரைக்க. (உஉச)

## அறத்தொடுநிற்றல்.

சுடர்க்குழைப்பாங்கி படைத்துமொழிகிளவியிற்
சிறப்புடைச்செவிலிக் கறத்தொடுநின்றது.

(எ - து.) பிரகாசம்பொருந்திய கூந்தலையுடைய பாங்கி, தேடாநின்ற சிறப்புடைய செவிலிக்கு, (நீ போய்விளையாடச் சொன்ன தெய்வக்குன்றிடத்தே யாங்கள் யாவரும் போய் விளையாடியிருந்தேமாக அவ்விடத்தொரு பெரியோன் வழியேமாலைசூ

டிப் போயினன் ; அதனைக்கண்டு நின்மகள் இம்மா லையை யென்பாவைக்குத் தாருமென்றாள், அவனும் வேண்டியது மறுக்காது கொடுப்பவனாகலின் பிறி தொன்று நினையாதுகொடுத்து நீங்கினன். அன்றறி யாப்பருவத்து நிகழ்ந்ததனை "உற்றார்க்குரியர் பொ ற்றொடி மகளிர், கொண்டார்க்குரியர் கொடுத்தார்" என்பதனை இன்றுட்கொண்டாள்போலும்). இவ்வ ளவேயானறிவே னெனப்படைத்துக் கூறுமொழி யால் தலைமகளுடன்போக்குத் தோன்றக்கூறி யற த்தொடுகின்றது.

ஆளரிக்குமரிதாய்த்தில்லையாவருக்குமெளிதாந்
தாளரிக்குன்றிற்றன்பாவைக்குமேவித்தழறிகழ்வேற்
கோளரிக்குநிகரன்னரொருவர்குருஉமலர்த்தார்
வாளரிக்கண்ணிகொண்டாள்வண்டலாயத்தெம்வாணுதலே.

(இ-ள்.) ஆளரிக்கும் அரிதாய் - நரசிங்கமாகிய அரிக்கும் அரி தாய்,—தில்லை யாவருக்கும் எளிதாம் தாளர் - தில்லைக்கண் எல் லாருக்கு மெளிதாந் தாளையுடையவரது—இ குன்றில் - இம்ம லையிடத்து,—தழல் திகழ் வேல் - தழல்விளங்கும் வேலையுடை ய,—கோளரிக்கு நிகர் அன்னர் ஒருவர் - சிங்கத்துக்கொப்பாகிய அத்தன்மைய ரொருவரது,—குரு மலர் தார் - நிறத்தையுடைய மலரானியன்ற மாலையை,—வாள் அரி கண்ணி - வாள்போலும் செவ்வரிபரந்த கண்ணையுடையளாகிய,—எம் வாள் நுதல் - எம்முடைய ஒளிபொருந்திய நுதலையுடையாள், — வண்டல் ஆயத்து - வண்டலைச்செய்யும் ஆயத்தின்கண்ணே!—தன் பா வைக்கு மேவி கொண்டாள் - தன்பாவைக்கென்று அமர்ந்து கொண்டாள், (இத்துணையு மறிவேன்). எ-று. மெய்ப்பாடு - பெ ருமிதம் ; பயன் - உடன்போக்குணர்த்துதல்.

இக்குன்றின்கண் வண்டலாயத்துமேவிக்கொண்டாடெ வியையும். தாளரிக்குன்றினென்றதனுன் இதுதெய்வந்தா நதென்றும், பாவைக்கென்றதனுன் அறியாப்பருவமென்று கோளரிக்கு நிகரன்னுரொன்றதனுன் இவட்குத்தக்காரொன்று மேவியென்றதனுற் பயிர்ப்பு நீங்கிற்றென்றும், தாரொன், ஞன் மேய்யுற்றதனேடொக்குமென்றுங் கூறினுளாம். (உஉ

**கற்புநிலேக்கிரங்கல்.**

விற்புரைநுதலி கற்புநிலேகேட்டுக்
கோடாயுள்ள நீடாயழுங்கிய து.

(எ - து.) பாங்கியறத்தொடு நிற்கக்கேட்ட செவிலி, இது அறமேயாயினும் இவள்பருவத்திற்குத் தகாதெனஉள்ளம் நெடிதாயழுங்கியது.

வடுத்தான்வகிர்மலர்கண்ணிக்குத்தக்கின்றுதக்கன்முத்திக்
கெடுத்தான்கெடலில்தொல்லோன்றில்லேப்பன்மலர்கேழ்கிளர
மடுத்தான்குடைந்தன்றழுங்கவழுங்கித்தழீஇமகிழ்வுற்
றெடுத்தாற்கினியனவேயினியாவனவெம்மனேக்கே.

(இ-ள்.) வடு வகிர் மலர் கண்ணிக்கு - வடுவகிர்போலும் பரந்த கண்களையுடையாளுக்கு,—தக்கின்று - (இம்) முதுக்குன வுதகாது,—எம் மனேக்கு இனி ஆவன - (ஆயினும்) எம்மனேக் இனி நம்மாற்செய்யத்தகுவன,—தக்கன் முத்தி கெடுத்தான் தக்கனது முத்தியைக் கெடுத்தவன்,—கெடல் இல் தொல்லோன் -(ஒருக்காலும்) கேடில்லாத பழையோன்,—தில்லை பல் மலர் கேழ்கிளர் மடு தான் குடைந்து அன்று அழுங்க-(அவனது) தில்லைக்கண் பலவாகிய மலர்களின் நிறம் ஒளிறும்படியான மடுவைத்தான் குடைந்து அதிலன்றழுந்த,—அழுங்கி தழீஇ மகிழ்வுற்று எடுத்தாற்கு இனியனவே - அதுகண்டிரங்கி யணைத்து (இவ்வாறுதவிசெய்யப் பெறுதலான்) மகிழ்ந்தெடுத்தாற் கினியனவே (வேறில்லை.) எ - று. மெய்ப்பாடு - உவகையைச்சா

ந்த அழுகை; பயன் - தலைமகளது கற்பினைப் பாராட்டி ஆற்றுமைநீங்குதல்.

தில்லைக்கணெடுத்தாற்கென வியையும். தான் - அசைநிலை. ()

கவன்றுரைத்தல்.

அவணிலை நினைந் து
செவிலி கவன்ற து.

(எ - து.) (கற்புநிலைக்கிரங்கிய) செவிலி, (பாங்கியை நோக்கி நெருநலைநாள் அவள் சிறிய வலக்காரங்கள் செய்தனவெல்லாம் இன்றவ்வலியகாட்டைச் செல்லவேண்டிப்போலும், இதனை நானப்பொழுதேயறியப்பெற்றிலேனென்று) தலைமகள்நிலையை யெண்ணிக் கவலைகொண்டது.

நுவலக்காறந் துவந்தென்முலைமுழுவித்தழுவிச்
சிலக்காரங்கள்செய்தவெல்லாமுழுதுஞ்சிதையத்
தவலக்காலனைச்செற்றவன்சிற்றம்பலஞ்சிந்தியா
றுவலக்கானகந்தான்படாவாறுமொளியிழையே.

(இ - ள்.) ஒளி இழை - ஒளிபொருந்திய ஆபரணத்தையுடையவள் (உள்ளத்தொன்றுடையளாதலின்),—அக்கால் முறுவல் தந்து வந்து - அக்காலத்து முறுவலை யெனக்குத்தந்து வந்து,— என் முலை முழுவி - எனதுமுலையை முத்தங்கொண்டு,—தழுவி- என்னைத்தழுவி,—சிறு வலக்காரங்கள் செய்த எல்லாம் - சிறிய விரகுகள்செய்தவெல்லாம்,—முழுதும் சிதைய - எல்லாப்பொருளுமழிய,—தெறுவல காலனை செற்றவன் - வெகுளுதல்வல்ல வக்காலனை வெகுண்டவனது,—சிற்றம்பலம் சிந்தியார் உறும் - சிற்றம்பலத்தைக் கருதாதார் சேரும்,—வல கானகம் தான் படாவான் ஆம் - வலியகாட்டைத் தான்செல்லவேண்டிப்போலும், (அக்காலத்திஃதறிந்திலேன்). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமைநீங்குதல்.

எனக்கு வெளிப்படாமற் பிரிவார்செய்வன செய்தாளென்னு ங்கருத்தான் வலக்காரமென்றாள். வலக்காரம் - பொய், உபா யம். குறித்துணர்வார்க்கு வெளிப்படுமென்னுங்கருத்தாற் சிறு மைப்படுத்தாள். தெறும் வெற்றியையுடைய காலனெனினு மமையும். (உஉஎ)

அடி நினைந்திரங்கல்.

வெஞ்சுரமும்மவள் பஞ்சிமெல்லடியுஞ்
செவிலிநினைந்து கவலையுற்றது.

(எ - து.) (தலைமகளது நிலைமையையெண்ணிக் கவலைகொண்ட செவிலி),கொடியசுரத்தையும் அதை க்கடந்துசெல்லும் அவள்செம்பஞ்சியூட்டிய மெல் லியபாதத்தையும் நினைந்திரங்கியது.

தாமேதமக்கொப்புமற்றில்லவர் தில்லைத் தண்ணனிச்சப்
பூமேன்மிதிக்கிற்பதைத்தடிபொங்குநங்காயெரியுந்
தீமேலயில்போற்செறிபரற்கானிற்சிலம்படிபா
யாமேநடக்கவருவினையேன்பெற்றவம்மனைக்கே.

(இ-ள்.) தாமே தமக்கு ஒப்பு மற்று இல்லவர் - தாமே தம க்கொப்பாக வேறொரொப்பில்லாதவரது,—தில்லை தண் அனிச் சம் பூமேல் மிதிக்கில் பதைத்து அடி பொங்கும் - தில்லையிற் குளிர்ந்த அனிச்சப்பூவின்மேல் மிதிப்பினும் நடுங்கித் தன்னடி கள் கொப்புட்கொள்ளும்,—நங்காய் - நங்காய்!—எரியும் தீமேல் அயில்போல் - எரியாநின்ற தீயின்மேற்பதித்த வேல்போல,— செறி பரல் கானில் சிலம்பு அடி பாய்-செறிந்தபரலையுடைய கா ட்டின்கண் சிலம்பையுடைய வவ்வடியைப்பாவி,—அருவினையே ன் - அரிய வினையையுடையேன்,—பெற்ற அன்னைக்கு - பெற்ற வன்னைக்கு, — நடக்க ஆமே - (இன்று) நடக்க இயலுமோ (ஆண்டென் செய்கின்றாள்). எ - று. மெய்ப்பாடு - அழுகை பயன் - ஆற்றாமைநீங்குதல்,

செறிவு - ஒத்தபண்பன்று. நிலத்தைச்செறிந்த பரலெனினு மமையும். அயில்போல் செறிபர லென்பது பாடமாயின், அயில்போலுஞ் செறிபரலெள் றுரைக்க. (உஉஅ)

## நற்றாய்க்குரைத்தல்.

முகிழ்முலைமடந்தைக்கு முன்னியதறிய ஓக்
திகழ்மனைக்கிழத்திக்குச் செவிலிசெப்பியது.

(எ-து.) (அடிகினைந்திரங்கிய) செவிலி, அரும்பை யொத்த முலையையுடைய தலைமகளுக்குவந்ததை யறிய நற்றாய்க்குச் சொல்லியது.

தழுவினகையிறைசோரிற்றமியமென்றேதளர்வுற்
றழுவினைசெய்யுஞ்சொற்பேதையறிவுவிண்ணோர்
குழுவினையுய்யநஞ்சுண்டம்பலத்துக்குனிக்கும்பிரான்
செழுவினதாள்பணியார்பிணியாலுற்றுத்தேய்வித்ததே.

(இ - ள்.) தழுவின கை இறை சோரின் - தன்னைத்தழுவின என்கை சிறிதுசோருமாயின்,—தமியம் என்றே கையா தளர்வுற்று அழுவினை செய்யும் - (நாம்) தமியமென்றே கருதி நைந்து (உள்ளந்தளர்ந்து) அழூந்தொழிலைச்செய்யும்,—அம் சொல் பேதை அறிவு - அழகிய சொல்லையுடைய பேதையினறிவானது,— விண்ணோர் குழுவினை உய்ய நஞ்சு உண்டு அம்பலத்து குனிக்கும் பிரான் - விண்ணவர்குழாம் பிழைக்கத் தானஞ்சையுண்டு அம்பலத்தினின்றுகூத்தாடும் இறைவனுடைய, — செழுவின தாள் பணியார் பிணியால் உற்று தேய்வித்தது - வளவிய தாள்களைப் பணியாதார் (பிணிபோலும்) பிணியான்மிக்கு (என்னைக்) குறைவித்தது. எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - ஆற்றாமைநீங்குதல்.

உய்ய நஞ்சுண்டென்னுஞ் சொற்கள் ஒரு சொன்னீர்மைப்பட்டு உய்வித்து என்னும் பொருளவாய், குழுவினையென்னு மிர

ண்டாவதற்கு முடிபாயின. அறிவைக் கருத்தாகவும் பிணியைக் கருவியாகவுங் கொள்க. (உஉகூ

**நற்றாய்வருந்தல்.**

கோடாய் கூ — ற
நீடாய் வாடிய — து.

(எ - து.) (தலைமகள் உடன்போனமை) செவிலி கூறக்கேட்டு ஓரேதிலன்பின்னே என்னையும்பாங்கியையுந் துறந்து ஊரார லர்தூற்றக்கொடுஞ்சுரஞ்சென்றனளென நற்றாய் நெடிதுவருந்தியது.

யாழியன்மென்மொழிவன்மனப்பேதையொரேதிலன்பின்
றோழியைநீத்தென்னைமுன்னேதுறந்துதுன்னார்கண்முன்னே
வாழியிம்மூதூர்மறுகச்சென்றாளன்றுமால்வணங்க
வாழிதந்தானம்பலம்பணியாரினருஞ்சுரமே.

(இ-ள்.) யாழ் இயல் மென்மொழி - யாழோசையி னியல்பையுடைய மெல்லிய மொழியையும்,—வல் மனம் பேதை-வலியமனத்தையுமுடைய பேதை,—ஓர் ஏதலின்பின் - ஓரயலான்பின்னே,—தோழியை நீத்து-(தன்)பாங்கியைவிட்டு,—என்னை முன்னே துறந்து - என்னை முன்னேநீங்கி,—துன்னார்கள் முன்னே-பகைவர் முன்னே,—இ மூதூர் மறுக - இம்மூதூரிலுள்ளார் அலரெடுத்துக்கலங்க,—அன்று மால் வணங்க ஆழி தந்தான் அம்பலம் பணியாரின் - அன்று திருமால்வணங்க அவனுக்காழியைக்கொடுத்தவனது அம்பலத்தைப்பணியாதாரைப்போல,—அரு சுரம் சென்றாள் - அரியசுரத்தைச்சென்றாள், (இனி யெங்ஙனமாற்றுகேன்). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமைநீங்குதல்.

இற்செறிக்கப்பட்டபின்னர்ப் பாரமுகத்த ளென்பதனை உடன்போன பின்னருணர்ந்தாளாகலின் என்னை முன்னே துறந்தென்றாள். வாழி - அசைநிலை. (உகூ0)

## கிளிமொழிக்கிரங்கல்.

மெய்த்தகைமாது வெஞ்சுரஞ்செல்லத்
தத்தையைநோக்கித் தாய்புலம்பியது.

(எ - து.) மெய்யாகிய கற்பையுடையதலைமகள் கொடுஞ்சுரம்போக (அப்பிரிவை யாற்றாமல் வருந்துகின்ற) நற்றாய், அவள்கிள்ளையைப்பார்த்து அதன் மொழியைக் கேட்டிரங்கியது.

கொன்னுனைவேலம்பலவற்றொழாரிற்குன்றங்கொடியோ
ளென்னணஞ்சென்றனளென்னணஞ்சேருமெனவயரா
வென்னனைபோயினள்யாண்டையளென்னைப்பருந்துமென்
றென்னனைபோக்கன்றிக்கிள்ளையென்னுள்ளத்தையீர்கின்றதே.

(இ-ள்.) கொல் நுனை வேல் அம்பலவன் தொழாரின் - கொற்றொழிலமைந்த முனையையுடைத்தாகிய (சூல) வேலையுடைய அம்பலவனை வணங்காதாரைப்போல,—கொடியோள் - கொடிபோன்றவள்,—குன்றம் என்னணம் சென்றனள் - மலைநெறியை எவ்வண்ணஞ்சென்றாள்?—என்னணம் சேருமென அயரா - (ஆண்டு) எவ்வண்ணந் தங்குமென்று (யான்) வருந்த,—என் அன்னை போயினள் - என்னுடைய அன்னை போயினாள்,—யாண்டையள் - அவளெவ்விடத்தாள்? — என்னை பருந்து அடுமென்று - இனியென்னைப் பருந்து கொல்லுமென்று சொல்லி,—என் அன்னை போக்கு அன்றி - என்னுடைய அன்னை போக்கொழிய,—கிள்ளை என் உள்ளத்தை ஈர்கின்றது - அவளுடையகிளி யென்னெஞ்சத்தைப்பிளக்கின்றது. எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

என்னணஞ்சென்றனள் என்னணஞ்சேருமென்று நினைந்தயராவெனக் கிளிமேலேறவுரைப்பினுமமையும். என்னன்னை போக்கன்று ஈர்கின்ற திக்கிள்ளையென மறுத்துரைப்பினுமமையும். மெய்த்தகை மெய்யாகிய கற்பு, புனையா வழகுமாம். ()

### சுடரோடிரத்தல்.

வெஞ்சுரந்தணிக்கெனச் செஞ்சுடரவற்கு
வேயமர்தோளி தாயர்பராய து.

(எ-து.) (கிளிமொழிகேட் டிரங்காநின்ற) நற்றாய், வேய்போலுந் தோளையுடைய தலைமகள் செல்லுங் கொடிய சுரத்தைத் தணிக்கவென்று செஞ்சுடரோ டிரந்து கூறியது.

**பெ**ற்றேனொடுங்கிள்ளைவாட முதுக்குறைபெற்றிமிக்கு
நற்றேன்மொழியழற்கானடந் தாண்முகநா னணுகப்
பெற்றேன்பிறவிபெறாமற்செய்தோன்றில்லைத்தேன்பிறங்கு
மற்றேன்மலரின்மலர்த்திரந்தேன்சுடர்வானவனே.

(இ - ள்.) சுடர்வானவனே - சுடராகிய வானவனே! பெற்றேனொடும் - பெற்ற என்னோடும்,—கிள்ளை வாட - (தன்) கிளியிருந்துவருந்த,—முதுக்குறை பெற்றி மிக்கு நல் தேமொழி - அறிவுமுதிர்ந்த இயல்பு மிக்கு நல்ல தேன்போலு மொழியையுடையாள்,—அழல் கான் நடந்தாள் முகம்-அழலையுடையகாட்டின்கண் நடந்தவளது முகத்தை (நின் வெங்கதிர்களான் வாட்டாது), — அணுகப்பெற்றேன் நான் - (ஒருவாற்றாற் றன்னை) யணுகப்பெற்றேனாகியயான்,—பிறவி பெறாமல் செய்தோன் தில்லை - (பின்) பிறவியைப் பெறாதவண்ணஞ்செய்தவனது தில்லையின்,—தேன் பிறங்கு மல் தேன் மலரின் மலர்த்து இரந்தேன் - தேன்மிகுத்துவளவிய வண்டையுடைய தாமரைமலர்போல மலர்த்துவாயாக (நின்னை) யானிரந்தேன். எ-று.
மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல். (உ௩உ)

### பருவநினைந்து கவறல்.

முற்றா முலைக் கு
நற்றாய் கவன்ற து.

(எ - து.) (சுடரோடிரந்து வருந்துகின்ற) நற்றாய், (தலைமகள் கற்பிக்கு முதுபெண்டிருமின்றித் தானவ னுக்குச் செய்யத்தகுங் குற்றேவல் செய்யவல்லள் கொல்லோ வென்று) அளது பருவமெண்ணிக் கவ லைகொண்டது.

வைம்மலர்வாட்படையூரற்குச்செய்யுங்குற்றேவன்மற்றென் மைம்மலர்வாட்கண்ணிவல்லள்கொல்லாந்தில்லையான்மலைவாய் மொய்ம்மலர்க்காந்தளைப்பாந்தளென்றெண்ணித்துண்ணென் றொளித்துக், கைம்மலராற்கண்புதைத்துப்பதைக்குமெங்கார்ம யிலே.

(இ - ள்.) தில்லையான் மலைவாய் - தில்லையினுடைய இம்மலை யிடத்து,—மொய் மலர் காந்தளை பாந்தளென்று எண்ணி - மொ ய்ம்மலர்க்காந்தளது பூவினைப் பெரும்பாம்பென்று கருதி,— துண்ணென்று ஒளித்து கை மலரால் கண் புதைத்து பதைக்கும் எம் கார் மயில் - துண்ணென்றுமறைந்து கைம்மலர்களாற் கண்புதைத்துநடுங்கும் எம்முடையகார்மயிலாகிய,—என் மை மலர் வாள் கண்ணி - என்னுடைய மையழகுபெற்ற வாள் போலுங்கண்ணையுடையாள்,— வை மலர் வாள் படை ஊர ற்கு - கூர்மையையுடைய மலரணிந்த வாளாகிய படைக்கலத் தையுடைய ஊரனுக்கு,—செய்யும் குற்றேவல் வல்லள் கொல் லாம் - தான் செய்யத்தகுங் குற்றேவல்களைக் (கற்பிக்கு முது பெண்டிருமின்றித்தானேசெய்ய) வல்லளாமோ? (ஆவ்வடைன் செய்கின்றாள்). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற் றாமை நீங்குதல்.

மற்று - அசைநிலை. தில்லையான் மலைவாய்ப்பதைக்கு மென வியையும். நோக்கென்னு மலங்காரமாய்ப் பாம்பிற்கஞ்சுமயி லென இல்குணமடுத்து வந்ததென்பாரு முளர். (உ௫௩)

## நாடத்துணிதல்.

கோடாய் மடந்தை   யை
நாடத் துணிந்த   து.

(எ - து.) (பருவமென்னிக் கவலைகொண்ட நற்றுய்க்கு நீ கவலைகொள்ளவேண்டா, யானவள்சென்ற விடமறியத் தேடுவேனென்று) செவிலி, தலைமகளைத் தேடத்துணிந்தது.

வேயினதோளிமெலியல்விண்ணோர்தக்கன்வேள்வியின்வாய்ப்
பாயினசீர்த்தியனம்பலத்தானைப்பழித்துமும்மைத்
தீயினதாற்றல்சிரங்கண்ணிழந்துதிசைதிசைதாம்
போயினவெல்லையெல்லாம்புக்குநாடுவன்பொன்னினையே.

(இ - ள்.) விண்ணோர் - தேவர்கள், — தக்கன் வேள்வியின் வாய் - தக்கனது வேள்வியின்கண்,—பாயின சீர்த்தியன் அம்பலத்தானை பழித்து - பரந்த புகழையுடையனாகிய அம்பலத்தானையிகழ்ந்துகூறி, — மும்மை தீயினது ஆற்றல் சிரம் கண் இழந்து - மூன்றாகிய தொகுதியாகியதீயினது வலியையும் தலையையும் கண்ணையும் இழந்து,—திசை திசை தாம் போயின எல்லையெல்லாம் புக்கு பொன்னினை நாடுவன் - திசைதோறுந் திசைதோறுந் தாம்போயினவெல்லையெல்லாம்புகுந்து பொன்னனையாளைத்தேடுவன்,—வேயின தோளி மெலியல் - வேயின் தன்மையவாகிய தோள்களை யுடையாய்! நீ மெலியவேண்டா. எ-று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம். பயன்— நற்றுயை யாற்றுவித்தல்.

திசை திசை யென்பதூஉம் பாடம். தொக்கபொருட்கும் தொகுதிக்கும் ஒற்றுமையுண்மையின் ஆற்றன்முதலாயினவற்றையிழத்தலை விண்ணோர்மேலேற்றினார். முயற்சி விலக்கணி.()

## கொடிக்கூறிப்பார்த்தல்.

நற்றாய் நயந் து
சொற்புட் பராய து.

(எ-து.) (செவிலிநாடத்துணியாநிற்ப அவ்விருவ ரையும் இப்பொழுதே வரும்வண்ணம் நீ கரைவா யாகவென) நற்றாய்விரும்பி, வருவது சொல்லுதலை யுடையபுள்ளை வேண்டிக்கொண்டது.

பணங்களைஞ்சாலும்பருவரவார்த்தவன்றில்லையன்ன
மணங்கொளஞ்சாயலுமன்னனுமின்னேவரக்கரைந்தா
லுணங்கலஞ்சாதுண்ணலாமொண்ணிணப்பலியொக்குவன்மா
குணங்களைஞ்சாற்பொலியுநலசேட்டைக்குலக்கொடியே.

(இ-ள்.) மா குணங்கள் அஞ்சால் பொலியும் நல்ல சேட்டைக் குலம் கொடியே - பெரியகுணங்கள் ஐந்தான்விளங்கும் நல்ல சேட்டையையுடைய சிறியகாகமே! — பணங்கள் அஞ்சாலும் பரு அரவு ஆர்த்தவன் - படங்களைந்து ஆடாநிற்கும் பரிய அர வைச்சாத்தியவனது,—தில்லை அன்ன மணம் கொள் அம் சாய லும் மன்னனும் இன்னே வர கரைந்தால் - தில்லையைப்போலு நறுநாற்றம்பொருந்திய அழகியமென்மையை யுடையாளும், மன்னனும், இப்பொழுதே வரும் வண்ணம் (நீ) அழைத்தா ல், — உணங்கல் அஞ்சாது உண்ணலாம் - (யாமோப்பாமை யின்) உணங்கலை யஞ்சாதிருந்துண்ணலாம், — ஒள்நிணம் பலி ஒக்குவல் - (தெய்வத்திற்குக்கொடுத்த) நல்ல நிணத்தையுடைய பலியையும் நினக்கே வரைந்துவைப்பேன், (அவ்வாறு கரை வாயாக). எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - எதிர்காலச் செய்கையுணர்தல்.

ஒக்குவலென்பதற்குத் தருவேனென்றுரைப்பினு மமையும். குணங்களைந்தாவன — மறைந்தபுணர்ச்சி, கலங்காமை, பொழு

திறவாதிடம் புகுதல், நெடுகக்காண்டல், மடியின்மை. சே-
டை-உறுப்பைப்புடைபெயர்த்தல். நலசேட்டைகுலக்கொடியே
யென்று பாடமோதி, சேட்டையாகிய தெய்வத்தின் நல்லகொ
டியேயென் றுரைப்பாருமுளர். (உ௩௫)

## சோதிடங் கேட்டல்.

சித்தந்தளர்ந்து தேடுங்கோடா ய்
உய்த்துணர்வோரை யுரைமினென்றது.

(எ - து.) (கொடிகிமித்தம்பெற்றும்) மனந்தளர்ந்
து தேடுகின்றாகற்றாய், வெளிப்படாதபொருளை யே
துக்களாலுணரும் அந்தணரைச் சோதிடஞ்சொல்லு
மினென்றது.

முன்னுங்கடுவிடமுண்டதென்றில்லைமுன்னோனருளா
லின்னுங்கடியிக்கடிமனைக்கேமற்றியாமயர
மன்னுங்கடிமலர்க்கூந்தலைத்தான்பெறுமாறுமுண்டே
லுன்னுங்கடிதின்றியோதுங்களுன்மறையுத்தமரே.

(இ-ள்.) முன்னும் கடு விடம் உண்ட தென் தில்லை முன்னோன் அருளால் - பரந்துசெல்லுங்கடியவிடத்தையுண்ட தென்தில்லைக்கணுளனாகிய எல்லார்க்குமுன்னாயவனது அருளால், — இ கடி மனைக்கு - இக்காவலையுடையமனையின்கண்,—கடி யாம் அயர - மணத்தை யாம்செய்ய,—மன்னும் கடி மலர் கூந்தலை இன்னுந்தான் பெறுமாறுண்டேல் - நிலைபெற்றவாசனைபொருந்தியமலரைத்தரித்த கூந்தலையுடையாளை யின்னுந்தான்பெறுமாறுண்டாயின், — நான்மறை உத்தமரே - நான்மறையை யுடைய தலைவீர்!—உன்னுங்கள் - (நும்முள்ளத்தால்) ஆராய்வீராக,—தீதின்றி ஓதுங்கள் - (ஆராய்ந்து) குற்றந்தீரச் சொல்வீராக. எ - று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - எதிர்காலச் செய்கையுணர்தல்.

அருளாற்பெறுமாறு முண்டேலெனவியையும். தேவர்சென்
ரப்ப நஞ்சைநினைத்தலுங் கைம்மலர்க்கண்வந்திருந்ததாக
ன், கருதப்படும் வெவ்விடமெனினு மமையும். யாங்கடியயரத்
ான் கடிமலர்க்கூந்தலைப் பெறுமாறு முண்டேலென் றுரைப்
னு மமையும். இப்பொருட்குத் தாமென்றது தலைமகனை.
தின்றி யுன்னுங்களெனினுமமையும். (உ௩௬)

## சுவடுகண்டறிதல்.

சுவடுபடு கடத்துச்
செவிலிகண் டறிந்தது.

(எ-து.) (சோதிடம்பெற்றுச் செல்லுகின்ற) செவிலி, தலைமகளது காற்சுவடு சுரத்திற்கண்டறிந்தது.

ெதள்வன்புனற்சென்னியோனம்பலஞ்சிந்தியாரினஞ்சேர்
முள்வன்பரன்முரம்பத்தின்முன்செய்வினையேனெடுத்த
வாள்வன்படைக்கண்ணிசீறடியிங்கிவையுங்குவையக்
கள்வன்பகட்டுரவோனடியென்றுகருதுவனே.

(இ - ள்.) தெள் வன் புனல் சென்னியோன் அம்பலம் - தெளியபெரியபுனலை யுடைத்தாகிய சடாபாரத்தை யுடையோனது அம்பலத்தை, — சிந்தியார் இனம் சேர்-கருதாதவரது இனஞ்சேரும்,—முள் வல் பரல் முரம்பத்தின் இங்கிவை-முள்ளையும் வலியபரலையுமுடைய இம்முரம்பத்தின்கட் கிடந்த இவை, — முன் செய்வினையேன் எடுத்த ஒள் வல் படைக்கண்ணி சீறடி - முன்செய்த தீவினையையுடைய யானெடுத்து வளர்த்த ஒள்ளியவலியபடைபோலுங் கண்ணினை யுடையாளுடைய சிறிய அடிச்சுவடாம், — உங்குவை அக்கள்வன் பகட்டு உரவோன் அடி என்று கருதுவன் - (இனி) உவற்றை அக்கள்வனாகிய பகடுபோலும் வலியை யுடையானுடைய அடிச்

சுவடென் றய்த்துணராநின்றேன். எ - று. மெய்ப்பாடு அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

இங்கிவை உங்குவை என்பன ஒருசொல். (உ௬எ)

சுவடுகண்டிரங்கல்.

கடத்திடைக்காரிகை யடித்தலங்கண் டு
மன்னருட்கோடா யின்னலெய்தி யது.

(எ - து.) செவிலி, சுரத்தில் தலைமகளடிச்சுவடு கண்டு, இவ்வடிகள் ஒருவிடலையின் பின்போக எவ்வாறொத்தனவென நின்றிரங்கியது.

பாலொத்தநீற்றம்பலவன்கழல்பணியார்பிணிவாய்க்
கோலத்தவிசின்மிதிக்கிற்பதைத்தடிகொப்புள்கொள்ளும்
வேலொத்தவெம்பரற்கானத்தினின்றோர்விடலைபின்போங்
காலொத்தனவினையேன்பெற்றமாணிழைகான்மலரே.

(இ - ள்.) கோலம் தவிசின் மிதிக்கின் - கோலத்தையுடைய தவிசின்மேல் மிதிப்பினும்,—பால் ஒத்த நீற்று அம்பலவன் கழல் பணியார் பிணிவாய் - பாலொத்தநீற்றையுடைய அம்பலவனது கழல்களைப்பணியாதவரைப்போல் வருத்தம்வாய்ப்ப,— பதைத்து அடி கொப்புள் கொள்ளும்-நடுங்கி அவ்வடிகள் கொப்புளங் கொள்ளும், — வினையேன் பெற்ற மாண் இழை கால் மலர் - தீவினையேன்பெற்ற மாணிழையுடைய அத்தன்மையவாகிய காலாகியமலர்கள், — இன்று வேல் ஒத்த வெம் பரல் கானத்து ஓர் விடலை பின்போம் கால் ஒத்தன - இன்று வேலையொத்த வெய்யபரலையுடையகாட்டின்கண் ஒருவிடலை பின்போதற்குத் தகும் அடியையொத்தன. (இதனை எவ்வாறு ஆற்றவல்ல வாயின). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

தவிசு - தடுக்குமுதலாயின. கான்மலரொன அவற்றை மல ராகக் கூறினமையாற் காலொத்தனவென வுவமித்தாள். பிணி யாயென்றும், பிணிபோலென்றும், காலொத்திரா வென்றும், பாடமோதுவாரு முளர். (உ௬அ)

### வேட்டமாதரைக் கேட்டல்.

மென்மலர்கொய்யும் வேட்டமாதரைப்
பின்வருசெவிலி பெற்றிவினயது.

(எ - து.) (சுவடுகேண்டிரங்கி) அதுவழியாகச்செல் கின்றசெவிலி, மென்மையாகிய மலர்கொய்யாநின்ற வேட்டமாதரை நோக்கி, அயலானொருவனுடன்செல் லுமாதைக் கண்டதுண்டோவெனக்கேட்டது.

பேதைப்பருவம்பின்சென்றதுமுன்றிலெனைப்பிரிந்தா
லூதைக்கலமரும்வல்லியொப்பாண்முத்தன்றில்லையன்னா
ளேதிற்சுரத்தயலானொடின்றேகினள்கண்டனையே
போதிற்பொலியுந்தொழிற்புலிப்பற்குரற்பொற்றொடியே.

(இ-ள்.) போதில் பொலியும் தொழில் புலி பல் குரல் பொற் றொடி - பூவின்கட்பொலியுந்தொழிலினையும், புலிப்பல்பொருந் தியகழுத்தினையுமுடைய பொன்னாற்செய்த வளையையுடையா ய்!—பேதை பருவம் சென்றது பின்-பேதையாகிய பருவம்கழிந் தது (சுரம்போந்த) பின், — முன்றில் எனை பிரிந்தால் உள தைக்கு அலமரும் வல்லி ஒப்பாள் - (இவ்வாறறியாப் பருவத்த ளாய்) முன்றிற்கண் என்னைச்சிறிது நீங்கினால் (நடுங்குதலான்) உளதைக்காற்றுற்சுழலுங்கொடியையொப்பாள், — முத்தன் தில்லை அன்னாள் - முத்தனதுதில்லையையொப்பாள்,—ஏதில் சுர த்து அயலானொடு இன்று ஏகினள் - (அவள்) தனக்கன்னிய மான இச்சுரத்தின்கண் அயலானொருவனோடு இன்றுபோயி னள்.—கண்டனையே - அவளை நீகண்டாயோ? (அவள் எவ்வண்

ணம் போயினள்.) எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆ
ற்றாமைநீங்குதல்.

தில்லையுண்ணொன்பதூஉம், பெற்றவினைய தென்பதூஉ
பாடம். (உ௩௧

## புறவோடு புலத்தல்.

காட்டுப் புறவொ டு
வாட்ட முரைத்த து.

(எ-து.) (வேட்டமாதரைக்கேட்டு அதுவழியாகச் செல்கின்ற செவிலி, ஏதிலனும் தமியனுமாயவன் பின்னே அவன் சொற்றுணையாக மாதுசென்றால்) காட்டுப்புறவே இது நினக்குத் தகுதியோவெனக் கூறாமையால் நீவாழ்கவென அதனொடு மனம்புலர்ந்து கூறியது.

புயலன்றலர் சடையேற்றவன் றில்லைப்பொருப்பரசி
பயலன்றனைப்பணியாதவர்போன்மிகுபாவஞ்செய்தேற்
கயலன்றமியனஞ்சொற்றுணைவெஞ்சுரமாதர்சென்றா
லியலன்றெனக்கிற்றிலைமற்றுவாழியெழிற்புறவே.

(இ - ள்.) புயல் அன்று அலர் சடை ஏற்றவன் - நீனை
அன்றுவிரிந்தசடையின்கணேற்றவன், — தில்லை பொருப்ப
அரசி பயலன்தனை பணியாதவர்போல் - தில்லைக்கணுளனாகிய
பொருப்பிற்கரசியது கூற்றை யுடையானைப் பணியாதாரைப்
போல, — மிகு பாவம் செய்தேற்கு - மிக்க பாவத்தைச்செய்
தேற்கு, — அயலன் தமியன் அம் சொல் துணை மாதர் வெ
சுரம் சென்றால் - ஏதிலனுமாய்த்தமியனுமா யவனது அழகிய
சொல்லே துணையாக மாதர் வெய்யசுரத்தைச்சென்றால், —
எழில் புறவே - எழிலையுடைய புறவே! — இயல் அன்று என
கிற்றிலை - இது தகுதியன்றென்றுகூறிற்றிலை, — வாழி - வ

ழ்வாயாக. எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமை நீங்குதல்.

பாவஞ்செய்தேற்கியலன்றெனக்கிற்றிலையெனக்கூட்டுக. வெஞ்சுரமாதல்கண்டாலென்பது பாடமாயின் ஆதலென்பதனை எல்லாவற்றோடுங்கூட்டுக. வெஞ்சுரம்போதல் கண்டா லென்பதூஉம் பாடம். பொருப்பரையன்மகளாதலிற் பொருப்பரசியெனத் தந்தைகிழமை மகட்குக்கூறப்பட்டது. (உசுO)

## குரவோடு வருந்தல்.

தேடிச்சென்ற செவிலித்தாய
ஆடற்குரவொடு வாடியுரைத்த து.

(எ-து.) (புறவொடுபுலந்து) தலைமகளைத் தேடிப் போகின்ற செவிலி, (என்பாவை இச்சுரத்திற் சென் றமை கண்டும் இவ்வாறு சென்றுளனவாய்திற வாய், இதுநினக்கு நன்றோவென) ஆடற்குராவொடு வாடி யுரைத்தது.

பாயும்விடையோன்புலியூரனையவென்பாவைமுன்னே
காயுங்கடத்திடையாடிக்கடப்பவுங்கண்டுநின்று
வாயுந்திறவாய்குழையெழில்வீசவண்டோலுறுத்த
நீயுநின்பாவையுநின்றுநிலாவிடுநீள்குரவே.

(இ - ள்.) குழை எழில் வீச - குழை அழகுசெய்ய, — வண்டு ஓலுறுத்த - வண்டுகள் ஒலிக்க, — நின் பாவையும் நீயும் நின்று நிலாவிடு நீள் குரவே - நின்னுடையபாவையும் நீயும் நின்றுநிலாவும் பெருங்குரவே! — பாயும் விடையோன் புலியூர் அனைய என் பாவை - பாய்ந்துசெல்லும்விடையை யுடையவனது புலியூரையொக்குமென்பாவை, — முன்னே காயும் கடத்திடை ஆடி கடப்பவும் கண்டு நின்று - (நின்) முன்னே கொதிக்குங்கடத்தின்கண் அசைந்துசெல்லவும் விலக்காது

கண்டு நின்று, — வாயும் திறவாய் - (அத்துணையேயன்றி இ
னவாறுநிகழ்ந்ததென்று எனக்கு) வாயுந்திறக்கின்றிலை, (இ
நினக்குத்தகுமோ?) எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன்
ஆற்றாமை நீங்குதல்.

குரவு - குராமரம்; குழை - தளிர்; ஓல் - ஒலித்தல். நில
வினையென்பது பாடமாயின் வழிச்சுரஞ்செல்லக்கண்டும் வா
திறந்து ஒன்றுங்கூறாது குழையெழில்வீசவண்டோ லுறுத்
நின்று விளங்கினையென்று கூட்டியுரைக்க. குழையெழி
வீசவண்டோலுறுத்தவென்பன - அணியாகியகுழைவிளங்
வென்பதூஉஞ் செவிலியரோலாட்டவென்பதூஉந் தோன்
நின்றன. (உசு

## விரதியரை வினவல்.

வழிவருகின்ற மாவிரதிய ரை
மொழிமின்களென்று முன்னிமொழிந்தது.

(எ-து.) (குராவொடுவருந்திச் செல்கின்றசெவிலி)
பத்தியர்போ லொருபித்தி தன்பின்வர ஒரு பெருந்
தகை முன் செல்லக்கண்டதுண்டோ சொல்லுமென்
று எதிர்வருவோராகிய விரதியரை வினவியது.

சுத்தியபொக்கணத்தென்பணிகட்டங்கஞ்சூழ்சடைவெண்
பொத்தியகோலத்தினீர்புலியூரம்பலவர்க்குற்ற
பத்தியர்போலப்பணைத்திறுமாந்தபயோதரத்தோர்
பித்திதற்பின்வரமுன்வருமோவொர்பெருந்தகையே.

(இ - ள்.) சுத்திய பொக்கணம் - சுத்திவை யுடைத்தாகிய
பொக்கணத்தையும், — என்பு அணி - என்பாகிய வணியை
யும், — கட்டங்கம் - கட்டங்கமென்னும் படைக்கலத்தை
யும், — சூழ் சடை - சூழ்ந்த சடையினையும், — வெண் பொத்
திய கோலத்தினீர் - மெய்ம்முழுதும்மூடிய வெண்கோலத்

தையுமுடையீர், — புலியூர் அம்பலவர்க்கு உற்ற பத்தியர் போல - புலியூர்க்கணுள்ள வம்பலவரிடத்து மிக்கபத்தியை யுடையாளைப்போல, — பணைத்து இறுமாந்த பயோதரத்து ஓர் பித்தி தன் பின் வர - பெருத்திறுமாந்த முலைகளையுடையா ளொருபேதை தனக்குப்பின்வர, — ஓர் பெருந்தகை முன் வருமோ - ஒருபெருந்தகை முன்னேவருமோ? (உனாமின்.) மெய்ப்பாடு - அழுகை; பயன் - தலைமகனைக்காண்டல்.

சுத்தி - பிறர்க்குத்திருநீறு கொடுத்தற்கு இப்பிவடிவாகத் தலையோட்டா னமைக்கப்படுவதொன்று. பொககணம்-சோளி. கடங்கம் - மழு; இஃது கட்டங்கமென நின்றது. வெண்கோலம்- நீறணிந்த கோலம். பத்தியர்க்குப் பணைத்தல் - உள்ளத்துநிக ழும் இன்புறவால்மேனிக்கண்வருமொளியும், ஓடுங்காமையும். இறுமாத்தல் - தாழாதவுள்ளத்தராய்ச்செம்மாத்தல். முலைக் குப் பணைத்தல் பெருத்தல், இறுமாத்தல் - ஏந்துதல். வெண் பத்திய கோலத்தினீ ரென்றபாடத்திற்கு வெண்ணீற்றுப்பத் திபடவிட்டமுண்டத்தையுடைய கோலமென்றுரைக்க.(உசஉ)

வேதியரை வினவல்.

மாதின்பின் வருஞ்செவி லி
வேதியரை விரும்பிவினைய து.

(எ - து.) (விரதியரைவினவி அதன்வழிச் செல்கி ன்ற) செவிலி, வேதியரை அயலானொருவனுடன் ஒரு மாதுசென்றதுண்டோவென வினவியது.

வெதிரேய்கரத்துமென்றோலேய்சுவல்வெள்ளைநூலிற்கொண்
வதிரேய்மறையினிவ்வாறுசெல்வீர்தில்லையம்பலத்துக் [மூ
கதிரேய்சடையோன்கரமானெனவொருமான்மயில்போ
லெதிரேவருமேசுரமேவெறுப்பவொரேந்தலொடே.

(இ - ள்.) வெதிர் ஏய் கரத்து - மூங்கிற்றண்டு பொருந்திய கையினையும், — மெல் தோல் ஏய் சுவல் வெள்ளை நூலின்

மெல்லிய கலைத்தோலியைந்தசுவலினையும் வெள்ளைநூலினை யும், — கொண்மூ அதிர் ஏய் மறையின் இவ்வாறு செல்வீர் மேகமுழக்கம்போலு மறையொலியினையு முடைய இந்நெ ச்செல்வீர்! — ஒரு மான் - ஒருமான், — தில்லையம்பலத் கதிர் ஏய் சடையோன் கர மான் என - தில்லையம்பலத்தின்கண ளனுகிய மதிசேர்ந்த சடையையுடையவனது கரத்தின்மா போல (மருண்ட நோக்கத்தளாய்), — மயில்போல் - மயி போல (அசைந்தசாயலளாய்), — சுரமே வெறுப்ப - (வரு துஞ்) சுரந்தானே கண்டுதுன்புற, — ஓர் ஏந்தலொடு எதி வருமே - ஓரேந்தலுடன் நும்மெதிரேவந்தனளோ? (உ மின்.) எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - தலைமகளை காண்டல்.

தோலேய்ந்த சுவலின்கணுண்டாகிய வெள்ளைநூலினையு மெ னினுமமையும். (உசரு

## புணர்ந்துடன்வருவோரைப் பொருந்திவினவல்.

புணர்ந்துடன்வரும் புரவலனொருபால்
அணங்கமர்கோதையை யாராய்ந்தது.

(எ-து.) (வேதியனைவினவி அதன்வழியாகச் செல் கின்ற செவிலி, உம்மைக்கண்டு என்னால் தேடப்படு வோர் மீண்டாரொன் றெண்ணினேன்; அதுநிற்க, இவ்வா றும்மையொத்த வொழுக்கமுடையரா யிரு வரைப் போகக்கண்டீரோவெனப்) புணர்ந்துடன்வ ரும் தலைமகன் ஒருபாற் கொண்ட தெய்வமகளொ ப்பாளைப் பொருந்தி வினவியது.

மீண்டாரெனவுவந்தேன்கண்டுநும்மையிம்மேதகவே
பூண்டாரிருவர்முன்போயினரோபுலியூரெனைநின்
றாண்டானருவரையாளியன்னானைக்கண்டேனயலே
தூண்டாவிளக்கனையாயென்னையோவன்னைசொல்லியதே.

(இ-ள்.) நம்மை கண்டு மீண்டாரென உவந்தேன்-உம்மைக்கண்டு என்றற்றேடப்படுகின்றவர் மீண்டாரெனக்கருதி மகிழ்ந்தேன்,—இ மேதகவே பூண்டார் இருவர்முன் போயினரோ· (நம்மோடொத்த) இவ்வொழுக்கத்தையே பூண்டாரிருவர் முன்னே போயினரோ? (உரைமின்). எ - று.—புலியூர் எனை நின்று ஆண்டான் அரு வரை யாளி அன்னானை கண்டேன் - புலியூர்க்கணெனனை (ஒருபொருளாக மதித்து) நின்றாண்டவனது (கிட்டுதற்) கரிய மலையின்கண் ஆளியை யொப்பானை (யான்) கண்டேன்,—தூண்டா விளக்கு அனையாய் - தூண்டவேண்டா விளக்கையொப்பாய்! — அயல் அன்னை சொல்லியது என்னை - (அவனது) அயல் அன்னைசொல்லியதுயாது? (அதனையவட்குச் சொல்வாயாக.) எ - று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த வுவகை; பயன் - தலைமகனைக்காண்டல்.

அருவரைக்கட் கண்டேனெனக் கூட்டினுமமையும். ஆளியன்ன னென்றதனால், நின்மகட்கு வருவதோரிடையூறில்லையெனக்கூறினாளும். மணிவிளக்கெனினு மமையும். (உசச)

### வியந்துரைத்தல்.

வேங்கைபட்டதும் பூங்கொடிநிலையும்
நாடாவரும் கோடாய்கூறியது.

(எ - து.) (புணர்ந்துடன் வருவோரைவினவி அதுவழியாகச் செல்கின்ற) செவிலி, தலைமகன் கையின் வேலினால் வேங்கை பட்டுக்கிடந்த இடத்தையும் தன்மகள் நின்றநிலையையுங்கண்டு வியந்து கூறியது.

பூங்கயிலாயப்பொருப்பன்றிருப்புலியூரதென்னத்
தீங்கயிலாச்சிறியாணின்றதிவ்விடஞ்சென்றெதிர்ந்த
வேங்கையின்வாயின்வியன்கைம்மடுத்துக்கிடந்தலற
வாங்கயிலாற்பணிகொண்டதுதிண்டிறலாண்டகையே.

(இ-ள்.) பூ கயிலாயம் பொருப்பன் திருப்புலியூரது எலவ்ஞ்ன அழகிய கயிலாயப்பொருப்பையுடையவனது திருப்புலியூரத னைப்போல, — தீங்கை இல்லா சிறியாள் நின்றது இவ்விடம் - குற்றமற்றசிறியாள் நின்றது இவ்விடத்து;—சென்று எதிர்ந்த வேங்கையின் வாயின் வியல் கை மடுத்து கிடந்து அலற - செ ன்று (தன்னே) டெதிர்ந்தபுலியின்வாயில் பெரியகையைமடு த்து (விழுந்து) கிடந்தலறும்வண்ணம்,—திண் திறல் ஆண்ட கை அயிலால் பணிகொண்டது ஆங்கு - திண்ணிய திறலை யுடைய ஆண்டகை வேலாற் பணிகொண்டது அவ்விடத்து.(அத னுல் அவர்போயினநெறி இதுவே.) எ - று. மெய்ப்பாடு - அழு கையைச்சார்ந்த வுவகை? பயன் - ஆற்ருமை நீங்குதல்.

மகளடிச்சுவடு கிடந்தவழிச்சென்று நின்றனளாதலின், அத னை யிவ்விடமென்றும், வேங்கைபட்டவிடத்தை யவ்விடமென் றுங்கூறினுள். வேங்கை தன்காதலியையணுகாமல் அதுவரும் வழிச்சென்றேற்ருனுதலிற் சென்றென்ருள். சென்றுபணிகொ ண்டதென வியையும். (உசரு)

### இயைபெடுத் துரைத்தல்.

சேயிழையோடு செம்மல்போத ர
ஆயிழைபங்கனென் றயிர்த்தேமென்ற து.

(எ - து.) (வேங்கைபட்டது கண்டுவியந்து அது வழியாகச் செல்கின்ற செவிலி எதிர்வருவோரை வினவ, அவர், நீ சொன்னவரைக் குன்றிற்கண்டோ ம்:—) பொன்னணியை யுடையாளோடு தலைமகனு கியமா அவ்விருவருந் தம்முளியைந்து செல்வதனுல் உமையொருபாக முடையானென்று ஐயங்கொண் டோமென்று அவரியைபெடுத்துக் கூறியது

மின்ெறுத்திடுகழனூபுரம்வெள்ளைசெம்பட்டுமின்ன
வொன்றுத்திடவுடையாளொடொன்ருும்புலியூரனென்றே

நன்றொத்தெழிலைத்தொழவுற்றனமென்னதோர்நன்மைதான்
குன்றத்திடைக்கண்டனமன்னைநீசொன்னகொள்கையரோ.

(இ - ள்.) அன்னை நீ சொன்ன கொள்கையர் குன்றத்திடை கண்டனம் - அன்னாய்! நீகூறிய கோட்பாட்டுடையாரைக் குன்றத்திடைக்கண்டேம்,—மின் தொத்திடு கழல் நூபுரம் - மின் திரளுண்டாகாநின்ற (அவனது) கழலும் (அவளது) சிலம்பும்,- வெள்ளை செம்பட்டு மின்ன - (அவனது) வெண்பட்டும் (அவளது) செம்பட்டும் விளங்க,—ஒன்று ஒத்திட உடையாளொடு ஒன்றும் புலியூரன் என்றே - ஒருவடிவையொத்தலான் எல்லா முடையளாகிய தன் காதலியோடு ஒரு வடிவாய் விளையாடும் புலியூரனென்றேகருதி,—ஒத்து நன்று எழிலை தொழ உற்றனம் - (யாங்களெல்லாம்) ஒத்துப் பெரிதும் அவ்வழகைத் தொழநினைந்தேம்,—என்னதோர் நன்மை - (அந்நன்மை) எத்தன்மையதோர் நன்மைதான்! (அது சொல்லலாவதொன்றன்று.) எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - செவிலியையெதிர்வருவார் ஆற்றுவித்தல்.

என்னதோர் நன்மையென்றதனான், அஃதறமாதலுங் கூறப்பட்டதாம். தானென்பது-அசைநிலை. கொள்கையரை யென்னுமுருபு விகாரத்தாற் றொக்கது. (உசசு)

மீளவுரைத்தல்.

கடுங்கடங்கடந்தமை கைத்தாய்க்குரைத் து
நடுங்கன்மின்மீண்டு நடமினென்ற து.

(எ - து.) (இயைபெடுத்துரைத்தவர்) கடுமையாகிய சுரத்தை அவர்கள் கடந்துசென்று அவரூரணுகினமையைச் செவிலிக்குரைத்து இனி நீசெல்வதன்று, நீ வருந்தாமல் மீள்வதேகாரியமென்று அவள் மீளக்கூறியது.

மீள்வதுசெல்வதன்றன்னையிவ்வெங்கடத்தக்கடமாக்
கீள்வதுசெய்தகிழவோனொடுங்கிளர்கெண்டையன்ன
நீள்வதுசெய்தகண்ணுளிந்நெடுஞ்சுரநீந்தியெம்மை
யாள்வதுசெய்தவன்றில்லையினெல்லையணுகுவரே.

(இ - ள்.) கிளர் கெண்டை அன்ன நீள்வது செய்த கண்ணுள் - புடைபெயர்கின்ற கெண்டைபோலும் நீடலைச்செய்தகண்ணையுடையாள், — வெம் இ கடத்து கடமா கீள்வது செய்த கிழவோனொடும் இ நெடு சுரம் நீந்தி,—வெய்ய இச்சுரத்தின்கண் அத்தன்மையகடமாவைப்பிளத்தலைச்செய்தகிழவனொடும் இந்நெடியசுரத்தைநீந்தி, — எம்மை ஆள்வது செய்தவன் தில்லையின் எல்லை அணுகுவர் - அவ்விருவரும் ஓரிமைக்கணின்றிப்போய் எம்மையாளுதலைச்செய்தவனது தில்லையின் எல்லையைச் சென்றணுகுவர், — அன்னை மீள்வது செல்வது அன்று - (அதனால்) அன்னாய் (செயற்பாலது) மீள்வதே, சேறலன்று. எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - செவிலிக்குலகியல்பு கூறி அவளை மீள்வித்தல்.

கிழவோனொடுமென்றதனால் அவன்பற்றுக்கோடாக நீந்தினாளென்பது விளக்கினார். இனி ஒடுவை எண்ணொடு வாக்கியுரைப்பினுமமையும். உம்மை அசைநிலை. (உ௪௭)

### உலகியல் புரைத்தல்.

செவிலியது கவலைதீ
மன்னியவுலகியன் முன்னியுரைத்த து.

(எ-து.) (மீள்க்கூறவும் மீளாமற்) கவலைகொண்ட
செவிலிக்கு அதுதீர உலகியல்பு கூறிவிடுத்தது.

சுரும்பிவர்சந்துந்தொடுகடன்முத்தும்வெண்சங்குமெங்கும்
விரும்பினர்பாற்சென்றுமெய்க்கணியாம்வியன்கங்கையென்னும்
பெரும்புனல்சூடும்பிரான்சிவன்சிற்றம்பலமனைய
கரும்பனமென்மொழியாருமந்நீர்மையர்காணுநர்க்கே.

(இ - ள்.) சுரும்பு இவர் சந்தும் - (நறுநாற்றத்தால்) வண்டு கள்சேருஞ்சந்தனமும், — தொடு கடல் முத்தும் வெண் சங்கும் - தோண்டப்பட்ட கடலின்முத்தும் வெண்சங்கும்,—எங்கும் விரும்பினர்பால் சென்று மெய்க்கு அணியாம் - எத்தேயத்தும் (தாம்பிறந்தவிடங்கட்குப்பயன்படாது) தம்மை விரும்பியணிவாரிடத்தேசென்று அவர் மெய்க்கணியாகா நிற்கும்,— வியன் கங்கை என்னும் பெரு புனல் சூடும் பிரான் சிவன் சிற்றம்பலம் அனைய - அகன்ற கங்கையென்னும் பெரிய புனலைச் சூடும்பிரானாகியசிவனது சிற்றம்பலத்தையொக்கும்,—கரும்பு அன்ன மெல் மொழியாரும் காணுநர்க்கு அந்நீர்மையர் - கரும்பு போலும் மெல்லியமொழியினையுடையமகளிரும் ஆராய்வார்க்கத்தன்மையர். (நீகவலவேண்டா.) எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - செவிலிக்குலகியல்பு கூறி அவளை மீள்வித்தல்.

சங்கு-மணியாயும் வளையாயும் அணியாம். எங்குமணியாமெனவியையும். சிற்றம்பலத்துமன்னுங் கரும்பனமென் மொழியாரென்பதுபாடமாயின் சிற்றம்பலத்தையுடைய தில்லையினுளதாங் கரும்புபோலு மென்மொழியை யுடையாரென்றுரைக்க.()

## அழுங்குதாய்க் குரைத்தல்.

செழும்பணை யணைந்த மை
அழுங்குதாய்க் குரைத்த து.

(எ - து.) (உலகியல்புகூறியும் மீளாமல் நின்று தானெடுத்து வளர்த்தமைசொல்லிக் கவலைகொண்ட செவிலியை முன்னிலைப் புறமொழியாக இவர் தாம் அவளை வளர்த்தவர்போலும்) அவர்போய் (தில்லையிடத்துச்) செழும்பணையைச் சென்றணைவரெனக் கூறுவார் போன்றுகூறி மீட்டுக்கொண்டு போகா நிற்றல்.

ஆண்டிலெடுத்தவராமிவர் தாமவரல்குவர்போய்த்
தீண்டிலெடுத்தவர் தீவினைதீர்ப்பவன்றில்லையின்வாய்த்
தூண்டிலெடுத்தவராறெங்கொடெற்றப்பழம்விழுந்து
பாண்டிலெடுத்தபஃறாமரைகீழும்பழனங்களே.

(இ - ள்.) இவர் தாம் ஆண்டு இல் எடுத்தவராம் - இவர் தாம் அவ்விடத்து இல்லின்கணெடுத்து வளர்த்தவர்போலும்,—தீண்டில் எடுத்து அவர் தீவினை தீர்ப்பவன் தில்லையின்வாய் - (யாவராயினும் தம்மை) அணுகில் (அவர் நரகத்தழுந்தாமல்) எடுத்து (அவரது) தீவினையைத் தீர்ப்பவனது தில்லையின்கண்,—தூண்டில் எடுத்த வரால் தெங்கொடு எற்ற பழம் விழுந்து பாண்டில் எடுத்த பல் தாமரை கீழும் பழனங்கள் - தூண்டிலைவிழுங்கிய வரால் தெங்கொடுமோத அதன்பழம்விழுந்து கிண்ணம்போலும் (பூக்களை) யுயர்த்திய பலவாகிய தாமரையைக்கிழிக்கும் பழனங்களை,—அவர் போய் அல்குவர் - அவர் சென்று சேர்வர் (இனியோ ரிடரில்லை.) எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - செவிலிக்குலகியல்பு கூறி அவளை மீள்வித்தல்.

தில்லையின்வாய்ப் பழனங்களென வியையும். ஆண்டிலெடுத்தவரா மிவர்தாமென்று தம்முட்கூறிப் பின்செவிலிக்குக் கூறிஞராக வுரைக்க. இவ்வாறுபகராது, செவிலிகேட்ப முழுவதூஉந் தம்முட்கூறிஞராக வுரைப்பினுமமையும். தூண்டிலா னெடுக்கப்பட்ட வராலெனினு மமையும். ஆமென்றது ஆக்கப் பொருடராது உவமைப் பொருள்குறித்து நின்றது. தில்லாவனைதொட்டு இதுகாறும்வரப் பாலைத்திணைகூறியவாறறிக. (உசக)

உடன்போக்கு முற்றிற்று.

---

## வரைவு முடுக்கம்.

இவ்வாறுடன்போக்குநிகழாதாயின் வரைந்துகோடல்நிகழும். அதுநிகழுமிடத்துப் பாங்கியான்வரைவுமுடுக்கப்பட்டும் வரைபொருட் பிரிந்துவந்தும் நிகழுமென்ப. அவற்றுள் வரைவு முடுக்கமென்பது பாங்கி வரைவுவேண்டித்தலைமகனை நெருக்குதல்.

இக்கிளவி பதினாறு துறைகளையுடைத்து அவை வருமாறு:—

வருத்தங்கூற லவன்மறுத்துரைத்தல், உள்ளதுகூற லேதங்கூறல், பகல்வரலென்றல் தொழுதிரந்துரைத்தல், சிறைப்புறங்கூறல் மந்திமேல்வைத்தல், கண்டுயிலாமை கண்டாருரைத்தல், பகலுடம்பட்டாள்போன் றிரவரலென்றல், இரவுடம்பட்டாள்போன்று பகல்வரலென்றல், இரவும்பகலும் வரவொழிகென்றல், காலங்கூறல் கூறுவிக்குற்றல், செலவுகூறல் பொலிவழிவுரைத்தலென், றீரெண்கிளவியு மியம்புங்காலை, வாரணி முலையாய் வரைவுமுடுக்கம்.

### வருத்தமிகுதிகூறி வரைவுகடாதல்.

இரவுக்குறியிடத் தேந்திழைப்பாங்கி
வரைவுவேண்டுதல் வரவுரைத்தது.

(எ-து.) இரவுக்குறியின்கண் அலரறிவுறுத்த ஏந்திழையாகிய பாங்கி, (அலரினாலும் காவல்மிகுதியினாலும் நின்னை எதிர்ப்படமாட்டாமல் அழுது வருந்துகின்றவ ளிடத்து நின்னருளிருக்கின்ற வகையாதோவெனத் தலைமகளது வருத்த மிகுதிகூறித் தலைமகனை) வரைவுவேண்டுதல்வரக்கூறியது.

எழுங்குலைவாழையினின்கனிதின்றிளமந்தியந்தன்
செழுங்குலைவாழைநிழலிற்றுயில்சிலம்பாமுனைமே
லுழுங்கொலைவேற்றிருச்சிற்றம்பலவரையுன்னலர்போ
லழுங்குலைவேலன்னகண்ணிக்கென்னோநின்னருள்வகையே.

(இ - ள்.) எழும் குலை வாழையின் இன் கனி தின்று இ
மந்தி - எழாநின்றகுலைகளையுடைய வாழைத்திரளின்கணுண்ட
கிய இனியகனிகளைத்தின்று இளையமந்தி,—செழும் குலை வா
அம் தண் நிழலில் துயில் சிலம்பா-முதிர்ந்தகுலையையுடைய அ
வாழைத்திரளின் நல்லகுளிர்ந்தநிழற்கண் (வெருவுதலின்றி
துஞ்சுஞ்சிலம்பையுடையாய்! — முனைமேல் உழும் கொ
வேல் - போரிடத்துழுங்கொலைவேலையுடைய, — திருச்சிற்றம்
லவனை உன்னலர்போல் - திருச்சிற்றம்பலவனைநினையாத
னைப்போல, — அழுங்கு உலை வேல் அன்ன கண்ணிக்கு நி
அருள்வகை என்னோ - வருந்தாநின்ற உலைத்தொழிலமைந்
வேல்போலுங்கண்ணையுடையாட்கு நினதருட்கூறு யாதோ
இவளதாற்றுமைக்கு மருந்தன்று). எ - று. மெய்ப்பாடு - அ
சம்; பயன் - வரைவுகடாதல்.

நின்னருள் வகையென்னோ என்பதற்கு இவ்வாறு வருந்த
மிவள்திறத்து இனி நீ செய்யக்கருதியவகை யாதோவெனினு
மமையும். அழுங்கொலை வேலென்பது பாடமாயின் அழாநின்ற
கொலைவேல்போலுங் கண்ணையுடையாட் கென்றுரைக்க. எழு
ங்குலையு முதிர்ந்தகுலையு முடைமையான் இடையறாது பழுக்
கும் வாழைத்திர ளின்கணுண்டாகிய கனியை நுகர்ந்து, மந்தி
வேறொன்றான் வெருவாது, அவ்வாழை நிழலின்கீழின்புற்றுத்
துயிலுமாறுபோல, ஆராவின்பமிடையிட்டுநுகராது நீவரைந்து
கோடலான் இடையறாத பேரின்பந்துய்த்து, அன்னை சொல்லா
லுண்ணடுங்காது நின்றாணிழற்கீழ் இவளின்புற்று வாழ்தல்
வேண்டுமென உள்ளுறைகாண்க. (உ௫0)

## பெரும்பான்மை கூறிமறுத்தல்.

குலம்புரி கொம்பர்க்கு ச்
சிலம்பன் செப்பிய து.

(எ - து.) (வரைவுகடாவிய) சுலம்புரி கொம்பர் போல்வாளாகிய பாங்கிக்கு (யானவளைத் தெய்வ மானுடமென்றறிந்து வரைந்து கோடற்கு இக்குன் றிற்றோன்றுகின்ற இடம் தெய்வமகளிர திடமோ அன்றிக் குறத்தியரதிடமோ கூறெனத்) தலைமகன், தலைமகளைப் பெரும்பான்மைகூறி மறுத்தது.

பரம்பயன்றன்னடியேனுக்குப்பார்விசும்பூடுருவி
வரம்பயன்மாலறியாத்தில்லைவானவன்வானகஞ்சே
ரரம்பையர்தம்மிடமோவன்றிவேழத்தினென்புநட்ட
குரம்பையர்தம்மிடமோவிடந்தோன்றுமிக்குன்றிடத்தே.

(இ-ள்.) இ குன்றிடத்து தோன்றும் இடம் - இக்குன்றிடத்துத் தோன்றுமிடமானது,—பரம் தன் அடியேனுக்கு பயன் - எல்லாப்பொருட்கு மப்பாலாயவன் (ஆயினும்) தன்னடியேற் குப் பெறும்பயனு யுள்ளவன்,—பார் விசும்பு ஊடுருவி வரம்பு அயன் மால் அறியா தில்லைவானவன் - பாரையும் விசும்பையும் ஊடுருவிநிற்றலால் தன்னெல்லையை அயனுமாலு மறியாத தில் லையின் வானவனது,—வானகம் சேர் அரம்பையர் தம்மிடமோ- வானகத்தைச்சேர்ந்த தெய்வமகளிரிடமோ? — அன்றி வேழ த்தின் என்பு நட்ட குரம்பையர் தம்மிடமோ - அன்றி யானை யினென்பை (வேலியாக) நட்ட குரம்பைகளையுடைய குறத் தியரிடமோ? (நீ கூறுவாயாக). எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - இரவுக்குறியிட முணர்த்துதல்.

குரம்பை - சிறுகுடில். அவளையெட்டவுஞ் சுட்டவும் படாத தெய்வமென் றிருத்தலான், அவள் வாழுமிடத்தை அரம்பைய ரிடமென்றே கருதுவல், அன்றாயினுமையென வரைவுடம்படாது கூறியவாறு. (உ௩௧)

## உள்ளதுகூறி வரைவுகடாதல்.

இன்மையுரைத்த மன்னனுக் கு
மாழைநோக்கி தோழியுரைத்த து.

(எ - து.) பெரும்பான்மைகூறி மறுத்த தலைமக னுக்கு (இவ்விடம் எந்தையது முற்றூட்டு, எமக்குற் றார் குறவர், எம்மைப்பெற்றவள் கொடிச்சி, யாங் களும் புனங்காப்போம் சிலர், நீ வரைவுவேண்டா மையால் எம்மைப்புனைந்துரைக்க வேண்டுவதில்லை யென) அழகிய கண்களையுடைய பாங்கி, பின்னும் வரைவுதோன்றத் தங்களுண்மையைக் கூறியது.

சிறார்கவண்வாய்த்தமணியிற்சிதைபெருந்தேனிழுமென்
றிறால்கழிவுற்றெஞ்சிறுகுடிலுந்துமிடமிதெந்தை
யுறாவரையுற்றார்குறவர்பெற்றாளுங்கொடிச்சியும்பர்
பெறாவருளம்பலவன்மலைக்காத்தும்பெரும்புனமே.

(இ - ள்.) சிறார் கவண் வாய்த்த மணியில் சிதை பெ[…] தேன் - சிறார்கையிற்கவண்தப்பாமல் (அது) விட்ட மணியா[…] சிதைந்த பெருந்தேனானது, — இழுமென்று இறால் கழிவுற்[…] எம் சிறு குடில் உந்தும் இடம் இது எந்தை உறாவரை இழுமென்னு மோசையுடன் இறாலினின்றுங் கழிதலையுற்[…] எமதுசிறுகுடிலைத் தள்ளுமிவ்விடம், எந்தையது முற்றூட்டு;— உற்றார் குறவர் பெற்றாளும் கொடிச்சி - எமக் குற்றார்கு[…] வர், எம்மைப் பெற்றாளுங் கொடிச்சியே, — உம்பர் பெ[…] அருள் அம்பலவன் மலை பெரும்புனம் காத்தும் - (யாமுட[…] தன்னன்பரல்லது) உம்பர்பெறாத அருளையுடைய அம்பல[…] னதுமலைக்கண் பெரும்புனத்தைக்காப்போர் ; (அதனால், நீயு[…] வரைவுவேண்டாமையின் எம்மைப்புனைந்துரைக்கவேண்டுவ[…] ல்லை). எ-று. மெய்ப்பாடு - மருட்சி; பயன் - குறியிட […]ணை த்துதல்.

"கோவையுந் தொகையு மாவயின் வரையார்" என்பதனுன் இது தொடர்நிலைச்செய்யுளாதலிற் குரம்பையர் தம்மிடமோ வென்றுவினவப்பட்டவிடம் எஞ்சிறுகுடி லூந்துமிடமெனவும் ஒருபுனத்தைச்சுட்டி இதெந்தை யுருவரையெனவுங் கூறினுளாக வுரைப்பினு மமையும். சிருறெறிந்தமணியாற் பெருந்தேன் சிதைந்து அவ்விருவிலைவிட்டுக்கழிந்து, சிறுகுடிலிற்பரந்தாற்போல அயலார்கூறும் அலரான் நுமது மறைந்தவொழுக்கம் நும் வயினடங்காது பலருமறியவெளிப்படாநின்றதெனை உள்ளுறை காண்க. உருவரை - முற்றூட்டு. (உருஉ)

### ஏதங்கூறி யிரவரவுவிலக்கல்.

இரவருதுயர மேந்தலுக்கெண்ணிப்
பருவரலெய்திப் பாங்கிபகர்ந்தது.

(எ-து.) (உண்மை யுரைத்து வரைவுகடாய)பாங்கி, இரவில் வருகின்ற துன்பத்தையெண்ணித் தலைமகனுக்கு ஏதங்கூறி யவனை யிரவரவு விலக்கியது.

கடந்தொறும்வாரணவல்சியினுடிப்பல்சீயங்கங்கு
லிடந்தொறும்பார்க்குமியவொருநீயெழில்வேலின்வந்தாற்
படந்தொறுந்தீயரவன்னம்பலம்பணியாரினெம்மைத்
தொடர்ந்தொறுந்துன்பென்பதேயன்பநின்னருடோன்றுவதே.

(இ - ள்.) பல் சீயம் வாரண வல்சியின் நாடி கங்குல் கடந்தொறும் இடந்தொறும் பார்க்கும் இயவு - பல சிங்கங்கள் யானையாகிய வுணவைத் தேடி இராக்காலத்திற் காடுகள்தோறும் காட்டினிடங்கள்தோறும் (சென்று) பார்க்கும்வழியில்,— ஒருநீ-தனியையாகியநீ,—எழில் வேலின் வந்தால்-எழிலையுடைய வேல்துணையாகவந்தால்,—அன்ப - அன்பனே!—நின் அருள்- (எம்மிடத்துண்டாகிய) நின்னருளானது,— படந்தொறும் தீ அரவன் அம்பலம் பணியாரின் - படந்தோறுந் தீயையுடைய

அரவை யணிந்தவனது அம்பலத்தைப் பணியாதானைப்போல வருந்த,—எம்மை தொடர்ந்து ஒறுக்கும் துன்பு என்பதே தோன்றுவது - எம்மை (விடாதே) தொடர்ந்து வருத்துந் துன்பமென்பதாகவே (எமக்குத்) தோன்றுகின்றது. (எமக்கு நீ செய்யுந் தலையளியை யாங்கள் துன்பமாகவே யுணராநின்றோம்). எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - இரவுக்குறியேதங் காட்டி வரைவு கடாதல்.

நாடுதல் - மனத்தாலாராய்தல். பார்த்தல் - கண்ணுணோக்குதல். வேலினென்னு மைந்தாவது ஏதுவின்கண் வந்தது. ஒறுக்குமென்பது ஒறுமென விடைகுறைந்து நின்றது. எம்மை நீ விடாது தொடருந் தொறுமெனினு மமையும்; இதற்குத் தொடருமென்பது இடைக்குறைந்து நின்றது. நின்னருளென்னு மெழுவாய் துன்பமென்னும் பயனிலை கொண்டது. (உ௫௩)

**பழிவரவுரைத்துப் பகல்வரவுவிலக்கல்.**

ஆங்ஙனமொழுகு மடல்வேலண்ணலைப்
பாங்கியைய பகல்வரலென்றது.

(எ - து.) (இவ்விருளில்வரா தொழி கென்றது பகல்வரச் சொன்னவாறுமென வுட்கொண்டு தலைமகன் பகற்குறிச்சென்றுநிற்ப, பாங்கி யெதிர்ப்பட்டுப் பகல்வந்து நீ எமக்குச் செய்கின்ற மெய்யருள் புறத்தவரறிந்து வெளிப்பட்டுப் பழியாகப் புகுதாநின்றது), ஆகலான் இனிப் பகலில்வருதலை யொழிகவெனப் பழிவருதலைக் கூறித் தலைமகனைப் பகல்வரவு விலக்கியது.

களிறுற்றசெல்லல்களைவயிற்பெண்மரங்கைஞ்ஞெமிர்த்துப்
பிளிறுற்றவானப்பெருவனாநாடபெடைநடையோ
டொளிறுற்றமேனியன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போல்
வெளிறுற்றவான்பழியாம்பகனீசெய்யுமெய்யருளே.

(இ - ள்.) களிறு உற்ற செல்லல் பெண் கலைவயின் மரம் கை ஞெமிர்த்து பிளிறுற்ற வானம் பெருவரை நாட-(அசும்பின் கட்பட்டு) ஆண்யானை யுற்றவருத்தத்தைப் பெண்யானை தீர்க் கின்றவிடத்து, மரத்தைக் கையான்முறித்து ஆரவாரிக்கும் படியான வானத்தைத் தோயும் பெரிய மலை நாடனே!—பெடை நடையோடு ஒளிறுற்ற மேனியன் சிற்றம்பலம் நெஞ்சுறுதவர்போல் - அன்ன நடையாளோடுகூடி விளங்குதலையுற்ற மேனியையுடையவனது சிற்றம்பலத்தை நினையாதாரைப் போல,—நீ பகல் செய்யும் மெய் அருள் - நீபகலில்வந்தெமக்குச் செய்யும் மெய்யாகிய வருள்,—வெளிறுற்ற வான் பழியாம் - (யாமிடர்ப்பட) வெளிப்படுதலையுற்ற பெரிய பழியாகாநின்றது. எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - பகற்குறிவிலக்கிவரைவுகடாதல்.

வழியல்லா வழிச்சேறலான் அசும்பிற்பட்ட களிற்றினை வாங்குதற்குப் பிடிமுயல்கின்றாற்போல, இவளை யெய்துதற் குபாயமல்லாத இவ்வொழுக்கத்தினை விரும்பும் நின்னை இதனினின்று மாற்றுதற்கு யான்முயலாநின்றேனென உள்ளுறை காண்க. ()

## தோழிஇரந்துகூறல்.

இரவரவினேது மஞ்சிச்
சுரிதருகுழற்றோழி சொல்லியது.

(எ-து.) (பகல்வரவு விலக்கிய) பாங்கி, (இவனிரவு வரவுங் கூடுமென்றுட்கொண்டு, நின்னையெதிர்ப்பட வேண்டி யழுதுவருந்துகின்ற இவள்காரணமாக) இரவில் வருகையி னிகழுந்துன்பத்துக்கஞ்சி (நின்கழல் களைக் கையாற்றொழுதேனென) வரைவுதோன்ற இரந்து கூறியது.

கழிகட்டலைமலைவோன்புலியூர்கருதாதவர்போற்
குழிகட்களிறுவெரீஇயரியாளிகுழீஇவழங்காக்

கழிகட்டிரவின்வரல்கழல்கைதொழுதேயிரந்தேன்
பொழிகட்புயலின்மயிலிற்றுவளுமிவள்பொருட்டே.

(இ - ள்.) பொழி கண் புயலின் மயிலில் துவளும் இவள் பொருட்டு - பொழியாநின்ற கண்ணிற் புனலையுடையதோர் மயில் போலத் துவள்கின்ற இவள் காரணமாக,— கழி கண் தலை மலைவோன் புலியூர் கருதாதவர்போல் - கழிந்த கண்ணை யுடைய தலைமாலையைச்சூடுவோனது புலியூரை நினையாதவ ரைப்போல,—குழி கண் களிறு அரி யாளி வெரீ குழீஇ வழங் கா கழி கட்டிரவின் வரல் - குழிந்த கண்களையுடையயானைகள் சிங்கத்துக்கும் யாளிக்கு மஞ்சி (ஓரிடத்தே) திரண்டுநின்று (அவ்விடம்விட்டுப்) புடைபெயராத மிகுந்த அச்சத்தைச்செய் யும் இரவின்கண் வராதொழிவாயாக.— கழல் கை தொழு து இரந்தேன் - (இதனை) நின் கழல்களைக் கையாற்றொழு திரந்தேன். எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - இரவுக் குறிவிலக்கி வரைவு கடாதல்.

குழிவழங்கா வென்று பாடமோதி அரியையும் யாளியையுங் குழியையும் வெருவிவழங்கா வென்றுரைப்பாருமுளர். கழி - அச்சத்தைச்செய்யு மியல்பாற் சிறத்தல். கழிகட்டிரவினென்ப தற்குக் கழி சிறப்பின்கண்வந்து அளை யிரவின்கணென்பது படநின்ற தெனினுமமையும். பொழிகட்புயலின் மயிலிற்றுவ ளுமென்றதனால் இவ்வாறிவ ளாற்றாளெனினும் நீ வரற்பாலைய ல்லை யென்றுகூறி வரைவுகடாவினாளாம். வழியிடைவருமேத ங்குறித்து இவ்வாறாகின்ற விவள்பொருட் டென்றுரைப்பினு மமையும். கருதார் மனம்போலென்பது பாடமாயின், மனம் போலுங் கழிகட்டிரவெனவியையும். (உருரு

**தாயறிவுகூறல்.**

**சிறைப்புறத்துச் செம்மல்கேட் ப**
**வெறிக்குழற்பாங்கி மெல்லியற்குரைத்த து.**

(எ - து.) (தொழுதிரந்துகூறவுந் தலைமகன் வேட்கை மிகுதியால் பின்னுங் குறியிடைச்சென்று நிற்ப, அக்குறிப்பறிந்து தலைமகளுக்குக் கூறுவாள்போன்று) சிறைப்புறமாகத் தலைமகன்கேட்ப மணங்கமழுங் கூந்தலையுடைய பாங்கி, தாயறிவுகூறியது.

விண்ணுஞ்செலவறியாவெறியார்கழல்வீழ்சடைத்தீ
வண்ணன்சிவன்றில்லைமல்லெழிற்கானலரையிரவி
னண்ணன்மணிநெடுந்தேர்வந்ததுண்டாமெனச்சிறிது
கண்ணுஞ்சிவந்தன்னையென்னையுநோக்கினள்கார்மயிலே.

(இ - ள்.) கார் மயிலே - கார்காலத்து மயிலையொப்பாய்!— விண்ணும் செலவு அறியா வெறி ஆர் கழல் வீழ் சடை தீ வண்ணன் சிவன் தில்லை - விண்ணுளாரானும் (எல்லாப் பொருளுக்குமப்பாற் செல்லும்) செலவை யறியப்படாத நறுநாற்றம் பொருந்திய கழலினையும், தாழ்ந்த சடையினையுமுடைய, தீவண்ணனாகிய சிவனது தில்லையில்,—மல் எழில் கானல் அரை இரவின் மணி அண்ணல் நெடுந்தேர் வந்ததுண்டாமென - வளவிய எழிலையுடைய கானலிடத்து நடுராத்திரியில் மணிகளையுடைய தலையாயதொரு நெடுந்தேர்வந்ததுண்டாகக் கூடுமென (வுட்கொண்டு),— அன்னை சிறிது கண்ணும் சிவந்து என்னையும் நோக்கினள் - அன்னைசிறிதேகண்ணுஞ்சிவந்து என்னையும்பார்த்தனள் ( இதனால் இவ்வொழுக்கத்தினை யறிந்தாள்போலும் ) எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - படைத்துமொழியால் வரைவுகடாதல்.

எல்லாப் பொருளையுங் கடந்து நின்றனவாயினும் அன்பர்க்கணியவாய் அவரிட்ட நறுமலரான் வெறிகமழுமென்பது போதர வெறியார் கழலென்றார். (உருசு)

## மந்திமேல் வைத்துவரைவுகடாதல்.

வரிவளையை வரைவுகடா வி
யரிவைதோழி யுரைபகர்ந்த து.

(எ - து.) (சிறைப்புறமாகத் தாயறிவுகூறிச் செ ன்றெதிர்ப்பட்டு) வரிவளையையுடையளாகிய தலைம கள் நீவரையாமையை நினைந்தாற்றுளாயினுளெனத் தலைமகளது வருத்தங்கூறிப் பாங்கி, (மந்திமேல்வை த்து) வரைவுகடவாநின்றது.

வான்றோய்பொழிலெழின்மாங்கனிமந்தியின்வாய்க்கடுவன்
றேன்றோய்த்தருத்திமகிழ்வகண்டாடிருநீண்முடிமேன்
மீன்றோய்புனற்பெண்ணைவைத்துடையானையுமேனிவைத்தான்
வான்றோய்மதிற்றில்லைமாநகர்போலும்வரிவளையே.

(இ-ள்.) நீள் திருமுடிமேல் மீன் தோய் புனல் பெண்ணை வைத்து - நீண்டதிருமுடிக்கண் மீனைப் பொருந்திய புனலா கிய பெண்ணைவைத்து,—உடையானையும் மேனிவைத்தான் - (எல்லாம்) உடையவளையும் திருமேனிக்கண் வைத்தவனது,— வான் தோய் மதில் தில்லை மாநகர் போலும் வரிவளை - ஆகா யத்தை யளாவிய மதிலையுடைய தில்லையாகிய பெரிய நகரை யொக்கும் வரிவளையையுடையாள்,— வான் தோய் பொழில் எழில் மாங்கனி கடுவன் தேன் தோய்த்து மந்தியின் வாய் அரு த்தி மகிழ்வ கண்டாள் - வானைத்தோயும்பொழிலின்க ணுண் டாகிய நல்ல மாங்கனியை, ஆண்குரங்கு தேனிற்றோய்த்து பெண்குரங்கின் வாயிற்கொடுத்து நுகர்வித்துத் (தம்முள்) இ ன்புறுமவற்றைக் கண்டாள் ; (இது நங்காதலர்க்கு நம்மாட்டரி தாயிற்றென ஆற்றுளாயினள்). எ - று. மெய்ப்பாடு - அச்சத் தைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - வரைவுகடாதல்.

துணைபுறங்காக்குங் கடுவனைக்கண்டு விலங்குகளு மிவ்வா றுசெய்யாநின்றன, இது நங்காதலர்க்கு நம்மாட் டரிதாயிற்

றன நீ வரையாமையை நினைந் தாற்றாளாயினுளென்றாளாம். ஈன்றேய் பொழிலென்பதூஉம்பாடம். (உ௫௭)

**காவன்மேல்வைத்துக் கண்டுயிலாமைகூறல்.**

நகர் காவலி ன்

மிகுகழி காத ல்.

(எ - து.) (மந்திமேல்வைத்து வரைவுகடாவப பட்டதலைமகன் தானுமாற்றானுயிரவுக்குறிச்சென்று நிற்க, பாங்கி,) காவல் மிகுதியும் அவளதாற்றாமை யுங் கூறி வரைவு கடாயவாறு.

நறைக்கண்மலிகொன்றையோனின்றுநாடகமாடுதில்லைச்
சிறைக்கண்மலிபுனற்சீர்நகர்காக்குஞ்செவ்வேலிளைஞர்
பறைக்கண்படும்படுந்தோறும்படாமுலைப்பைந்தொடியாள்
கறைக்கண்மலிகதிர்வேற்கண்படாதுகலங்கினவே.

(இ - ள்.) நறை கள் மலி கொன்றையோன் நின்று நாடகம் ஆடும் தில்லைச்சிறைக்கண் - நறுநாற்றத்தையுடைய தேன் மலிந்த கொன்றையையுடையவன் நின்று கூத்தாடுந்தில்லையா கிய சிறையிடத்து,—மலி புனல் சீர் நகர் காக்கும் செவ்வேல் இளைஞர் பறைக்கண் படும் படுந்தோறும் - (அதுபொழுமல்) மிகும் புனலையுடைய சீரியநகரை (இராப்பொழுதின்கண்) கா க்குஞ் செவ்வேலையுடைய இளைஞரது காவற்பறை படுந்தோ றும் படுந்தோறும்,—படா முலை பைந்தொடியாள் கறை கண் மலி கதிர் வேல் கண் படாது கலங்கின - படக்கடவவல்லாத முலையையுடைய பைந்தொடியாளுடையகறை தன்கண்மிக்க கதிர்வேல் போலுங்கண்கள் (ஒருகாலும்) படாவாய் வருந்தின. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைவுகடாதல்.

நாடகமென்றது ஈண்டு கூத்தென்னுந் துணையாய் நின்றது. கலங்கின வென்பதற்குத் துயிலாமையான் நிறம் பெயர்ந்தன

வென்றும் அழுதுகலங்கின வென்று முரைப்பாருமுளர். காவன் மிகுதியும் அவளதாற்றாமையுங் கூறி வரைவுகடாயவாறு. இஃ தின்னார் கூற்றென்றது துறைகூறியகருத்து. (உ௫அ)

**பகலுடம்பட்டாள்போன் றிரவரவுவிலக்கல்.**

விரைதரு தா ரோ
யிரவர லென்ற து.

(எ - து.) (சிறைப்புறமாகத் தலைமகளது கன்னு யிலாமைகேட்ட தலைமகன் ஆதரவு மிகுதியா லெதி ர்ப்பட்டுநிற்க, பாங்கி, பகலுடம்பட்டாள்போன்று) மணங்கமழு மலர்மாலையை யுடையானே! இரவு வரலென விலக்கியது.

கலராயினர்நினையாத்தில்லையம்பலத்தான்கழற்கன்
பிலராயினர்வினைபோலிருணேங்கிமுழங்கிமின்னிப்
புலராவிரவும்பொழியாமழையும்புண்ணின்னுழைவேன
மலராவருமருந்தும்மில்லையோநும்வரையிடத்தே.

(இ-ள்.) கலராயினர் நினையா தில்லை அம்பலத்தான் கழற்கு அன்பிலராயினர் வினைபோல் - தீமக்களாயுள்ளார் கருதாத தில்லை யம்பலத்தானுடைய திருவடிக் கன்பில்லாதாரது தீ வினைபோல,—இருள் தூங்கி புலரா இரவும் - இருள்செறிந்து புலராத இரவும்,—மின்னி முழங்கி பொழியா மழையும் - மின் னிமுழங்கிப் பொழிவதுபோன்று பொழியாதமழையும்,—புண் ணில் நுழை வேல் மலரா வரும் - (எமக்குப்) புண்ணின்கண் நுழையும்வேல் மலராம்வண்ணம் (கொடியவாய்) வராநின் றன.—மருந்தும் இல்லையோ நும் வரையிடத்து - (இதற்கு) ஒரு மருந்தும் இல்லையோ நும்வரையிடத்து. எ - று. மெய்ப் பாடு - அழுகை; பயன் - இரவுக்குறிவிலக்குதல்.

மருந்தென்றமையான் வரையிடத்தென்றாள். ஒருநிலத்துத் தலைமகனுதலின் நும்வரையாகிய இவ்விடத்திதற்கோர் மருந்

தில்லையோவென ஒருலக வழக்காக வுரைப்பினு மமையும். வருத்துதலேயன்றித் தணித்தலுமுண்டோ வென்பதுபட நின் மையின் மருந்து மென்னுமும்மை எச்சவும்மை. இரவின்கண் வந்தொழுகாநிற்பவும், இரவுறு துயரந்தீர்க்கு மருந்தில்லையோ வென்று கூறினமையான், வரைவல்லது இவ்வாறொழுகுதல் அதற்கு மருந்தன்றென்று கூறினளாம். (உருக)

## இரவுடம்பட்டாள்போன்று பகல்வரவுவிலக்கல்

இகலடு வேலோ ய்
பகல்வர லென்ற து.

(எ - து.) (தலைமகன் பகற்குறிச்செல்லா நிற்பப் பாங்கி, யெதிர்ப்பட்டு) பகைவரையடுகின்ற வேலை யுடையானே (நீ பகல்வருவது அவள் வருத்தமுறும் படி யலராகா நின்றது, பகற்குறி வரற்பாலையல்லை யென இரவுக்குறியுடம்பட்டாள்போன்று) பகற்குறி விலக்கியது.

இறவனையும்பர்க்கடவுட்பராய்நின்றெழிலியுன்னிக்
குறவனையார்க்குங்குளிர்வரைநாடகொழும்பவள
நிறவனைமேனியன்சிற்றம்பலநெஞ்சுறுதவர்போ
லுறவனைமேகலையாட்கலராம்பகலுன்னருளே.

(இ - ள்.) இற எழிலி உன்னி - (தொடர்ந்துபெய்யாது) இறுதலான் மேகத்தைநினைந்து,—வரை உம்பர்க்கடவுள் பராய் குறவர் நின்று ஆர்க்கும் குளிர் வரைநாட - மலைமேலுறையுந் தெய்வங்களைப்பராவிக்குறவர் நின்று ஆர்ப்பரவஞ்செய்யுங் குளி ர்ந்த மலைநாட்டையுடையாய்!—கொழு பவளம் நிறம் வரை மே னியன் சிற்றம்பலம் நெஞ்சுறுதவர்போல் உற-கொழுவிய பவள நிறம்பொருந்திய வரைபோலும் திருமேனியையுடையவனது சிற்றம்பலத்தை நினையாதவரைப்போல வருந்த,—அரை மே

கலையாட்கு பகல் உன் அருள் அலராம்-அரைக்கணிந்தமேகலை யையுடையாட்குப் பகலுண்டா முனதருள் மிக்க அலராகா நின் றது. எ - று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - பகற்குறிவிலக் குதல்.

குறவரை யென்புழி ஐகாரம் அசைநிலை. அசைநிலை யென் னாது குறமலை யென்றுரைப்பாருமுளர். வரையையுடைய நா டெனினு மமையும். குறவர்பரவும் பருவத்துத் தெய்வத்தைப் பரவாது, பின் மழைமறுத்தலா னிடர்ப்பட்டு அதனைமுயல்கின் றாற்போல, நீயும் வரையுங்காலத்து வரையாது, இவளையெய்து தற்கரிதாகியவிடத்துத் துன்புற்று வரையமுயல்வையென உள் ளுறைகாண்க. (உகூ0)

### இரவும்பகலும் வரவெவ்லக்கல்.

இரவும் பகலு ம்
வரவொழி கென்ற து.

(எ - து.) (இரவுடம்பட்டாள்போன்று பகல்வரவு விலக்கிய பாங்கி, நீ பகல்வரின் எங்கட்குப் பழியெய் தும், இரவுவரின் எவ்வகையானும் நின்னை யெதிர்ப் படுதலாற் சிறிதும் பயனில்லை,) எனத் தலைமகனை இரவும் பகலுமாகிய இருபொழிதினும் வருதலை யொ ழிக வென்றது.

சுழியாவருபெருநீர்சென்னிவைத்தென்னைத்தன்றொழும்பிற்
கழியாவருள்வைத்தசிற்றம்பலவன்கரந்தருமான்
விழியாவரும்புரிமென்குழலாடிறத்தையமெய்யே
பழியாம்பகல்வரினீயிரவேதும்பயனில்லையே.

(இ-ள்.) ஐய நீ பகல் வரின் - ஐயனே ! நீ பகற்காலத்தில் வரின்,—சுழியா வரு பெரு நீர் சென்னிவைத்து - சுழிந்துவரும் பெரிய கங்கையைச் சென்னியின்கண் வைத்து,— தன்தொழும்

பில் என்னை கழியா அருள் வைத்த சிற்றம்பலவன் - தனக்குத் தொண்டுபடுதற்கண் என்னை நீங்காத தன்னருளில் வைத்த சிற்றம்பலவனது,—கரம் தரு மான் விழியாவரும் புரி மெல் குழலாள் திறம் மெய்யே பழியாம் - கரத்தின்கண் வைக்கப்பட்ட மான் போல விழித்துவரும் சுருண்ட மெல்லிய குழலையுடையாள் திறத்து மெய்யாகவே அலருண்டாம்,—இரவு ஏதும் பயனில்லை- இராக்காலத்தில்வரின் (எதிர்ப்படுத லருமையாற்) சிறிதும் பயனில்லை. எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - இரவுக்குறியும் பகற்குறியும் விலக்கி வரைவுகடாதல்.

பரந்துவரும் பெரும்புனலை வேகந்தணித்துத் தன் சென்னியின்கண் வைத்தாற்போல, நில்லாது பரக்கு நெஞ்சை யுடையேனைத் தன்னருட்கணடக்கினானென்பது கருத்து. தன்றொழும்பினின்றும் யானீங்காமைக்குக் காரணமாகிய அருட்கணென்னை வைத்தவனெனினு மமையும். (உசுக)

### காலங்கூறிவரைவுகடாதல்.

முந்தியபொருளைச் சிந்தையில்வைத் து
வரைதருகிளவியிற் றெரியவுரைத்த து.

(எ - து.) (இருபொழுதும் வரைவுவிலக்கின பாங்கி,) முற்பட்டபொருளைச் சிந்தையினி லெண்ணி (வரைவொடு வருதற்குக் காலமிதுவென) வரையுமொழியினைத் தெரியச்சொன்னது.

மையார்கதலிவனத்துவருக்கைப்பழம்விழுதே
னெய்யாதயின்றிளமந்திகள்சோருமிருஞ்சிலம்பா
மெய்யாவரியதெனம்பலத்தான்மதியூர்கொள்வெற்பின்
மொய்யார்வளரிளவேங்கைபொன்மாலையின்முன்னினவே.

(இ - ள்.) மை ஆர் கதலிவனத்து வருக்கை பழம் விழு தேன்- குளிர்ந்த வாழைக்காட்டின்கண் பலாவின் பழம் விழுதலா

லுண்டாகியதேனை,—இளமந்திகள் எய்யாது அயின்று சோரும் இருஞ்சிலம்பா - இளையமந்திகள் அறியாதேயுண்டு (பின்களியால்) சோரும் பெரிய சிலம்பையுடையாய்!—மதி உளர்கொள்-மதிமிரம்பாகின்றது,—அம்பலத்தான் வெற்பின் - அம்பலத்தானுடைய வெற்பின்கண்,—மொய் ஆர் வளா இளவேங்கை பொன மாலையின் முன்னின,—செறிவார்ந்த வளராநின்ற இளைய வேங்கைகள் (பூத்துப்) பொன்மாலைபோலத் தோன்றின,—மெய்யா அரியது என் - (இனி) மெய்யாக வுனக்கு அரியது யாது? எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவு கடாதல்.

ஊர்கோடல் - குறைவின்றி மண்டலமாக வொளி பரத்தல், அல்லதூஉம் பரிவேடித்தலெனினு மமையும். வேட்டபொருள் உள்ளத்து முற்பட்டுத் தோன்றுதலின், வரைவை முந்திய பொருளென்றாள். நின்மலைக்கண் விலங்குகளும் இத்தன்மைத்தாகிய தேனைக்குறியாதுண்டு இன்புறுகின்றனவாகலின் குறித் தவற்றில் நினக்கரியதுயாது, இதுவன்றே பருவமுமென வரைவுபயப்பக் கூறியவாறாயிற்று. மந்திகடேரு மென்பது பாடமாயின், தேனையறியாதுண்டு அதன்சுவை மிகுதியாற் பின்னதனைத் தேர்ந்து வருமென்றுரைக்க. (உ௯உ)

**கூறுவிக்குற்றல்.**

ஒத்ததொவ்வா துரைத்ததோ ழி
கொத்தவிழ்கோதையாற் கூறுவிக்குற்றது.

(எ - து.) இராவரலென்றலும் பகல்வரலென்றலும் பின்னிரண்டையு மறுத்தலுமாகிய ஒத்தது மொவ்வாததுங்கூறியபாங்கி, (தலைமகனுக்குக் காலங்கூறி வரைவுகடாவவும் அவன்வரைவுடம்படாமையின், நீயாகிலுஞ்சென்று கூறென்பது குறிப்பாற்றோன்ற) மலர்க்கொத்தவிழ்ந்த கோதையாகிய தலைமகளைக்கொண்டு கூறுவிப்பாளாகத் துணிந்தது.

தேமாம்பொழிற்றில்லைச்சிற்றம்பலத்துவிண்ணோர்வணங்க
நாமாதரிக்கநடம்பயில்வோனைநண்ணுதவரின்
வாமாண் கலைசெல்லநின்றார்கிடந்தநம்மல்லல்கண்டாற்
றாமாவறிகிலராயினென்னாஞ்சொல்லுந்தன்மைகளே.

(இ - ள்.) தேமாம் பொழில் தில்லை சிற்றம்பலத்து விண்ணோர் வணங்க - தேமாம் பொழிலையுடைய தில்லைச்சிற்றம்பலத்தின்கண்விண்ணோர் வணங்கவும்,—நாம் ஆதரிக்க நடம்பயில்வோனை நண்ணுதவரின் - நாம் விரும்பவும் நடம்புரிவோனைச் சேராதாரைப்போல (வருந்த), — வாமம் மாண் கலை செல்ல நின்றார் கிடந்த நம் அல்லல் கண்டால் - அழகுமாட்சிமைப்பட்ட மேகலை கழலும்வண்ணம் (கண்டு தலையளிசெய்யாது) நின்றவர் பெருகிக்கிடந்த நம்மல்லலைக்கண்டால்,— தாமா அறிகிலராயின் - (நம்மாற் றலையளிக்கப்படுவார் இவ்வாறு வருந்துதல் நன்றன்றென்று) தாமாக அறிகின்றிலராயின்,— நாம் சொல்லும் தன்மைகள் என் - நாஞ்சொல்லும் இயல்புகள் என்? எ - று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்தவிளிவரல். பயன் - வரைவு கடாதல்.

அலரான் வருநாணினையுங் காணாமையான்வரு மாற்றாமையையும் பற்றிக்கிடந்த நம்மல்லலென்றாள். (உகூ௩)

### சேலவுநினைந் துரைத்தல்.

பாங்கிநெருங்கப் பணிமொழிமொழிந் து
தேங்கமழ்சிலம்பற்குச் சிறைப்புறக்கிள வி.

(எ - து.) (தலைமகன் வரைவுடம்படாமையின்) பாங்கி நெருங்கிவரத் தலைமகள் பணிவைப் புலப்படுத்திய மொழியைச்சொல்ல, அது மணங்கமழ்கின்ற சிலம்பையுடைய தலைமகனுக்குச் சிறைப்புறக் கிளவியாயிற்று.

வல்சியினெண்குவளர்புற்றகழமல்குமிருள்வாய்ச்
செல்வரிதன்றுமன்சிற்றம்பலவனைச்சேரலர்போற்
கொல்கரிசீயங்குறுகாவகைபிடிதானிடைச்செல்
கல்லதரொன்வந்தவாறென்பவர்ப்பெறிற்கார்மயிலே.

(இ - ள்.) கார் மயிலே - கார்காலத்து மயிலையொப்பாய்! — சிற்றம்பலவனைச் சேரலர் போல் - சிற்றம்பலவனைச் சேராதானைப்போல (வருந்த), — சீயம் கொல் கரி குறுகா வகை பிடி தான் இடைசெல் கல்லதர் - சிங்கம் கொல்யானையைச் சென்றணையாதவண்ணம் பிடி தானிரண்டற்கும் இடையே சென்று புகுங் கல்லதரின்கண், — வந்தவாறு என் என்பவர் பெறின் - நீர் வந்தவாறெங்ஙனேயென்று சொல்லுவாரைப் பெற்றேமாயின், — வல்சியின் எண்கு வளர் புற்று அகழ மல்கும் இருள் வாய் செல்வரிது அன்று - (குரும்பியாகிய) உணவுகாரணமாகக் கரடி புயர்ந்தபுற்றைத் தோண்ட மிகுந்த விருளின்கண் அவரிருந்தவழிச்சேற லரிதன்று. (சென்றேமாயினு மவ்வாறு சொல்லுவாரில்லை). எ - று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்தவிளிவால்; பயன் - வரைவு கடாதல்.

செல்வரி தென்பது - செலவுழிக்க னென்பதுபோல மெய்யீற் றுடம்படுமெய். செல்லவென்பது கடைக்குறைந்துநின்றதெனினு மமையும். மன் - ஒழியிசைக்கண்வந்தது. கல்லதர் - கற்கண்ணதர். கல் லதரினென்பது பாடமாயின் வந்தவாறென்னென ஒருசொல் வருவித்துரைக்க. (உகூச)

## போலிவழிவுரைத்து வரைவுகடாதல்.

வரைவுவிரும்பு மன்னுயிர்ப்பாங் கி
விரைதருகுழலி மெலிவுரைத்த து.

(எ - து.) வரைவுவேண்டிநின்ற நிலைபெற்ற உயிர் போன்ற பாங்கி, மணங்கமழுங் கூந்தலையுடைய தலைமகளது பொலிவழிவு கூறி வரையும்படி யறிவித்தது.

வாரிக்களிற்றின்மருப்புகுமுத்தம்வரைமகளிர்
வேரிக்களிக்கும்விழுமலைநாடவிரிதிரையி
ஞரிக்களிக்கமர்நன்மாச்சடைமுடிநம்பர்தில்லை
யேரிக்களிக்கருமஞ்ஞைநுயிந்நீர்மையென்னெய்துவதே.

(இ - ள்.) களிற்றின் மருப்பு உகு முத்தம் வரை மகளிர் வேரிக்கு வாரி அளிக்கும் விழு மலை நாட - யானையின் மருப்புக்களினின்றுஞ் சிந்திய முத்துக்களை மலையில்வாழும் மகளிர் மதுவுக்கு (விலையாக) முகந்து கொடுக்குஞ் சிறந்த மலைநாட்டையுடையாய்! — விரி திரையின் நாரிக்கு அளிக்க அமர் நல் மா சடைமுடி நம்பர் தில்லை - விரியுந் திரையையுடைய பெண்ணிற்குக் கொடுத்தற்குப் பொருந்திய நல்ல பெரிய சடைமுடியையுடைய நம்பரது தில்லையின்கணுள்ளாளாகிய, — ஏர் இ களி கரு மஞ்ஞை - ஏரையுடைய இக்களியையுடைய கரியமஞ்ஞையையொப்பாள், — இ நீர்மை எய்துவது என் - (தன்தன்மையையிழந்து) இத்தன்மையை யெய்துவதென்?. (நீயுரை) எ - று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த விளிவரல்; பயன் - வரைவுகடாதல்.

மலையையுடைய நாடெனினுமமையும். விரிதிரையினென்பது அல்வழிச்சாரியை. விரிதிரையையுடைய நாரியெனினு மமையும். நாரிக்களித்தமரென்பது பாடமாயின் நாரிக்களித்தலான் அவளமருஞ் சடையென்றுரைக்க. அணைதற்கரிய களிற்றின் மருப்பினின்றுமுக்க முத்தத்தின தருமையைக் கருதாது தமக்கின்பஞ்செய்யும் வேரிக்குக் கொடுத்தாற்போல என்னையரது காவலைநீவி நின்வயத்தளாகிய இவளதருமை கருதாது நினக்கின்

பஞ் செய்யுங் களவொழுக்கங் காரணமாக இகழ்ந்து மதித்தா யென உள்ளுறை காண்க. (உகூரு)

வரைவுமுடுக்கம் முற்றிற்று.

---

## வரைபொருட்பிரிதல்.

என்பது, பாங்கியால் வரைவு முடுக்கப்பட்ட தலைமகன் வரைவுடம்பட்டு அதற்குவேண்டிய பொருள்தேடிக்கொண்டுவரப் பிரிந்து செல்லல்.

இக்கிளவி முப்பத்துமூன்று துறைகளையுடைத்து. அவை வருமாறு:—

முலைவிலைகூறல் வரைவுடம்படுத்தல், வரைபொருட்கேகலை யுணர்த்தல், ......... செல்லாதேகல், பிரிந்தமை கூறல் நெஞ்சொடுகூறல், நெஞ்சொடுவருந்தல் வருத்தங்கண்டுரைத்தல், வற்புறுத்தல்லொடு வன்புறையழிதல், வாய்மை கூறல் மன்னவன்மெய்யுரை, தேருதுபுலம்பல் காலமறைத்துரைத்தல், தூதுவரவுரைத்தல் தூதுகண்டழுங்கல், மெலிவு கண்டு செவிலியுரைத்தல், மேவியசெவிலி கட்டுவைப்பித்தல், கலக்குற்றுநிற்றல் கட்டுவித்திகூறல், வேலனையழைத்தல் இன்னலெய்தல், விலக்கநினைத்தல் நிலைமையுரைத்தல், அறத்தொடுநிற்றல் ஐயந்தீர்த்தல், அவன்வெறிவிலக்கல் செவிலிக்குத்தோழி, அறத்தொடுநிற்றல் நற்றாய்க்குச்செவிலி, அறத்தொடுநிற்றல் தேர்வரவுரைத்தல், மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்தல், ஐயுற்றுக்கலங்க லவனிதிகாட்டல், ஆறைந்துடனே கூறியமூன்றும், விரைமலர்க்குழலாய் வரைபொருட்பிரிதல். (உகூகூ)

### முலைவிலைகூறல்.

கொலைவேற் கண்ணிக் கு
விலையிலை யென்ற து.

(எ-து.) கொலைத்தொழிலையுடைய வேல்போலுங் கண்ணையுடைய தலைமகளுக்கு (ஏழுலகமும்) விலை போதாதெனை மூலைவிலைகூறியது.

குறைவிற்குங்கல்விக்குஞ்செல்விற்குநின்குலத்திற்கும்வந்தோர்
நிறைவிற்குமேதகுநீதிக்குமேற்பினல்லாலினையி
னிறைவிற்குலாவரையேந்திவண் டில்லையனேழ்பொழிலு
முறைவிற்குலாநுதலாள்விலையோமெய்ம்மையோதுநர்க்கே.

(இ - ள்.) குறைவிற்கும் - (வரைவுவேண்டி) நீ எம்மாட்டுக் குறையுடையையாய் நிற்குமதனானும்,—கல்விக்கும் - கல்வி மிகுதியானும்,—செல்விற்கும்-இருமுது குரவாற் கொண்டாடப் படுதலானும்,—நின்குலத்திற்கும் (தங்குலத்திற்கேற்ற) நின்குலத்தானும்,—வந்தோர் நிறைவிற்கும் - நீவிடுக்க வந்தசான்றோரது நிறைவானும், — மேதகு நீதிக்கும் - மேவுதற்குத்தகு நீதியானும், — ஏற்பின் அல்லால் - (நின்வரவையெமர்) ஏற்றுக்கொள்ளினல்லது (விலை கூறுவாராயின்),—நினையின் - ஆராயு மிடத்து, — மெய்மை ஓதுநர்க்கு - மெய்ம்மை சொல்லுவார்க்கு,— உறைவில் குலாவு நுதலாள் - உறையையுடைய விற்போல் வளைந்த நுதலையுடையாட்கு,—இறை - (எல்லாவற்றிற்கும்) இறைவன்,—வில் குலா வரை ஏந்தி-வில்லாகிய வளைதலையுடைய வரையை யேந்துவான், — வள் தில்லையன் - வளவிய தில்லைக்கண்ணன், — ஏழ்பொழிலும் விலையோ - ஏழுலகமும் விலையாமோ. (விலைக்குறையாம்). எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - வரைவுகடாதல்.

நிறைவு - அறிவொடுகூடிய வொழுக்கம். நீதி - உள்ளப்பொருத்த முளவழி மறுதுகொடுத்தல். (உ௬எ)

வருமதுகூறி வரைவுடம்படுத்தல்.

தொடுத்தனவிடுத்துத் தோகைதோளேய்
திடுக்கண்பெரி திரவரினென்றது.

(எ - து.) (முலைவிலைகூறியடாங்கி, தலைமகனைநோக்கி நீ வரைவொடுவாராது) இராவரின் தோகை தோளைத்தோய்வதால் கெர்ப்பமுண்டாயின் இடுக்கண் பெரிதாம்; ஆகையால் எம்மாற் றொடுக்கப்பட்டனவாகிய பொருள்களை நீ வரவிட்டுத் தலைமகளை வரைவுடம்படுவாயாகவெனக் கூறியது.

வடுத்தனநீள்வகிர்க்கண்ணிவெண்ணித்திலவாணகைக்குத்
தொடுத்தனநீவிடுத்தெய்தத்துணியென்னைத்தன்றொழும்பிற்
படுத்தநன்னீள்கழலீசர்சிற்றம்பலந்தாம்பணியார்க்
கடுத்தனதாம்வரிற்பொல்லாதிரவினின்னாருளே.

(இ - ள்.) என்னை தன் தொழும்பில் படுத்த நல் நீள் கழல் ஈசர் சிற்றம்பலம் தாம் பணியார்க்கு அடுத்தனதாம்வரின் - என்னைத் தன்னடிமைக்கட் படுவித்த நல்ல நீண்ட கழலையுடைய ஈசரது சிற்றம்பலத்தைத் தாம்பணியாதார்க்குத் தக்கனவாகிய தீதுகள் எனக்கு வரக்கூடுமாயின், — இரவில் நின் ஆரருள் பொல்லாது - இரவின்கணுண்டாகிய நின்னாருள் (எமக்குப்) பொல்லாது, — வடுத்தன நீள் வகிர் கண்ணி வெள் நித்திலம் வாள் நகைக்கு தொடுத்தன நீ விடுத்து எய்த துணி - (அதனன்) மாம்பிஞ்சின் நீண்ட பிளவுபோலுங் கண்ணை யுடையாளது தூய முத்துப்போலும் ஒளியையுடைய முறுவலுக்கு (எமரால்) தொடுக்கப்பட்டனவாகிய பொருள்களை நீ வரவிட்டு வரைந்தெய்தத் துணிவாயாக. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் வரைவுகடாதல்.

நீள்வகிர்க் கண்ணியாகிய வெண்ணித்தில வாணகைக்கென்றுரைப்பினு மமையும். படுத்தன நீள்கழலென்பதூஉம் பாடம். சிற்றம்பலந்தாம் பணியார்க்கடுத்தனதாம் வருகையாவது கெர்ப்பம் வருகை. அடுத்தனதாம் வரினென்பதனக்கெரிற்கு நீவ

கடுத்தனதா முளவாமென்று பொருளுரைப்பாருமுளர். அடுத்தன தான்வரினென்பது பாடமாயின் தாவென்பது அசைநிலை()

வரைபொருட்பிரிவை யுரையெனக்கூறல்.

ஆங்கவள்வயி னீங்கலுற்றவ ன்
இன்னுயிர்த்தோழிக்கு முன்னிமொழிந்த து.

(எ-து.) (மேல்வருமதுகூறி வரைவுடம்படுத்திய) இனியவுயிர்போலும் பாங்கிக்கு அவ்விடத்தினின்றும் தலைமகளது வரைபொருட்குப் பிரிகின்ற தலைமகன் அவளை யான்வருந்துணையும் ஆற்றிக்கொண் டிருவெனக் கூறியது.

குன்றங்கிடையுங்கடந்துமர்கூறுநிதிகொணர்ந்து
மின்றங்கிடைநும்மையும்வந்துமேவுவனம்பலஞ்சேர்
மன்றங்கிடைமருதேகம்பம்வாஞ்சியமன்னபொன்னைச்
சென்றங்கிடைகொண்டுவாடாவகைசெப்புதேமொழியே.

(இ-ள்.) மின் தங்கு இடை - மின்போலும் இடையையுடையாய்!—குன்றம் கிடையும் கடந்து - இனிக்குன்றக்கிடப்புக்களையுடைய சுரத்தையுங் கடந்துபோய்,—உமர் கூறு நிதி கொணர்ந்து - நுமர்சொல்லு நிதியைத் தேடிக்கொணர்ந்து,—நும்மையும் வந்து மேவுவன் - நும்மையும் வந்து மேவுவேன்,—தேமொழியே - தேமொழியினையுடையாய்!— சென்று அம்பலம் சேர் மன் தங்கு இடைமருது ஏகம்பம் வாஞ்சியம் அன்ன பொன்னை - நீ சென்று அம்பலத்தைச் சேர்ந்தமன்னன் தங்கும் இடைமருது ஏகம்பம் வாஞ்சியம் ஆகிய இவற்றை யொக்கும் பொன்னை,—இடைகொண்டு வாடாவகை - இடைகொண்டு வாடாதவண்ணம்,— அங்கு செப்பு - அவ்விடத்துச் (சொல்லவேண்டுவன) சொல்லுவாயாக. எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்; பயன் - வரை பொருட்பிரியுந் தலைமகனாற்றுவித்தல்.

குன்றக்கிடை என்பது - மெலிந்துநின்ற தெனினுமமையும். நும்வயி னென்பதூஉம்பாடம். எண்ணப்பட்டவற்றெடுபடாது அம்பலஞ்சேர் மன்னனெனக் கூறியவதனால், அம்பலமே அவர்க் கிடமாதல் கூறினர். இடைகொண்டென்புழி இடை-காலம். ()

நீயேகூறென்றல்.

காய்கதிர்வேலோய் கனங்குழையவட் கு
நீயேயுரை நின்செலவென்ற து.

(எ-து.) (பிரிவறிவிப்பக்கூறின தலைமகனுக்கு) பிற ரை வருத்தும் ஒளியையுடைய வேலவனாகிய தலை மகனே! கனமாகிய குழையையுடைய தலைமகட்கு நின்போக்கினை நீயே சொல்லென்றது.

கேழேவரையுமில்லோன்புலியூர்ப்பயில்கிள்ளையன்ன
யாழேர்மொழியாளிரவரினும்பகற்சேறியென்று
வாழேனெனவிருக்கும்வரிக்கண்ணியைநீவருடித்
தாழேனெனவிடைக்கட்சொல்லியேகுதனிவள்ளலே.

(இ - ள்.) தனிவள்ளலே - ஒப்பில்லாத வள்ளலே! — கேழ் ஏவரையும் இல்லோன் புலியூர் பயில் கிள்ளையன்ன யாழேர் மொழியாள் - (தனக்கு) உவமையாக யாவரையும் உடையன் அல்லாதவனது புலியூரின்கண் பயிலுங் கிளியையொக்கும் யா ழோசைபோலும் மொழியை யுடையாள், — இர வரினும் பகல் சேறி என்று வாழேனென இருக்கும் வரி கண்ணியை - இரவில் (நீ) வரினும் பகற்பிரிந்து செல்வையென்று (நின் ெனாடு கூடிய வப்பொழுதும் யான்) உயிர்வாழேனென்று நினை த்திருக்கும் வரிக்கண்ணை யுடையாளை, — வருடி தாழே னென இடைக்கண் நீ சொல்லி யேகு - வசமாக்கி (பெற்றதோர் செவ்வியில்) தாழேனென்னும் உரைமுன்னாக (நின்பிரிவை) நீயேசொல்லி யேகுவாயாக. எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - தலைமகளதாற்றுமையை யுணர்த்துதல்.

புலியூர்ப்பயிலு மொழியாளென வியையும். வாழேனென விருக்கு மென்பதனை முற்றுக்கி மொழியாளிவ்வாறு செய்யும் அவ்வரிக்கண்ணியையென ஒருசுட்டு வருவித்துரைப்பினு மமையும். வருடி - வருட்டியென மிக்குநின்றது. வாழேனெனவிருக்கு மென்றதனான் இத்தன்மைத்தாகிய இவளது பிரிவாற்றாமையை மறவாதொழிய வேண்டுமென்றுளாம். இடைக்கிணென்றது இவ்வொழுக்கத்தால் நினக்குவருமேதந் நினைந்து ஆற்றுளாஞ் செவ்விபெற் றென்றவாறு. வடிக்கண்ணியை யென்பதூஉம் பாடம். (உகூகூ)

## சொல்லாதேகல்.

நிரைவளை வாட

வுரையா தகன்றது.

(எ - து.) (நீயே கூறென்றபாங்கிக்குத் தலைமகன் நானெவ்வாறு கூறினும் அவள் பிரிவுடம்படாளாதலின் நீ யாற்றிக்கொண் டிருவென்று) வரிசையாகிய வளையலையணிந்த தலைமகள்வாட அவளுக்குத் தன் போக்கறிவியாமல் சென்றது.

வருட்டிற்றிகைக்கும்வசிக்கிற்றுளங்குமனமகிழ்ந்து
தெருட்டிற்றெளியலள்செப்பும்வகையில்லைசீரருக்கன்
குருட்டிற்புகச்செற்றகோன்புலியூர்குறுகார்மனம்போன்
றிருட்டிற்புரிகுழலாட்கெங்ஙனேசொல்லியேகுவனே.

(இ - ள்.) வருடில் திகைக்கும் - (ஒன்று சொல்லக்குறித்துத் தோள்முதலியவற்றைக் கையால்) தடவின் (இஃதென் கருதிச் செய்கின்றானென்று) மயங்காநிற்கும், — வசிக்கில் துளங்கும் - (இன்சொல்லாயினும்) அழுத்திச் சொல்வேனாயின் (அக்குறிப்பறிந்து) உள் நடுங்காநிற்கும், — தெருட்டில் மனம் மகிழ்ந்து தெளியலள் - (இனி) வெளிப்படப் பிரிவுணர்த்தின் மனமகிழ்ந்ததனைத் தேருள்; — செப்பும் வகை இல்லை - (ஆக

லான்) அறிவிக்கும் வகை வேறில்லை.—சீர் அருக்கன் குருட்டில் புக செற்ற கோன் புலியூர் குறுகார் மனம்போன்று இருட்டில் புரிகுழலாட்கு எங்ஙனம் சொல்லி ஏகுவன் - அதனால் பெருமைபொருந்திய அருக்கன் குருடாகிய இழிபிறப்பில் புகும்வண்ணம் (அவனை) வெகுண்ட தலைவனது புலியூரை யணுகாதார்மனம்போன்று இருட்டுதலையுடைய சுருண்ட குழலையுடையாட்கு (என்பிரிவை) எவ்வண்ணஞ் சொல்லிப்போவேன் (ஒருவாற்றானுமரிது). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைவு மாட்சிமைப் படுத்துதற்குப் பிரிதல். (உஎ0)

பிரிந்தமைகூறல்.

தேங்கமழ் குழலிக்குப்
பாங்கி பகர்ந்தது.

(எ - து.) (தலைமகன் முன்னின்று பிரிவுணர்த்த மாட்டாமையிற் சொல்லாது பிரியாநிற்ப) மணங்கமழ்கின்ற கூந்தலையுடைய தலைமகளுக்கு (வரைவு காரணமாகத் தலைமகன் பிரிந்தமையானது நமக்கின்பமேயெனப்) பாங்கி அவன்பிரிந்தமை கூறியது.

நல்லாய்நமக்குற்றதென்னென்றுரைக்கேனமர்தொடுத்த
வெல்லாநிதியுமுடன்விடுப்பானிமையோரிறைஞ்சு
மல்லார்கழலழல்வண்ணர்வண் டில்லைதொழார்களல்லாற்
செல்லாவழற்கடமின்றுசென்றார்நஞ்சிறந்தவரே.

(இ - ள்.) நம் சிறந்தவர் - நமக்குச்சிறந்த அவர்,—நமர் தொடுத்த எல்லாநிதியும் உடன் விடுப்பான் - நமராற்றொடுக்கப்பட்ட எல்லா நிதியத்தையுமொருங்கே வரவிடுவான்வேண்டி,—இமையோர் இறைஞ்சும் மல் ஆர் கழல் அழல் வண்ணர் வள் தில்லை தொழார்களல்லால் செல்லா அழல் கடம் இன்று சென்றார் - இமையோர் (சென்று) வணங்கும் வளம்பொருந்திய கழலை

யுடைய நீவண்ணாரது வளவியதில்லையைத் தொழாதாரல்லது (நம்போல்வார்) செல்லாத அழலையுடைய சுரத்தை இன்று சென்றார், — நல்லாய் நமக்குற்றது என் என்று உரைக்கேன் - (அதனால்) நல்லாய்! நமக்கு வந்ததனை யாதென்று சொல்லுவேன். எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வரைவுநீட்டியாமை யுணர்த்துதல்.

என்னென்றுரைக்கேன் என்றதனான் தொடுத்தது விடுப்பச் சென்றாராகலின் இன்பமென்பேனோ, அழற்கடஞ் சென்றமை யாற் றுன்ப மென்பேனோவெனப் பொதுப்படக் கூறுவாள் போன்று, வரைவு காரணமாகப் பிரிந்தாராகலின், இது நமக் கின்பமே யென்றாற்றுவித்தாளாம். தொழார்களல்லார் செல்லா வென்று பாடமோதுவாருமுளர். (உஎக)

நெஞ்சொடு கூறல்.

கல்வரைநாடன் சொல்லாதக ல
மின்னொளிமருங்கு றன்னொளிதளர்ந்த து.

(எ-து.) வரைநாடனாகிய தலைமகன் வரைபொருட் குச் சொல்லாமற்போக மின்னொளிக்கு மிடையை யுடைய தலைமகள் அவன் பிரிந்தமை கூறக்கேட்டு வருந்தாநின்றநெஞ்சிற்கு அவன்பிரிந்தமை நாமின் புற்று வாழ்வதற் குபாயமேயெனத் தன்னெஞ்சின் வருத்தந் தீரக்கூறியது.

அருந்தும்விடமணியாமணிகண்டன்மற்றண்டர்க்கெல்லா
மருந்துமமிர்தருமாகுமுன்னோன்றில்லைவாழ்த்தும்வள்ள
திருந்துங்கடனெறிசெல்லுமிவ்வாறுசிதைக்குமென்றால்
வருந்தும்மடநெஞ்சமேயென்னயாமினிவாழ்வகையே.

(இ - ள்.) அருந்தும் விடம் அணியாம் மணிகண்டன் - உண்ணப்பட்ட நஞ்சம் நின்று அலங்காரமாய நீலமணிபோலுங் கண்

டத்தையுடையவன்,—அண்டர்க்கெல்லாம் மருந்தும் அமி முமாகும் முன்னோன் - தேவர்க்கெல்லாம் (உறுதிபயக்கு மருந்தும் (இன் சுவையையுடைய) அமிர்தமும் ஆகாநிற்கு முன்னோன்,—தில்லை வாழ்த்தும் வள்ளல் - அவனது தில்லை வாழ்த்தும் நம்வள்ளல், — திருந்தும் கடன் நெறி செல்லு இ ஆறு சிதைக்கும் என்றால் - குற்றந்தீர்ந்திருக்கும் முறைமை யாகிய இந்நெறியைச் செல்கின்ற இந்த நீதி (நம்மைக்) கெடு குமென்று (நீ) கருதின், — வருந்தும் மட நெஞ்சமே யா இனி வாழ் வகை யென்ன - வருந்துகின்ற அறிவில்லாத நெ சமே யாமின்புற்று வாழுமுபாயம் வேறு யாது. எ-று. மெய் பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

அருந்துமென்பது காலமயக்கம். அருந்துதற்றொழிலின் முடி தன்முன் நஞ்சங்கண்டத்து நிறுத்தப்பட்டணியாயிற்றாகலின் நிகழ்காலத்தாற் கூறப்பட்டதெனினு மமையும். மற்று - அசை திருந்துங் கடனெறியைச் செல்லுமென்றும் களவாகிய இவ்வா ற்றைச் சிதைக்குமென்றும் முற்றாக அறுத்துரைப்பாருமுளர்.(

## நெஞ்சொடு வருந்தல்.

வெற்ப னீங்க ப்
பொற்பு வாடிய து.

(எ-து.) பிரிந்தமை கூறக்கேட்ட தலைமகள் (அன் று என்னைவிட்டு அவனைவிடாது அவரதுதேர்ப்பின் சென்ற நெஞ்சம் இன்றுமவ்வாறு செய்யாமல் என்னை வருத்துகின்றதெனத் தன்னெஞ்சொடு) வருந்தியது.

ஏர்ப்பின்னை தோண்முன் மணந்தவனேத்த வெழிநிகழூரு சீர்ப்பொன்னை வென்ற செறிகழலோன்றில்லைச் சூழ்பொழில் வாய்க், கார்ப்புன்னை பொன்னவிழ் முத்தமணலிற் கலந்தகன்

ளூர், தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ்சென்கொலாமின்று செய்கின்றதே.

(இ - ள்.) ஏர் பின்னை தோள் முன் மணந்தவன் ஏத்த - அழகையுடைய சீதேவியினது தோள்களை முற்காலத்துக் கலந்த மாயோன் (நின்று) துதிக்க, — எழில் திகழும் சீர் பொன்னை வென்ற செறி கழலோன் தில்லை சூழ் பொழில்வாய் - எழில் விளங்குஞ் செம்பொன்னைவென்ற திருவடிகளையுடையவனது தில்லைக்கண் சூழ்ந்த பொழிலிடத்து,— கார் புன்னை பொன் அவிழ் முத்தம் மணலில் கலந்து அகன்றூர் - கரிய புன்னை பொன்போலமலராநின்ற முத்துப் போலு மணலையுடைய தோரிடத்துக் கூடி நீங்கினவராது, — தேர் பின்னை சென்ற என் நெஞ்சு என்கொலாம் இன்று செய்கின்றது - தேர்ப்பின்சென்ற என் நெஞ்சம் இவ்விடத்தின்று செய்கின்ற தென்னோ? (அறிகின்றிலேன்). எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன்-ஆற்றாமை நீங்குதல்.

ஏத்தவெழிறிகழு மெனவியையும். என்னோடு நில்லாது அவர் தேர்ப்பின்போன நெஞ்சம் இன்றென்னை வருத்துகின்ற தென்னென்று நெஞ்சொடு நொந்து கூறினாளாக வுரைப்பினுமமையும். செறிகழலும் முத்தமணலும் அன்மொழித்தொகை. தேய்கின்றதே யென்பது பாடமாயின், அன்றவரைவிடாது சென்றநெஞ்சம் செல்லாது ஈண்டிருக்கு மென்னைப்போல் இன்று தேய்கின்ற தென்னென்று கூறினாள்க வுரைக்க. (உஎ௩)

## வருத்தங்கண் டுரைத்தல்.

அழலுறுகோதையின் விழுமுறுபேதையை
நீங்கலரெனப் பாங்கிபகர்ந்தது.

(எ - து.) தீயிலிட்ட மாலைபோலும் (தன்னெஞ்சொடு) வருந்துகின்ற தலைமகளை (வெற்பர்) விட்டு

நீங்கலராகலின் விளையவளைவொடு வருவனென (அவ
ள் வருத்தர்திரப்) பாங்கி கூறியது.

**கா**னமர் குன்றர்செவியுறவாங்குகணைதுணையா
மானமர்நோக்கியர்நோக்கெனமானற்றொடைமடக்கும்
வானமர்வெற்ப ாவண்டில்லையின்மன்னைவணங்கலர்போற்
றேனமர்சொல் லிசெல்லாசெல்லல்செல்லறிருநுதலே.

(இ-ள்.) தேன் அமர் சொல்லி - தேனைப்பொருந்துஞ் சொ
லையுடையாய்,—கான் அமர் குன்றர் செவி உற வாங்கும் கணை
கானின்கணமருங்குன்றவர் செவியுறும்வண்ணம் வலித்த அ
பை,—துணையாம் மான் அமர் நோக்கியர் நோக்கென - (தா
எய்யக்குறித்தவற்றின் நோக்கும்) தந்துணைவியராகிய மானை
பொருந்திய நோக்கத்தையுடையவரது நோக்கோடொக்குமென
றுகருதி,— மான் நல் தொடை மடக்கும் வான் அமர் வெற்ப
செல்லார் - அம்மானைக்குறித்த நல்ல அம்பைமடக்கும் முகில்
தூங்கும்வெற்பா செல்கின்றாரல்லா,—வள் தில்லையின் மன்னை
வணங்கலாபோல் திருநுதலே செல்லல் செல்லல் - வளவிய
தில்லையின் மன்னனை வணங்காதாரைப்போல திருநுதலாய்
இன்னாமையை யடையா தொழிவாய். எ - று. மெய்ப்பாடு
இளிவரலைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகளை யாற்று
வித்தல்.

துணையாமென்பது "ஏவலிளையர் தாய்" என்பதுபோல மக்க
மாய் நின்றது. மானமர்நோக்கியர் நோக்கு என்பதனை உறழ்
வால் உவமைப்பாற் படுக்க. கொலைத்தொழிலாளரும் தந்துணை
வியரோ டொப்பனவற்றிற்கும் இடர்செய்யாத வெற்பராத
லின், நீ இவ்வாறு வருந்தநீட்டியாரொன்பது கருத்து. (உஎச)

**வழியொழுகி வற்புறுத்தல்.**

சூழிருங் கூந்தலை த்
தோழி தெருட்டிய து.

(எ - து.) (தலைமகளது வருத்தங்கண்ட) பாங்கி (அவளை வழியொழுகி ஆற்றுவிக்கவேண்டு மளவாக லின்) ஆற்றாமைக்குக் காரணமானவற்றைக்கூறித் தானு மவளொடு வருத்தமுற்று அவளையாற்றுவித் தது.

**ம**துமலர்ச்சோலையும்வாய்மையுமன்புமரு விவெங்கான்
**க**துமெனப்போக்குநிதியினருக்குமுன்னிக்கலுழ்ந்தா
**ளெ**துமலர்நோக்கமொர்மூன்றுடையோன்றில்லைநோக்கலர்போ
**லி**துமலர்ப்பாவைக்கென்னோவந்தவாறென்பரேந்திழையே.

(இ - ள்.) மது மலர் சோலையும் - (அவளை முதலிற் கண்ணுற்ற) மதுமலரையுடைய சோலையையும்,—வாய்மையும் - (அவர் நின்னிற் பிரியேன் பிரியினாற்றேனென்று கூறிய சபதத்தினது) மெய்மையையும், — அன்பும் - (வழிமுறை பெருகிய) அன்பையும்,—மருவி கதுமென வெம் கான்போக்கும்-(நம்மோடு) மருவி வைத்து (பின்)கதுமென வெங்கானிற் போகிய போக்கையும்,— நிதியின் அருக்கும் - போய்த்தேடு நிதியி னருமையும்,—உன்னி கலுழ்ந்தால் - (நீ) நினைந்து வருந்தினால்;—ஏந்திழையே - ஏந்திழாய்!,—நோதுமலர் - அயலார்,—மலர் பாவைக்கு - மலர்ப் பாவையன்னாட்கு,—நோக்கம் ஓர் மூன்றுடையோன் தில்லை நோக்கலர்போல் - கண்கள் ஒரு மூன்றுடையவனது தில்லையைக்கருதாதார் போல,—இது வந்தவாறு என்னோ என்பர் - இவ்வேறுபாடு வந்தவாறென்னோவென் றையுறுவர். (அதனால் நீ ஆற்றுவாயாக). எ-று. மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகளை யாற்றுவித்தல்.

அன்பு - வழிமுறையாற் சுருங்காது கடிது சுருங்கிற்றென்னுங் கருத்தாற் கதுமெனப் போக்குமென்றாள். அருக்கு மென்றதனால் நீட்டித்தல் கருதினாளாம். (உஎ௫)

## வன்புறை யெதிரழிந்திரங்கல்.

வன்கறைவேலோன் வரைவுநீ ட
வன்புறையழிந்தவள் மனமழுங்கிய து.

(எ-து.) வன்மையாகிய கறைதங்கிய வேலையுடைய தலைமகனது வரைவு நீடுதலால் (வழியொழுகி வற்புறுத்தின) பாங்கியொடு தலைமகள் வன்புறை யெதிரழிந்து மனம் வருத்தமுற்றது.

வந்தாய்பவரையில்லாமயின்முட்டையிளையமந்தி
பந்தாடிரும்பொழிற்பல்வரைநாடன்பண்போவினிதே [போற்
கொந்தார்நறுங்கொன்றைக்கூத்தன்றென்றில்லைதொழார்குழுப்
சிந்தாகுலமுற்றுப்பற்றின்றிநையுந்திருவினர்க்கே.

(இ - ள்.) கொந்தார் நறு கொன்றை கூத்தன் தென் தில்லை தொழார் குழு போல் - கொத்தார்ந்த நறுங்கொன்றையையணிந்தகூத்தனது தென்தில்லையை வணங்காதாரது திரள்போல்,— சிந்தாகுலம் உற்று பற்று இன்றி நையும் திருவினர்க்கு - மனக்கலக்கத்தையுற்றுத் தமக்கோர்பற்றுக்கோ டின்றிவருந்துந்திருவினையுடையவருக்கு,—வந்து ஆய்பவரை இல்லா மயில் முட்டை இளைய மந்தி பந்தாடும் - சென்று ஆய்வாரையுடைத்தல்லாத மயிலின் முட்டையை இளையமந்தி பந்தாடிவிளையாடும்,—இரு பொழில் பல்வரை நாடன் பண்பு இனிது - பெரிய பொழிலையுடைய மலைநாடுடையவனது இயல்பு இனிது. எ - று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகளையாற்றுவித்தல்.

நையுந்திருவினர்க்கென்றது - நையுந் துணையா யிறந்துபடாதிருந்து அவனளிபெற்ற ஞான்று இன்புறவெய்தும் நல்வினையாட்டியர்க் கென்றவாறு. எனவே, யானது பெறுமாறில்லையென்றுளாம். உற்றதாராய்ந் தோம்புவாரில்லாத மயிலினது

முட்டையால், ஈன்ற வருத்தமறியாத விளமந்தி மயிலின் வருத்தமும் முட்டையின் மென்மையும் பாராது பந்தாடுகின்றாற்போல, காதலரான் வினவப்படாத என்காமத்தை நீ இஃதுற்றறியாமையான் எனது வருத்தமும் காமத்தினது மென்மையும் பாராது இவ்வா றுரைக்கின்றாயென உள்ளுறைவகைய
ங்கியை நெருங்கி வன்புறை யெதிரழிந்தவா
அல்லதூஉம் வந்தாய்பவர் பாங்கியாகவும், இ
வும், பந்தாடுதல் தலைமகளது வருத்தம் ட
டியவாறொழுகுமவனது ஒழுக்கமாகவும், உ
திருவினெற்கே யென்பது பாடமாயின் இவ்வாறு வனகணமை யேனுய் வாழுந் திருவையுடையேற்கென வுரைக்க. இதற்குத் திரு - ஆகுபெயர். (௨௭௬)

## வாய்மைகூறி வருத்தந்தணித்தல்.

வேற்றடங் கண்ணி மை
யாற்று வித்த து.

(எ - து.) (வரைவுநீடுதலால் வன்புறை யெதிரழிந்தவருந்துகின்ற) வேல்போன்ற விசாலமாகிய கண்களையுடைய தலைமகளுக்குப் பாங்கி அவனது வாய்மைகூறி வருத்தந் தணிவித்தது.

மொய்யென்ப தேயிழை கொண்டவனென்னைத் தன்மொய்கழற்காட், செய்யென்பதேசெய்த வன்றில்லைச்சூழ்கடற் சேர்ப்பர்சொல்லும், பொய்யென்பதேகருத் தாயிற்புரிகுழற் பொற்றொடியாய், மெய்யென்பதேது மற்றில்லைகொலா மிவ்வியவிடத்தே.

(இ-ள்.) மொய் என்பு அஃதே இழை கொண்டவன் - வலிமையையுடைய எலும்பதனையே தனக்கணியாகக்கொண்டவன்,— என்னை தன் மொய் கழற்கு ஆள் செய்யென்பதே செய்தவன்-

என்னைத்தன்னுடைய வலிய திருவடிகளுக் காட்செய்யென்று (வெளிப்பட்டுநின்று) சொல்லுதலையே செய்தவன், — தில்லை சூழ்கடல் சேர்ப்பர் சொல்லும் பொய் என்பதே கருத்தாயின் அவனது தில்லைவரைப்பினுண்டாகிய சூழ்ந்தகடலையுடைத்தாகி சேர்ப்பையுடையவரது சொல்லும் பொய்யென்பதே (நினக்குக் கருத்தாயின், — புரிகுழல் பொன் தொடியாய் இவ்வியலிடத்து மெய் என்பது ஏதும் இல்லை கொல் - சுருண்டகுழலையுடைய பொற்றொடியாய்! இவ்வுலகத்துமெய்யென்பதுசிறிது மில்லை போலும். எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்தபெருமிதம் பயன் - தலைமகளையாற்றுவித்தல்.

அரிமுதலாயினு ரொன்பாகலின், மொய்யென் பெனுற்ர். இழி தன கைக்கொள்வானுகலின், என்னை யணியாகவும் என்னை யடிமையாகவும் கொண்டானென்பது கருத்து. (உஎஎ

தேறாது புலம்பல்.

தீதறுகண்ணி தேற்றத்தேறு து
போதுறுகுழலி புலம்பிய து

(எ-து.) (தலைமகனது வாய்மைகூறிக்) குற்றமற்ற கண்ணியுடைய பாங்கி தேற்றப் பூவைமுடித்தகுழலையுடைய தலைமகள் தேறாது புலம்பியது.

மன்செய்தமுன்னாண்மொழிவழியேயன்னவாய்மைகண்டு
மென்செய்தநெஞ்சுக்கிறையுநில்லார்வெனதின்னுயிரும்
பொன்செய்தமேனியன்றில்லையுறாிற்பொறையரிதா
முன்செய்ததீங்குகொல்காலத்துநீர்மைகொன்மொய்குழலே.

(இ - ள்.) மொய் குழலே - மொய்த்தகுழலை யுடையாய்! — முன் நாள் மன் செய்த மொழிவழியே அன்ன வாய்மை கண்டும் - முற்காலத்து மன்னன் நமக்குதவிய மொழியின்படியே அத்தன்மைத்தாகிய மெய்மையைக்கண்டுவைத்தும், — நெஞ்

சும் நிறையும் நில்லா என் செய்த - என் நெஞ்சமும் நிறையும் என்வயமாய் நிற்கின்றில, இவை என் செய்தன,—எனது இன் உயிரும் பொன் செய்த மேனியன் தில்லை உறாரின் பொறை அரி தாம் - எனதினியவுயிரும், பொன்னையொத்த மேனியையுடைய வனது தில்லையைப் பொருந்தாதாரைப் போல, வருத்தம் பொறுத்த லரிதாகாநின்றது, — முன் செய்த தீங்குகொல் - (இதற்குக்காரணம்) யான்முன்செய்த தீவினையோ?—காலத்து நீர்மை கொல் - (அல்லது) பிரியுங்காலமல்லாத இக்காலத்தினியல்போ (அறிகின்றிலன்). எ - று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - ஆற்றுதல்.

மொழிவழியேகண்டு மெனவியையும். நெஞ்சநில்லாமையாவது - நம்மாட்டு அவரதன்பு எத்தன்மைத்தோ வென்றையப்படுதல். நிறைநில்லாமையாவது - பொறுத்தலருமையான் அந்நோய் புறத்தார்க்குப் புலனாதல். நில்லாதென்பது பாடமாயின் தனித்தனிக் கூட்டுக. பொன்செய்தவென்புழிச் செய்தவென்பது உவமச்சொல். உயிர் துன்பமுழத்தற்குக் காரணமாதலின், அதனையுந் துன்பமாகநினைந்து இன்னுயிரும் பொறையரிதாமென்றாள். (உஎஅ)

## காலமறைத் துரைத்தல்.

காந்தள் கருவுறக் கடவுண்மழைக்கெ ன்
றேந்திழைப்பாங்கி யினிதியம்பிய து.

(எ - து.) (தேறாமைகூறிப்புலம்பாநின்ற தலைமகள்) காந்தள் மலரக்கண்டு (இஃதவர்வரவுகுறித்த காலமென்று கலங்காநிற்ப), காலமன்றியுங் கடவுளான் மழைதரப்பட்டது ஆகலான் கலங்க வேண்டாமென்று பாங்கி, காலமறைத்துக் கூறியது.

கருந்தினையோம்பக்கடவுட்பராவிநமர்கலிப்பச்
சொரிந்தனகொண்மூச்சுரந்ததன்பேரருளாற்றெழும்பிற்

பரிந்தெனையாண்டசிற்றம்பலத்தான்பரங்குன்றிற்றுன்றி
விரிந்தனகாந்தள்வெருவரல்காரெனவெள்வளையே.

(இ - ள்.) வெள் வளையே - வெண்மையாகிய வளையையுடை யாய்!,—நமர் கரு தினை ஓம்ப கடவுள் பராவி கலிப்ப - நம் ஐயன்மார் கரியதினையைப்பாதுகாக்கவேண்டிக் கடவுளை வணங்கி யாரவாரிப்ப,—கொண்மூ சொரிந்தன - (அக்கடவுளாணையால் மேகங்கள் (காலமன்றியும்) நீரைச்சொரிந்தன,—சுரந்த தன் பேரருளால் என்னை தொழும்பில் பரிந்து ஆண்ட சிற்றம்பலத் தான் பரங்குன்றில் காந்தள் துன்றி விரிந்தன - (அதனைக்காலென்று கருதி) தானே சுரந்த தனது பெரிய அருளாலென்னைத் தன் அடிமைக்கண்ணே கூட்டிப் பரிந்தாண்ட சிற்றம்பலத்தனது பரங்குன்றின்கண் காந்தள் நெருங்கியலர்ந்தன,—காரென வெருவரல் - (அதனால்) நீ காரென அஞ்சவேண்டா. எ-று மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் ஆற்றுவித்தல். (உஎசு

தூதுவரவுரைத்தல்.

ஆங்கொரு தூதுவரப்
பாங்கிகண் டுரைத்தது.

(எ - து.) (காலமறைத்த) பாங்கி, ஏதிலார் தூது வரக்கண்டு இஃதின்னார் தூதென்று தெரியாதெனத் தலைமகள் மனமகிழ வுரைத்தது

வென்றவர்முப்புரஞ்சிற்றம்பலத்துணின்றும்வெள்ளிக்
குன்றவர்குன்றுவருடரக்கூடினர்நம்மகன்று
சென்றவர்தூதுகொல்லோவிருந்தேமையுஞ்செல்லல்செப்பா
நின்றவர்தூதுகொல்லோவந்துதோன்றுநிரைவளையே.

(இ - ள்.) நிரை வளையே - நிரைவளையையுடையாய்!—வந்து தோன்றும் - (ஒருதூது) வந்துதோன்றுகின்றது.—முப்புரம் வென்றவர் சிற்றம்பலத்துள் நின்றும் வெள்ளி குன்றவர் -

(இத்தூது) முப்புரத்தைவென்றவர், சிற்றம் பலத்தின்கண் ணின்றும் வெள்ளிமலையையுடையவர்,—குன்று அருள்தர கூடி னர் நம் நீங்கன்றி சென்றவர் தூதுகொல் - அவரது குறையாத வருள் கொணர்ந்துதர வந்து கூடிப் பின் நம்மைப் பிரிந்து செ ன்றவரது தூதோ?—இருந்தேமையும் செல்லல் செப்பா நின்ற வர் தூது கொல் - (அல்லது) அவர் பிரிய விருந்த நம்மிடத்தும் இன்னுமையைச் சொல்லாநின்ற அயலாருடைய தூதோ? (அறி யேன்). எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த மருட்கை; பயன் - ஐயந்தீர்தல்.

இருந்தேமையென்னு மிரண்டாவது ஏழாவதன் பொருட்கண் வந்தது. இரண்டாவதாயே நின்று இன்னுமையைச் சொல் லாநின்றவ ரென்னுந் தொழிற்பெயரோடு முடிந்ததென்பாரு முளர். (உ௮௦)

தூதுகண் டழுங்கல்.

அயலுற்ற தூதுவரக்
கயலுற்றகண்ணி மயலுற்றது.

(எ-து.) (தூதுவரக்கேட்ட) கயல்போலுங் கண்ணை யுடைய தலைமகள் (தம்காதலர்தூதன்றி) அயலார் தூதுவரக்கண்டு வருந்தியது.

வருவனசெல்வனதூதுகளேதிலவான்புலியூ
ரொருவனதன்பரினின்பக்கலவிகளுள்ளுருகத்
தருவனசெய்தெனதாவிகொண்டேகியென்னெஞ்சிற்றம்மை
யிருவினகாதலரோதுசெய்வானின்றிருக்கின்றதே.

(இ - ள்.) ஏதில தூதுகள் வருவன செல்வன - அயலாரு டைய தூதுகள் வருவன போவனவா யிருக்கின்றன,—வான் புலியூர் ஒருவனது அன்பரின் - பெருமைபொருந்திய புலியூர்க் கணுளனாகிய ஒப்பிலாதவனது அன்பர்களைப்போல,— உள்

ளுருக தருவன இன்பம் கலவிகள் செய்து - (யான்) இன்புறவுள்ளுருகும்வண்ணந் தரப்படுவனவாகிய இன்பக்கலவிகளை (முன்) செய்து,—எனது ஆவி கொண்டேகி - (பின்) என்னுயிரைக் கொண்டுபோய்,—என் நெஞ்சில் தம்மை இருவின காதலர் - என் நெஞ்சத்தின்கண் தம்மை யிருத்தின காதலர்,—இன்று இருக்கின்றது ஏது செய்வான் - இன்று வாளாவிருக்கின்றது ஏது செய்யக்கருதி? எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த மருட்கை; பயன் - ஐயந்தீர்தல்.

ஒருவனதன்பு - ஒருவன்கணன்பு. உள்ளுருகத் தருவன வென்பதற்கு உள்ளுருகும்வண்ணஞ் சிலவற்றைத் தருவனவாகிய கலவி யென்றுரைப்பினு மமையும். தன் மெய்யன்பர்போல யானு மின்புற வுள்ளுருகுங்கலவிகளை முன்செய்து பின்னெனதாவிபோயினாற் போலத் தாம் பிரிந்துபோய் ஒருஞான்றுங் கட்புலனாகாது யானினைந்து வருந்தச்செய்த காதலர் இன்று ஏது செய்ய விருக்கின்றாரென வேறு மொரு பொருள் தோன்றியவாறு கண்டுகொள்க. (உஅக)

## மெலிவுகண்டு செவிலிகூறல்.

வண்டமர்புரிகுழ லொண்டொடிமெலிய
வாடாநின்ற கோடாய்கூறியது.

(எ - து.) வண்டுகளமருங் குழலையும் ஒள்ளிய தொடியையு முடைய தலைமகள் (ஏதிலார் தூதுகண்டு) மனமெலிய, அதனைக்கண்டு வாடிய செவிலி கூறியது.

வேயினமென்றோண்மெலிந்தொளிவாடிவிழிபிறிதாய்ப்
பாயினமேகலைபண்டையளல்லள்பவளச்செவ்வி
யாயினவீசனமரர்க்கமரன்சிற்றம்பலத்தான்
சேயினதாட்சியிற்பட்டனளாமித்திருந்திழையே.

(இ-ள்.) வேய் இன மெல் தோள் மெலிந்து ஒளிவாடி விழி பிறிதாய் பாயின மேகலை பண்டையள் அல்லள் - வேய்க்கினமாகிய மெல்லியதோள் மெலிந்து, ஒளிமழுங்கி, விழி தன்னியல் பிழந்து வேறாய், பரந்தமேகலையையுடையாள் பழயதன்மையளல்லளாயினள்,—இத்திருந்திழை - (அதனால்) அழகிய ஆபரணத்தையுடைய இவள்,—பவளம் செவ்வியாயின ஈசன் அமரர்க்கு அமரன் சிற்றம்பலத்தான் - பவளம் போன்ற அழகிய திருமேனியையுடைய ஈசன், தேவர்களுக்குத்தேவன், சிற்றம்பலத்தின் கணுள்ளான்,— சேயினது ஆட்சியில் பட்டனளாம் - (அவனது) சேயினது ஆட்சியாகிய இடத்துப் பட்டாள் போலும். எ - று. மெய்ப்பாடு மருட்கை; பயன் - தலைமகட்குற்றதுணர்த்தல்.

செவ்வி - கருகுதலும் வெளுக்குதலு மில்லாதநிறம். ஆட்சி - அவனதாணையான் மக்களுக்கணையலாகாதவிடம். (உஅஉ)

## கட்டுவைப்பித்தல்.

மால்கொண்ட கட்டிக்
கால் கொண்டது.

(எ - து.) (மெலிவுகண்டசெவிலி) தலைமகள்கொண்ட நோயைத் தெரியவறிந்து சொல்லுமெனக் கட்டுவித்திக்குறைத்துக் கட்டு வைப்பியா நின்றது.

சுணங்குற்றகொங்கைகள்சூதுற்றிலசொற்றெளிவுற்றில
குணங்குற்றங்கொள்ளும்பருவமுறாள்குறுகாவசுரர்
நிணங்குற்றவேற்சிவன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போ
லணங்குற்றநோயறிவுற்றுரையாடுமினன்னையரே.

(இ - ள்.) சுணங்கு உற்ற கொங்கைகள் சூது உற்றில - சுணங்கைப் பொருந்திய கொங்கைகள் சூதின்தன்மையை யுற்றனவில்லை,—சொல் தெளிவு உற்றில - குதலைச் சொற்கள் தெளிவு

பெறவில்லை,—குணம் குற்றம் கொள்ளும் பருவம் உறாள் - நன்மை தீமையறியும் பெதும்பைப்பருவத்தையடையவில்லை; இவளிளமை யிவ்வாறு யிருந்தது.—குறுகா அசுரர் நிணம் குற்ற வேல் சிவன் சிற்றம்பலம் நெஞ்சு உறாதவர்போல் - சென்றடையாத வசுரருடைய நிணத்தைக்குற்ற சூல வேலையுடைய சிவனது சிற்றம்பலத்தை நெஞ்சில் நினையாதாரைப்போல,—அன்னையரே - அன்னைமீர்!—அணங்கு உற்ற நோய் அறிவுற்று உரையாடுமின்-(இப்போது) இவ்வணங்குற்ற நோயைத் தெளியவறிந்து சொல்லுவீராக. எ - று. மெய்ப்பாடு-மருட்கை; பயன் - தலைமகட் குற்றதுணர்த்தல். இளமை கூறிய வதனாற் பிறிதொன்று சிந்திக்கப்பட்டா ளென்பது கூறினாளாம். (உ௮௩)

கலக்கமுற்று நிற்றல்.

தெய்வத்திற் றெரியுமெ ன
எவ்வத்தின் மெலிவுற்ற து.

(எ - து.) (செவிலிகட்டுவைப்பியாநிற்ப) கட்டுக்குரிய தெய்வத்தினால் யாவுந்தெரியுமென்று பாங்கி, கலக்கமுற்று வருந்தியது.

மாட்டியன்றேயெம்வயிற்பெருநாணினிமாக்குடிமா
சூட்டியன்றேநிற்பதோடியவாறிவளுள்ளமெல்லாங்
காட்டியன்றேநின்றதில்லைத்தொல்லோனைக்கல்லாதவர்போல்
வாட்டியன்றோர்குழலார்மொழியாதனவாய்திறந்தே.

(இ - ள்.) இவள் உள்ளம் ஓடியவாறு எல்லாம் காட்டி - இவள் மனஞ்சென்றவாறு முழுதையும் புலப்படுத்தி,— அன்று நின்ற தில்லைத்தொல்லோனை கல்லாதவர்போல் வாட்டி - அன்றுதொட்டுநின்ற .தில்லைக்கணுளனாகிய பழையோனைக் குருமுகத்தா லறியாதவரைப்போல வருந்த (நம்மை) வாட்டி,—ஏர் குழலார் அன்று மொழியாதன வாய்திறந்து-(அலர்தூற்றி) அவ்வழகிய குழலையுடைய அயலவர் அன்று மொழியத்தகாத பழி

ச்சொற்களையும் வெளிப்படச்சொல்லி, — எம் வயின் பெரு நாண்மாட்டி யன்றே - (இப்பொழுது) எம்மிடத்துண்டாகிய பெரிய நாணினை மாள்வித்தல்லவே,— மா குடி மாசு ஊட்டி யன்றே - (எம்) பெருங்குடியைக் குற்றப்படுத்தியல்லவே,— நிற்பது - (இக்கட்டுவித்தி) நிற்பது, — இனி - இனி (யென் செய்தும்). எ - று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் அறத் தொடுநிற்றற் கொருப்படுத்தல்.

மூள்வித்தற்கண் மூட்டியென நின்றவாறுபோல மாள்வித் தற்கண் மாட்டியென நின்றது. தள்ளியென்னும் பொருள்பட நின்ற தென்பாருமுளர். நிற்பதென்றதனை முன்னையதோடுங் கூட்டுக. இவளென்றது கட்டுவித்தியை யென்று, இவணிற்ப தெனக்கூட்டித் தலைமகள் கூற்றாக வுரைப்பினு மமையும். தில் லைக்கணின்றநாள் இந்நாளென் றுணரலாகாமையின் அன்றே நின்ற வென்றார். (உ௮௪)

## கட்டுவித்திகூறல்.

கட்டு வித் தி
விட் டுரைத்த து.

(எ-து.) (பாங்கி கலக்கமுற்றுநிற்ப, இருவரையும் நன்மையாகக் கூட்டுவித்த தெய்வம் முருகனங்கு காட்ட், இவளுக்கு முருகணங்கொழிய் வேறொன் றுமில்லையெனக்) கட்டுவித்தி நெற்குறி காட்டிக் கூறியது.

குயிலிதன்றேயென்னலாஞ்சொல்லிகூறன்சிற்றம்பலத்தா
ணியலிதன்றேயென்னலாகாவிறைவிறற்சேய்கடவு
மயிலிதன்றேகொடிவாரணங்காண்கவன்சூர்தடிந்த
வயிலிதன்றேயிதன்றேநெல்லிற்றோன்றுமவன்வடிவே.

(இ - ள்.) இது குயில் அன்று என்னலாம் சொல்லி கூறன் இது குயிலோசையா மென்று சொல்லலாகுஞ் சொல்லையுடைய

வளது கூற்றையுடையான்,— சிற்றம் பலத்தான் - சிற்றம் பலத்தின்க ணுள்ளான்,— இயல் இது அன்று என்னலாகா இறை- அவனது தன்மை இதுவாமென்று கூற முடியாத இறைவன்,— விறல் சேய் கடவும் மயில் இது அன்றே - அவனது வெற்றியையுடைய குமரன் ஊரும் மயிலிதுவல்லவே,— கொடி வாரணம் காண்க - அவன் கொடிக் கணுளதாகிய கோழியையும் எல்லீரும் காண்மின், — வல் சூர் தடிந்த அயில் இதன்றே - அது வேயு மன்றி வலிய சூரனைப் பிளந்தவேல் இதுவல்லவே, (இவையெல்லாஞ் சொல்லுகின்றதென்),— நெல்லில் தோன்றும் அவன் வடிவு - (இப்பரப்பிய) நெல்லின்கண் வந்துதோன்றுகின்றது அவனதுருவமாம்,— இதன்று - இதுவல்லவே காண்மின் எ-று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன் - தன்கரும முற்றுதல்.

முருகனெனவே, முருகணங்கினுளென்று கூறினளாம். கட்வித்தியை வினவ அவளறியாதாள் போல இக்கருமமுடித்தற் பொருட்டு இவ்வகை சொன்னாள். வரைபொருட்குத் தலைமகன் போக அவன்வரவு நீட்டித்தலான், இவளதாற்றாமையா னுண்டாகிய நோயை முருகனால் வந்ததெனக் கூறலாமோ, இஃதங்ஙனமாயின் குறியென்பதனைத்தும் பொய்யேயா மென்னும் வினவுக்கு விடை, குறியும் பொய்யல்ல இவளும் பொய்சொன்னாளல்லள், அஃதெங்ஙன மெனின், குறிபார்க்கச் சென்றிருக்கும் பொழுதே தெய்வமுன்னிலையாகக் கொண்டிருத்தலான் அத்தெய்வத்தின் வெளிப்பாட்டானே தலைமகனுடன் புணர்ச்சியுண்மையை யறிந்தாள். இவளிங்ஙனமறிந்தா ளென்பதனை நாமறிந்தவாறு யாதினுலெனின், இக்களவொழுக்கந் தெய்வமிடை நிற்பப் பான்மை வழியோடு நடக்குமொழுக்க மாதலானும் சிற்றம்பலத்தானியல்பு தெரிந்திராதேயென் றிவள் சொல்லுதலானும், அறிந்தாம். இப்படிவரு மொழுக்கம் அகத்தமிழொழுக்க மென்பதனை முதுபெண்டருமறிந்து போதுகை யானும், இவளுரைக்கின்றுழி முதுபெண்டரை முகநோக்கியே சிற்றம்பலத்தானியல்

பு தெரியாதென வுரைத்தாள், அவரும் அக்கருத்தேபற்றியு மதனையுணர்ந்தார், இக்கருத்தினுலு நாமறியப்பட்டது. இனி அயலாரையுஞ் சுற்றத்தாரையும் நீக்கவேண்டு மாகையாலும் இக்களவொழுக்க முடியுமிடத்து வேலனைக் கூவுகையும், வெறித்தொழில்கொள்கையும், அவ்வெறித்தொழிலை அறத்தொடுநின்று விலக்குகையும், அகத்தமிழிலக்கண மாகையின் முருகணங்கென்றே கூறப்பட்டது.

குறிக்கிலக்கணம்-நெல் மூன்றும் இரண்டும் ஒன்றும் படுகை. அஃதாவது அடியுங்கொடியு முவகையும். ஏனவே அடி - மயில், கொடி - கோழி, உவகை - வேல், ஆகலான் முருகணங்கனவே கூறப்பட்டதென வறிக. (உஅரு)

வேலனை யழைத்தல்.

வெறியாடிய வேலனைக்கூஉ ய்
நெறியார்குழலி தாயர்நின்ற து.

(எ - து.) (கட்டுவித்தி முருகணங்கென்று கூறக்கேட்ட) நெறியார்ந்த கூந்தலையுடைய தலைமகளது தாயர் வெறியாட்டாளனாகிய வேலனை யழைத்தது.

வேலன்புகுந்துவெறியாடுகவெண்மறியறுக்க
காலன்புகுந்தவியக்கழல்வைத்தெழிற்றில்லைநின்ற
மேலன்புகுந்தென்கணின்றனிருந்தவெண்காடனைய
பாலன்புகுந்திப்பரிசினிற்பித்தபண்பினுக்கே.

(இ - ள்.) புகுந்த காலன் வீய கழல்வைத்து - (மார்க்கண்டேயரைப் பற்றப்) புகுந்த யமன்வலிகெட வொரு காலைவைத்து,— எழில் தில்லை நின்ற மேலன் - அழகிய தில்லைக்கண் நின்ற எல்லாப் பொருட்கு மேலாயுள்ளவன்,— புகுந்து என்கண் நின்றான் - புகுந்து (அணியனாய்) என்னிடத்து நின்றவன்,— இருந்த வெண்காடு அனைய பாலன் - (அவன்) இருந்

தவெண்காட்டை யொக்கும் இப்பிள்ளை,—புகுந்து இ பரிசினின் நிற்பித்த பண்பினுக்கு - இக்குடியிற் பிறந்து (வெறியாடு வித்தலாகிய) இம்முறைமைக்கண் நிற்பித்தபண்பாலல்,— வேலன் புகுந்து வெறியாடுக - வேலன் ஈண்டுப்புகுந்து வெறியாடுவானாக,— வெள் மறி அறுக்க - பலியாக வெள்ளிய மறியையும் அறுப்போமாக. எ-று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - தலைமகளது வேறுபாடு நீக்குதல்.

பாலன் பால் மயக்கம். வெறியாடுதலே யன்றி இதுவுந்தகா தென்னுங் கருத்தால் மறியறுக்க வெனப்பிரித்துக் கூறினாம். கழல்வைத் தென்றான் - எளிதாகச் செய்தலான். (உ௮௬)

இன்னலெய்தல்.

ஆடியவெறியிற் கூடுவதறியா து
நன்னறுங்கோதை யின்னலெய்திய து.

(எ - து.) (வெறியாடுதற்குத் தாயர் வேலனை யழைப்பக்கேட்ட) நன்மையாகிய நறியமாலையை யுடைய தலைமகள் ஆடிய வெறியாட்டத்திற் கூடுவதறியாமல் துயரடைந்தது.

அயர்ந்தும்வெறிமறியாவிசெகுத்தும்விளர்ப்பயலார்
பெயர்ந்துமொழியாவிடிலென்னைபேசுவபேர்ந்திருவ
ருயர்ந்தும்பணிந்துமுணரானதம்பலமுன்னலரிற்
றுயர்ந்தும்பிறிதின்றொழியினென்னாந்துறைவனுக்கே.

(இ-ள்.) வெறி அயர்ந்தும்-வெறியை விரும்பியாடியும்;—மறி ஆவிசெகுத்தும்-மறியினதுஆவியைக்கெடுத்தும்,—பெயர்த்தும் ஒழியாவிடில் - பின்னும் (நிறவேறுபாடு) ஒழியாதாயின்,— அயலார் பேசுவ என்னை-அயலார் கூறுவன என்னாகும்,—பிறிதின் விளர்ப்பு ஒழியின்-(வெறியாட்டாகிய) பிறிதினால் இவ்விளர்ப் பொழியு மாயின்,—இருவர் பேர்ந்து உயர்ந்தும் பணிந்தும் உண

ரானது அம்பலம் உன்னலரின் - (யான்தலைவன் யான் தலைவன் என்று தம்முள் மாறுபட்ட) பிரமனும் திருமாலும் தம் நிலையினின்றும் பெயர்ந்து (தழற்பிழம்பாகிய தன்வடிவையறியலுற்று) ஆகாயத்தின் மேற்சென்றுயர்ந்தும், நிலத்தின் கீழ் புக்குத் தாழ்ந்தும், அறியப்படாதவனது அம்பலத்தை நினையாதவரைப்போல,—துயர்ந்தும் துறைவனுக்கு என்னுதும் - துயர முற்றும் அத்துறைவனுக்கு நாம் என்னுதும்; (இருவாற்றானும் உயிர்வாழ்தலரிது). எ-று. மெய்ப்பாடு-அச்சத்தைச்சார்ந்த மருட்கை; பயன் - தலைமகள் தன்னெஞ்சொடு சொல்லியாற்றுதல்.

பிறிதுமொழியினென்பது பாடமாயின் வெறியினாற் றணியாதாதலின் இந்நோய் பிறிதென்று பிறர் மொழியினென்றுரைக்க. (உ௮எ)

## வெறிவிலக்குவிக்கநினைதல்.

அயறருவெறியின் மயறருமென
விலக்கலுற்ற குலக்கொடிநினைந்தது.

(எ-து.) அயல்வழியினால் நமக்கு வருத்தமுண்டாமெனப் (பாங்கியைக்கொண்டு) வெறியாட்டைவிலக்கத் தலைமகள் நினைந்தது.

சென்றார்திருத்தியசெல்லனின்றார்கள்சிதைப்பவொன்றா
னன்றாவழங்கிதன்றேயிறைதில்லைதொழாரினைந்து
மொன்றுமிவட்குமொழிதல்கில்லேன்மொழியாதும்ய்யேன்
குன்றார்துறைவர்க்குறுவேனுரைப்பணிக்கூர்மறையே.

(இ - ள்.) இறை தில்லை தொழாரின் னைந்தும் - இறைவனது தில்லையைத் தொழாதாரைப்போல வருந்தியும், — ஒன்றும் இவட்கு மொழிதல்கில்லேன் - (நாணினால்) என்னேடொன்றுபிருக்கும் (என்தோழியாகிய) இவட்குச் சொல்லமாட்டுகி

லேன், — மொழியாதும் உய்யேன் - சொல்லா திருப்பினும் (வேறோராற்றால்) உயிர் வாழேன்,—குன்று ஆர் துறைவர்க்கு உறுவேன் இ கூர் மறை உரைப்பன் - (ஆயினும் இனி) மண ற்குன்றுக ளார்ந்த துறையை யுடையார்க்குச் சிறந்த யான் இம் மிக்கமறையை (இவளுக்குச்) சொல்லுவேன், — சென் ருர் திருத்திய செல்லல் நின்றார்கள் சிதைப்பரென்றால் - (புண ர்ந்து) போயினர் மிகவு முண்டாக்கிய (இந்) நோயை (இங்கு) நின்றவர்கள் தீர்ப்பராயின்,—நன்று அழகிது - (இது) பெரிது மழகிது. எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த நகை; பயன் - வெறிவிலக்குதற் கொருப்படுதல்.

நன்றுவழகி தன்றே யென்பது குறிப்புநிலை. குன்றார் துறை வர்க்குறுவேனென்றவதனால், நான்ன துறந்தும் மறையுரைத்தற் குக்காரணங் கூறினளாம். இந்நோயை யேதிலார் சிதைப்பவி டேன், மறையுரைத்தாயினும் வெறிவிலக்குவே னென்னுங் கருத் தால் நன்றுவழகிதன்றே யென்றாள். (உ௮௮)

### அறத்தொடுநிற்றலை யுரைத்தல்.

வெறித்தலைவெரீஇ வெருவருதோழி க்
கறத்தொடுநின்ற வாயிழையுரைத்த து.

(எ - து.) (வெறிவிலக்குவிக்கநினைந்த) அறத்தொ டுநின்ற ஆய்ந்த அணியையுடைய தலைமகள் வெறி யாட்டுக்கு வெருவநின்ற பாங்கிக்குக் கூறியது.

யாயுநல்தறுகவயலவரோசுகலூர்நகுக
நீயுமுனிகநிகழ்ந்ததுகூறுவலென்னுடைய
வாயுமனமும்பிரியாவிறைதில்லைவாழ்த்துநர்போற்
றூயனினக்குக்கடுஞ்சூடருவன்சுடர்க்குழையே.

(இ - ள்.) சுடர் குழையே - ஒளிபொருந்திய குழையையு டையாய்! — என்னுடைய வாயும் மனமும் பிரியா இறை

தில்லை வாழ்த்துநாபோல் தூயன் - எனது வாயையும் மனதையும் பிரியாத இறைவனது தில்லையை வாழ்த்துவாரைப் போலத் தூயேன், — நினக்கு கடு சூள் தருவன் - (நீ தேறுயாயின்) நினக்குக்கடிய ஆணையிடுவேன், — அயலவர் ஏசுக - அயலாரேசுக,—ஊர் நகுக --ஊரார நகுவதாக,—யாயும் செறுக - அன்னையும் கோபிப்பாளாக, — நீயும் முனிக - நீயும் வெறுப்பாயாக, — நிகழ்ந்தது கூறுவல் - நிகழ்ந்ததனைச் சொல்லுவேன் (கேட்பாயாக). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன்- அறத்தொடு நிற்றல்.

தூயேனென்றது - நீங்குகரந்தவுள்ளத் தேனல்லே னென்றவாறு. தூயனெனக்கென்பது பாடமாயின், எனக்கியான்றூயே னென்றுரைக்க. (உ௮௬)

## அறத்தோடுநிற்றல்.

செய்தவெறியி னெய்துவதறியா து
நிறத்தொடித்தோழிக் கறத்தொடுநின்ற து.

(எ - து.) செய்தவெறியாட்டிறு லெய்துவதை யறியாமல் நிறமமைந்த தொடியையுடைய பாங்கிக்குத் தலைமகள், (முன் தலைமகன் தனக்குச்செய்த அருட்செய்கையை வெளியிட்டுரைத்து) அறத்தொடுநின்றது.

வண்டலுற்றேமெங்கண்வந்தொருதோன்றல்வரிவளையீ
ருண்டலுற்றேமென்றுநின்றதொர்போழ்துடையான்புலியூர்க்
கொண்டலுற்றேறுங்கடல்வரவெம்முயிர்கொண்டுதந்து
கண்டலுற்றேர்நின்றசேரிச்சென்முனெர்கழலவனே.

(இ - ள்.) வண்டல் உற்றேம் எங்கண் - விளையாட்டைப் பொருந்தினேமாகிய நம்மிடத்து,—ஒரு தோன்றல் வரி வளையீர் உண்டல் உற்றேம் என்று வந்து நின்றதோர் போழ்து - ஒருதோன்றல் வரிவளையுடையீர்! நும் வண்டல்மனைக்கு (விரு

ந்துண்ணக் கருதினேமென்று சொல்லி வந்துநின்ற அக்கால
து,—உடையான் புலியூர் கொண்டல் உற்று ஏறும் கடல் வர
உடையானது புலியூர் வரைப்பில் கீழ்காற்று மிகுதலால் கரை
மேலே வந்தேறும் கடல் (எம்மேல்) வர,—எம் உயிர் கொண்டு
தந்து - அதன்க ணழுந்தாமல் எம்முயிரைக் கைக்கொண்டு
எமக்குத்தந்து,—ஓர் கழலவன் கண்டல் உற்று ஏர் நின்ற சேரி
சென்றான் - (அவ்) வொப்பற்ற கழலையுடையவன் தாழை மிகு
கு அழகு நின்ற வச்சேரியின்கண் சென்றான். (இனித்தக்கது
செய்வாயாக). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - அறத்
தொடு நிற்றல்.

வண்டலுற்றே மங்கனெனென்பது பாடமாயின், அங்கனெனன்ட
தனை ஏழாம்வேற்றுமைப் பொருள்பட நின்றதோரிடைச் சொ
ல்லாகவுரைக்க. புலியூர்க்கடலென வினையும். தேரிற்சென்று
னென்பது பாடமாயின் நம்மைக்காண்டல் விரும்பித் தேர்மே
லேறிச் சென்றானென்றுரைக்க. தோன்றல் கழலவன் என்றத
னால், அவனது பெருமையும், எம்முயிர்கொண்டு தந்தென்றத
னால் மெய்யுறவுங் கூறினாளாம். (உ௯௦)

ஐயந்தீரக்கூறல்.

விலங்குதல்விரும்பு மேதகுதோழி
அலங்கற்குழலிக் கறியவுரைத்தது.

(எ-து.) மாலையையணிந்த கூந்தலை யுடைய தலை
மகளுக்குப் பழிவருமென, அதினின்றும் விலங்கு
தலைவிரும்பு மேலான பாங்கி, தானவளைப் பாதுகாத்
தலை யறியச்சொன்னது.

நுடிக்கலர் கூறினுங்கூறாவியன்றில்லைக்கூத்தனதாள்
முடிக்கலராக்குமொய்பூந்துறைவற்குமுரிபுருவ
வடிக்கலர்வேற்கண்ணிவர்தனசென்றுநம்யாயறியும்
படிக்கலராமிவையென்னுமறைக்கும்பரிசுகளே.

(இ - ள்.) முரி புருவம் வடிக்கு அலர் வேல் கண்ணி - முரிந்த புருவத்தையுடைய வடுவகிரிற் பரந்த வேல்போலுங்கண்ணை யுடையாய்!—கூறு இயன் தில்லை கூத்தனதாள் முடிக்கு அல ராக்கும் - கூறலாகாத வகன்ற தில்லையிற்கூத்தனுடைய தாள் களைத் தன்முடிக்குப் பூவாக்கும், — மொய் பூ துறைவற்கு வந்தன - மொய்த்த பூவையுடைய துறைவனுக்கு வந்தபழி களை,—சென்று நம் யாய் அறியும் - (அவை) போய்ப் பரத்த லான் நம்முடையதாயு மறிவள்,— படிக்கு அலராம் - (அன்றி யும்) உலகத்திற்கெல்லாம் அலராகும், — குடிக்கு. அலர் கூறி னும் - அதனால் நம் குடிக்கலர் கூறினேமாயினும், — இவை மறைக்கும் பரிசுகள் என்னும் - இவற்றை நாம் மறைத்துச் சொல்லும் பரிசுகளென்னே? எ - று. மெய்ப்பாடு - பெரு மிதம்; பயன் - தலைமகளை யாற்றுவித்தல்.

கூறுத்தாளென வியையும். வடுவகிரோடு பிறபன்பாலொக் குமாயினும் பெருமையாளுவ் வாதென்னுங் கருத்தான் வடிக் கலர்கண்ணென்றாள். வடித்தலான் விளங்கும் வேலென்னுமமை யும். அறத்தொடுநிற்கு மிடத்து எம்பெருமாற்குப் பழிபடக்கூறு மோவென் றையுறுந் தலைமகட்கு நங்குடிக்கலர் கூறினுந்துறை வற்குப் பழிபடக் கூறே னென்பதுபடக் கூறித் தோழியறத் தொடு நிற்றலையுடம் படுவித்தவாறு. கூறுவென்பதற்குக் கூத் தனதாள் தனக்குக் கூறுகவென்றும் யாயறியும் படிக்கலரா மென்பதற்கு யாயுமறியும்படியாகச் சென்றலரா மென்றுரைப் பாரு முளர். (உகூக)

## வெறிவிலக்கல்.

அறத்தொடுநின்ற திறத்தினிற்பாங் கி
வெறிவிலக்கிப் பிறிதுரைத்த து.

(எ - து.) (தலைமகளை ஐயர்தீர்த்து) அறத்தொடு நின்றதன்மைத்தாகப் பாங்கி, வெறிவிலக்கிப் (புனலி டை யன்றுவந்ததவின)வேலனை நோக்கிக், கூறியது.

விதியுடையாருண்கவேரிவிலக்கலமம்பலத்துப்
பதியுடையான்பரங்குன்றினிற்பாய்புனல்யாமொழுகக்
கதியுடையான்கதிர்த்தோணிற்கவேறுகருதுநின்னின்
மதியுடையார்தெய்வமேயில்லைகொல்லினிவையகத்தே.

(இ-ள்.) விதி உடையார் வேரி உண்க விலக்கலம் - (இவ்வெ பாட்டு விழவின் மதுவுண்ண) விதியுடையவர் மதுவுண்ண வவை யும், யாமதனைவிலக்கேம்,—அம்பலத்து பதி உடையான் பரங் குன்றினில் பாய்புனல் யாம் ஒழுக-அம்பலமாகிய பதியையுடை யானது பரங்குன்றினிடத்துப் பரந்த புனலோடே யாமொ ழுக,— கதியுடையான் கதிர் தோள் நிற்க - (எம்மையெடுத்த பொருட்டு ஆண்டு) வரவையுடையவனது ஒளிபொருந்திய தோள்கள் நிற்க, — வேறு கருதும் நின்னின் மதியுடையார் (இந்நோய் தீர்த்தற்கு) வேறோருபாயத்தைக் கருதும் நின்னைப் போலறிவுடையார், — தெய்வமே வையகத்து இனி இல்லை கொல் - தெய்வமே! இவ்வுலகத்து இப்பொழுதில்லை போலும் எ - று. மெய்ப்பாடு - பெருமிதத்தைச்சார்ந்த நகை; பயன் - குறிப்பினால் வெறிவிலக்குதல்.

ஓரிடத்தா னொதுக்கப்படாமையிற் பதியுடையவனென்று சொல்லப்படாதவன் அம்பலத்தின்கண்வந்து பதியுடையனாயி னா னென்பதுபட வுரைப்பினு மமையும். ஒழுகவென்னும் வினை யெச்சம் கதியையுடையா னென்னு மாக்கத்தை யுட்கொண்ட வினைக் குறிப்புப் பெயரோடு முடியும். கதி - ஆண்டுச்சென்ற செலவு. கதிர்த்தோணிற்க வென்பதற்கு எடுத்தற் பொருட்டு அவன்தோள்வந்துநிற்கவென்று பொருளுரைத்து அவ்வெச்சத் திற்கு முடிபாக்கினு மமையும். (௨௯௨)

**செவிலிக்குத்தோழி யறத்தொடுநிற்றல்.**

சிறப்புடைச் செவிலி க்
கறத்தொடு நின்றது.

(எ-து.) (வெறிவிலக்கிநிற்ப, நீ வெறிவிலக்குதற்குக் காரணமென்னென்று கேட்ட) சிறப்பினையுடைய செவிலித்தாய்க்குப் பாங்கி, அறத்தொடு நிற்றலைக் கூறியது.

மனக்களியாயின்றியான்மகிழ்தூங்கத்தன்வார்கழல்க
ளெனக்களியாநிற்குமம்பலத்தோனிருந்தண்கயிலைச்
சினக்களியானைகடிந்தாரொருவர்செவ்வாய்ப்பசிய
புனக்கிளியாங்கடியும்வரைச்சாரற்பொருப்பிடத்தே.

(இ - ள்.) மனம் களியாய் இன்று யான் மகிழ்தூங்க - மனக்களிப்புண்டாயின்று யான் மகிழும்வண்ணம், — எனக்கு தன் வார் கழல்கள் அளியாநிற்கும் அம்பலத்தோன் இரு தண் கயிலை - எனக்குத் தன்னுடைய நீண்ட கழல்களையுடைய திருவடிகளை யளியாநிற்கும் அம்பலத்தானது பெரிதாகிய குளிர்ச்சி பொருந்திய கயிலையின்கண், — புனம் செவ்வாய் பசிய கிளி யாம் கடியும் வரைச்சாரல் பொருப்பிடத்து - (எம்) புனத்தின் கண்வருஞ் சிவந்த வாயையுடைய பசிய கிளிகளையாமோட்டும் மலையடியிலுண்டாகிய பொருப்பிடத்தின்கண் (வந்து), — ஒருவர் சினம் களி யானை கடிந்தார் - ஒருவர் (எம்மேல்வரும்) கோபத்தையுடைய களியானையைத் துரத்தினர்; (இனி யடுப்பது செய்வாயாக). எ - று. மெய்ப்பாடு - பெருமிதத்தைச்சார்ந்த நகை; பயன் - வெளிப்படையா லறத்தொடு நிற்றல்.

கயிலையென்றது - கயிலையையணைந்த விடத்தை. கடியும் பொருப்பென வியையும். வரை - உயர்ந்தவரை. பொருப்பு-பக்கமலை. கிளிகடியும் பருவமென்றதனாற் கற்பினோடுமாறு கொள்ளாமை முதலாயின கூறினளாம். (௨௩௩)

## நற்றய்க்குச் செவிலியறத்தொடுநிற்றல்.

கற்பினின்வழாமை நிற்பித்தெடுத்தோள்
குலக்கொடிதாயர்க் கறத்தொடுநின்றது.

(எ - து.) (பாங்கி யறத்தொடுநிற்பக்கேட்ட, கற்பி னின்றும் வழுவாம லறிவுகொளுத்திவளர்த்த செவிலி) நற்றாய்க்கு அறத்தொடு நிற்றலைக் கூறியது.

இளையாளிவளையென்சொல்லிப்பரவுதுமீரெயிறு
முளையாவளவின்முதுக்குறைந்தாண்முடிசாய்த்திமையோர்
வளையாவழுத்தாவருதிருச்சிற்றம்பலத்துமன்னன்
றிளையாவருமருவிக்கயிலைப்பயில்செல்வியையே.

(இ-ள்.) இமையோர் முடி சாய்த்து வளையா வழுத்தாவரும் திருச்சிற்றம்பலத்து மன்னன் - இமையோர் தம்முடியைச் சாய்த்து வணங்கியும் வாழ்த்தியும் வரும் திருச்சிற்றம் பலத்தின்கணுளனாகிய மன்னனது, — திளையாவரும் அருவி கயிலை பயில் செல்வியை - திளைத்துவரும் அருவியையுடைய கயிலைக் கண் பயிலுந்திருவாட்டியை, — இளையாள் இவளை - இளைய ளாகிய இவளை, — என்சொல்லி பரவுதும் - என்சொல்லிப் புகழ்வோம்! — ஈர் எயிறு முளையா அளவின் முதுக்குறைந் தாள் - (முன்னெழும்) இரண்டுபெற்கள் முளையாத இளமைக் கண் அறிவு முதிர்ந்தாள். எ - று. மெய்ப்பாடு-உவகை; பயன்-நற்றாய்க்கறத்தொடு நிற்றல்.

திளைத்தல் - ஈண்டிடைவிடாது அவ்விடத்தோடுபீயிறல். ()

## தேர் வரவுகூறல்.

மணிநெடுந்தேரோனணிதினின்வருமெ ன
•யாழியன்மொழிக்குத் தோழிசொல்லிய து.

(எ-து.) (நற்றாய்க்குச் செவிலி யறத்தொடு நில்லா நிற்ப) மணிகட்டிய நெடியதேரையுடைய தலைமகன் அணித்தாகவருமென யாழினைப்போலு மியலையுடை ய மொழியாளாகிய தலைமகளுக்குப் பாங்கி கூறியது.

கள்ளினமார்த்துண்ணும்வண்கொன்றையோன்றில்லைக்கார்க்க
புள்ளினமார்ப்பப்பொருதிரையார்ப்பப்புலவர்கடம் [டல்வாய்ப்
வள்ளினமார்ப்பமதுகரமார்ப்பவலம்புரியின்
வெள்ளினமார்ப்பவரும்பெருந்தேரின்றுமெல்லியலே.

(இ-ள்.) மெல்லியலே - மெல்லியால்! — கள் இனம் ஆர்த்து உண்ணும் வள் கொன்றையோன் தில்லை கார கடல்வாய் - தேனை வண்டினங்கள் ஆரவாரித்துண்ணும் வளவிய கொன்றைமாலையை யுடையவனது தில்லையைச்சார்ந்த கரியகடலிடத்து,— புள்ளினம் ஆர்ப்ப - பறவைக்கூட்டஞ் சத்திக்கவும்,— பொருதிரை ஆர்ப்ப - கரையைப்பொரும் திரைகள் சத்திக்கவும், — புலவர்கள் தம் வள் இனம் ஆர்ப்ப - மங்கலங் கூறும் புலவர்களது வள்ளிய கூட்டம் ஆரவாரிக்கவும், — மதுகரம் ஆர்ப்ப - (நறுவிரையால்) வண்டுகள் சத்திக்கவும், — வலம்புரியின் வெள்இனம் ஆர்ப்ப - வலம்புரியினது வெள்ளிய இனஞ் சத்திக்கவும், — இன்று பெருந்தேர் வரும் - இன்று (நங்காதலரது) பெருந்தேர் வாரா நின்றது. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம் ; பயன்-தலைமகளை யாற்றுவித்தல், வரைவுமலிந்தமையுணர்த்துதலுமாம்.

கள்ளென்பது - வண்டினு ளொருசாதி யென்பாருமுளர். புள்ளினத்தையும் பொருதிரையையும் அவன்வரவிற்கு உவந்தார்ப்பனபோலக் கூறினுள். இதனை மிகைமொழிப்பாற்படுத்திக்கொள்க. முன்னர்த் தலைமகன் பிரிந்தகாலத்துத் தலைமகளதாற்றாமையைத் தாமாற்றுவிக்க மாட்டாது பொறுத்துக்கண்டிருந்த புள்ளினமுங் கடலும் அவனது தேர்வரவுகண்டு, இனிப்பிரிவும் பிரிவாற்றாமையு மில்லையென்று மகிழ்வுற்றார்த்தன வென்றறிக. (உ௬௫)

## மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்தல்.

நிலங்காவலர் நீண்மணத் தி
னலங்கண்டவர் நயந்துரைத்த து.

(எ - து.) (பாங்கி தலைமகளுக்குத் தேர்வரவு கூறுநிற்ப அந்நிலைமைக்கண்) நிலங்காவலையுடைய அரசர் நீண்மணத்தின் நலத்தைக்கண்டவர் விரும்பிக் கூறியது.

பூரணபொற்குடம்வைக்கமணிமுத்தம்பொன்பொதிந்த
தோரணநீடுகதூரியமார்க்கதொன்மாலயற்குங்
காரணனேரணிகண்ணுதலோன்கடற்றில்லையன்ன
வாரணவும்முலைமன்றலென்றேங்குமணமுரசே.

(இ - ள்.) தொல் மால் அயற்கும் காரணன் - பழையராகிய அரியயனுக்குங் காரணமாயுள்ளான்,—ஏர் அணி கண் நுதலோன்- அழகிய நெற்றிக்கண்ணையுடைய நுதலையுடையான், — கடல் தில்லை அன்ன வார் அணவும் முலை - (அவனது) கடலையடைந்த தில்லையை யொக்கும் வாராற்கட்டப்படுமளவைச் சென்றணவும் முலையையுடையாளது; — மன்றலென்று மண முரசு ஏங்கும் - மணமென்று மணமுரசேங்கா நின்றது, — பூரண பொன் குடம் வைக்க - (அதனால் வாயில் கள்தோறும்) நீரால் நிறைக்கப்பட்ட பொற்குடத்தை வைக்க, — மணி முத்தம் பொன் பொதிந்த தோரணம் நீடுக - மணியும் முத்தும் பொன்னின் கணழுத்திய தோரணம் (எங்கும்) ஓங்குவதாக, — தூரியம் ஆர்க்க - தூரியங்கள் நின் றார்ப்பனவாக. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - நகரியலங்கரித்தல். வாரணவுமுலையென்பதற்கு வாரைப்பொருந்து முலையெனினுமமையும். (உகக)

**ஐயுற்றுக் கலங்கல்.**

நல்லவர்முரசுமற் றலலவாமுரசெனத்
தெரிவரிதென வரிவைகலங்கியது.

(எ - து.) நல்லவரது முரசம் அயலவர்முரசம் போல எவற்கோ அறிகின்றிலேனெனத் தலைமகள் கலக்கமடைந்து கூறியது.

அடற்களியாவர்க்குமன்பர்க்களிப்பவன்றுன்பமின்பம்
படக்களியாவண்டறைபொழிற்றில்லைப்பரமன்வெற்பிற்
கடக்களியானைகடிந்தவர்க்கோவன்றிநின்றவர்க்கோ
விடக்களியாநம்விழுநகரார்க்கும்வியன்முரசே.

(இ - ள்.) இடம் களியா நம் விழு நகர் ஆர்க்கும் வியன் முரசு - மிகவுங்களிப்புண்டாய நமது சிறந்த இல்லின்கண் முழங்காநின்ற இப்பெரிய முரசமானது, — துன்பம் இன்பம் பட - (பிறவியான்வரும்) துன்பமு மின்பமுங்கெட, — அடற் களி யாவர்க்கும் அன்பர்க்கு அளிப்பவன் - இயல்பாகிய பேரி ன்பத்தை யாவராயினு மன்பராயினருக்கு வரையாதுகொடுப் போன், — களியா வண்டு அறை பொழில் தில்லை ப்ரமன் - களித்து வண்டுகளொலிக்கும் பொழிலையுடைய தில்லைக்கணு ளனாகிய பரமன், — வெற்பில் கடம் களியானை கடிந்தவர்க் கோ - (அவனது) வெற்பின்கண் மதத்தையுடைய களியானை நம்மேல் வராமல் மாற்றினவர்க்கோ?—அன்றி நின்றவர்க்கோ- அன்றி யாதும் இயை பில்லாதவர்க்கோ ? (அறிகின்றிலேன்) எ - று. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்த மருட்கை ; பயன்- ஐயந்தீர்தல்.

அடற்களி - அடுதல்செய்யாத பேரின்பம். அடக்களி யென் பது பாடமாயின், பேரின்பம் யானென்னு முணர்வினைக் கெ டுப்பவென் றுரைக்க. (உகூஎ)

**நிதிவரவு கூறநிற்றல்.**

மகிழ்தருமனத்தொடு வண்புகழ்த்தோழி
திகழ்நிதிமடந்தைக்குத் தெரியவுரைத்தது.

(எ-து.) (முரசொலிகேட்டு ஐயமுற்றுக் கலங்கிய தலைமகளுக்கு) கற்புக் காத்தலான் வந்த புகழினையு டைய பாங்கி, மகிழ்ச்சியைத்தரும் மனத்தோடுநின்று

(நமர்வேண்டினபடியே யருங்கலங்கொடுத்து நின்னை வரைந்துகொள்ளத்) தலைவர் குறைவில்லா நிதியைக் கொணர்ந்தாரெனத் தலைமகளுக்கு நிதிவரவு கூறி யது.

என்கடைக்கண்ணினும்யான்பிறவேத்தாவகையிரங்கித்
தன்கடைக்கண்வைத்ததண்டில்லைச்சங்கரன்றாழ்கயிலைக்
கொன்கடைக்கண்டரும்யானைகடிந்தார்கொணர்ந்திறுத்தார்
முன்கடைக்கண்ணிதுகாண்வந்துதோன்றுமுழுநிதியே.

(இ - ள்.) கடை என்கண்ணினும் - கடையாகிய என்னிடத்தும்,—யான் பிற ஏத்தா வகை இரங்கி தன் கடைக்கண் வைத்த தண் தில்லைச்சங்கரன் தாழ் கயிலை - யான் பிறதெய்வங்களை யேத்தாதவண்ணம் இரங்கித் தனது கடைக்கண்ணை வைத்த குளிர்ச்சிபொருந்திய தில்லைக்க ணுளனாகிய, சங்கரன்மேவுங் கயிலையிடத்து, — கொன் கடை கண்தரும் யானை கடிந்தார் - (தமக்கொரு) பயன் கருதாது நமக்கிறுதியைப் பயக்கும் யானையை அன்று கடிந்தவர்,—கடைக்கண் முன் வந்துதோன்றும் முழுநிதி கொணர்ந்து இறுத்தார் - நம்வாயில்முன் வந்துதோன்றுங் குறைவில்லாத நிதிகொணர்ந்து விட்டார்,—இது காண் - இதனைக் காண்பாயாக. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - ஐயந்தீர்த்தல்.

என்கடைக்கண்ணினு மென்பதற்கு மொழிமாற்றாது எனது கடையாகிய நிலைமைக்கண்ணு மென்றுரைப்பினு மமையும். கொன்கடைக்கண்டரும் யானையென்பதற்கு அச்சத்தைக்கடைக்கண்டரும் யானையென் றுரைப்பாரு முளர். வண்புகழ்-அறத்தொடுநின்று கற்புக்காத்தலான் வந்தபுகழ். (உ௬அ)

வரைபொருட்பிரிதல் முற்றிற்று.

## மணஞ்சிறப் புரைத்தல்.

என்பது, வரைந்தபின்னர் மணஞ்சிறப்புக் கூறுநிற்றல்.

இக்கிளவி ஒன்பது துறைகளையுடைத்து. அவை வருமாறு:-
மணமுரசுகூறல் மகிழ்ந்துரைத்தலொடு, வழிபாடு கூறல் வாழ்க்கைநலங்கூறல், காதல்கட்டுரைத்தல் கற்பறிவித்தல், கற்புப்பயப்புரைத்தல் காதன்மருவுரைத்தல், கலவியுரைத்தல் கருதியவொன்பது, நலமிகுமணமிவை நாடுங்காலே.

### மணமுரசுகூறல்.

வரைவுதோன்ற மகிழ்வுறுதோழி
நிரைவளைக்கு நின்றுரைத்தது.

(எ - து.) வரைபொருட் பிரிந்துவந்தபின்னர் அருங்கலம் விடுத்தற்கு முன்றிற்கணின்று தலைமகனது முரசம் முழங்கக்கேட்டு மகிழ்வுறுநின்ற பாங்கி, நிரையாகத்தொடுத்த வளையலையணிந்த தலைமகட்கு மணமுரசு கூறியது.

பிரசந்திகழும்வரைபுரையானையின்பீடழித்தார்
முரசந்திகழுமுருகியசீங்குமெவர்க்குமுன்னு
மரசம்பலத்துநின்றுடும்பிரானருள்பெற்றவரிற்
புரைசந்தமேகலையாய்துயர்தீரப்புகுந்துநின்றே.

(இ - ள்.) சந்தம் புரை மேகலையாய் - நிறத்தையுடைய உயர்ந்த மேகலையை யுடையாய்! — எவர்க்கும் முன்னும் அரசு - (அரியயன் முதலாகிய) யாவர்க்கும் முன்னுயிருக்கும் அரசு,— அம்பலத்து நின்று ஆடும் பிரான் - (இவ்வாறு பெரியனுயினும் எளியனுய்) அம்பலத்தின்கண் (யாவருங்காண) நின்றுடு முதல்வன், — அருள்பெற்றவரில் துயர்தீர - (அவனது) அருளைப் பெற்றவரைப்போல (நாம்) துயர்தீர, — புகுந்து நின்று -

(நம்மில்லின்கண்) புகுந்து நின்று, — பிரசம் திகழும் வரை புரை யானையின் பீடு அழித்தார் - பெருந்தேன் திகழும் மலை போலும் யானையின் வலியை (நம் காரணமாக) அழித்தவ ரது,—முரசம் திகழும் - முரசு முழங்கி விளங்காநின்றது,— முருகியம் நீங்கும் - (அதுவேயுமன்றி வெறி காரணமாக வொ லிக்கும்) முருகியமும் நீங்காநின்றது. (இனியென்ன குறையுடை யேம்) எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகளைமகிழ் வித்தல்.

புகுந்துநின்று திகழுமெனக் கூட்டுக. வரையுயர் யானையென் பதூஉம் பாடம். முருகுங் கமழுமென்று பாடமோதி கலியா ணத்திற் குறுப்பாம் நறுவினை நாறாநின்றனவென் றுரைப்பாரு முளர். (௨௬௬)

## மகிழ்ந் துரைத்தல்.

மன்னியகடியிற் பொன்னறுங்கோதை யை
நன்னுதற்றோழி தன்னின்மகிழ்ந்த து.

(எ - து.) (மணமுரசொலிகேட்ட) நன்மையாகிய நெற்றியையுடையபாங்கி, நிலைபெற்ற கற்பினால் (சில ம்பன் தந்த தழைகளை வாடாமல் வைத்து அவையே பற்றுக்கோடாக ஆற்றியிருந்தாளென) அழகிய நறுங் கோதையை யுடைய தலைமகளைத் தன்னின்மகிழ்ந்து கூறியது.

இருந்துதியென்வயிற்கொண் டவன்யாளெப்பொழுதுமுன்னு
மருந்துதிசைமுகன்மாற்கரியோன்றில்லைவாழ்த்தினர்போ
லிருந்துதிவண்டனவாலெரிமுன்வலஞ்செய்திடப்பா
லருந்துதிகாணுமளவுஞ்சிலம்பனருந்தழையே.

(இ - ள்.) சிலம்பன் அரும் தழை - சிலம்பன்தந்த பெறு தற்கரிய தழைகளானவை, — முன் எரி வலஞ்செய்து இடப்

பால் அருந்துதி காணுமளவும் - (இப்பொழுது) முன் தீயை வலங்கொண்டு பின்பு (வசிட்டன்) இடப்பக்கத்திற்றோன்றும் அருந்ததியைக்காணுமளவும், — இரும் துதி என்வயின் கொண்டவன் - (அன்பர் துதிப்ப அவர்வயின் தான்கொள்ளும்) பெருந்துதியை என்வயின் உண்டாக்கிக்கொண்டவன், — யான் எப்பொழுதும் உன்னும் மருந்து-யானெப்பொழுதும் உன்னும்வண்ணஞ்சுவையுடைத்தாய தோர்மருந்து (இவ்வாறெனக்கெளியனுயினும்),—திசைமுகன் மாலுக்கு அரியோன் - பிரமவிஷ்ணுக்கஞக்கரியவன்,—தில்லைவாழ்த்தினர்போல்-(அவனது) தில்லையை வாழ்த்தினரைப்போல, — இருந்து திவண்டன - வாடாதிருந்து விளங்கின. எ - று. மெய்ப்பாடு - உவகை. பயன் - மகிழ்தல்.

ஆல்-அசை. திவண்டன வென்பதற்கு வாடாதிருந்து இவளைத் தீண்டி இன்புறுத்தின வென்றுரைப்பினு மமையும். தழைவாடாதிருந்தனவென்றது, முன்னர்த்தான் அவன்தந்த தழையையேற்ற முகூர்த்தத்தைக் கொண்டாடியவாறு. வேயினமென்றோளென்னு மதுதொட்டு இதுகாறும்வர இப்பாட்டுப் பத்தொன்பதும் அறத்தொடு நிலையினையும், அதன்பின்னர் வரைதலையு நுதலின வென்பது. அகத்திணையின்மிகத்திகழுமின்பக்கலவியின்பக்களவு முற்றிற்று. எண்பத்தொன்றும் பாட்டுமுதல் இப்பாட்டீறுகப் பாங்கியாலாய கூட்டம். (௩00)

## வழிபாடு கூறல்.

மணமனைகாண வந்தசெவிலிக்குத்
துணைமலர்க்குழலி தோழிசொல்லியது.

(எ-து.) மணஞ்செய்தபின்னர் மணமனையைக் காணவந்த செவிலிக்குப் பாங்கி, தலைமகன் தலைமகள் வழியொழுகாநின்றமை கூறியது.

**சீரியலாவியும்யாக்கையுமென்னச்சிறந்தமையாற்**
**காரியல்வாட்கண்ணியெண்ணகலார்கமலங்கலந்த**

வேரியுஞ்சந் தும்வியறந்தெனக்கற்பினிற்பரன்னே
காரியல்கண்டர் வண்டில்லைவணங்குமெங்காவலரே.

(இ - ள்.) அன்னே - அன்னாய்! — காரியல் கண்டர் வள் தில்லை வணங்கும் எம் காவலர் - கார்போலுங்கண்டத்தையு டையவரது வளவிய தில்லையை வணங்கும் எம்முடைய காவல ரானவர்,— சீர் இயல் ஆவியும் யாக்கையும் என்ன சிறந்தமை யால் - சீர்மையியலு முயிரு முடம்பும்போல ஒருவனையொரு வரின்றியமையாமையால், — கார் இயல் வாள் கண்ணி என் அகலார் - கரியவியல்பையுடைய வாள்போலுங் கண்ணையுடை யாளது கருத்தைக்கடவார், — கமலம் கலந்த வேரியும் சந்தும் வியல் தந்தென - தாமரைப் பூவைச்சேர்ந்த தேனும் சந்தனமர மும் (இடத்துநிகழ்பொருளு மிடமுமா யியைந்து) தம்பெரு மையைப் புலப்படுத்தினாற் போல இயைந்து, — கற்பினில் நிற் பர் - இவளதுவழிபாட்டின் கண்ணேநிற்பர். எ-று. மெய்ப்பாடு- உவகை; பயன் - மகிழ்வித்தல்.

காரியல்கண்டர் வண்டில்லை வணங்குமென்றதனான் இவரதில் வாழ்க்கை, இன்றுபோல என்றும் நிகழுமென்பது கூறினாளாம். இன்னே யென்பது பாடமாயின் இப்பொழுதே யென்றுரைக்க. எண்ணகலா ரென்றதனாற் காதலியாதலும் கற்பினிற்ப ரென் றதனால் வாழ்க்கைத் துணையாதலுங் கூறப்பட்டன. ஆவியும் வேரியும் தலைமகட் குவமையாகவும், யாக்கையும் சந்தும் தலை மகற் குவமையாகவு முரைக்க. பிரித்துவமையாக்காது இவ ரது கூட்டத்திற்கு அவற்றதுகூட்டம் உவமையாக வுரைப்பினு மமையும். (௩௦௧)

## வாழ்க்கை நலங்கூறல்.

மணமனைச்சென்று மகிழ்தருசெவி லி
அணிமனைக்கிழத்திக் கதன்சிறப்புரைத்த து.

(எ - து.) மணமகளைக்கண்டு மகிழ்ந்தசெவிலி, நற்றாய்க்கு வாழ்க்கை நலங்கூறியது.

தொண்டினமேவுஞ்சுடர்க்கழலோன்றில்லைத்தொன்னகரிற்
கண்டினமேவுமினியவணின்கொழுநன்செழுமென்
றண்டினமேவுதிண்டோளவன்யானவடற்பணிவோன்
வண்டினமேவுங்குழலாளயன்மன்னுமிவ்வயலே.

(இ - ள்.) தொண்டு இனம் மேவும் சுடர்கழலோன் தில்லை தொல் நகரில் - தொண்டரது இனத்தைப் பொருந்தும் ஒளியையுடையகழலையணிந்தவனது தில்லையாகிய பழையநகரிடத்து,— கண்ட இல் மேவும் நம் இல் - (யான்) கண்ட (அவளது) இல்லம் மேவப்பட்ட நமதில்லத்தோடொக்கும், — அவள் நீ - அவள் நின்னோடொக்கும்,—தண்டு இனம் மேவு செழு மென் திண் தோளவன் நின் கொழுநன் - தண்டாகிய இனத்தையொக்கும் வளவிய மென்மையாகியதிண்ணிய தோள்களையுடையான் நின் கொழுநனோ டொக்கும்,—அவள்தன் பணிவோள் யான் - அவளைப் பணிந்து குற்றேவல் செய்வாள் என்னோடொக்கும்,— வண்டு இனம் மேவும் குழலாள் அயல் இ அயலே - வண்டினம் பொருந்துங் குழலையுடையாளது அயல் இவ்வயலோடொக்கும் (வேறுசொல்லலாவதில்லை). எ-று. மெய்ப்பாடு-உவகை; பயன்-மகிழ்வித்தல்.

கண்டவென்பது கடைக்குறைந்து நின்றது. பெண்டீர்க்கு ஊறினிதாதல்நோக்கித் தோளிற்கு மென்மைகூறினுள். தண்டினமென்புழி இனமென்றது சாதியை. மன்னும் - அசைநிலை. பெரும்பான்மையு மென்பதுபட நின்றதெனினுமமையும். கண்டென்பதனைத் தன்மைவினையென்று, அவ ளில்வாழ்க்கையோர் கண்டேனென முன் பொதுவகையாற்கூறிப் பின் சிறப்புவகையாற் கூறிற்றாக வுரைப்பாரு முளர். (௩௦௨)

## காதல்கட் டுரைத்தல்.

சோதி வேலவ ன்
காதல் கட்டுரைத்த து.

(எ - து.) (அவனதில்வாழ்க்கை நலங்கிடக்க) செவிலி, அவன் அவள்மேல்வைத்த காதன்மிகுதியைக் கட்டுரைத்தது.

பொட்டணியானுதல்போயிறும்பொய்போலிடையெனப்பூ
ணிட்டணியான்றவிசின்மலரன்றிமிதிப்பக்கொடான்
மட்டணிவார்குழல்வையான்மலர்வண்டுறுதலஞ்சிக்
கட்டணிவார்சடையோன்றில்லைபோலிதன்காதலனே.

(இ - ள்.) கட்டு அணி வார் சடையோன் தில்லைபோலிதன் காதலன் - (மகுடமாகக்) கட்டப்பட்டவழகிய நீண்ட சடையையுடையவனது தில்லையையொப்பாளுடைய காதலன், — பொய்போல் இடைபோய் இறும் என பூண் இட்டு அணியான்- பொய்போலும் இடைபோ யிறுமென்று கருதி ஆபரணத்தைப் பூட்டியணியான், — தவிசில் மலரன்றி மிதிப்பக்கொடான்- மெல்லடிநோதல் அஞ்சி பஞ்சணையில் மிதிப்புழியும் மலரினன்றி மிதிப்பவிடான்,—வண்டு உறுதல் அஞ்சி மட்டு அணி வார் குழல் மலர் வையான்-வண்டுற்று மொய்த்தல் அஞ்சித் தேனையுடைய அழகிய நீண்டகூந்தலிடத்து மலர்களைவையான், — நுதல் பொட்டு அணியான் - (இவைசொல்லுகின்றதென் பொறையாமென்று) நெற்றியின்கண் பொட்டையும் இடான். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.

கட்டணிவார் சடை - மிக்க வழகையுடைய சடையெனினுமமையும். தவிசின் மிசையென்று பாடமோதுவாருமுளர். ()

## கற்பறி வித்தல்.

விற்பொலி நுத லி
கற்பறி வித்த து.

(எ-து.) (தலைமகனது காதன்மிகுதியைக்கூறிய செவிலி) வில்லைப்போலும் விளங்கும் நெற்றியை யுடைய தலைமகளதுகற்பினை யறிவித்தது.

தெய்வம்பணிகழலோன்றில்லைச்சிற்றம்பலமனையா
டெய்வம்பணிந்தறியாளென்றுநின்றுதிறைவழங்காத்
தெவ்வம்பணியச்சென்றாலுமன்வந்தன்றிச்சேர்ந்தறியான்
பவ்வம்பணிமணியன்னார்பரிசின்னபான்மைகளே.

(இ - ள்.) தெய்வம் பணிகழலோன் தில்லை சிற்றம்பலம் அனையாள் - (பிறரான் வழிபடத்தக்க) தெய்வங்கள் வணங்குந் திருவடிகளை யுடையவனது திருச்சிற்றம்பலத்தை யொப்பாள்,—என்றும் தெய்வம் பணிந்து அறியாள் - எஞ்ஞான்றும் வேறொரு தெய்வத்தைப் பணிந்தறியாள், — நின்று திறை வழங்கா தெவ்வம் பணிய சென்றாலும் மன் வந்தன்றி சேர்ந்து அறியான் - முன்னின்று திறைகொடாத பகைவர் வந்து பணியும் வண்ணம் (வினைவசத்தாற்) சென்றாலும், அம்மன்னவன் (அவளது இல்லத்து) வந்தல்லது ஆண்டுத் தங்கி யறியான்,— பவ்வம் பணி மணி அன்னார் பரிசு இன்ன பான்மைகள் - சமுத்திரந்தந்த மணிபோலப் (பெருங்குலத்துப்பிறந்த) தாயோரதியல்பு இன்னமுறைமைகளை யுடையன. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.

தெவ்வு - தெவ்வமென விரிந்துநின்றது. தெவ்வம்பணிய - தெவ்வர் அம்பையணிய வென்றும், பவ்வம்பணிமணி - கடலிடத்தும் பாம்பிடத்து முளவாகிய முத்தும், மாணிக்கமு மென்று உரைப்பாரு முளர். (௩0௪)

## கற்புப் பயப்புரைத்தல்.

கற்புப் பயந் த
அற்புத முரைத்த து.

(எ - து.) (கற்பறிவித்தசெவிலி) படிகடந்துங் கடிதுவரும்வண்ணம் எடுத்துக்கொண்டவினையை யிடையூறின்றி இனிது முடித்தலைச்சொன்னது.

சிற்பந்திகழ்தருதிண்மதிற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பொற்பந்தியன்னசடையவன்பூவணமன்னபொன்னின்
கற்பந்திவாய்வடமீனுங்கடக்கும்படிகடந்து
மிற்பந்திவாயன்றிவைகல்செல்லாதவனீர்ங்களிறே.

(இ - ள்.) சிற்பம் திகழ்தரு திண்மதில் தில்லைச்சிற்றம்பலத்து பொன் பந்தி அன்ன சடையவன் - நுண்டொழில்விளங்குந் திண்ணியமதிலையுடைய தில்லைச்சிற்றம்பலத்தின்கணுளனாகிய, பொற்றகட்டு நிரைபோலுஞ் சடையை யுடையவனது,—பூவணம் அன்ன பொன்னின் கற்பு அந்திவாய் வடமீனும் கடக்கும் - பூவணத்தையொக்கும் பொன்னையொப்பாளது கற்பானது அந்திக்காலத்துளதாகிய வடமீனையும் வெல்லும்,— அவன் ஈர் களிறு படி கடந்தும் இல் பந்திவாயன்றி வைகல் செல்லாது - (அதனான், எடுத்துக்கொண்ட வினையை இடையூறின்றி இனிது முடித்து) அவனூரும் (மதத்தான்) ஈரிய யானை நிலத்தைக்கடந்தும் இல்லின்கண் தன்பந்தியிடத்தல்லது தங்காது.—எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.

பொற்பந்தியன்ன சடையென்பதற்கு அழகிய அந்திவானம் போலுஞ் சடையென்பாருமுளர். அந்திக்காலத்துக் கற்புடை மகளிராற் றொழப்படுதலின், அந்திவாய் வடமீனென்றாள். ()

## மருவுதலுரைத்தல்.

இருவர் காதலு லு
மருவுத லுரைத்த து.

(எ-து.) (கற்புப் பயப்புரைத்த செவிலி) இருவர் காதலும் மருவுதலைக் கூறியது.

மன்னவன்றெம்முனைமேற்செல்லுமாயினுமாலரியே
றன்னவன்றேர்புறத்தல்கல்செல்லாதுவரகுணனுந்
தென்னவனேத்துசிற்றம்பலத்தான்மற்றைத்தேவர்க்கெல்லா
முன்னவன்மூவலன்னாளுமற்றோர்தெய்வமுன்னலளே.

(இ - ள்.) மன்னவன் தெவ் முனைமேல் செல்லுமாயினும் - மன்னவனது பகைமுனைமே லேவப்பட்டுப் போமாயினும், — மால் அரி ஏறு அன்னவன் தேர்புறத்து அல்கல் செல்லாது - பெரிய ஆண்சிங்கத்தையொப்பான் ஊருந்தேர் (தன்னிலையினல்லது) புறத்துத் தங்காது,—வரகுணனும் தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான் - வரகுணபாண்டியனாலேத்தப்படுஞ் சிற்றம்பலத்தின்கணுள்ளான், — மற்றை தேவர்க்கெல்லாம் முன்னவன் - மற்றெல்லாத் தேவர்களுக்கும் முன்னேயுள்ளான்,— மூவல் அன்னாளும் மற்றோர் தெய்வம் முன்னள் - (அவனது) மூவலையொப்பாளும் வேறொரு தெய்வத்தைத் தெய்வமாகக் கருதாள். எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல். ()

மற்றைத் தேவர்கட்கு மென்பதூஉம் பாடம். மூவல் - ஒரு திருப்பதி.

### கலவியின்பங் கூறல்.

நன்னுதன்மடந்தை தன்னலங்கண்டு
மகிழ்தூங்குளத்தோ டிகுளைகூறியது.

(எ-து.) (இருவர்காதலு மருவுதல்கூறிய செவிலி) நன்னுதலையுடைய தலைமகளது வாழ்க்கை நலங்கண்டு மகிழ்ச்சிதங்கிய உள்ளத்துடன் சொல்லியது.

ஆனந்தவெள்ளத்தழுந்துமொராருயிரீருருக்கொண்
டானந்தவெள்ளத்திடைத்திளைத்தாலொக்குமம்பலஞ்சே
ரானந்தவெள்ளத்தறைகழலோனருள்பெற்றவரி
னானந்தவெள்ளம்வற்றாதுமுற்றாதிவ்வணிநலமே.

(இ - ள்.) ஆனந்த வெள்ளத்து அழுந்தும் ஓர் ஆருயிர் - (இருவரது காதலும் களிப்பும்) இன்பவெள்ளத்திடை யழுந்தப் புகுகின்ற தோருயிர்,—ஈர் உரு கொண்டு ஆனந்த வெள்ளத்திடை திளைத்தால் ஒக்கும் - இரண்டுடம்பைக்கொண்டு அவ்வின்பவெள்ளத்தில் அழுந்தியனுபவித்ததனோ டொக்கும், — அம்பலம் சேர் ஆனந்த வெள்ளத்து அறைகழலோன் அருள் பெற்றவரின் - (அன்றியும்) அம்பலத்தைச் சேர்ந்த இன்ப வெள்ளத்தைச்செய்யும் ஒலிக்குங் கழலையுடையவனது அருளைப் பெற்றவரின் (இன்பம்போல),—ஆனந்தவெள்ளம் வற்றாது-இவ்வின்பவெள்ளமு மொருக்காலுங் குறைவுபடாது, — இ அணி நலம் முற்றாது-இவ்வணிநலமும் முதிராது. எ-று. மெய்ப்பாடு - உவகை ; பயன் - மகிழ்தல். (௩0எ)

மணஞ்சிறப்புரைத்தல் முற்றிற்று.

---

## ஓ த ற் பி ரி வு.

என்பது, வரைந்துகொண்ட பின்னர்த் தலைமகனுக்கு முதற் பிரிவு * ஓதலாதலாற் கல்வியின் மிகுதிகூறி நீங்காநிற்றல்.

இக்கிளவி நான்கு துறைகளை யுடைத்து. அவை வருமாறு:—

கல்விநலங்கூறல் பிரிவுநினைவுரைத்தல், கலக்கங்கண்டுரைத்தல் காதலர் தமது, வாய்மொழிகூறல் வருவனநான்கும், தீமையில்கல்வி தேருங்காலே.

### கல்விநலங்கூறல்.

கல்விக்ககல்வர் செல்வத்தவரொ ன
செறிகுழற்பாங்கிக் கறிவறிவித்த து.

---

* "ஓதல்காவல் பகைதணிவினையே, வேந்தற்குற்றுழி பொருட்பிணிபரத்தையென், றங்கவ்வாறே யவ்வயிற் பிரிவே".

(எ - து.) இல்வாழ்க்கைச்செல்வத்தவர் ஓதற் ககல்வரொன இயற்கைமணந்தங்கிய கூந்தலையுடைய பாங்கிக்கு அறியப்படுவதனை யறிவித்தது.

சீரளவில்லாத்திகழ்தருகல்விச்செம்பொன்வரையி
னாரளவில்லாவளவுசென்றாரம்பலத்துணின்ற
வோரளவில்லாவொருவனிருங்கழலுன்னினர்போ
லேரளவில்லாவளவினராகுவரேந்திழையே.

(இ - ள்.) ஏந்திழையே - ஏந்திழாய்!— சீர் அளவில்லா திகழ்தரு கல்வி செம்பொன் வரையின் ஆர் அளவில்லா அளவு சென்றார் - நன்மைக்களவில்லாத விளங்குங்கல்வியாகிய மேருக்குன்றத்தினது மிக்க அளவில்லாத எல்லையையடைந்தவர்கள், — அம்பலத்துள் நின்ற ஓர் அளவில்லா ஒருவன் இருகழல் உன்னினர்போல் - அம்பலத்தின்கணின்ற ஓரளவையுமில்லாத ஒப்பில்லாதவனது பெரியதிருவடிகளையறிந்து நினைந்தவரைப்போல,— ஏர் அளவில்லா அளவினராகுவர் - நன்மைக்கெல்லையில்லாததன்மையராவர். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - பிரிவுணர்த்தல்.

தூய்மையும் பெருமையுங் கலங்காமையு முடைமையால் செம்பொன் வரையென்றான். கற்றறிந்தமேலுங் கற்கநினைக்கின்றாகலான், ஆரளவில்லாவளவு சென்றாரென்றான். ஆரளவு - காதமும் புகையு முதலாயின அளவு. ஓரளவு - காட்சியும் அனுமானமு முதலாயின அளவு. (௩௦அ)

பிரிவுநினை வுரைத்தல்.

கல்விக்ககல்வர் செல்வத்தவரொன ப்
பூங்குழன்மடந்தைக்குப் பாங்கிபகர்ந்த து.

(எ - து.) (கல்விநலங்கூறக்கேட்ட) பாங்கி, இல்வாழ்க்கைச் செல்வத்தையுடையதலைவர் ஓதற்ககல்வரெனப் பூங்குழலையுடைய தலைமகட்குக் கூறியது.

வீதலுற்றார் தலைமாலையன்றில்லைமிக்கோன்கழற்கே
காதலுற்றார்நன்மைகல்விசெல்வீதருமென்பதுகொண்
டோதலுற்றாருற்றுணர்தலுற்றார்செல்லன்மல்லழற்கான்
போதலுற்றார்நின்புணர்முலையுற்றபுரவலரே.

(இ - ள்.) செல்வீ - செல்வீ! — வீதல் உற்றார் தலை மாலையன் தில்லைமிக்கோன் - கெடுதலையடைந்தவர் தலைமாலையையுடையவன் தில்லைக்கணுள்ளாகிய பெரியோன், — கழற்கே காதலுற்றார் நன்மை - (அவனது) திருவடிக்கே யன்புற்றவரது நன்மையை, — கல்வி தருமென்பது கொண்டு - கல்வி தருமென்பதனைக்கருதி, — நின் புணர்முலை உற்ற புரவலர் - நினது புணர்முலையைச் சேர்ந்த காவலர், — ஓதலுற்றார் உற்று உணர்தல் உற்று - ஓதுதலான்மிக்காரை யடைந்து (எல்லாநூல்களையும்) உணர்தலுற்று, —செல்லல் ஆர் மல் அழல் கான்போதல் உற்றார் - இன்னாமையைச் செய்யும் மிக்கவழலையுடைய கானகத்தைப் போக நினைந்தார். எ-று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்தபெருமிதம்; பயன் - பிரிவுணர்த்துதல்.

ஓத்தான் உயர்ந்தாரைக்கிடைத்து அவரோடுசாவித் தமது கல்வி மிகுதியை யறியலுற்றாரென் றுரைப்பாருமுளர். நின் புணர்முலையுற்ற வென்றதனான் முலையிடத்துத் துயிலைநினைந்து நீட்டியாது வருவரென்றும், புரவலரென்றதனான் நின்னலந் தொலையாமற் காப்பரென்றுங் கூறிப் பிரிவுடம்படுத்தாளாம்.()

### கலக்கங்கண் டுரைத்தல்.

ஓதற்[illegible]கல்வர் மேதக்கவரென
பூங்கொடிகலக்கம் பாங்கிகண்டுரைத்தது.

(எ-து.) மேதாவியாகியதலைவர்ஓதற்ககல்வரென வுரைப்பக்கேட்ட பூங்கொடிபோல்வாளாகிய தலைமகளது கலக்கங்கண்டு பாங்கி தன்னுட்கூறியது.

கற்பாமதிற்றில்லைச்சிற்றம்பலமதுகாதல்செய்த
விற்பாவிலங்கலெங்கோனைவிரும்பலர்போலவன்பர்
சொற்பாவிரும்பினரொன்னமெல்லோதிசெவிப்புறத்துக்
கொற்பாவிலங்கிலைவேல்குளித்தாங்குக்குறுகியதே.

(இ - ள்.) கல் பா மதில் தில்லை சிற்றம்பலம் அது காதல் செய்த - கல்லாற்செய்யப்பட்ட பரந்த மதிலையுடைய தில்லையின்கண் சிற்றம்பல மதனைக்காதலித்த, — வில் பா விலங்கல் எம் கோனை விரும்பலர் போல் - வில்லாகச் செய்யப்பட்ட பரந்தமலையை யுடைய எம்முடைய இறைவனை விரும்பாதாரைப் போல, — அன்பர் சொல்பா விரும்பினரொன்ன - நம் மன்பர் சொல்லா னியன்றபாவாகிய நூல்களைக்கற்க விரும்பினாரென்று சொல்ல,— மெல் ஓதி செவிப்புறத்து - (அச்சொல்) மெல்லிய கூந்தலை யுடையாளது செவியில்,— கொல் பா இலங்கு இலை வேல் குளித்தாங்கு குறுகியது-கொல்லுந் தொழில் பரந்த பிரகாசிக்கின்ற இலைபோன்ற வேல் சென்று மூழ்கினாற் போலச்சென்றெய்திற்று. ஏ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - செலவுழுங்குவித்தல்.

பொருப்பு வில்லிமேல் விருப்புடையார் கல்விக்கடல்நீந்தி வருந்தாமையின் விரும்பலர்போலச் சொற்பா விரும்பினரொன்ருள். பூங்கொடி கலக்கம் பாங்கி தன்னுளே சொல்லியது தலைமகற்குக் கூறியதென் றுரைப்பாருமுளர். (௩௧௦)

## வாய்மொழிகூறித் தலைமகள்வருந்தல்.

தீதறுகல்விக்குச் செல்வன்செல்லுமெனப்
போதுறுகுழலி புலம்பியது.

(எ - து.) (கலக்கங்கண்டுரைத்த பாங்கி,) குற்ற மற்ற கல்விக்குத் தலைமகன் செல்வதாகச்சொல்ல மலரைமுடித்த கூந்தலையுடைய தலைமகள் கூறியது.

பிரியாமையுமுயிரொன்றுவதும்பிரியிற்பெரிதுந்
தரியாமையுமொருங்கேநின்றுசாற்றினர்தையன்மெய்யிற்
பிரியாமைசெய்துநின்றோன்றில்லைப்பேரியலூரரன்ன
புரியாமையுமிதுவேயினியென்னும்புகல்வதுவே.

(இ - ள்.) தையல் மெய்யில் பிரியாமை செய்து நின்றோன் தில்லை - மாதேவியைத் தனது திருமேனியி னின்றும் பிரியாமையைச் செய்து நின்றவனது தில்லையில்,—பேர் இயல் ஊரர்- பெருந் தன்மையை யுடைய ஊரர்,—பிரியாமையும் - நம்மிற் பிரியாமையையும், — உயிர் ஒன்றுவதும் - நம்மிருவருக்கும் உயிர் ஒன்றுதலையும்,—பிரியில் பெரிதும் தரியாமையும் - பிரியின் பெரிது மாற்றுமையையும்,—ஒருங்கே நின்று சாற்றினர்- ஒருங்கே (அக்காலத்து) நம்முன் னின்று கூறினவர்,—அன்ன புரியாமையும் இதுவே - இப்பொழுது (அவற்றுள் பிரிவுகண்டமையின் அது நீங்க) மற்றவை செய்யாமையும் இதுபோலவே செய்ததோ டொக்கும், — இனி நாம் புகல்வது என் - (ஆகலான்) இனி நாம் சொல்லுவது என். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - செலவழுங்குவித்தல்.

தையல்மெய்யிற்பிரியாத பேரன்பினோனது தில்லைக்கட்பயின்றும் அன்புபேணாது பிரிதல் எங்ஙனம் வல்லராயினரென்னுங் கருத்தால் பிரியாமைசெய்து நின்றோன்றில்லைப் பேரியலூரர வென்றான். பிரிவுகாணப்பட்டமையின் அன்னவென்றது ஒழிந்த இரண்டுமேயாம். அன்னபுரியாமையு மிதுவேயென்பதற்குப் பிரிவுமுதலாகிய நமக்கின்னாதவற்றைத் தாம் செய்யாமையு மிதுவேயாயிருந்ததெனினு மமையும். இன்னல்புரியாமையு மிதுவேயென்று பாடமோதுவாரு முளர். (௩௧௧)

ஓதற்பிரிவு முற்றிற்று.

# காவற்பிரிவு.

என்பது, எல்லாவுயிர்களையும் அரசன் பாதுகாக்கவென்னுந் தருமநூல்விதியான் அக்காவற்குப் பிரிதல்.

இக்கிளவி இரண்டு துறைகளை யுடைத்து. அவை வருமாறு:—

பிரிவறிவித்தல் பிரிவுகேட்டிரங்கல், வருபவையிரண்டும் வையங்காவல்.

## பிரிவறிவித்தல்.

இருநிலங்காவற் கேகுவர்நமரெனப்
பொருசுடர்வேலோன் போக்கறிவித்தது

(எ - து.) தலைமகன் உலகத்தைப் பாதுகாப்பான் பிரியக் கருதுகின்றானெனப் பாங்கி, போர்செய்கின்ற சுடர்வேலையுடைய தலைமகனது போக்கைத் தலைமகட் கறிவித்தது.

மூப்பானிளையவன்முன்னவன்பின்னவன்முப்புரங்கள்
வீப்பான்வியன்றில்லையானருளால்விரிநீருலகங்
காப்பான்பிரியக்கருதுகின்றார்நமர்கார்க்கயற்கட்
பூப்பானலவொளிரும்புரிதாழ்குழற்பூங்கொடியே.

(இ-ள்.) கார் கயல் கண் பால்பூ நலம் ஒளிரும் புரிதாழ் குழல் பூங்கொடியே - கரிய கயல்போலும் கண்ணினையும், பூவின் பகுதியாகிய நறு நாற்றத்தால் விளங்குஞ் சுருண்ட தாழ்ந்த குழலினையு முடைய பூங்கொடியை யொப்பாய்,!—மூப்பான் - (எல்லார்க்கும்) மூத்தவன், — இளையவன் - என்றும் இளையவன்,— முன்னவன் - உலகிற்கு முன்னுள்ளவன்; — பின்னவன் - அதற்குப் பின்னு முள்ளவன், — முப்புரங்கள் வீப்பான் - மூன்று புரங்களையு மழிப்பவன்,—வியன் தில்லையான் - அகன்ற தில்லையின்க ணுள்ளவன்,—அருளால் நமர் விரிநீர் உலகம் காப்பான் பிரிய கருதுகின்றார் - (அவனது) ஏவலால் நம்மவர் சமுத்திரத்

திறைற் சூழப்பட்ட வுலகத்தைக் காக்கவேண்டிப் பிரியக் கருதுகின்றார். எ - று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - காவற்குப் பிரியும் பிரிவுணர்த்துதல்.

தில்லையா னேவலாவது - எல்லாவுயிர்களையு மரசன் காக்கவென்னுந் தருமநூல்விதி. காத்தலாவது - தன்வினைசெய்வாரானுங் கள்வரானும் பகைவரானும் உயிர்கட்கு வருமச்சத்தை நீக்குதல். தில்லையானருளா லென்பதற்கு அவனதருளானுலகத்தைக்காக்குந் தன்மையை யெய்தினானதலின் அக்காவற்குப் பிரிகின்றானென் றுரைப்பினு மமையும். (௩௧௨)

## பிரிவுகேட் டிரங்கல்.

மன்னவன்பிரிவு நன்னுதலறிந் து
பழங்கணெய்தி யழுங்கல்சென்ற து.

(எ-து.) தலைமகனது பிரிவினைத் தலைமகளறிந்து துன்பமடைந் திரங்காநின்றது.

சிறுகட்பெருங்கைத்திண்கோட்டுக்குழைசெவிச்செம்முகமாத்
தெறுகட்டழியமுன்னுய்யச்செய்தோர்கருப்புச்சிலையோ
னுறுகட்டழலுடையோனுறையம்பலமுன்னலரிற்
றுறுகட்புரிகுழலாயிதுவோவின்றுசூழ்கின்றதே.

(இ - ள்.) கள் துறு புரி குழலாய் - பூவிற் றேனையுடைய நெருங்கிய சுருண்ட குழலை யுடையாய்!—சிறு கண் பெரு கை திண் கோடு குழை செவி செம் முகம் மா - சிறிய கண்ணினையும் பெரிய கையினையுந் திண்ணிய கோட்டினையுங் குழைந்த செவியினையும் சிவந்த முகத்தினையுமுடைய யானையினது,— தெறு கட்டு அழிய முன் உய்யச் செய்தோர் - வருத்தும் வளைப்புக்கெடக் (குரவராற் பாதுகாக்கப் படும்) முற்காலத்து நம்மையுய்வித்தவர், — கருப்பு சிலையோன் உறு கண் தழல் உடையோன் உறை அம்பலம் உன்னலரின் - கருப்பு வில்லையுடைய

மன்மதனைக் காய்ந்த கண்ணிற் றீயையுடையவ னுறையும் அம்பலத்தை நினையாதவரைப்போல,—இன்று சூழ்கின்றது இதுவோ - (கண்ணோட்டமின்றித் தம்மல்ல தில்லாத) இக்காலத்து நினைக்கின்ற திதுவோ (இது தகுமோ). எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன். - செலவழுங்குவித்தல்.

அக்காலம் - குரவராற் காக்கப்பட்ட காலம்; இக்காலம் இவளையன்றி வேறு காவலரில்லாத காலம். தெறுகட்டழீஇமுன்ன முய்யச்செய்தோனென்பது பாடமாயின் தெறுகின்றவிடத்துத் தழுவி முன்னம்மை யுய்வித்தவனென்றுரைக்க. கருப்புச்சிலையோ னென்பதனை எழுவாயாக்கியுரைப்பினு மமையும். (௩௪௩)

காவற்பிரிவு முற்றிற்று.

---

## பகைதணிவினைப்பிரிவு.

என்பது, தம்மிற்பகைத்த வேந்தரைப் பகையைத்தணித்து இருவரையும் பொருந்தப்பண்ணுதல்.

இக்கிளவி இரண்டு துறைகளை யுடைத்து. அவை வருமாறு:—

பிரிவுகூறல் வருத்தந்தணித்தல், இருபகைதணித்தற் சேறலென்ப.

### பிரிவுகூறல்.

துன்னுபகைதணிப்ப மன்னவன்பிரிவு
நன்னறுங்கோதைக்கு முன்னிமொழிந்தது.

(எ-து.) (தம்முட்பகைத்த இருவேந்தரது) நெருங்கிய பகையைத் தணிக்கத் தலைமகன் பிரியலுறாநின்றமை (பாங்கி) நல்லவாசனை பொருந்திய கூந்தலை யுடைய தலைமகட்குக் கூறியது.

மிகைதணித்தற்கரிதாமிருவேந்தர்வெம்போர்மிடைந்த
பகைதணித்தற்குப்படர்தலுற்றார்நமர்பல்பிறவித்[பொழில்வாய்
தொகைதணித்தற்கென்னையாண்டுகொண்டோன்றில்லைச்சூழ்
முகைதணித்தற்கரிதாம்புரிதாழ்தருமொய்குழலே.

(இ - ள்.) பல் பிறவி தொகை தணித்தற்கு என்னை ஆண்டு கொண்டோன் - பல பிறவித் தொகையான் வருந் துன்பத் தைத் தணித்தற்கே யென்னை யடிமை கொண்டவனது, — தில்லை சூழ் பொழில்வாய் முகை தணித்தற்கு அரிதாம் - தில்லைக்கண் சூழ்ந்த பொழிலிடத் துளவாகிய போதுகளான் மாற்று தற் கரிதாம் (நறுநாற்றத்தை யுடைய),—புரி தாழ்தரு மொய் குழலே-சுருண்ட தாழ்ந்த நெருங்கிய கூந்தலை யுடையாய்,— மிகை தணித்தற்கு அரிதாம் - ஒருவ ருள்ளமிகுதியை யொருவர் தணித்தற் கரிதாகா நின்ற, — இரு வேந்தர் வெம் போர் மிடைந்த பகை தணித்தற்கு - இரு வேந்தரது வெய்ய போர் நெருங்கிய பகையை மாற்றுதற்கு,—நமர் படர்தலுற்றார் - நம் மவர் போக நினைந்தார். எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன்-பகைதணிவினை யிடைப்பிரி வுணர்த் துதல்.

மிகைதணித்தற் கரிதாம்பகையென வியையும். எளிதிற்சந்து செய்வித்துக் கடிதின்மீள்வரொன்பது பயப்ப, மிகைதணித் தற்கரிதாம் இருவேந்த ரென்றதனால் ஒத்தவலியின ராதலும், வெம்போர்மிடைந்த வென்றதனால் ஒத்ததொலைவினராதலுங் கூறினாளாம். (௩கச)

### வருத்தந்தணித்தல்.

மணிப்பூண்மன்னவன் றணப்பதில் லை
அஞ்சல்பொய்யென வஞ்சியைத்தணித் தது

(எ-து.) பாங்கி, தலைமகனது பிரிவுகேட்டு வருந் தாநின்ற கொடிபோல்வாளாகிய தலைமகட்கு மணிப் பூணையணிந்த தலைமகன் உன்னை விட்டுப் பிரிவதில்லை, அவர்போக்குப் பொய், நீ அஞ்சவேண்டாமென அவ ள்வருத்தந் தணித்தது.

நெருப்புறுவெண்ணெயுநீருறுமுப்புமெனவிங்ஙனே
பொருப்புறுதோகைபுலம்புறல்பொய்யன்பர்போக்குமிக்க
விருப்புறுவோனைவிண்ணோரின்மிகுத்துநண்ணார்கழியத்
திருப்புறுசூலத்தினோன்றில்லைபோலுந்திருநுதலே.

(இ - ள்.) மிக்க விருப்பு உறுவோனை - (தன்னிடத்து) மிகுந்தவன்புடையவனை, — விண்ணோரின் மிகுத்து - தேவரினுமிகச்செய்து,—நண்ணார் கழிய - பகைவர் மாய, — திருப்புறு சூலத்தினோன் தில்லை போலும் திரு நுதலே - விதிர்க்கப்படுஞ் சூலவேலை யுடையவனது தில்லை போலு மழகிய நுதலை யுடையாய்! — பொருப்பு உறு தோகை - பொருப்பைச் சேர்ந்த மயில்போல்வாய்! —நெருப்பு உறும் வெண்ணெயும் நீர் உறும் உப்பும் என - தீயையுற்ற வெண்ணெயும் நீரையுற்ற வுப்பும் போல, — இங்ஙன் புலம்புறல் - இவ்வாறு வருந்தா தொழி,— அன்பர் போக்கு பொய் - அன்பர் நின்னை விட்டுப் பிரிந்த தெனல் பொய். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளை யாற்றுவித்தல். (௩௧௫)

பகைதணி வினைப்பிரிவு முற்றிற்று.

---

## வேந்தற்குற்றுழிப்பிரிவு.

என்பது, ஒருவேந்தனுக் கொருவேந்தன் றொலைந்துவந்தடைந்தால் அவனுக்குதவி செய்யப்பிரியாநிற்றல்.

இக்கிளவி பதினாறுதுறைகளையுடைத்து. அவை வருமாறு:—

பிரிந்தமைகூறல் பிரிவாற்றாமை, கார்மிசைவைத்தல் காரைநோக்கி, வருந்தியுரைத்தல் மலர்க்குழலரிவை, கூதிர்கண்டுகவறல் குளிர்முன்பனிக்கவள், நொந்துகூறல் நோக்கிப்பின்பனிக்

இரங்கியுரைத்த இளவேனில்கண்டவள், இன்னலெய்தல்இது வவர்குறித்த, பருவமாமென வரவுகூறல், பருவமறைத்துரைத் தல் மறுத்துரைத்தல்லொடு, தேர்வரவுகூறல் வினைமுற்றிநினை தல், நிலைமைநினைந்துரைத்தன் முகிலொடுகூறல், வரவெடுத்து ரைத்தல் மறவாமைகூறல், மற்றிவையீரொட்டு முற்றுழிப்பிரி வாம். ௬

## பிரிந்தமைகூறல்.

விறல்வேந்தர் வெம்முனைக்க ட
டிறல்வேந்தர் செல்வமொன்ற து.

(எ - து.) பாங்கி, வெற்றியையுடைய தலைமகன் வெய்யபோரையுடைய பாசறைக்கண் செல்வனென னத் தலைமகட் கறிவித்தது.

போதுகுலாய்புனைமுடிவேந்தர்தம்போர்முனைமேன்
மாதுகுலாயமென்னோக்கிசென்றார்நமர்வண்புலியூர்க்
காதுகுலாயகுழையெழிலோனைக்கருதலர்போ
லேதுகொலாய்விளைகின்றதின்றென்றரிடுமதிலே.

(இ - ள்.) மாது குலாய மெல் நோக்கி - மடமை பொருந் திய அழகு பெற்ற மெல்லிய நோக்கத்தை யுடையாய்!—போது குலாய புனை முடி வேந்தர்தம் போர் முனைமேல் - பூவழகு பெற்ற புனைந்த முடியையுடைய அரசரது போரையுடைய பாச றைமேல்,—நமர் சென்றார் - நம்மவர் சென்றனர்,— வண் புலி யூர் காது குலாய குழை எழிலோனைக் கருதலர்போல் - வளப் பத்தையுடைய புலியூரில் காதழகு பெற்ற குழையா லுண்டா கிய அழகையுடையவனை நினையா தாரைப்போல,— ஒன்றார் இடுமதில்-பகைவரா லிடப்பட்ட மதில்,—இன்று ஏதாய் விளை கின்றது - இன்று யாதாய் முடியுமோ. எ-று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த பெருமிதம் ; பயன் - வேந்தற் குற்றுழிப் பிரிவுணர்த்துதல்.

வினைமுடித்துக்கடிது மீள்வரென்பது பயப்ப ஒன்னாரிடுமதி லின்றே யழியுமென்று கூறினாளாம். சென்றாரெனத் துணிவு பற்றி இறந்தகாலத்தாற் கூறினாள். கொல் - அசை. (௩௧௬)

**பிரிவாற்றாமை கார்மிசைவைத்தல்.**

வேந்தற்குற்றுழி விறலோன்பிரி ய
ஏந்திழைபாங்கிக் கெடுத்துரைத்த து.

(எ - து.) ஓர் வேந்தனுக்கு நேர்ந்த துன்பத்தை நோக்கித் தலைமகன்பிரியத் தலைமகள், பாங்கிக்கெடுத்துச் சொன்னது.

**பொ**ன்னிவளைத்தபுனல்சூழ்நிலவிப்பொலிபுலியூர்
வன்னிவளைத்தவளர்சடையோனைவணங்கலர்போற்
றுன்னிவளைத்தநந்தோன்றற்குப்பாசறைதோன்றுங்கொலோ
மின்னிவளைத்துவிரிநீர்கவரும்வியன்முகிலே.

(இ - ள்.) பொன்னி வளைத்த புனல் சூழ் நிலவி பொலி புலியூர் - காவேரி நதி சுற்றுதலா லுண்டாகிய நீரால் சூழப்பட்ட நிலைபெற்றுப் பொலிகின்ற புலியூரில்,—வன்னி வளைத்த - வன்னித் தளிரால் சூழப்பட்ட, — வளர் சடையோனை வணங்கலர் போல் - நீண்ட சடையை யுடையவனை வணங்காதாரைப் போல,—துன்னி வளைத்த நம் தோன்றற்கு - பகைவரைக் கிட்டிவளைத்த நம்முடைய தோன்றலுக்கு,—மின்னி வளைத்து விரி நீர் கவரும் வியன் முகில் - மின்னி வளைத்துப் பரந்த கடலைப் பருகும் இப்பெரிய மேகம்,—பாசறை தோன்றுங் கொலோ - பாசறைக் கண்ணே சென்று தோன்றுமோ. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுவித்தல்.

வளைத்தலை விரிநீர்மேலேற்றினுமமையும். தோன்றுமாயின் அவர் ஆற்றாராவரென யானாற்றே னாகின்றேனென்பது கருத்து. பொன்னிவளைத்த புனலென்பதற்குப் பொன்னியாற் றகையப்பட்ட புனலென்றும், வன்னிவளைத்த வென்பதற்குத் தீயை வளைத்தாற்போலுஞ் சடையென்றுமுரைப்பாருமுளர். (௩௧௭)

**வானோக்கி வருந்தல்.**

மானோக்கி வடிவுநினைந்தோன்
வானோக்கி வருந்தியது.

(எ - து.) உற்றுழிப்பிரிந்தபின், மான்போலும் பார்வையுடைய தலைமகளது வடிவத்தை நினைந்த தலைமகன் வானைநோக்கி வருந்தியது.

கோலித்திகழ்சிறகொன்றினொடுக்கிப்பெடைக்குருகு
பாலித்திரும்பனிபார்ப்பொடுசேவல்பயிலிரவின்
மாலித்தனையறியாமறையோனுறையம்பலமே
போலித்திருநுதலாட்கென்னதாங்கொலென்போதரவே.

(இ - ள்.) சேவல் பார்ப்பொடு பெடைகுருகு திகழ் சிறகு ஒன்றின் கோலி ஒடுக்கி பாலித்து இரு பனி பயில் இரவில் - சேவலானது தன் குஞ்சுகளோடு பெட்டைக் குருகை விளங்குகின்ற தன் சிறகொன்றினாற் கோலியொடுக்கிப் பாதுகாத்து மிக்க பனியால் வருந்து மிரவின்கண், — மால் இத்தனை அறியா மறையோன் உறை அம்பலம் போல் - திருமால் சிறிது மறியாத அந்தணன் வசிக்கும் அம்பலத்தைப் போல, — இ திரு நுதலாட்கு - இவ்வழகிய நெற்றியை யுடையாளுக்கு, — என் போதரவு என்னதாங்கொல் - எனது போக்கு எத்தன்மையதாகுமோ. எ-று. மெய்ப்பாடு-அச்சம்; பயன் - மீளற் கொருப்படுதல்.

•இரவினென்னதா மெனவியையும். போலித்திருநுதலாட்கு அம்பலம்போலு மித்திருநுதலாட்கென் றுரைப்பினு மமையும் இத்திருநுதலா ளென்றான் தன்னெஞ்சத்தளாகலின். (௩௧௮)

**௬௯. நீர்கண்டுகேவறல்.**

இருங்கூதி ரெதிர்வுகண்டு
கருங்குழலி கவலையுற்றது.

(எ - து.) பெரியகூதிர்ப்பருவம் வருவதுகண்டு தலைமகள் கவலையடைந்தது.

கருப்பினமேவும்பொழிற்றில்லைமன்னன்கண்ணாரருளால்
விருப்பினமேவச்சென்றார்க்குஞ்சென்றல்குங்கொல்வீழ்பனிவா
னெருப்பினமேநெடுமாலெழிற்றோன்றச்சென்றாங்குநின்ற [ய்
பொருப்பினமேறித்தமியரைப்பார்க்கும்புயலினமே.

(இ - ள்.) வீழ் பனிவாய் - வீழ்கின்ற பனியிடத்து,—நெருப்பு இனம் மேவ - எல்லோரும் நெருப்புத் திரளை விரும்ப, — நெடு மால் எழில் தோன்ற சென்று - நெடிய மாயவனது அழகு கண்டார்க்குப் புலப்படும்படிச் சென்று,—ஆங்கு நின்ற பொருப்பினம் ஏறி தமியரை பார்க்கும் புயலினம் - அவ்விடத்து நின்ற மலைத்திரளை யேறித் துணையில்லா தவரைத் தேடும் மேகக்கூட்டங்கள், — கரும்பு இனம் மேவும் பொழில் தில்லை மன்னன்கண் ஆர் அருளால் - கரும்புத்திரள் பொருந்தும் பொழிலையுடைய தில்லையின் மன்னவன்கண்ணாகிய மிக்க வருளான், — விருப்பு இனம் மேவ சென்றார்க்கும் - விருப்பை யுடைய தம்மினம் (தம்மா லுதவி பெற்றுப்) பொருந்தும் வண்ணஞ் சென்றவர்க்கும், — சென்று அல்குங்கொல் - சென்று தங்குமோ. எ - று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - தோழியை யாற்றுவித்தல்.

நெருப்பினமே யென்பதனைப் புயன்மேலேற்றி இடிநெருப்பென்றும், சென்றென்பதனை மலைமேலேற்றி உயர்ந்தென்றும் உரைப்பினு மமையும். (௩௧௯)

முன்பனிக்கு நொந்துரைத்தல்.

ஆன்றபனிக் காற்றாதழிந் து
ஈன்றவளை யேழைநொந்த து.

(எ - து.) தலைமகள் மிகுந்த பனிக்காற்றாதுவருந்தித் தன் தாயொடுநொந்து கூறுகின்றது.

சுற்றினவீழ்பனிதூங்கத்துவண்டுதுயர்கவென்று
பெற்றவளேயெனைப்பெற்றாள்பெடைசிறகானொடுக்கிப்
புற்றிலவாளரவன்றில்லைப்புள்ளுந்தம்பிள்ளைதழீஇ
மற்றினஞ்சூழ்ந்துதுயிலப்பெறுமிம்மயங்கிருளே.

(இ - ள்.) புற்றில வாள் அரவன் தில்லை புள்ளும் - புற்றை யுடைய வல்லாத ஒளிபொருந்திய பாம்பை யணிந் தவனது தில்லையின்கணுள்ள பறவைகளும்,—பெடை சிறகான் ஒடுக்கி தம்பிள்ளைதழீஇ இனம் சூழ்ந்து துயில பெறும் இமயங்கு இருள்-பெட்டையைச் சிறகா னொடுக்கித் தமது பிள்ளைகளையுந் தழுவி யினஞ் சூழ்ந்து நித்திரைசெய்யப் பெறுகின்ற இச்செறிந்த விருளின்கண், — சுற்றின வீழ்பனி தூங்க துவண்டு துயர்க என்று - (மேனியெங்குஞ்) சுற்றிப் பெய்கின்ற பனி இடையறாது பெய்ய அதனால் துவண்டு துயர்வாயாக வென்று,—எனை பெற்றவளே பெற்றாள் - என்னை யீன்றவளே யீன்றாள், (இனியான் யாரைநோவது). எ-று. மெய்ப்பாடு-அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

சுற்றினதூங்க வெனவியையும். மயங்கிருட்கட்டுயர்வாயாக வெனக் கூட்டுக. மற்று அசைநிலை. சுற்றினவென்பது பெயரெச்சமுமாம். (௩௨0)

பின்பனி நினைந்திரங்கல்.

இரும்பனியி னெதிர்வுகண்டு
சுரும்பிவர்குழலி துயரநினைந்தது.

(எ - து.) பின்பனியி னெதிர்தலைக்கண்டு வண்டு மொய்க்குங் கூந்தலையுடைய தலைமகளது துயரந் தலைமகன்நினைந்து வருந்தியது.

புரமன்றயரப்பொருப்புவில்லேந்திப்புத்தேளிர்நாப்பட்
சிரமன்றயனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலமனையாள்

பரமன்றிரும்பனிபாரித்தவாபரந்தெங்கும்வையஞ்
சரமன்றிவான்றருமேலொக்குமிக்கதமியருக்கே.

(இ - ள்.) இரும் பனி வையம் எங்கும் பரந்து பாரித்தவா — பெரிய பனி வையமெங்கும் பரந்து (துவலைகளைப்) பரப்பிய வாறு,—புரம் அயர அன்று பொருப்புவில் ஏந்தி புத்தேளிர் நாப்பண் அயனை அன்று சிரம் செற்றோன் - புரம் வருந்த அன்று வரையாகிய வில்லையேந்தித் தேவர் நடுவே அயனைக் கோபித்துச் சிரமரிந்தவனது, — தில்லைச் சிற்றம்பலம் அனையாள் பரமன்று - தில்லையின்கணுள்ள சிற்றம்பலத்தை யொப்பாள் அளவன்று, — மிக்க தமியருக்கு - மிகுந்த தனிமையை யுடையாருக்கு (இப்பனி உயிர்கவர வெகுண்டு), — வான் சரம் தருமேல் ஒக்கும் - வான் பாணத்தைத் தருமாயின் அதனோடொக்கும். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - தலைமகளை யாற்றுவித்தல்.

பரந்தெங்குந் தருமேலென்றியைப்பினு மமையும். இக்காலத்து அவளாற்றுமை சொல்லவேண்டுமோ எனக்கு மாற்றுதலரிதென்பது போதரத் தமியருக்கெனப் பொதுமையாற் கூறினான். இதனைத் தோழிக்கூற்றாக வுரைப்பாருமுளர். (௩௨௧)

### இளவேனில்கண் டின்னலெய்தல்.

இன்னிளவேனில் முன்னுவதுகண் டு
மென்னகைப்பேதை யின்னலெய்திய து.

(எ - து.) இளவேனிற்பருவம் முந்துவது கண்டு மென்னகையையுடைய தலைமகள் துன்பமெய்தியது.

வாழும்படியொன்றுகண்டிலம்வாழியிம்மாம்பொழிற்றேன்
சூழுமுகச்சுற்றும்பற்றினவாற்றெண்டையங்கனிவா
யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலமாதரியாக்
கூழின்மலிமனம்போன்றிருளாகின்றகோகிலமே.

(இ - ள்.) அம் தொண்டை கனி வாய் - அழகிய தொண்டைக் கனிபோலும் வாயினையும்,—யாழின் மொழி மங்கை பங்கன் - யாழோசை போலுமினிய மொழியினையு முடைய உமா தேவியின் கூற்றை யுடையவனது, — சிற்றம்பலம் ஆதரியா கூழின் மலிமனம் போன்று - சிற்றம்பலத்தை விரும்பாத உணவாற் செருக்குற்ற மனம்போல, — இருளாநின்ற கோகிலம் — கருநிறம் பெற்றிருளா நின்ற குயில்கள், — இ மாம்பொழில் தேன் சூழு முகம் சுற்றும் பற்றின - இம்மாஞ் சோலையின்கண் (குடைதலால்) தேன் சுற்றுமுக மெங்கும் வந்து பற்றின,—வாழும்படி ஒன்றும் கண்டிலம் - இனியுயிர் வாழுமாறு ஒன்றும் கண்டிலேம். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமை நீங்குதல்.

வாழியென்றது வாழ்வாயாகவென்னும் பொருட்டாய் எதிர் முகமாக்கி நின்றது. தேன்சூழுமுகைச்சுற்றும் பற்றினவென்பது பாடமாயின் மலருமளவுங் காலம்பார்த்துத் தேன்கள்சூழு முகையென்க. "இளவிதிலையே வினையிடத்துணையார் - வென்றிக்காலத்து விளங்கித்தோன்றும்" என்பதனுன் இக்கிளவியை நீதுங் காலங்காட்டவேண்டி இத்துறையுட் கூறினுனென்பது கருத்தாகக் கொள்க. (கூஉஉ)

## பருவங்காட்டி வற்புறுத்தல்.

கார்வருமெனக் கலங்குமாதனைத்
தேர்வருமெனத் தெளிவித்தது.

(எ-து.) கார்ப்பருவம் வருமென்று கலங்குகின்ற தலைமகளுக்குத் தலைமகனது தேர்வருமெனத் தெருட்டியது.

பூண்பதென்றேகொண்டபாம்பன்புலியூரரன்மிடற்றின்
மாண்பதென்றேயெணவானின்மலருமணந்தவர்தேர்

**காண்பதன்றேயின்றுநாளையிங்கேவரக்கார்மலர்த்தேன்**
**பாண்பதன்றேர்குழலாயெழில்வாய்த்தபனிமுகிலே.**

(இ - ள்.) கார் மலர் தேன் பாண் பதம் தேர் குழலாய்-கார் காலத்து மலரையூதும் வண்டுகளின் பாட்டினது செவ்வியை யாராயும் குழலை யுடையாய்!—பூண்பது என்றே கொண்ட பாம்பன் - பூணப்படும் ஆபரணமென்றே கொள்ளப்பட்ட பாம்பினையுடையான், — புலியூரரன்-சிதம்பர நகரத்தை யுடைய அரனென்னுந் திருநாமத்தை யுடையான்,—மிடற்றின் மாண்பதென்றே என்ன - (அவனது) கண்டத்தினழகாமென்று கருதும் வண்ணம்,—எழில் வாய்த்த பனி முகில்-அழகுபொருந்திய குளிர்ந்தமேகங்கள்,— வானில் மலரும் - ஆகாயத்தினிடத்திற் பரவாநின்றன,—மணந்தவர் தேர் இன்று நாளை இங்கே வர காண்பதன்றே - (அதனால்) நம்மைக் கலந்தவரது தேர் இன்றாக நாளையாக இங்கு வராநிற்பக் காணப்படுவ தல்லவே. (இனி யாற்றுயாகற் பாலையல்லை). எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - தலைமகளை வற்புறுத்தல்.

தேர் இங்கே வருவதனைக் காணுமதல்லவே இனியுள்ளதென மொழிமாற்றி யுரைப்பினுமமையும். கான்மலரென்பதூஉம் எழிலாயவென்பதூஉம் பாடம். (௩௨௩)

### பருவமன் றென்றுகூறல்.

காரெனக்கலங்கு மேமொழிற்கண்ணிக்
கின்றுணைத்தோழி யன்றென்றுமறுத்தது.

(எ-து.) கார்ப்பருவமெனக் கலங்குகின்ற மிக்க வழகமைந்த கண்ணையுடைய தலைமகளுக்கு, இனிமையாகிய உயிர்ப்பாங்கி, அவள்கலக்கமொழிய அது கார்ப்பருவமன் றென்றது.

**தெளிதரற்காரெனச்சீரனஞ்சிற்றம்பலத்தடியேன்**
**களிதரக்கார்மிடற்றோனடமாடக்கண்ணார்முழவந்**

துளிதரற்காரெனவார்த்தனவார்ப்பத்தொக்குன்குழல்போன்
றளிதரக்காந்தளும்பாந்தளைப்பாரித்தலர்ந்தனவே.

(இ - ள்.) அடியேன் களிதர - அடியேன் களிப்பையுண்டாக்க, — சிற்றம் பலத்துகார் மிடற்றோன் நடமாட - சிற்றம்பலத்தின்கண்ணே கரியகண்டத்தையுடையவன் நடனஞ்செய்யாநிற்ப,—கண் ஆர் முழவம் துளி தரல் காரென ஆர்த்தன - முகமமைந்த முழவங்கள் துளியைத்தருதலையுடைய மேகம்போல முழங்கின, — ஆர்ப்ப காந்தளும் தொக்கு ஊன் குழல் போன்று அளி தர பாந்தளை பாரித்து அலர்ந்தன - முழங்க (அவற்றை முழவமென்றுணராது) காந்தளும், திரண்டு உன் குழலையொத்து (நறு நாற்றம்) வண்டுகளைக்கொணர்தர, பாம்பு போலும் (தடிப்புகளைப்) பரப்பியலர்ந்தன,—சீர் அனம் - (அதனால்) சீரையுடைய அன்னமே! — கார் என தெளிதரல் - இதனைக்காரென்று தெளியற்பாலை யல்லை எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளை வற்புறுத்தல்.

களித்தரவென்பது - களிதரவென்றுநின்ற தெனினுமமையும். பாரித்தென்பது-உவமச்சொல்லெனினுமமையும். (௩௨௪)

## மறுத்துக்கூறல்.

பருவமன்றென்று பாங்கிபக ர
மருவமர்கோதை மறுத்துரைத்த து.

(எ-து.) பாங்கி கார்ப்பருவமன்றென்றுகூற மணந்தங்கிய மாலையினையுடைய தலைமகள் அவளோடு மறுத்துக்கூறியது.

தேன்றிக் கிலங்கு கழலழல் வண்ணன் சிற்றம்பலத்தெங், கோன்றிக் கிலங்கு திண்டோட்கொன்றைக் கண்டன்குழை யெழிலுண், போன்றிக் கடிமலர்க் காந்தளும்போந்த வன்கையனல்போற், றோன்றிக் கடிமலரும் பொய்ம்மையோ மெய்யிற் றோன்றுவதே.

(இ-ள்) தேன் - தேனையொப்பான், — திக்கு இலங்கு கழல் அழல் வண்ணன் - திசைகளிலே விளங்காநின்ற வீரக்கழலையுடைய அழல் வண்ணன், — சிற்றம்பலத்து எம் கோன் - சிற்றம்பலத்தின்க ணுளனாகிய எம்முடைய இறைவன், — திக்கு இலங்கு திண் தோள் கொண்டல் கண்டன் - திசைகளிலே விளங்கா நின்ற திண்ணிய தோள்களையும், மேகம்போலும் கண்டத்தையுமுடையவன், — குழை எழில் நாண் போன்று - (அவனது) குண்டலமும், அழகுபொருந்திய நாணுமாகிய பாம்பையொத்து,—இ கடி மலர் காந்தளும் போந்து - இக்கடிமலரையுடையகாந்தளினது துடுப்புகளும் புறப்பட்டு, — அவன் கை அனல்போல் தோன்றி கடி மலரும் மெய்யில் தோன்றுவது பொய்ம்மையோ - அவனது கரத்தின்கண் விளங்குந் தீயைப்போலத்தோன்றியினது புது மலரும் மெய்யாகத் தோன்றுகின்ற இது பொய்யோ? எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன்-ஆற்றுமைநீங்குதல்.

கடி-நாற்றம், கடிமலர்-முதலாயின தன்பொருட்கேற்றவடை. மெய்யிற்றோன்றுவ தென்பதற்கு மெய்போலத்தோன்றுவ தெனினு மமையும். காந்தளுமின்றென்பதூஉம்பாடம். (௩௨௫)

**தேர்வரவுகூறல்.**

பூங்கொடி மருளப்
பாங்கி தெருட்டியது.

(எ - து.) பூங்கொடி போல்வாளாகிய தலைமகள் மருள, அவள் கலக்கந்தீரப் பாங்கி, தலைமகனது தேர் வரவுகூறித் தெளிவித்தது.

திருமாலறியாச்செறிகழற்றில்லைச்சிற்றம்பலத்தெங்
கருமால்விடையுடையோன்கண்டம்போற்கொண்டலெண்டி [சையும்
வருமாலுடன்மன்பொருந்தறிருந்தமணந்தவர்தேர்
பொருமாலயிற்கணல்லாயின்றுதோன்றுநம்பொன்னகர்க்கே.

(இ - ள்.) திருமால் அறியா செறிகழல் - திருமாலா லறியப் படாத செறிந்த வீரக்கழலணிந்த திருவடியையுடைய,—தில்லைச்சிற்றம்பலத்து எம் கரு மால் விடையுடையோன் - தில்லையிற் சிற்றம்பலத்தின் கணுளனாகிய எம்முடைய கரிய விஷ்ணுவாகிய விடையை யுடையவனது, — கண்டம் போல் - கண்டத்தைப்போல (இருண்டு), — கொண்டல் எண்டிசையும் வரும் - மேகங்கள் எட்டுத் திசைக்கண்ணும் வாராநின்றன, — பொரும் மால் அயில் கண் நல்லாய் - (அதனால்) தம்மிற் பொரும் பெரிய வேல்போலுங் கண்ணையுடைய நல்லாய், — மணந்தவர் தேர் - நம்மைக் கலந்தவரது தேர், — உடன் மன் பொருந்தல் திருந்த - உடன்ற மன்னவர் தம்முட்பொருந்தல் திருந்துதலால், — நம் பொன் நகர்க்கு - நம்முடைய பொலிவினையுடைய இல்லின்கண், — இன்று தோன்றும் - இன்று வந்து தோன்றும். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளை யாற்றுவித்தல்.

உடன்மன் பொருந்தறிருந்த மணந்தவரென்பதற்கு மன்னர் பொருந்தும் வண்ணம் அவரைச்சென்று கூடினவரொன் றுரைப்பாருமுளர். ஆல் - அசை. (௩௨௬)

**வினைமுற்றிநினைதல்.**

பாசறைமுற்றிப் படைப்போர்வேந்தன்
மாசறுபூண்முலை மதிமுகநினைந்தது.

(எ - து.) பாசறைக்குச் சென்ற வினைமுடித்துப் பின்னர் படையொடுசென்ற போர்வேந்தன் குற்ற மற்றபூணை யணிந்த முலையையுடைய தலைமகளது மதியை யொக்குமுகத்தை யெண்ணியது.

புயலோங்கலர்சடையேற்றவன்சிற்றம்பலம்புகழு
மயலோங்கிருங்களியானைவரகுணன்வெற்பின்வைத்த

கயலோங்கிருஞ்சிலைகொண்டுமென்கோபமுங்காட்டிவருஞ்
செயலோங்கெயிலெரிசெய்தபினின்றோர் திருமுகமே.

(இ - ள்.) செயல் ஓங்கு எயில் எரிசெய்தபின் இன்று ஓர் திருமுகம் - செய்தலையுடைய வுயர்ந்த மதிலை யெரியாக்கிய பின் இன்று திருவையுடையதொருமுகமானது, — புயல் ஓங்கு அலர்சடை ஏற்றவன் - கங்கையை உயர்ந்த விரிந்த சடையின்க ணேற்றவனது, — சிற்றம்பலம் புகழும் மயல் ஓங்கு இரு களியானை வரகுணன் - சிற்றம்பலத்தையே பரவும் மயக்கத்தையுடைய வுயர்ந்த பெரிய களியானையையுடைய வரகுணன், — வெற்பின் வைத்த கயல் - இமயமலையின்கண்வைத்த கயல்போலுங் கண்ணையும், — ஓங்கு இரு சிலைகொண்டு - மிகப்பெரிய வில்லைப்போலும் புருவத்தையுமுடைத்தாய், — மன் கோபமும் காட்டிவரும் - தங்கிய இந்திரகோபம்போலும் வாயையுங்காட்டி வராநின்றது. (கடிது போதும்). எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - தேர்ப்பாகன் கேட்டுக்கடிதூர்தல்.

இன்று ஓராணையோலை அரையன் பொறியாகிய கயலையும் வில்லையு முடைத்தாய் மன்னன் முனிவையுங்காட்டி வராநின்றதெனச் சிலேடை வகையான் ஒருபொருள் தோன்றியவாறறிக.

நிலைமைநினைந்துகூறல்.

பொற்றொடிநிலைமை மற்றவனினைந்
திருந்துதேர்ப்பாகற்கு வருந்துபுபுகன்றது.

(எ-து.) பொன்றொலாகிய தொடியை யுடையாளாகிய தலைமகளது நிலைமையைத் தலைமகனெண்ணித் திருந்திய தேர்ப்பாகனுக்கு நீ விரையத் தேரைச் செலுத்தெனக் கூறியது.

சிறப்பிற்றிகழ்சிவன்சிற்றம்பலஞ்சென்றுசேர்ந்தவர்தம்
பிறப்பிற்றுனைந்துபெருகுகதேர்பிறங்குமொளியார்

சிறப்பொற்புரிசைமறுகினிற்றுன்னிமடநடைப்புள்
ளிறப்பிற்றுயின்றுமுற்றத்திரைதேருமெழினகர்க்கே.

(இ-ள்.) பிறங்கும் ஒளி ஆர் நிறம் பொன் புரிசை மறுகினில் துன்னி - மிக்க வொளிபொருந்திய நிறத்தையுடைய செம்பொனானியன்ற வுயர்ந்த மதிலையுடைய வூரின் தெருவின்கண் சேர்ந்து,—மடம் நடை புள் இறப்பில் துயின்று முற்றத்து இரை தேரும் எழில் நகர்க்கு - (விளையாடும்) மெல்லிய நடையையுடைய மாடப்புறுக்கள் இறப்பின்கண் துயின்று, முற்றத்தின்கண் இரைதேர்ந் துன்னும் (அவளிருந்த) அழகிய இல்லத்திற்கு, — சிறப்பில் திகழ் சிவன் சிற்றம்பலம் சென்று சேர்ந்தவர்தம் - சிறப்புக்களாற் பொலியுஞ் சிவனது சிற்றம்பலத்தைச் சென்றடைந்தவரது, — பிறப்பில் துனைந்து பெருகுக தேர் - பிறவி போல விரைந்து முடுகுவதாக, இத்தேர். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - கேட்டபாகன் விரைந்து தேர் பண்ணுவானாதல்.

சிற்றம்பலஞ் சென்று சேர்ந்தவர் பிறவியிறுதிக்கண் பேரின்பமெய்து மாறுபோல, யானுஞ் சுரஞ்செல விறுதிக்கண் பெருந்தோள் முயங்குவ லென்னுங் கருத்தால் பிறப்பிற்றுனைந்து பெருகுகதேரென்றான். துன்னுமென்பதூஉம் பாடம். (௩௨௮)

## முகிலொடுகூறல்.

முனைவற்குற்றுழி வினைமுற்றிவருவோ ன்
கழுமலெய்திச் செழுமுகிற்குரைத்த து.

(எ-து.) தனக்கு நட்பாளனாகிய அரசனொருவனுக்கு ஆபத்தெய்திய விடத்து அதனை யொழித்து வருந்தலைமகன் செழுமையாகிய மேகத்தைக்கண்டு துயரமெய்தி அதனோடு முழங்கவேண்டாமெனக் கூறியது.

**அருந்தேரழிந்தனமாலமென்றோலமிடுமிமையோர்**
**மருந்தேரணியம்பலத்தோன்மலர்த்தாள்வணங்கலர்போற்**
**றிருந்தேரழிந்துபழங்கண்டருஞ்செல்விசீர்நகர்க்கென்**
**வருந்தேரிதன்முன்வழங்கேன்முழங்கேல்வளமுகிலே.**

(இ - ள்.) **ஆலம் அருந்து** - நஞ்சையுண்ணவேண்டும், **ஏர் அழிந்தனம்** - (அன்றேல் அந்நஞ்சால்) அழகழிந்தோம், **என்று ஓலமிடும் இமையோர்** - என்று முறையிடுந்தேவர்க்கு, **மருந்து** - (அந்நஞ்சால் வரும் இடர்க்கு) மருந்தாயவன், **ஏர் அணி அம்பலத்தோன்** - அழகையுடைய அம்பலத்தின் கண் வீற்றிருப்பவன்,—**மலர் தாள் வணங்கலர் போல்** - (அவனது) மலர் போலும் தாளைவணங்காதாரைப்போல, — **திருந்து ஏர் அழிந்து** - திருந்திய அழகெல்லாமழிந்து, — **பழங்கண் தரும் செல்வி சீர் நகர்க்கு** - துன்பத்தையுண்டாக்கும் இல்வாழ்க்கைச் செல்வத்தையுடையவளது அழகையுடைய ஊரின்கண்,— **வள முகிலே** - வளப்பத்தையுடைய மேகங்காள், — **வரும் தேர் இதன்முன்** - வருகின்ற (எனது) தேராகிய இதன் முற்பட்டு, — **வழங்கேல்** - சென்றியங்காதொழிய வேண்டும், — **முழங்கேல்** - (இயங்கினும் அவள் கேட்க) முழங்காதொழிய வேண்டும். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - கேட்டபாகன் தேர்விரைந்து கடாதல்.

**ஏரணி** - மிக்கவழகு; **பழங்கண்டரும்** - துன்பத்தை யெனக்குத்தரும்; நகர் - இல்; எனவுரைப்பி னுமமையும். வழங்கேலென்பதற்குப் பெய்யவேண்டாமென் றுரைப்பாரு முளர். ()

**வரவேடுத்துரைத்தல்.**

*வினைமுற்றிய வேந்தன்வர வு*
*புனையிழைத்தோழி பொற்றொடிக்குரைத்த து.*

(எ-து,) பகைப்புலஞ் சென்று வினைமுற்றிய வேந்தன் வரவினை, யலங்கரிக்கின்ற அணிகலத்தையுடை

ய பாங்கி, அழகிய தொடியையுடைய தலைமகட்கு இனி நமக்கொரு குறையில்லையென அவன் வரவெடுத்துக் கூறியது.

பணிவார்க்குழையெழிலோன்றில்லைச்சிற்றம்பலமனைய
மணிவார்க்குழன்மடமாதேபொலிகநம்மன்னர்முன்னப்
பணிவார்திறையும்பகைத்தவர்சின்னமுங்கொண்டுவன்றே
ரணிவார்முரசினொடாலிக்குமாவோடணுகினரே.

(இ-ள்.) பணி வார் குழை எழிலோன் - பாம் பாகிய நீண்ட குழையானுண்டாகிய அழகையுடையவனது, — தில்லைச்சிற்றம்பலம் அனைய - தில்லையின்கணுள்ள சிற்றம் பலத்தையொக்கும், — மணி வார் குழல் மட மாதே, — (நீல) மணிபோலும் நீண்ட குழலையுடைய மடப்பம் பொருந்திய மாதே, — பொலிக - பொலிக, — நம் மன்னர் - நம்முடைய மன்னவர்,— பணிவார் திறையும் - வந்து வணங்குவாராகவுடம்பட்டவர் கொடுத்த திறையையும்,—பகைத்தவர் சின்னமும் - பணியாது மாறுபட்டவரது அடையாளங்களையும்,—வன் தேர் முன்னு கொண்டு - தமது வளம் பொருந்திய தேருக்கு முன்னாகக் கொண்டு, — அணி வார் முரசினொடு - அணியப்பட்ட வாரை யுடைய வீர முரசினோடும், — ஆலிக்கும் மாவொடு - களிக்கும் மாவினோடும், — அணுகினர் - வந்து சேர்ந்தனர். எ-று. மெய்ப்பாடு - உவகை ; பயன் - தலைமகளைமகிழ்வித்தல். (௩௬0)

### மறவாமைகூறல்.

பாசறைமுற்றிப் பைந்தொடியோடிருந் து
மாசறுதோழிக்கு வள்ளலுரைத்த து.

(எ-து. பாசறையில் வேந்தர்க் குற்றுழிச் சென்று வினையை முடித்துப் பைம்பொற் றொடியை யுடைய தலைமகளோ டினிதிருந்து குற்றமற்ற பாங்கிக்குத்

தலைமகன் யான் பாசறையி லிருந்த விடத்தும் இவள் என்னெஞ்சை விட்டகலா திருந்தனளெனத் தான்வளை மறவாமையை யெடுத்துக் கூறியது.

கருங்குவளைக்கடிமாமலர்முத்தங்கலந்திலங்க
நெருங்குவளைக்கிள்ளைநீங்கிற்றிலணின்றுநான்முகனே
டொருங்குவளைக்கரத்தானுணராதவன்றில்லையொப்பாய்
மருங்குவளைத்துமன்பாசறைநீடியவைகலுமே.

(இ - ள்.) நான்முகனேடு - பிரமனுடன், — வளை கரத்தான் உணராதவன் தில்லை யொப்பாய் - சங்கேந்திய கையையுடைய விஷ்ணுமூர்த்தியு மறியாதவனது தில்லையை யொப்பாய்! — மருங்கு வளைத்து மன் பாசறை நீடிய வைகலும் - முனை மருங்கு சூழ்ந்து மன்னனது பாசறைக்கண்யான் தாழ்த்த வைகற்கண்ணும், — கரு குவளை கடி மா மலர் - (கண்ணாகிய) கருங்குவளையினது புதிய பெரியமலர், — முத்தம் கலந்து இலங்க நின்று - (கண்ணீராகிய) முத்தத்தைக் கலந்து விளங்கா நின்று, — நெருங்கு வளை கிள்ளை ஒருங்கு நீங்கிற்றிலள் - நெருங்கின வளையையுடைய இக்கிளியையொப்பாள் ஒருக்காலமு மென்னைவிட்டு நீங்கிற்றிலள். (அதனாற் பிரிவில்லை). எ-று.
மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகளை மகிழ்வித்தல்.

வைகலுமென்பதற்கு வைகல்தோறுமென்றுரைப்பாருமுளர்.

வேந்தற் குற்றுழிப்பிரிவு முற்றிற்று.

---

## பொருள்வயிற்பிரிவு.

என்பது, தம்முன்னோராற் சேகரித்து வைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ்செய்தால் அதனான் வரும்பயன் அவர்க்காமல்லது தமக்காகாமையால் தமது பொருள்கொண்டு இல்லறஞ்செய்தற்குப் பொருள்தேடப் பிரியாநிற்றல்.

இக்கிளவி இருபது துறைகளையுடைத்து. அவை வருமாறு வாட்டங்கூறல் பிரிவுநினைவுரைத்தல், ஆற்றுதுபுலம்ப லருமைகூறல், திணைபெயர்த்துரைத்தல் பொருத்தமறிந்துரைதல், பிரிந்தமைகூறல் பிரிவாற்றாமையான், இராவுறுதுயரத்திரங்கியுரைத்தல், இகழ்ச்சிநினைந்தழிதல் உருவெளிப்படுத நெஞ்சொடுநேர்தல் நெஞ்சொடுபுலத்தல், நெஞ்சொடுமறுத்த காளெண்ணிவருந்தல், ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல், பவங்கண்டிரங்கல் முகிலொடுகூறல், தேர்வரவுகூறல் இளையர்கோடல், உண்மகிழ்ந்துரைத்த லோதியவிருபதும், மாமறுதலாய் வான்பொருட்பிரிதல்.

வாட்டங்கூறல்.

பிரிவுகேட்ட வரிவைவாட்டம்
நீங்கலுற்றவன் பாங்கிக்குரைத்தது.

(எ-து.) பொருள்வயிற் பிரிகின்ற தலைமகன், இருமையும் பொருளான் முற்றுப் பெறுமென்ற சொல்லைக்கேட்ட தலைமகளது வாட்டத்தைப் பாங்கிக்குணர்த்தியது.

முனிவருமன்னருமுன்னுவபொன்னுனமுடியுமெனப்
பனிவருங்கண்பரமன்றிருச்சிற்றம்பலமனையாய்
துனிவருநீர்மையிதென்னென்றுதூநீர்தெளித்தளிப்ப
கனிவருகாளிதுவோவென்றுவந்திக்குநன்னுதலே.

(இ-ள்.) முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியுமென - துறந்தாரும்அரசரும் கருதுவனவாகிய (மறுமையும் இம்மையும்) பொருளான் முற்றுப் பெறுமென்று (பொதுவகையிற்) கூற, — கண் பனி வரும் - (அக்கூற்றுப்பறிந்து) கண்கள் பனி வரா நின்றன, (அதனால் அறிவழிந்த விடத்து), — பரமன் திருச்சிற்றம்பலம் அனையாய் - பரமனது திருச்சிற்றம் பலத்தையொப்பாய், — துனிவரு நீர்மை இது என்னென்று -

(நீ) துன்பமடையுந்தன்மையிஃ தென்னகாரணத்தான் வந்தது (யான்பிரியேன்) என்று, — தூ நீர் தெளித்து அளிப்ப - தூய நீரைத்தெளித்து அன்புசெய்ய (அறிவுபெற்று), — நனி வரு நாள் இதுவோவென்று நன்னுதல் வந்திக்கும் - (நீர்) நனி தாழ்த்து வருநாளிதுவோ வென்று நன்னுதலாள் வணங்கி நின்றாள். (இனி நீ உணர்த்து மாற்ற றுணர்த்து). எ-று. மெய்ப் பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம்; பயன் - பிரிவுணர்த்து தல்.

பரமன் திருச்சிற்றம்பல மனையாளென்று பாடமோது வாரு முளர். நீயெனவுந் தாழ்த்தெனவு மொருசொல் வருவித்துரை க்கப் பட்டது. நனிவந்திக்கு மெனினு மமையும். (௩௩௨)

## பிரிவுநினைவுரைத்தல்

பொருள்வயிற்பிரியும் பொருவேலவனெனச்
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

(எ-து.) (பொருளில்லாதார் இருமையின்கண் வரு மின்பமும் அறியாரெனவுட்கொண்டு) பொருவேலை யுடைய தலைமகன் பொருள்தேட நினையாநின்றானெ னச் சுருண்டகுழலையுடைய தலைமகளுக்கு (வாட்டங் கேட்ட) பாங்கி சொல்லியது.

வறியாரிருமையறியாரெனமன்னுமாநிதிக்கு
நெறியாரருஞ்சுரஞ்செல்லலுற்றார்நமர்நீண்டிருவ
ரறியாவளவுநின்றோன்றில்லைச்சிற்றம்பலமனைய
செறிவார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்திருநுதலே.

(இ - ள்.) இருவர் அறியா அளவு நீண்டு நின்றோன் தில்லைச் சிற்றம்பலம் அனைய - அரியுமயனுமாகிய இருவர் அடியுமுடி யும் அறியாத எல்லையின்கண் நீண்டு நின்றவனது திருச்சிற்றம் பலத்தை யொக்கும், — செறிவார் கரு குழல் வெள் நகை

செவ்வாய் திருநுதலே - செறிந்த நீண்ட கரிய குழலினையும், வெள்ளிய பற்களையும், செய்ய வாயினையு முடைய அழகிய நெற்றியை யுடையாய்! — வறியார் இருமை அறியார் என - பொருளில்லாதார் இம்மை மறுமை யின்பங்களை யறியாரெ னக் கருதி, — மன்னும் மா நிதிக்கு - நிலைபெறும் பெரிய அரும்பொருள் தேடுதற்கு, — நெறி ஆர் அரு சுரம் நமர் செல்லலுற்றார் - வழியறிதற் கருமையாகிய அரிய சுரத்தில் நம்மவர் போகலுற்றார். எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த பெருமிதம்; பயன் - பிரிவுடம்படுத்தல்.

செறியாரென்பதூஉம் பாடம். சிறியகால்வழிகள் பலபொருந்தியவருஞ் சுரமெனினு மமையும். (௩௩௩)

## ஆற்றாதுபுலம்பல்.

பொருடரப்பிரியு மருடருபவனெனப்
பாங்கிபகரப்பூங் கொடிபுலம்பியது.

(எ - து.) நமக்கருளைச்செய்யாநிற்குந் தலைமகன் பொருள்தேடப் பிரிந்தானென்று பாங்கி சொல்லக் கேட்ட பூங்கொடி போல்வாளாகிய தலைமகள் புலம்பியது.

சிறுவாளுகிருற்றுமுன்னஞ்சின்னப்படுங்குவளைக்
கெறிவாள்கழித்தனடோழியெழுதிற்சரப்பதற்கே
யறிவாளொழிகுவதஞ்சனமம்பலவர்ப்பணியார்
குறிவாழ்நெறிசெல்வரன்பரொன்றம்மகொடியவளே.

(இ - ள்.) தோழி கொடியவள்-பாங்கியாகிய கொடியவள்,— அஞ்சனம் எழுதின் கரப்பதற்கு - அஞ்சனமெழுதின் (எழுதுகின்றகாலமத்துணையும் காதலர்) தோன்றாமையான், — ஒழிகுவது அறிவாள் - (அவ்வஞ்சனத்தை) ஒழிவதறிவாள், — அம்பலவர் பணியார் குறிவாழ் நெறி அன்பர் செல்வர் என்று -

அம்பலவரைவணங்கார் ( அவ்வணங்காமைக்கு ) குறியாக வாழும் தீயவழியை யன்பர் செல்வரென்று, — வாள் சிறு உகிர் உற்றுறுமுன்னம் சின்னப்படும் குவளைக்கு - ஒளியை யுடைய சிறியவுகிர் சிறிதுற்றுச்சிறிதுறு முன்னம் பொடியாகும் குவளைப்பூவிற்கு,—எறி வாள் கழித்தனள் - எறிதற்குக் கருவியாகியவாளை உறைகழித்தனள், (யான் கூறுவதுண்டோ). எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - செலவழுங்குவித்தல்.

கொடியவரோ வென்பது பாடமாயிற் கொடியராகிய வன்பரெனக் கூட்டுக. அம்ம - அசைநிலை. (கூகூச)

## ஆற்றுமைகூறல்.

ஏழை யழுங்கத்
தோழி சொல்லியது.

(எ - து.) தலைமகளது பிரிவாற்றுமைகண்ட
பாங்கி தலைமகனுக்குக் கூறியது.

வானக்கடிமதிற்றில்லையெங்கூத்தனையேத்தலர்போற்
கானக்கடஞ்செல்வர்காதலரென்னக்கதிர்முலைகண்
மானக்கனகந்தருமலர்க்கண்கண்முத்தம்வளர்க்குந்
தேனக்கதார்மன்னனென்னேவினிச்சென்றுதேர்பொருளே.

(இ - ள்.) வானம் கடி மதில் தில்லை - முகில்களை யுடைத்தாகிய காவலையுடைய மதிலாற் சூழப்பட்ட தில்லையின்கண்,— எம் கூத்தனை ஏத்தலர்போல் - எம்முடைய கூத்தப் பிரானை வாழ்த்தாதார் போல, — காதலர் கானம் கடம் செல்வர் என்ன - காதலர் கானகத்தையுடைய சுரத்தைச்செல்வரென் றுசொல்ல, — கதிர் முலைகள் மான கனகம் தரும் - ஒளியையுடைய முலைகள் கொண்டாடப்படும் பொன்னைத் தராநின்றன, — மலர் கண்கள் முத்தம் வளர்க்கும் - மலர்போன்ற கண்கள் முத்தத்தைப் பெருக வுண்டாக்கா நின்றன, — தேன்

நக்க தார் மன்னன் இனி சென்று தேர்* பொருள் என்னோ - (அதனால்) தேனோடுமலர்ந்த மாலையையுடைய அரசன் இனி (வெளியே) சென்று தேடும்பொருள் யாது? எ - று. மெய்ப் பாடு - இளிவரலைச் சார்ந்த பெருமிதம்; பயன் - செலவழுங்கு வித்தல்.

மான்ம் - அளவை, பிரமாணம். மாற்றுணிப்பொன்னென் றுரைப்பினு மமையும். மன்னனென்பது ஈண்டு முன்னிலைக் கண் வந்தது. இயல்புவிளி யென்பாருமுளர். (௩௩௫)

### திணைபெயர்த்துரைத்தல்.

துணைவன்பிரியத் துயருறுமனத்தொடு
திணைபெயர்த்திட்டுத் தேமொழிமொழிந்த து.

(எ-து.) யான் தலைமகனுக்கு நினதாற்றுமை கூறி னேன், இனி அவர் நினைவறியே னென்ற பாங்கிக் குத் தலைமகள் அவர் கருத்து யாதோ வறியேனெ ன்ற துயரங்கொண்ட மனமுடையளாகிப் பிரிவினை யெண்ணிப் பாலை நிலத்தானாகிய அவனை மருதநிலத் தானாக்கி வருந்திக் கூறியது.

சுருடருசெஞ்சடைவெள்சுடரம்பலவன்மலயத்
திருடருபூம்பொழிலின்னுயிர்போலக்கலந்திசைத்த
வருடருமின்சொற்களத்தனையும்மறந்தத்தஞ்சென்றே
பொருடரக்கிற்கின்றதுவினையேற்குப்புரவலரோ.

(இ - ள்.) சுருள்தரு செம் சடை வெள் சுடர் அம்பலவன் சுருண்டசெஞ்சடைக்கண் வெண்மையாகிய சுடரையுடைய மதியைத்தரித்த அம்பலவனது, — மலயத்து இருள் தருபூம் பொழில் - பொதியின் மலைக்கண் இருண்டபூவையுடைய சோலையினிடத்து, — இன் உயிர்போல கலந்து - இனியவுயிர் போல (இனியரா யொன்றுபட்டு வந்து) கூடி, — இசைத்த

அருள்தரும் இன்சொற்கள் அத்தனையும் மறந்து - (நமக்கு) சொன்ன அருளைப் புலப்படுத்தும் இனியசொற்களெல்லாவற் றையும் மறந்து, — அத்தம் சென்றோ - (தாம்) அருஞ்சுரஞ் சென்றோ, — புரவலர் - காவலர், — வினையேற்கு பொருள் தரக்கிற்கின்றது - தீவினையேற்குப் பொருளைத்தரத்தொடங்கு கின்றது. (இதுதகுமோ ?) எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் செலவழுங்குவித்தல்.

இருளைத்தரு மென்றுரைப்பினு மமையும். உடம்போடுயிர் கலக்கு மாறுபோலக் கலந்தெனினு மமையும். பிரிவுள்ளிப் பாலை நிலத்தனுகியானை மருத நிலத்தனுக்குதல். (௩௩௯)

## பொருந்தமறிந்துரைத்தல்.

பொருள்வயிற்பிரிவோன் பொருந்தகினைந் து
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லிய து.

(எ-து.) (இணைபெயர்த்துக் கூறக்கேட்ட) பாங்கி, பொருள் வயிற்பிரியுந் தலைமகனது உள்ளத்து நெகி ழ்ச்சியை யறிந்து சுருண்ட குழலையுடைய தலைமக ளுக்குப் பொதுவகையான் வருந்திக் கூறியது.

மூவர்நின்றேத்தமுதலவனுடமுப்பத்துமும்மைத்
தேவர்சென்றேத்துஞ்சிவன்றில்லையம்பலஞ்சீர்வழுத்தாப்
பாவர்சென்றல்குநரகமனையபுனையழற்கான்
போவர்நங்காதலரென்னுமுரைப்பதுபூங்கொடியே.

(இ - ள்.) மூவர் நின்று ஏத்த - பிரமன் திருமால் இந்திரன் ஆகிய மூவரும் நின்று துதிக்க, — முதலவன் ஆட - எல்லாப் பொருட்கும் காரணமாகியவன் நடிக்க, — முப்பத்து மும்மை தேவர் சென்று ஏத்தும் - முப்பத்து மூவராது தொகுதியாகிய தேவர்கள் சென்றுவழுத்தும், — சிவன் தில்லை அம்பலம் சீர்வழுத்தா - சிவனது தில்லையம்பலத்தை நன்மைபுகழாத, —

பாவர் சென்று அல்கும் நரகம் அனைய - தீவினையார் சென்று தங்கும் நரகத்தையொத்த, — புனை அழல் கான் போவர் நம் காதலர் - மூட்டப்பட்டாற்போலும் அழலையுடைய காட்டிற் போவார் போன்றிருந்தார் நம் காதலர், — பூங்கொடியே - பூங்கொடி போல்வாய்! — நாம் உரைப்பது என் - (இனி) நாம் சொல்லுவது என்னோ? எ-று. மெய்ப்பாடு - அழுகை. பயன் - செலவழுங்குவித்தல். (௩௩௭)

பிரிந்தமைகூறல்.

எதிர்நின்றுபிரியிற் கதிர்நீவாடுதற்
குணர்த்தாதகன்றான் மணித்தேரோனென்றது.

(எ - து.) (பொதுவகையா னுணர்த்திய பாங்கி) தலைமகட்கு நின்முன்னின்று பிரிவுணர்த்தின் நீபொலிவிழந்து வருந்துவாயென நமதுமன்னர் சொல்லாதகன்றானெனத் தலைமகன் பிரிந்தமை கூறியது.

தென்மாத்திசைவசைதீர்தரத்தில்லைச்சிற்றம்பலத்து
ளென்மாத்தலைக்கழல்வைத்தெரியாடுமிறைதிகழும்
பொன்மாப்புரிசைப்பொழிற்றிருப்பூவணமன்னபொன்னே
வன்மாக்களிற்றொடுசென்றனரின்றுநம்மன்னவரே.

(இ-ள்.) தென் மா திசைவசை தீர்தர - தெற்காகிய பெரிய திசை குற்றம்நீங்க, — என் மா தலை கழல் வைத்து - எனது கருந்தலைக்கண் கழல்களைவைத்து, — தில்லைச்சிற்றம்பலத்துள் எரி ஆடும் இறை - தில்லைச்சிற்றம்பலத்தின்கண் எரியோடாடு மிறைவனது, — திகழும் பொன் மா புரிசை பொழில் - விளங்கும் பொன்னானியன்ற பெரிய மதிலாற் சூழப்பட்டபொழிலையுடைய, — திருப்பூவணம் அன்ன பொன்னே - திருப்பூவணத்தையொக்கும் பொன்னே! நம் மன்னவர் - நம்மன்னர், — வல் மா களிற்றொடு இன்று சென்றனர் - வலியபெரிய யானை

களுடன் (வினைகுறித்து) இன்று சென்றனர். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - பிரிவுணர்த்துதல்.

கால்வகைத் தானையோடுஞ் சென்றாரெனினு மமையும். ()

**இரவுறுதுயரத்திற் கிரங்கியுரைத்தல்.**

அயிறருகண்ணியைப் பயிறருமிரவினு ட்
டாங்குவதரிதெனப் பாங்கிபகர்ந்த து.

(எ-து.) பிரிவுகேட்ட தலைமகள் தாற்றாமுகங்கண்டபாங்கி,இரவும்பகலு மொப்பவருமாயினும் இரவுறு துயரத்திற் காற்றாமையால் இராப்பொழுது நீடித்து வருவதுபோல வெண்ணுகின்ற அவளை யாற்றுவதரிதாமென்று அவளிர வுறுதுயரத்திற் கெண்ணியிரங்கியது.

ஆழியொன் றீரடியுமிலன்பாகன் முக்கட்டில்லையோ
னூழியொன் றாதனநான்குமைம்பூதமுமா றொடுங்கு
மேழியன் றாழ்கடலுமெண்டிசையுந் திரிந்திளைத்து
வாழியன் றேவருக்கன்பெருந்தேர்வந் துவைகுவதே.

(இ - ள்.) ஆழி ஒன்று - காலுள்ளது ஒன்று, — பாகன் இரண்டு அடியும் இலன் - பாகன் இரண்டடியுமுடைய னல்லன் (ஆகலான்),—ஐம்பூதமும் ஆறு ஒடுங்கும் - ஐந்துபூதமும் தோன்றியவாறொடுங்கும், — முக்கண் தில்லையோன் - மூன்று கண்களையுடைய தில்லையானது, — ஊழி ஒன்றாதன நான்கும் - ஊழியுமொவ்வாத (பெருமையையுடைய) நான்கு யாமத்தின் கண்ணும்,—ஏழு இயன்ற ஆழ் கடலும் - ஏழாகவியன்ற ஆழ்ந்த கடல்களையும், — எண் திசையும் - எட்டுத்திசைகளையும்,— திரிந்து இளைத்து அன்றே அருக்கன் பெரு தேர் வந்து வைகுவது - திரிந்திளைத்தன்றே சூரியனதுபெரியதேர் (ஈண்டு) வந்து தங்குவது. (அதனால் அத்தேர்வருவதெப்போது? இவளாற்று

மதெப்போது?) எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - செல
மழுங்குவித்தல்.

வாழி - அசைநிலை. ஒன்றுதனவென்பதனை நான்குமென்னு
மெழுவாய்க்குப் பயனிலையாக்கி யுரைப்பினு மமையும். ஐம்
பூதமும் ஆறுகளொடுங்கும் ஏழ்கடலு மென்றெண்ணிக்கடவோ
ருக்கு இயைபுண்மையான் ஐம்பூதத்திற் பிரித்துக் கூறினா
ரென்பாருமுளர். ஈரடியுமென்பதனையெழுவாயாக்கினு மமை
யும். நான்கும் திரிந்தென வியையும். (நகஉ)

இகழ்ச்சிநினைந் தழிதல்.

உணர்த்தாது பிரிந்தாரெ ன
மணித்தாழ்குழலி வாடிய து.

(எ - து.) (பாங்கியிரக்கமுற்றுக் கூறுநிற்பது) நீல
மணிதாழுங் கருமையாகிய குழலையுடைய தலை
மகள், தலைவர் தனக்குச்சொல்லாது பிரிந்தாரென
இகழ்ச்சி நினைந்தழியா நின்றது.

ரியாரெனவிகழ்ந்தேன்முன்னம்யான்பின்னையெற்பிரியிற்
ரியாளெனவிகழ்ந்தார்மன்னர்தாந்தக்கன்வேள்விமிக்க
வரியாரெழிலழிக்கும்மெழிலம்பலத்தோனெவர்க்கு
ரியானருளிலர்போலன்னவென்னையழிவித்தவே.

(இ - ள்.) முன்னம் - முற்காலத்து (அவருலகின்மேல் வைத்
க்கூறியவழி நீட்டித்துப்பிரிவாராயினும்), — பின்னை பிரியா
ரென யான் இகழ்ந்தேன் இப்பொழுது பிரியாரென யானி
ழ்ந்திருந்தேன், — என் தாம் பிரியின் தரியாளென மன்னர்
கழ்ந்தார் - என்னைத் தாம் பிரிகின்றாராகவுணரின் (இவள்)
ரிர் தாங்காளென மன்னர் (தாம் பின்னுணர்த்துதலை) இகழ்
ந்தார் (அத்தன்மைத்தாகிய இரண்டிகழ்ச்சியும்), — தக்கன்
வள்வி எரி ஆர் மிக்க எழில் அழிக்கும் - தக்கனது வேள்வி

யின் முத்தீ நிறைந்த மிக்கவழுகையழித்த,—எழில் அம்பலத்தோன் - எழிலையுடைய அம்பலத்தான், — எவர்க்கும் அரியான் - யாவர்க்குமரியவன், — அருளிலர்போலன்ன என்னை அழிவித்த - (அவனது) அருளில்லா தாரைப்போல வருந்த என்னையழிவித்தன. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமைநீங்குதல்.

எரியாரெழிலழிக்கு மென்பதற்கு எரியினதெழிலழிக்கு மென்பார் ஆனைக்கிளவி கொடுத்திழித்துக் கூறினுரெனினு மமையும். அழிக்கு மென்பது காலமயக்கம். கற்பந்தோறும் அவ்வாறு செய்தலின் நிகழ்காலத்தாற் கூறினுரெனினு மமையும். (௩௪0)

## உருவுவெளிப்பட்டு நிற்றல்.

பொருள்வயிற்பிரிந்த வொளியுறுவேலவன்
ஓங்கழற்கடத்துப் பூங்கொடியைநினைந்தது.

(எ-து.) (தலைமகளிகழ்ச்சி நினைந்தழியாநிற்ப) பொருள்வயிற்பிரிந்த வொளிபொருந்திய வேலையுடைய தலைமகன், சுடர்விட்டெரியு மழலையுடைய சுரத்தின்கண் தலைமகளைநினைந்து (மேற்போகவுமாட்டாது மீளலுற்று) வருந்தியது.

சேணுந்திகழ்மதிற்சிற்றம்பலவன்றெண்ணீர்க்கடனஞ்
சூணுந்திருத்துமொருவன்றிருத்துமுலகினெல்லாங்
காணுந்திசைதொறுங்கார்க்கயலுஞ்செங்கனியொடுபைம்
பூணும்புணர்முலையுங்கொண்டுதோன்றுமொர்பூங்கொடியே.

(இ - ள்.) சேணும் திகழ் மதில் சிற்றம்பலவன் - சேய்மைக்கண்ணும் விளங்குமதிலையுடைய சிற்றம் பலத்தையுடையான்,— தெள் நீர் கடல் நஞ்சு ஊணும் திருத்தும் ஒருவன் - தெளிந்த நீரையுடைய கடலின்கணுண்டாகிய நஞ்சையுணவாகவுஞ் செய்யு மொப்பில்லாதான், — திருத்தும் உலகின் எல்லாம் காணும்

திசைதொறும் - (அவனாற்) செய்யப்படும் உலகினெங்கும் பார்க்குந்திசைதோறும், — கார் கயலும் - (கண்ணாகிய) கரியகயல்களையும்,—செங்கனியொடு - (வாயாகிய) செய்யகனியோடும்,—பைம் பூணும் புணர் முலையும் கொண்டு - பசும் பொன்னாணியன்ற பூணையும் (தம்முட்) புணர்ந்த முலைகளையு முடைத்தாய்,—ஓர் பூங்கொடி தோன்றும் - ஒரு பூங்கொடிதோன்றா நின்றது.

எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - செலவழுங்குவித்தல்.

நஞ்சுண்டலையுங் குற்ற நீக்குமென வுரைப்பினு மமையும். ஊணுந்திருத்து மென்பது அதுசெய்யுந் தன்மையனென்னும் பொருட்டாகலின் நிகழ்காலத்தாற் கூறினர். (௩௪௪)

## நெஞ்சொடு நேர்தல்.

வல்லழற்கடத்து மெல்லியலைநினைந் து
வெஞ்சுடர்வேலோ னெஞ்சொடுநொந் து.

(எ - து.) வன்மையாகிய அழற்சுரத்து மெல்லியலையுடையளாகிய தலைமகளைநினைந்து (மீளலுற்ற) வெம்மையாகிய சுடர்பொருந்திய வேலையுடையனாகிய தலைமகன், பொருள்நசையால் மீளவுமாட்டாது நின்று தன்னெஞ்சொடு நொந்து கூறியது.

பொன்னணியீட்டியவோட்டருநெஞ்சமிப்பொங்குவெங்கா
னின்னணிநிற்குமிதென்னென்பதேயிமையோரிறைஞ்சு
மன்னணிதில்லைவளநகரன்னவன்னநன்டையாண்
மின்னணிநுண்ணிடைக்கோபொருட்கோநீவிரைகின்றதே.

(இ - ள்.) பொன் அணி ஈட்டிய ஓட்டம் தரு நெஞ்சம் - பொற்றிரளையீட்டவோரோட்டந்தரும் நெஞ்சமே! — நீ விரைகின்றது - (இப்பொழுது) நீ விரைகின்றது, — இமையோர் இறைஞ்சும் மன் - இமையோர் சென்று வணங்கும் இறைவனது, — அணி தில்லை வளம் நகர் அன்ன - அழகியதில்லையா

கிய வளம்பொருந்திய நகரையொக்கும், — அன்னம் நடையாள் மின் அணி நுண் இடைக்கோ - அன்னத்தினது நடைபோலும் நடையை யுடையாளது மின்னலையொத்த நுண்ணிய இடைக்கோ ? — பொருட்கோ - (எடுத்துக்கொண்ட) பொருளுக்கோ ? (அன்றி துயிரண்டற்குமல்லவோ?) — இ பொங்கு வெம் கானின் நண்ணி நிற்கும் இது என் என்பது - இவ்வழல் பொங்கும் வெவ்விய கானத்தைச்சேர்ந்து (போவதும் மீள்வதுஞ் செய்யாது) நிற்கின்ற இந்நிலையாதென்று சொல்லப்படுவது? எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - செலவழுங்குவித்தல்.

நண்ணியென்பது நணியென விடைகுறைந்து நின்றது. அணியென்றுபிரித்து வெங்கானின்கணணித்தாக நிற்பதென்றுரைப்பினு மமையும். இமையோ ரிறைஞ்சுந் தில்லைவளநகரொன வியையும். (௩௪௨)

## நெஞ்சொடு புலந்தல்.

அழற்கடத் தழுக்கமிக் கு
நிழற்கதிர் வேலோ னீடுவாடிய து.

(எ - து.) (தன்னெஞ்சொடுநொந்து கூறுநின்ற) அழற்சுரத்துத் துன்பமிக்கு மிகுந்த ஒளிபொருந்திய வேலையுடையானாகிய தலைமகன் (அந்நெஞ்சொடுபுலந்துகூறி) மிகவும் வாட்டமுற்றது.

நாய்வயினுள்ளகுணமுமில்லேனைநற்றொண்டுகொண்ட
தீவயின்மேனியன்சிற்றம்பலமன்னசின்மொழியைப்
பேய்வயினும்மரிதாகும்பிரிவெளிதாக்குவித்துச்
சேய்வயிற்போந்தநெஞ்சேயஞ்சத்தக்கதுன்சிக்கனவே.

(இ - ள்.) நாய்வயின் உள்ள குணமும் இல்லேனை - நாயினிடத்திலுள்ள நன்மையு மில்லாத வென்னை, — நல் தொண்டு கொண்ட தீவயின் மேனியன் - நல்ல தொண்டாகக் கொண்ட

தீயிடத்து நிறம்போலு நிறத்தை யுடையவனது, — சிற்றம் பலம் அன்ன சின்மொழியை - சிற்றம்பலத்தை யொக்குஞ் சிலவாகிய மொழியை யுடையாளிடத்து, — பேய்வயினும் அரிதாகும் பிரிவு - பேயினிடத்துஞ் செய்தலரிதாம் பிரிவை, — எளிதாக் குவித்து சேய்வயின் போந்த நெஞ்சே - எளிதாக்குவித்துச் சேய்த்தாகிய இவ்விடத்துப் போந்த நெஞ்சமே, — உன் சிக்கனவு அஞ்சத்தக்கது - உன்னுடைய திண்ணனவு அஞ்சத் தக்கது. எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - செலவழுங்குவித்தல்.

சிக்கனவு - இறுக்கம். (௩௬௩)

நெஞ்சோடு மறுத்தல்.

நீணெறிசென்ற நாறிணர்த்தாரோ ன்
சேணெறியஞ்சி மீணெறிசென்ற து.

(எ-து.) பொருண்மேற்சென்ற மணங்கமழ்கின்ற பூங்கொத்தினாலாகிய மாலையை யுடைய தலைமகன், (நெஞ்சொடு புலந்துகூறி) செலவுடம்படாது பொருள்வலித்த நெஞ்சொடு மறுத்துக் கூறியது.

தீமேவியநிருத்தன்றிருச்சிற்றம்பலமனைய
பூமேவியபொன்னைவிட்டுப்பொன்றேடியிப்பொங்குவெங்கா
னாமேநடக்கவொழிந்தனம்யாநெஞ்சம்வஞ்சியன்ன
வாமேகலையைவிட்டோபொருடேர்ந்தெம்மைவாழ்விப்பதே.

(இ - ள்.) நெஞ்சம் - நெஞ்சமே! — தீமேவிய நிருத்தன் திருச்சிற்றம்பலம் அனைய - தீயைப் பொருந்திய நிருத்தத்தை யுடையவனது தில்லையின்கணுள்ள சிற்றம்பலத்தை யொக்கும், — பூ மேவிய பொன்னைவிட்டு பொன் தேடி - பூவின்கண் மேவிய பொன்போல்வாளை விட்டு வேறு பொன்னைத்தேடி, — இ பொங்கு வெம் கான் நாமே நடக்க - இவ்வழல் பொங்கும் வெவ்வியகாட்டில் நாமே நடக்கவெனின், —

யாம் ஒழிந்தனம் - யாமொழிந்தேம், — பொருள் தேர்ந்து எம்மை வாழ்விப்பது - (ஆகலான்) பொருள்தேடி யெம்மை வாழச்செய்வது, — வஞ்சி அன்ன வாமம் மேகலையை விட்டோ - வஞ்சியை யொக்கும் அழகிய மேகலாபரணத்தையுடையாளைவிட்டோ? (யாமிதற்குடம் படேம்). எ-று. மெய்ப்பாடு அச்சம் ; பயன் - செலவழுங்கு வித்தல்.

இதுவும் பெருந்திணைப்பாற்படும். மீளநினைந்த துணையல்லது மீண்டிலனென்பார் மீணெறியையுள்ளத்தாற் சென்றதென்றுரைப்ப. (கூசச)

நாளெண்ணி வருந்தல்.

சென்றவர் திறத்து நின்றுநனிவாடுந்
சூழிருங்கூந்தற்குத் தோழிநனிவாடியது.

(எ - து.) நோய்பொருந்தச் சென்றவர் சென்ற நாளை யெண்ணுந் தன்மையான் மிகவாடுகின்ற நெருங்கிய பெருங்குழலையுடைய தலைமகட்குப் பாங்கி மிகவும் வாடியது.

தெண்ணீரணிசிவன்சிற்றம்பலஞ்சிந்தியாதவரிற்
பண்ணீர்மொழியிவளைப்பையுளெய்தப்பனித்தடங்க
ணுண்ணீருகவொளிவாடநீடுசென்றார்சென்றநா
ளெண்ணீர்மையினிலனுங்குழியும்விரலிட்டறவே.

(இ - ள்.) தெள் நீர் அணி சிவன் சிற்றம்பலம் சிந்தியாதவரின் - தெளிந்த கங்கையை (சடையிற்) சூடிய சிவனது சிற்றம்பலத்தைச் சிந்தியாதாரைப்போல (வருந்த), — பண் நீர் மொழி இவளை - பண்ணினது நீர்மையை யுடைய மொழியையுடைய இவளை, — பையுள் எய்த - நோய்பொருந்த, — பனி தடம் கண்ணுள் நீர் உக - குளிர்ச்சியையுடைய பெரிய கண்ணகத்துநீர் பெருக,—ஒளி வாட நீடு சென்றார் - மேனியொளி வாட காலம் நீட்டப்பிரிந்தவரது, — சென்ற நாள் எண் நீர்மை

யின் இட்டு விரல் அற - பிரிந்தநாளை யெண்ணுந் தன்மையாற் பலகாலிடுதலின் விரல்தேய,—நிலனும் குழியும் - நிலமுங் குழியும், (இனி எங்ஙனமாற்றும்). எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - தலைமகளை யாற்றுவித்தல்.

ஒளிவாடின வென்பது பாடமாயின் விரலிட்டென்பதனைப் பாங்கிமே லேற்றுக. (௩சரு)

**ஏறுவரவு கண்டிரங்கி யுரைத்தல்.**

நீடியபொன்னி னெஞ்சநெகிழ்ந் து
வாடியவன் வரவுற்ற து.

(எ - து.) நீண்டபொருள்வயிற் பிரிந்தமையின் மனநெகிழ்ந்து வாடிய (மீளலுறுகின்ற) தலைமகன், (மாலைக்காலத்து நாகொடுவராநின்ற ஏறுவரவுகண்டு இச்செக்கர் மாலைக்காலம் தலைமகள்) பொறுக்குமளவன்றென இரங்கிக்கூறியது.

கூற்றம்பலமின்மைகாட்டித்தன்றொல்கழறந்ததொல்லோன்
சிற்றம்பலமனையாள்பரமன்றுதிண்கோட்டின்வண்ணப்
புற்றங்குதர்ந்துநன்றுகொடும்பொன்னார்மணிபுலம்பக்
கொற்றமருவுகொல்லேறுசெல்லாநின்றகூர்ஞ்செக்கரோ.

(இ - ள்.) திண் கோட்டின் - வலிய கோடுகளால், — வண்ணம் புற்றம் குதர்ந்து - நிறத்தையுடைய புற்றைப்பேர்த்து,— பொன் ஆர் மணி புலம்ப - இரும்பு பொருந்திய மணி யொலிப்ப, — கொற்றம் மருவு கொல் ஏறு நல் நாகொடும் செல்லாநின்ற - வெற்றியைப்பொருந்தின கொல்லவல்ல ஆனேறு நல்ல நாகோடும் (ஊர்வயின்) செல்லா நின்றன, — கூரும் செக்கர் - சிறக்குஞ் செக்கர்வானத்தையுடைய இம்மாலைப்பொழுது, — சுற்றம் பலம் இன்மை காட்டி தொல் தன் கழல் தந்த தொல்லோன் - சுற்றத்தாற் பல மின்மையையறிவித்து (பிறவிமருந்தாதற்கு) பழையவாய் வருகின்ற தன் கழல்களை யெனக்குத்

தந்த பனைழயோனது,—சிற்றம்பலம் அனையாள் பரமன்று - சிற்றம் பலத்தையொப்பாளது அளவன்று. (அவள் இனியென் ளுருவள்). எ-று. மெய்ப்பாடு - அச்சம் ; பயன் - தேர்ப்பாகன் மீள்வதற்கொருப்படுதல்.

சுற்றம் பயனையுடைத்தன்மை யெனினுமமையும். மண்ணைப் புற்றென்பதூஉம்பாடம். (௩௭௪)

**பருவங்கண் டிரங்கல்.**

மன்னியபருவ முன்னியசெலவி ன்
இன்னலெய்தி மன்னனேகிய து.

(எ-து.) (ஏறுவரவுகண் டிரக்கமுற்று வராநின்ற) தலைமகன் நிலைபெற்ற கார்ப்பருவத்து மேகத்தின் முற்பட்ட செலவினால் வருத்தமெய்திச் சென்றது.

கண்ணுழையாதுவின்மேகங்கலந்துகணமயிறொக்
கெண்ணுழையாத்தழைகோலிநின்றாலுமினமலர்வாய்
மண்ணுழையாவுமறிதில்லைமன்னனதின்னருள்போற்
பண்ணுழையாமொழியாளென்னளாங்கொன்மன்பாவியற்கே.

(இ-ள்.) விண் மேகம் கலந்து - ஆகாயத்தில்மேகங்கள் (ஒன் றோடொன்று) விரவுதலால், — கண் நுழையாது - கண் சென்று நுழையமாட்டாது, — இனமலர் வாய் - இன மலரை யுடைய இடமெங்கும்,—மயில் கணம் தொக்கு எண் நுழையா தழை கோலி நின்று ஆலும் - மயிலினங்கள் திரண்டு கணக் கில்லாத பீலியை விரித்து நின்றாடா நிற்கும், — மண்ணுழை யாவும் அறி தில்லை மன்னனது - மண்ணிடத் தெல்லாவுயிர் களும் அறியுந் தில்லையின் மன்னனது, — இன் அருள்போல் பண் நுழையா மொழியாள் - இனிய அருள் போலும் பண் நுழைந்தறியமாட்டாத தேமொழியை யுடையாள், — பாவி யற்கு என்னளாம் கொல் - தீவினையேற் கெத்தன்மையளாமோ?

(அறிகின்றிலேன்). எ-று. மெய்ப்பாடு - அச்சம் ; பயன் - தேர்ப் பாகன் மீள்வதற்கொருப்படுதல்.

என்னெனபது உணவாகிய வென்னெனபாருமுளர். பண் ணுழையா மொழியென்பதற்குப் பண்ணப்பட்டவுழையாகிய கரம்புபோலும் மொழியாளெனினுமமையும். மன் - அசைநிலை.

## முகிலொடு கூறல்.

எனைப்பலதுயரமோ டேகாநின்றவன்
துனைக்காரதற்குத் துணிந்துசொல்லியது.

(எ - து.) (பருவங்கண்டிரங்கி) எத்தனையோ பல துயரமுடையனாகிச் செல்லாநின்ற தலைமகன் விரை வையுடைய மேகத்துக்குத் துணிந்து சொல்லியது.

அற்படுகாட்டினின்றாடிசிற்றம்பலத்தான்மிடற்றின்
முற்படுநீண்முகிலென்னின்முன்னேன்முதுவோர்குழுமி
விற்படுவாணுதலாள்செல்லறீர்ப்பான்விரைமலர்தூய்
நெற்படுவான்பலிசெய்யராநிற்குநீணகர்க்கே.

(இ - ள்.) அல் படு காட்டில் நின்றாடி - (மாலைக்காலத்து) இருளுண்டாகாநின்ற மயானத்தின்கண் நின்றாடுவான், — சிற் றம்பலத்தான் - சிற்றம்பலத்தின் கண்ணான், — மிடற்றின் முற்படு நீள் முகில் - (அவனது) மிடறுபோல இருண்டு முற் பட்டோடுகின்ற நீண்ட முகிலே இவ்விடத்தெல்லாம் முற்பட் டாயாயினும், — முதுவோர் குழுமி வில் படு வாள் நுதலாள் செல்லல் தீர்ப்பான் - முதுபெண்டீர் திரண்டு வில்தாழும்படி ஒளியையுடைய நுதலாளது துன்பத்தை நீக்கவேண்டி, — விரை மலர் தூய் நெல் படு வான் பலிசெய்து அயராநிற்கும் - நறுநாற்றத்தை யுடைய மலர்களைத் தூவி நெல்விரவிய தூய பலியைக்கொடுத்து (இல்லுறைகடவுட்கு) பூசனை செய்யாநிற் கும், — நீள் நகர்க்கு என்னின் முன்னேல் - பெரிய இல்லத்

திற்கு என்னின் முற்படா தொழிவாயாக. எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - பாகன் தேரைவினையக் கடாவுதல்.

வான்பலி செய்தயரா நிற்குமென்பதற்குப் பலிகொடுத்து விரிச்சியயரா நிற்குமெனினு மமையும். ஆடுசிற்றம்பலவ னென்பதூஉம் பாடம். (௩௪௮)

**தேர்வரவு கூறல்.**

வேந்தன்பொருளொடு விரும்பிவருமெ னை
ஏந்திழைப்பாங்கி யினிதியம்பிய து.

(எ - து.) (முகிலொடுவந்து புகாநிற்கும்) தலைமகன் பொருளொடும் விரும்பிவருவானென ஏந்திழையாகிய பாங்கி யினிதுகூறியது.

பாவியைவெல்லும்பரிசில்லையேமுகில்பாவையஞ்சீ
ராவியைவெல்லக்கறுக்கின்றபோழ்தத்தினம்பலத்துக்
காவியைவெல்லுமிடற்றோனருளிற்கதுமெனப்போய்
மேவியமாநிதியோடன்பர்தேர்வந்துமேவினதே.

(இ - ள்.) முகில் பாவை அம் சீர் ஆவியை வெல்ல கறுக்கின்ற போழ்தின் - மேகமானது பாவையினழகிய சீர்மையையுடையவுயிரைச் செகுப்பான் கோபித்துநின்றபொழுதின்கண்,—அம்பலத்து காவியை வெல்லும் மிடற்றோன் அருளின் - அம்பலத்தின்க ணுளனாகிய நீலப்பூவை வெல்லு மிடற்றையுடையவனது அருள்போல,—போய் மேவிய மா நிதியோடு அன்பர் தேர் கதுமென வந்து மேவினது - போய்த்தேடிய பெருநிதியோடு அன்பர் தேர்கதுமெனவந்து பொருந்திற்று,—பாவியை வெல்லும் பரிசு இல்லை - அதனால் வரக்கடவதனை வெல்லுமாறில்லையேபோலும். எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - ஆற்றுவித்தல்.

அருளின் மேவிய தெனவியையும். அருளான் வந்து மேவிற்றெனினு மமையும். தமியளை அற்றம்பார்த்து வெல்லக் கருதிச்

சிலர் வெருள்கின்ற காலத்து, அத்தமியார்க்குத் துணையாக ஒருதேர்வந்து காத்ததென வேறுமொருபொருள் விளங்கின வாறறிக. (௩௭௯)

## இளையரெதிர் கோடல்.

செறிகழலவன் றிருநகர்புகுத ர
எறிவேலிளைஞ ரெதிர்கொண்ட து.

(எ - து.) (பாங்கி தேர்வரவுகூறுகிற்ப) செறிந்த கழலை யுடையனாகிய தலைமகன் அழகிய இல்லிற்புக எறிகின்ற வேலையுடைய இளையர்சென்று எதிர்கொ ண்டது.

யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலத்தானமைத்த
ஊழின்வலியதொன்றென்னையொளிமேகலையுகளும்
வீழும்வரிவளைமெல்லியலாவிசெல்லாதமுன்னே
சூழுந்தொகுநிதியோடன்பர்தேர்வந்துதோன்றியதே.

(இ - ள்.) ஒளி மேகலை உகளும் - ஒளியையுடைய மேகலாபரணம் தன்னிலையினின்றும் போகாநின்றது, — வரி வளை வீழும் - வரியையுடைய வளைகள் கழன்று விழாநின்றன, — மெல்லியல் ஆவி செல்லாத முன்னே - இந்நிலைமைக்கண் மெல்லியலுயிர் செல்வதற்கு முன்னே, — சூழும் தொகு நிதியோடு அன்பர் தேர் வந்து தோன்றியது - சூழ்ந்து வருந்திரண்ட பொருளோடு அன்பரது தேர்வந்து தோன்றிற்று, — யாழின் மொழி மங்கை பங்கன் - அதனுன் யாழோசை போலுமினிய மொழியையுடைய உமாதேவியின் கூற்றை யுடையான், — சிற்றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்க ணுள்ளான், — அமைத்த ஊழின் வலியது ஒன்று என்னை - (அவனால்) அமைக்கப்பட்ட ஊழின்வலியதொன் றென்னுளது. எ-று. மெய்ப்பாடு-உவகை; பயன் - மெய்ம்மகிழ்தல், மகிழ்வித்தல். (௩௮௦)

## உண்மகிழ்ந் துரைத்தல்.

பெருநிதியோடு திருமனைபுகுந்தவன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்தது.

(எ - து.) (இளையரெதிர்கொள்ள) பெரும்பொருளோடு சிறந்தமனையிற் புகுந்த தலைமகன் தலைமகளோ டுள்ளமகிழ்ந்து கூறியது.

மயின்மன்னு சாயலிம் மானைப் பிரிந்து பொருள்வளர்ப்பான், வெயின்மன்னு வெஞ்சுரஞ் சென்றதெல்லாம் விடை யோன் புலியூர்க், குயின்மன்னு சொல்லிமென் கொங்கையென் னங்கத் திடைக்குளிப்பத், துயின்மன்னு பூவணை மேலணை யாமுன் றுவளுற்றதே.

(இ - ள்.) மயில் மன்னு சாயல் இ மானை பிரிந்து - மயில்போலு மென்மையை யுடைய இம்மானைப் பிரிந்து, — பொருள் வளர்ப்பான் வெயில் மன்னும் வெம் சுரம் சென்றதெல்லாம் - பொருளை யீட்டுவான் வெயில் நிலைபெற்ற வெய்ய சுரத்தைச்சென்ற துன்பமெல்லாம், — விடையோன் புலியூர் - விடையை யுடையவனது புலியூரிடத் துளவாகிய, — குயில் மன்னு சொல்லி மென் கொங்கை என் அங்கத்திடைகுளிப்ப - குயிலோசைபோலுஞ் சொல்லை யுடையாளுடைய மெல்லிய கொங்கைகள் என்னுறுப்புக்களி னிடைமூழ்கும்வகை, — துயில் மன்னு பூவணைமேல் அணையாமுன் துவளுற்றது - துயில் நிலைபெறும் பூவணையிடத்து அணைவதன்முன் மாய்ந்தது. எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மெய்ம்மகிழ்தல், மகிழ்வித்தல்.

எல்லாமென்பது முழுதுமென்னும் பொருள்பட நிற்பதோருரிச்சொல். (௩௫௧)

பொருள்வயிற்பிரிவு முற்றிற்று.

## பரத்தையிற் பிரிவு.

என்பது, தலைமகளை வரைந்தெய்தியபின்னர் வைகலும் பாலை நுகர்வா னொருவன் இடையே புளிங்காடியு நுகர்ந்து அதனினிமை யறிந்தாற்போல, அவள் நுகர்ச்சியினிமை யறிதற்குப் புறப்பெண்டிர் மாட்டுப் பிரியாநிற்றல். அல்லதூஉம், பண்ணும் பாடலு முதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தானெல்லார்க்குந் தலைவனாகலின் அவர்க்கு மின்பஞ் செய்யப் பிரியாநிற்றல் என்றுமாம். அல்லதூஉம், தலைமகளை யூடலறிவித்தற்குப் பிரிதல் என்றுமாம்.

இக்கிளவி நாற்பத்தொன்பது துறைகளையுடைத்து. அவை வருமாறு:—

கண்டவர்கூறல் காதற்றோழி, பொறையுவந்துரைத்தல் பொதுப்படக்கூறி, வாடியவுழுங்கல் மாறுகொண் டவனொடு, கனவிழந்துரைத்தல் விளக்கொடுவெறுத்தல், வாரம்பகர்ந்து வாயின்மறுத்தல், பள்ளியிடத்தூடல் பணிமொழியாடன், செவ்வணிவிடுக்க வில்லோர்கூறல், அயலறிவுரைத்தவ ளழுங்க லெய்தல், செவ்வணிகண்ட வாயிலவர்கூறல், மனைபுகல்கண்ட வாயிலவர்கூறல், முகமலர்ச்சிகூறல் முனிவதென்னெனக், காலநிகழ்வுரைத்தல் கலவியெய்தலை, எடுத்துரைத்தலொடு கலவிகருதிப், புலத்தல்குறிப்பறிந்து புலந்தமைகூறல், வாயிலர்வாழ்த்தல் புனல்வரவுரைத்தல், தேர்கண்டுமகிழ்தல் சேடியர்விழவில், தம்முணுரைத்தல் தன்னைவியத்தல், நகைத்துரைத்தல்லொடு நாண்கண்டுரைத்தல், பாணன்வரவுரைத்தல் பாங்கியியற்பழித்தல், உழையரியற்பழித்த லொண்ணுதலாளவற் கியற்படமொழிதல் இயல்புணர்ந்துரைத்தல், வாயில்பெறாது மகன்றிறநினைதல், வாயிற்கணின்று தோழிக்குரைத்தல், வாயில்வேண்டத் தோழிகூறல், மன்னியதோழி வாயில்வேண்டல், மனையவர்மகிழ்தல் வாயின்மறுத்தல், பாணனொடுவெகுளல் பா

ணன்புலத்தல், விருந்தொடுசெல்லத் துணிந்தமைகூறல், ஊட ல்தணிவித்த லணைந்தவழியூடல், புனலாட்டுவித்தமை கூறிப் புலத்தல், கலவிகருதிப் புலவிபுகறல், மிகுத்துரைத்தூடல் விற ல்வேற்காளை, ஊடனீட வாடியுரைத்தல், துனியொழிந்துரைத் தல் துகளொன்றில்லாப், புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர் தல், கலவியிடத்தூடல் முன்னிகழ்வுரைத்தல், பரத்தையைக் கண்டமை பயன்படக்கூறல், ஊதியமெடுத்துரைத் தூடல்தீர்த் தல், என்னுமென்றிவை பரத்தையிற்பிரிவெனப், பன்னூர் மொழியாய் பகர்ந்திசினோரே.

கண்டவர் கூறல்.

உரத்தருவேலோன் பரத்தையிற்பிரியத்
திண்டேர்வீதியிற் கண்டோருரைத்தது.

(எ-து.) உரத்தாற்றக்க வேலையுடையனாகிய தலைமகன் பரத்தையிற் பிரியத் திண்ணிதாகிய தேரோடும் வீதியிற் கண்டவர் கூறியது.

உடுத்தணிவாளரவன்றில்லையூரன்வரவொருங்கே
யெடுத்தணிகையேறினவளையார்ப்பவிளமயிலேர்
கடுத்தணிகாமர்கரும்புருவச்சிலைகண்மலரம்
படுத்தணிவாளிளையோர்சுற்றும்பற்றினர்மாதிரமே.

(இ - ள்.) உடுத்து அணி வாள் அரவன் - (கச்சாகவும்) உடுத்து (அணியாகவும்) அணிந்த வாளரவையுடையவனது, — தில்லை ஊரன் வர - தில்லைக்கணுளனாகிய வூரன் இவ்வீதிக் கண்வர, — எடுத்து அணி கை ஏறு இன வளை ஆர்ப்ப - தெரிந்தணியப்பட்ட கையினிடத் துளவாகிய இனவளைக ளொலிப்ப,—இள மயில் ஏர் கடுத்து - இள மயிலினது சாயலையொத்து, — அணி காமர் கரு புருவம் சிலை கண் மலர் அம்பு அடுத்து - மிக்க வழகையுடைய கரிய புருவமாகிய வில்லோடு கண்மலராகிய அம்பைச் சேர்த்தி, — அணி வாள் இளையோர்

ஒருங்கே சுற்றும் மாதிரம் பற்றினர் - அணிகலுண்டாகிய ஒளியையுடையமகளிர் ஒருங்கே சுற்றுந் திசைகளைப் பற்றினர். (இஃதிவன் காதலிமாட்டென்னும்). எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - பிரிவுணர்த்துதல்.

ஒன்றாக வெழுந்து அணியினுங் கையினு முளவாகிய சங்கொலிப்ப, இளமைக்க ணுண்டாகிய வுள்ள வெழுச்சிமிக்கு வில்லோடம்பை யடுத்துப்பற்றி அளைக்கணியப்பட்ட வுடைவாளையுடைய இளையோர் திசைமுழுதுஞ் சூழ்ந்து பற்றினரெனப் பிறிது மோர்பொருள் தோன்றி நின்றவாறு கண்டுகொள்க. கருப்புருவச்சிலை யென்பது பாடமாயின், புருவமாகிய காமனது உட்கையுடைய கருப்புச்சிலையோடு கண்ணாகிய கள்ளையுடைய மலரம்பை யடுத்தென்றுரைக்க. சுற்றும்பற்றிய மாதிரமென்பது பாடமாயின் சுற்றும்பற்றி மேவாநிற்ப அவ்விடத்து கைக்குறிப்பா லெடுக்கப்பட்டு இவர் கைகள் வளையொலிப்பத் தலைமே லேறினவெனக் கூட்டியுரைக்க. இதற்குச் சுற்றும்பற்றிப் போர்செய்யாநிற்பப் படைக்கலமெடுத்துச் சங்கொலிப்ப அணியுங் கையு மொருங்கெழுந்தனவெனப் பிறிதுமொருபொருளாகக் கொள்க. (௩௫௨)

## பொறையுவந் துரைத்தல்.

கள்ள விழ்கோ தையைக் காதற்றோ ழி
உள்ள விழ்பொ றைகண் டுவந்துரைத் தது.

(எ-து.) (தலைமகளைப் பரத்தைய ரெதிர்கொண்டமைகேட்ட) தேனொடு மலர்ந்த மலர்மாலையணிந்த தலைமகள் நெஞ்சுடைந்து புறத்து வெளிப்படாது பொறுத்தமைகண்ட உயிர்ப்பாங்கி உவந்துகூறியது.

கரும்புறுகொன்றையன்றொல்புலியூர்ச்சுருங்கும்மருங்குற்
பெரும்பொறையாட்டியையென்னின்றுபேசுவபேரொலிநீர்க்
கரும்புறையூரன்கலந்தகன்றானென்றுகண்மணியு
மரும்பொறையாகுமென்னவியுந்தேய்வுற்றழிகின்றதே.

(இ - ள்.) பேர் ஒலி நீர் கரும்பு உறை ஊரன் - பெரிய வொலிக்கு நீரையுடைய கரும்பு தங்கும் ஊரையுடையவன், — கலந்து அகன்றுனென்று கண்மணியும் அரும் பொறையாகும் - கலந்திருந்து நீங்கினுனென்று கருதுதலான் என்கண்மணியும் (பயனின்மையால்) தாங்குதற்கரிய பாரமாகா நின்றன. — என் ஆவியும் தேய்வுற்று அழிகின்றது - எனதுயிருந் தேய்ந்து அழியாநின்றது,—சுரும்பு உறு கொன்றையன் -(யானிவ்வாறுகவுங் கலங்காது நின்ற), வண்டுகள் மொய்க்குங் கொன்றைப்பூவினையுடையானது, — தொல் புலியூர் சுருங்கும் மருங்குல் பெரும் பொறையாட்டியை - பழையதாகிய புலியூரிற் சுருங்கின இடையையுடைய பெரும் பொறையாட்டியை, — இன்றுபேசுவன் - யான் இன்று பேசுவனவென்! எ-று. மெய்ப்பாடு - அழுகையைச் சார்ந்த வுவகை; பயன் - தலைமகளைவியத்தல்.

என் கண்மணியுந் தேய்வுற்றழியாநின்றது, ஆவியு மரும்பொறையாகா நின்றதென்று கூட்டுவாருமுளர். உள்ளவிழ்பொறை- நெஞ்சுடைந்து புறத்து வெளிப்படாதபொறை. (௩௫௩)

**பொதுப்படக்கூறிவாடி யழுங்கல்.**

பொற்றிகழரவன் மற்றிகழ்தில்லைப்
பிரிந்தவூரனை டிருந்துவாடியது.

(எ - து.) (பொறையுவந்துரைத்த பாங்கிக்குத் தலைமகள்), அழகு விளங்குகின்ற அரவாபரணத்தையுடைய இறைவனது வளப்பமமைந்த தில்லையைப் பிரிந்த ஊரன்குறைகளை நினைந்து (பரத்தையர்க் கிரங்குவாள்போன்று) வாடியது.

அப்புற்றசென்னியன்றில்லையுறானவருறுநோ
யொப்புற்றெழினலமூரன்கவரவுள்ளும்புறம்பும்
வெப்புற்றவெய்துயிர்ப்புற்றுத்தம்மெல்லணையேதுணையாச்
செப்புற்றகொங்கையர்யாவர்கொலாருயிர்தேய்பவரே.

(இ - ள்.) அப்பு உற்ற சென்னியன் - கங்கையைத்தரித்த சென்னியை யுடையவனது, — தில்லை உறாரின் - தில்லை (மனமொழி மெய்களால்) அணுகாதாரைப் போல, — எழில் நலம் ஊரன் கவர - எழிலையுடைய நலத்தை ஊரன் கவர்ந்து கொள்ள, — அவர் உறு நோய் ஒப்புற்று - அத்தில்லையையுறாருறு நோயையொத்து,—உள்ளும் புறம்பும் வெப்புற்று அகத்தும் புறத்தும் வெப்பத்தையுற்று, — வெய்து உயிர்ப்பு உற்று - வெய்தாகவுயிர்த்தலை யுற்று, — தம் மெல் அணையே துணையா - (வேறுதுணையின்மையின்) தமது மெல்லணையே தமக்குத் துணையாகக் கொண்டு, — செப்பு உற்ற கொங்கையர் ஆருயிர் தேய்பவர் யாவர்கொல் - செப்புப்போலுங் கொங்கையையுடைய மகளிர் ஆருயிர் தேய்வார் (யானல்லது) பிறர் யாவரோ. எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

இத்தன்மையராய் என்போல் இனி ஆருயிர் தேய்வார் யாரோவெனப் பரத்தையர்க்கிரங்குவாள் போன்று தலைமகனது கொடுமை கூறினாளாகவுரைக்க. தில்லையுறாதவருறு நோயென்பது பாடமாயின், எழில் நலமூரன்கவரத் தில்லையையுறாத அத்தீவினையாருறு நோயையொத் தென்றுரைக்க. (கூருச)

கனவிழந் துரைத்தல்.

சினவிற் றடக்கைத் தீம்புன லூரனைக்
கனவிற் கண்ட காரிகை யுரைத்தது.

(எ - து.) (தலைமகளது கொடுமைநினைந்து வாடாநின்ற தலைமகள்), சினங்கொண்ட வில்லேந்திய தடக்கையையுடைய தீம்புனலுலகத்துத் தலைமகனைக் கனவிற்கண்டதனைத் தன்பாங்கிக்குக் கூறியது.

தேவாசுராரி[illegible]சுஙகழலோன்றில்லைசேரலர்போ
லாவாகனவுமிழந்தேனனவென்றமளியின்மேற்

பூவா ரகலம்வந் தூரன்றரப்புலம்பாய்நலம்பாய்
பாவாய்தழுவிற்றிலேன்விழித்தேனரும்பாவியனே.

(இ - ள்.) நலம் பாய் பாவாய் - நலம் பரந்த பாவாய்!— அமளியின் மேல் பூ ஆர் அகலம் ஊரன் வந்து தர - அமளியின்கண் மாலையையுடைய மார்பை ஊரன் வந்துதர, — புலம்பாய்-(அவனோடு மேவாமையின்) பின்னுந்தனிமையாய்,—நனவு என்று தழுவிற்றிலேன் - நனவென்று மயங்கித் தவறுநினைந்து புல்லிற்றிலேன், — அரும் பாவியன் விழித்தேன் - (அன்றியும்) பொறுத்தற்கரிய தீவினையையுடையேன் விழிப்பதுஞ்செய்தேன்,—தேவாசுரர் இறைஞ்சும் கழலோன் - (அதனால்) தேவருமசுரரு மிறைஞ்சுங் கழலையுடையவனது,—தில்லை சேரலர் போல்- தில்லையைச் சேராதாரைப்போல, — ஆஆ கனவும் இழந்தேன்- ஐயோ கனவான் வருமின்பத்தையு மிழந்தேன். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமை நீங்குதல்.

தில்லை சேரலர்போ லென்புழி ஒத்தபண்பு - துன்பமுறுதலும் இன்ப மிழத்தலுமாம். (௩௱௫௫)

### விளக்கொடு வெறுத்தல்.

பஞ்சணைத்துயின்ற பஞ்சின்மெல்ல டி
அன்பனோடமுங்கிச் செஞ்சுடர்க்குரைத்த து.

(எ - து.) பஞ்சணையிற்றுயின்ற செம்பஞ்சூட்டிய மென்மையாகிய அடிகளையுடைய தலைமகள் தலைமகனை (கனவிலிழந்தமையை) நினைந்து வருந்தி விளக்கொடு வெறுத்துக்கூறியது.

செய்ம்முகநீலமலர்தில்லைச்சிற்றம்பலத்தரற்குக்
கைம்முகங்கூம்பக்கழல்பணியாரிற்கலந்தவர்க்கு
பொய்ம்முகங்காட்டிக்கரத்தல்பொருத்தமன்[illegible]லையே
செய்ம்முகமாந்தியிருண்முகங்கிழுநெடுஞ்சுடரே.

(இ - ள்.) நெய் முகம் மாந்தி இருள் முகம் கீழும் நெடு சுடரோ - நெய்ம்முகத்தைப் பருகி இருள் முகத்தைக் கிழிக்கும் நெடியசுடரோ, — கலந்தவர்க்கு - எம்மைக்கலந்தவர்க்கு, — பொய் முகம் காட்டி - பொய்யையுடைய முகத்தைக்காட்டி,— செய் முகம் நீலம் மலர் - செய்ம்முகத்துள வாகிய நீலப்பூ மல ராநின்ற, — தில்லைச்சிற் றம்பலத்து அரற்கு - தில்லைச்சிற்றம் பலத்தின் கணுளனாகிய அரனுக்கு, — கை முகம் கூம்ப கழல் பணியாரின் - கைம்முகங் குவியக் கழலைப் பணியாதாரைப் போல (கண்ணோட்டமும் மெய்ம்மையுமின்றி), — கரத்தல் பொருத்தம் அன்று என்றிலையே - தெளிந்தாரை வஞ்சித்தல் தகுதியன்றென்று கூறிற்றிலையே; (வேறுகூறுவார் யாவர்). எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல். (

**வாரம்பகர்ந்துவாயின் மறுத்துரைத்தல்.**

வார்புனலூரனேர் திகழ்தோள்வயிற்
கார்புரைகுழலி வாரம்பகர்ந்தது.

(எ - து.) (தலைமகன் பரத்தையிற் பிரிந்துவந்து வாயிற்கணிற்ப வண்டோரனையர் ஆடவர், பூவோ ரனையர் மகளிராதலான், நாமும் அவன்தலையளி பெ ற்றபொழுது ஏற்றுக்கொள்வதன்றோ நமக்குக் காரி யம், நாம் அவனோடு புலக்கற்பாலே மல்லேமென்று வாயில் நேர்வித்தார்க்கு விளக்கொடுவெறுத்து வரு ந்தாநின்ற) மேகம்புரையுங் கூந்தலையுடைய தலைம கள், தீம்புனலூரனது அழகியதோளின்கண் தனது நிலைமையைக் கூறியது.

பூங்குவளைப்பொலிமாலையுமூரன்பொற்றோளிணையு
மாங்குவளைத்துவைத்தாரேனுங்கொள்கசுள்ளாரரணந்
தீங்குவலைக்[redacted]லான்றில்லைச்சிற்றம்பலத்தயல்வா
யோங்குவளைக்கரத்தார்க்கடுத்தோமன்னுறுவரையே.

(இ-ள்.) பூ குவளை பொலி மாலையும் - பொலிவையுடைய குவளைப் பூவானியன்ற பெரிய மாலையையும்,—ஊரன் பொன் தோளிணையும் - ஊரனது பொன்போலுந் தோளிணையையும்,— ஆங்கு வளைத்து வைத்து ஆரேனும் கொள்க - தம்மில்லத்து வளைத்துவைத்து வேண்டியவர்கள் கொள்வாராக, — நள்ளார் அரணம் தீங்கு வளைத்த வில்லோன் - பகைவரது கோட்டைகள் தீங்கெய்த வளைக்கப்பட்ட வில்லையுடையவனது, — தில்லைச் சிற்றம்பலத்து அயல்வாய் ஓங்கு வளை கரத்தார்க்கு - தில்லைச் சிற்றம்பலத்துக் கயலாகிய விடத்து வாழும் உயர்ந்தவளையையுடைய கையையுடையார்க்கு, — மன் உறுவனா அடுத்தோம் - மன்னனை உறுவனாயாகக் கொடுத்தோம். எ-று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றாமை நீங்குதல்.

உறுவனா - முற்றூட்டு. ஓங்குவளை - விலையானுயர்ந்த வளையெனினுமமையும். அடுத்தோமென்றதனால் தனதுரிமை கூறினாளாம். மன் - அசைநிலையாக்கி மாலையையுந் தோளையு மடுத்தோமெனினு மமையும். (௩௫௭)

## பள்ளியிடத்தூடல்.

பிடிவர்கற்பிற் ரேடிவர்கோ தை
ஆடவன்றன்னோ டேடியுரைத்த து.

(எ-து.) (வாயின்மறுத்த) பெருமிதமிக்க முல்லைமாலையணிந்த கூந்தலையுடைய தலைமகள், ஆற்றாமையே வாயிலாகப்புக்குப் பள்ளியிடத்தானாகிய தலைமகனோடு ஊடியுரைத்தது.

தவஞ்செய்திலாதவெந்தீவினையேம்புன்மைத்தன்மைக்கெள்ளா
தெவஞ்செய்துநின்றினியின்றுனைநோவதெனை[illegible]ன்முத்தன்
சிவன்செய்தசீரருளார்தில்லையூரநின்சேயிழையா[illegible]
கவஞ்செய்தபுல்லங்கண்மாட்டேக்தொடல்விடுநற்கலையே.

(இ - ள்.) அத்தன் - (உலகத்துள்ளா ரெல்லாருக்குந் தந்தை,—முத்தன் - (இயல்பாகவே) பாசங்களினீங்கியவன்,—சிவன் - (எவ்வுயிர்க்கு மெப்பொழுதும் நன்மையைச் செய்தலாற்) சிவன்,—செய்த சீர் அருள் ஆர் தில்லை ஊர - அவனாற் செய்யப்பட்ட சீரிய அருள் நிறைந்ததில்லையி லூரனே! தவம் செய்திலாத வெம் தீவினையேம் புன்மை தன்மைக்கு எள்ளாது-முற்காலத்துத் தவஞ்செய்யாத வெய்ய தீவினையையுடைய யாம் (நின்னுலாதரிக்கப்படாத எமது) புன்மைத்தன்மை காரணமாக எம்மையே இகழாது,—எவ்வம் செய்து நின்று - நினக்குத் துன்பத்தைச் செய்து நின்று, — இன்று இனி உனை நோவது என் - இப்பொழுது இனிநின்னை நோதலென்னும்?—நின் சேயிழையார் - (அதுகிடக்க) நின்னுடைய சேயிழையார்,—நவம் செய்த புல்லங்கள் மாட்டேம் - நினக்குப் புதிதாகச்செய்த புல்லுதல்களை யாமாட்டேம்,—நல் கலை தொடல் விடு - (அதனால், எமது) நல்லமேகலையைத் தொடாதொழி, விடுவாயாக. எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - புணர்தல்.

புல்லென்பது புல்லமெனை விரிந்துநின்றது. புல்லமென்பதனைப்புன்மை யென்று நின் சேயிழையார் புதிதாகச் செய்தகுறிகளைப் பொறுக்கமாட்டே மென்றுரைப்பினு மமையும். எவன் செய்து நின்றெனப் பாடமோதி தவஞ்செய்திலாத வெந்தீவினையேம் இன்றுன்னை நோவது என்செய்து நின்றென்றும் என்னத்தனென்று முரைப்பாருமுளர். எள்காதென்பதூஉம் பாடம். (௩௫௮)

## சேவ்வணிவிடுக்க வில்லோர் கூறல்.

பாற்செலுமொழியார் மேற்செலவிரும்ப ல்
பொல்லாதென்ன வில்லோர்புகன்ற து.

(எ[illegible] கேட்டார்க்குப் பாலின்கணுணர்வுசெல்லு மொழியையுடைய மகளிர்மேற் சென்று தூதுவிட

விரும்பல் பொல்லாதெனச் (செவ்வணிவிடுக்க வினை யா நின்ற) இல்லோர் தம்முட் கூறியது.

தணியுறப்பொங்குமிக்கொங்கைகடாங்கித்தளர்மருங்குல்
பிணியுறப்பேதைசென்றின்றெய்துமாலரவும்பிறையு [னே
மணியுறக் கொண்டவன் றில்லைத்தொல் லாயநல் லார்கள்முன்
பணியுறத்தோன்றுநுடங்கிடையார்கள்பயின்மனைக்கே.

(இ - ள்.) பிறையும் அரவும் அணியுற கொண்டவன் தில்லை- பிறையையும் (அதற்குப் பகையாகிய) அரவையும் அழகுபெறத் தனக்கணியாகக் கொண்டவனது தில்லையில், — தொல் ஆயம் நல்லார்கள் முன் - (இவளது) பழைய கூட்டத்தினுள்ளார் களாகிய நல்லார்கள்முன்னே, — பணி உற தோன்றும் நுடங்கு இடையார்கள் பயில் மனைக்கு - அரவுபோலத் தோன்றும் நுடங்கும் இடையை யுடையார்கள் நெருங்கும் (பரத்தையர்) மனைக்கண், — தணிவு உற பொங்கும் இ கொங்கைகள் தாங்கி தளர் மருங்குல் பிணி உற - தணிதலுறும் வண்ணம் வளரா நின்ற இக்கொங்கைகளைத் தாங்கித் தளராநின்ற மருங்குலையு டைய (இவள்) வருந்த,—பேதை சென்று இன்று எய்துமால் - (செவ்வணியணிந்து செல்கின்ற) இம்மாது இன்று சென்றெய் துமாயின் (இஃது பெரிது மிளிவரவுடைத்து.) எ - று. மெய்ப் பாடு - நகை; பயன் - தலைமகளைச் செலவழுங்கு வித்தல்.

செவ்வணி - தலைமகனைக்கூடிய தலைமகள், அத்தலைமகன் விடுத்த பெண்ணுங் கணியுஞ் செந்நிறவணி. (௩௫௧)

## அயலறிவுரைத்தவ ளழுக்கமெய்தல்.

உலகியலறியச் செலவிடலுற் ற
விழுத்தகைமாதர்க் கழுக்கஞ்சென்ற து.

(எ - து.) (இல்லோர் செவ்வணி விடுக்க நினையா நிற்ப) உலகிய லறியும்படிச் செலவிடலுற்ற தலைம கள் அயலறிவுரைத்து அழுக்கமுற்றுக் கூறியது.

இரவணையும்மதியேர்நுதலார்நுதிக்கோலஞ்செய்து
குரவணையுங்குழலிங்கிவளாலிக்குறியறிவித்
தரவணையுஞ்சடையோன்றில்லையூரனையாங்கொருத்தி
தரவணையும்பரிசாயினவாறுநந்தன்மைகளே.

(இ - ள்.) இரவு அணையும் மதி ஏர் நுதலார் நுதி - இராக் காலத்தைப் பொருந்தும் பிறைபோலும் நெற்றியை யுடையார் முன்,— இங்கு கோலம் செய்து - இவ்விடத்து செவ்வணியாகிய கோலத்தைச்செய்து,—குரவு அணையும் குழல் இவளால் இக் குறி அறிவித்து-குரவம்பூச்சேருங் குழலையுடைய இவளால் இக் குறியை யறிவித்து, — அரவு அணையும் சடையோன் தில்லை யூரனை - பாம்புசேருஞ் சடையை யுடையவனது தில்லையிலூரனை,—ஆங்கு ஒருத்தி தர - (பின்) அவ்விடத்து ஒருத்தி (நமக் குத்) தர,—அணையும் பரிசு ஆயினவாறு - (நாம் அவனை) எய் தும்படியாயினவாறென்? — நம் தன்மைகளே - (இவை) நம் முடைய பெண்தன்மைகள். எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - ஆற்றுமை நீங்குதல். நுதலார் நுதியறிவித்தென வியையும். குறி - பூப்புநிகழ்தற்குறி. (௩௯௦)

செவ்வணிகண்ட வாயிலவர்கூறல்.

மணிக்குழைபூப்பிய லுணர்த்தவந் த
ஆயிழையைக்கண்ட வாயிலவருரைத்த து.

(எ - து.) மணிக்குழையை யுடையளாகிய தலை மகள் பூப்பியலுணர்த்தவந்த ஆய்ந்த இழையையுடை யாளைக்கண்ட (பரத்தை) வாயிலவர் கூறியது.

சிவந்தபொன்மேனிமணிதிருச்சிற்றம்பலமுடையான்
சிவந்தவந்தாளணியூரற்குலகியலாறுரைப்பான்
சிவந்தபைம்போதுமஞ்செம்மலர்ப்பட்டுங்கட்டார்முலைமேற்
சிவந்தவஞ்சாந்தமுந்தோன்றினவிந்திருமனைக்கே.

(இ - ள்.) சிவந்த பொன் மேனி மணி - செம்பொன்போலு மேனியையுடைய மணியையொப்பான், — திருச்சிற்றம்பல முடையான் - திருச்சிற்றம்பலத்தை யுடையான், — சிவந்த அம் தாள் அணி ஊரர்க்கு - (அவனது) சிவந்த வழகிய தாள் களை முடிக்கணியாக்கு மூரனுக்கு, — உலகியல் ஆறு உரைப் பான் - உலகியல் நெறியை அறிவிப்பான் வேண்டி, — திரு மனைக்கு - (நமது) திருவையுடைய மனைக்கண், — சிவந்த பைம் போதும் - சிவந்த செவ்விப்பூவும், — அம் செம் மலர்ப் பட்டும் - அழகிய செய்ய பூத்தொழிற் பட்டும், — கட்டு ஆர் முலைமேல் சிவந்த அம் சாந்தமும் - கட்டுதலார்ந்த முலைமே லுண்டாகிய அழகிய செய்ய சாந்தமும், — வந்துதோன்றின - வந்துதோன்றின. (இனித் தருமக் குறைவாராமல் ஊரற்கும் ஏகல் வேண்டும்.) எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - பூப்புணர்த்துதல். (௩௬௬)

மனைபுகல்கண்ட வாயிலவர் கூறல்.

கடனறிந்தூரன் கடிமனைபுகுத
வாய்ந்தவாயிலவ ராய்ந்துரைத்தது.

(எ-து.) மனைக்கடனை யறிந்து (செவ்வணிகண்டு) தலைமகன் காவலையுடைய மனையகத்துப்புகத் தலை மகள்வாயிலவர் தம்முள் ஆய்ந்து கூறியது.

துராப்பயில்சூழையிவளின்மிக்கம்பலத்தான்குழையா
மராப்பயினுன்னணிடையாரடங்காவொவரோயினிப்பண்
டிராப்பகனின்றுணங்கீர்ங்கடையித்துணைப்போழ்திற்சென்று.
கராப்பயில்பூம்புனலூரன்புகுமிக்கடிமனைக்கே.

(இ-ள்.) பண்டு இரா பகல் நின்று உணங்கும் - முற்காலத்து இரவும் பகலும் (தான்வாயில் பெறாது) நின்றுவாடும், — ஈரம் கடை இத்துணை போழ்தில் சென்று - குளிர்ச்சி பொருந்திய க்கடைவாயிலை (நீட்டியாது) இத்துணைக்காலத்தில் கழிந்து,—

கரா பயில் பூம்புனல் ஊரன் இ கடி மனைக்கு புகும் - முதலை கள் பயில்கின்ற பூம்புனலையுடைய ஊரையுடையான், இக்காவலையுடைய மனைக்கண்புகா நின்றான்,—குரா பயில் கூழை இவளின் மிக்கு - (அதனால்) குராப்பூப்பயின்ற குழலையுடைய இவளினும் மேம்பட்டு, — அம்பலத்தான் குழையாம் அரா பயில் நுண் இடையார் - அம்பலத்தான் குழையாகிய அரவுபோலும் நுண்ணிய இடையினை யுடையார், — அடங்கார் இனி எவர் - (புலந்து) அடங்காதார் இனியாவர்? (மனைக்கடன் பூண்டலான் எல்லாரு மடங்குவர்). எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மெய்ம்மகிழ்தல். (௩௯௨)

## முகமலர்ச்சிகூறல்.

பூம்புன லூரன் புகமுகமலர்ந் த
தேம்புனைகோதை திறம்பிறருரைத் து.

(எ-து.) (பரத்தையிற் பிரிந்துவந்த) பூம்புன லூரனாகிய தலைமகன் மனையிற்புக முகமலர்ச்சி யெய்திய தேம்புனை கோதையளாகிய தலைமகளது தன்மையைப் பிறர்கூறியது.

வந்தான்வயலணியூரனெனச்சினவாண்மலர்க்கண்
செந்தாமரைச்செவ்விசென்றசிற்றம்பலவன்னருளான்
முந்தாயினவியனோக்கெதிர்நோக்கமுகமடுவிற்
பைந்தாட்குவளைகள்பூத்திருள்சூழ்ந்துபயின்றனவே.

(இ - ள்.) வந்தான் வயல் அணி ஊரன் என - வந்தான் வயலணிந்த வூரன் என்று சொல்லுமளவில், — சினம் வாள் மலர் கண் செந்தாமரை செவ்வி சென்ற - சினம்பொருந்திய வாள்போலு மலர்க்கண்கள் சிவந்ததாமரைப் பூவினது செவ்வியை யடைந்தன, — சிற்றம்பலவன் அருளான் முந்தாயின வியன் நோக்கு எதிர் நோக்க - சிற்றம்பலவன தருளான் முன்னுண்டாகிய பெரிய (அப்புலவி) நோக்கெதிர் (காதலன்) நோக்க,

முகம் மடுவில் பைந்தாள் குவளைகள் பூத்து இருள் சூழ்ந்து பயின்றன - (உடனே) முகமாகிய மடுவிற் பைந்தாளையுடைய குவளைப் பூக்கள் மலர்ந்து இருண்டு நெருங்கின (என்ன இல்ல றக்கிழத்தியோ). எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மெய்ம் மகிழ்தல்.

இயல் நோக்கென்று பிரித்து முன்னுண்டாகிய தனித்தல் இயல்பையுடைய நோக்கென் றுரைப்பினுமமையும். கண்களது பிறழ்ச்சிப்பன்மையாற் குவளைமலர்கள் பலகூடினாற் போன் றிருந்தனவென்பது தோன்ற, பயின்றன வென்றார். பயின் றன - காதலனோடு பழகின வெனினு மமையும். தலைமகனுக்குப் புலவிகாலத்து வருந்துன்பமிகுதியும், புலவிநீக்கத்துவரு மின்ப மிகுதியுங்கருதி, சிற்றம்பலவ னருளாலெனக் காரணத்தை மிகுத்துக் கூறினார். (௩௬௩)

**காலநிகழ்வுரைத்தல்.**

இகழ்வதெவன்கொ னிகழ்வதிவ்வாறெனச்
செழுமலர்க்கோதை யுழையருரைத்த து.

(எ - து.) (பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனது ஆற்றாமையை) நீக்காதிருத்தல் யாதுகொல்? (அவ ன் வண்டேது மல்லிகைப்போதானும், அந்திப்பிறை யானும், கங்குற் பொழுதானும், ஆற்றாய்ப் புகுத ராநின்றான்) இனி நிகழ்வ திவ்வாறாகலான் (நீ புல க்கற் பாலையல்லை) யெனத் தலைமகளுக் குழையர் கூறியது.

வில்லிகைப்போதின்விரும்பாவரும்பாவியர்களன்பிற்
செல்லிகைப்போதினெறியுடையோன்றில்லையம்பலஞ்சூழ்
மல்லிகைப்போதின்வெண்சங்கம்வண்டேவிண்டோய்ப்பிறையோ
டெல்லிகைப்போதியல்வேல்வயலூரற்கெதிர்கொண்டதே.

(இ - ள்.) வில்லி கை போதின் விரும்பா அரும் பாவியர்கள் அன்பில் செல்லி - மன்மதன் கையிலுள்ள (அம்பாகிய) பூக்களில் ஆதரமில்லாத அரிய குறிப்பையுடையவர்கள் (தனக்குச் செய்த) அன்பின்கண் (வேட்டுச்) செல்வோன், — கை போதின் எரி உடையோன் - கையாகிய பூவின்கண் அக்கினியையுடையவன்,—தில்லை அம்பலம் சூழ் - (அவனது) தில்லையம்பலத்தைச்சூழ்ந்த, — மல்லிகைப்போதின் வெண்சங்கம் வண்டு ஊத - மல்லிகையின் மலராகிய வெண்சங்கை வண்டுகளூத,— விண் தோய் பிறையோடு - ஆகாயத்தையடைந்த (அந்திப்) பிறையோடு,—எல்லி - இராப்பொழுது, — கை போது இயல் வேல் வயலூரற்கு - கையாகிய பூவின்கண் விளங்கும் வேலையுடைய வயலூரற்கு, — எதிர்கொண்டது - மாறுகொண்டது. எ-று. மெய்ப்பாடு-உவகை; பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல்.

வில்லிகைப் போதாற் புலன்களை விரும்பாத அரும்பாவியரொனினு மமையும். (௩௯௪)

எய்தலெடுத்துரைத்தல்.

சீரியலுலகிற் றிகழ்தரக்கூடி
வார்புனலூரன் மகிழ்வுற்றது.

(எ - து.) (பரத்தையிற் பிரிந்துவந்த) வளம்பொருந்திய ஊரையுடைய தலைமகன், பூப்புகிகழ்ந்த மனைக்கிழத்தியைத் தேவருலகத்திலுள்ள இன்பமெல்லாவற்றினும் விளங்கக்கூடிப் புலவிதீர்ந்து இன்புறப்பண்ணி யெய்தலுற்று மகிழ்ந்தமையை அங்குள்ளாரொடுத்துச் சொன்னது.

புலவித்திரைபொரச்சிறடிப்பூங்கலஞ்சென்னியுய்ப்பக்
கலவிக்கடலுட்கலிங்கஞ்சென்றெய்திக்கதிர்கொண்முத்த

நிலவிநிறைமதுவார்ந்தம்பலத்துநின்றோனருள்போன்
றுலவியலாத்தனஞ்சென்றெய்தலாயினவூரனுக்கே.

(இ - ள்.) புலவி திரை பொர - புலவியாகிய அலைமோத, — சிறு அடி பூ கலம் சென்னி உய்ப்ப - (காதலியின்) சிற்றடியாகிய பொலிவினையுடைய அணியை (தன்) சென்னியிலுய்த்தலான் (அப்புலவிநீங்க), — கலவி கடலுள் கலிங்கம் சென்று எய்தி - கலவியாகிய சமுத்திரத்துள் துகிலைச்சென்று பற்றி, — கதிர் கொள் முத்தம் நிலவி நிறை மது ஆர்ந்து - பற்களாகிய ஒளிபொருந்தின முத்தின்கட்பொருந்தி நிறைந்த (நீராகிய) மதுவைப்பருகி, — அம்பலத்து நின்றோன் அருள்போன்று - அம்பலத்து நின்றவனது அருளையொத்து, — உலவு இயலா தனம் ஊரனுக்கு சென்று எய்தலாயின - (ஒருக்காலும்) தளர்வில்லாத முலைகள் ஊரனுக்குச்சென்று பெறலாயின. எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மெய்ம்மகிழ்தல்.

புலவுநாறித் திரைகள்வந்து மோதச் சிறியவடியையுடைய பொலிவையுடைய மரக்கலத்தைக் கடலின் சென்னியிலேசெலுத்தக் கடலுட்கலந்து கலிங்கமாகிய தேயத்தைச் சென்றெய்தி ஒளிபொருந்திய முத்துக்கள் தன்னிடத்துவந்து நிலைபெற அவ்விடத்துள்ள மதுக்களை நுகர்ந்து அம்பலத்து நின்றவனதருளை யொத்து ஒருஞான்றுங் கேடில்லாத பொருள்சென்றெய்தலாயினவென வேறு மொருபொருள் விளங்கியவாறறிக.

### கலவிகருதிப்புலத்தல்.

மன்னியவுலகிற் றுன்னியவன்பொ டு
கலவிகருதிப் புலவியெய்திய து.

(எ - து.) நிலைபெற்ற வுலகின்கண் வைத்துச் செறிந்தவன்போடு (புலவிதீர்த்தின்புறப்புணரப் பட்டு மயங்காநின்ற) தலைமகள் பின்னு மவனுடன் கலவியைக் கருதிப் புலவிகொண்டது.

சேவ்வாய்துடிப்பக்கருங்கண்பிறழச்சிற்றம்பலத்தெம்
மொய்வார்சடையோனருளின்முயங்கிமயங்குகின்றாள்
வெவ்வாயுயிர்ப்பொடுவிம்மிக்கலுழ்ந்துபுலந்துநைந்தா
ளிவ்வாறருள்பிறர்க்காகுமெனநினைந்தின்னகையே.

(இ - ள்.) இன் நகை - இனிய நகையையுடையாள்,— செவ் வாய் துடிப்ப - சிவந்த இதழையுடைய வாய் துடிப்ப, — கரு கண் பிறழ - கரியகண்கள் பிறழ,— சிற்றம்பலத்து எம் மொய் வார் சடையோன் அருளின்முயங்கி - சிற்றம்பலத்தின்கணுளா னாகிய எம்முடைய நெருங்கிய நீண்ட சடையையுடையவனது அருள்பெற்றவர்போலத்தழுவி,— மயங்கு கின்றாள் - (இன்பக் களியின்) மயங்குகின்றவள், — இவ்வாறு அருள் பிறர்க்கு ஆகு மென நினைந்து - இவ்வாறு (நமக்கு அருளும்) அருள் ஒருக் கால்) பிறருக்குமாமென மனத்துட்கொண்டு, — வெவ்வாய் உயிர்ப்பொடு விம்மி கலுழ்ந்து புலந்து நைந்தாள் - வெய்யவிடத் தையுடைய நெட்டுயிர்ப்போடு பொருமியழுது புலந்து வருந்தி னாள். எ - று. மெய்ப்பாடு - உவகையைச்சார்ந்த வெகுளி, பெருமிதம்; பயன் - மெய்ம்மகிழ்தல்.

அருளான்முயங்கி யென்பாரு முளர். (௩௯௯)

### குறிப்பறிந்து புலந்தமைகூறல்.

குறிப்பினிற்குறிப்பு நெறிப்படநோக் கி
மலர்நெடுங்கண்ணி புலவியுற்ற து.

(எ-து.) (இவ்வா றருள் பிறர்க்காகுமென நினைந்து இன்னகை புலந்தாளென்று தலைமகன் கூறிய கூற் றையே தவறாக நினைந்து நம்மையொழிந்து பிறரு முண்டாகக் கூறினமையான் இவ்வமளி பலரைப் பொறுதெனப்புலந்த) தலைமகள் குறிப்பாலே தலை மகனது குறிப்பையறிந்து புலவியுற்றாளென (உழை யர் தம்முட்கூறியது).

மலைப்பொரு வடிமானுந் தமியன் மன்னன்னொருவன்
பலைப்பொறுதென் றிழிந்துநின்றாள் பள்ளிகாமனெய்த
வலைப்பொருதன் றழல்விழித்தோனம்பலம்வணங்காக்
கலைப்பொருச்சிறியாளென்னை கொல்லோ கருதியதே.

(இ - ள்.) மன்னன் ஒருவன் - மன்னன் ஒருவனே, — மலை பொரு அடி மானும் தமியள் - (மென்மையான்) மலையும் பொருத அடியையுடைய மான்போல் வாளுந் தமியளே,— பள்ளி பலை பொறுதென்று இழிந்து நின்றாள் - (ஆயினும்) இப்பள்ளி பலைத் தாங்கமாட்டாதென்று கூறி (பள்ளியினின்றும்) இழிந்து நின்றாள், — காமன் எய்த அலை பொருது அன்று அழல் விழித்தோன் - காமன் எய்த மலரம்பைவெகுண்டு அன்று அழலாகிய கண்ணைவிழித்தவனது, — அம்பலம் வணங்கா கலை பொரு சிறியாள் - அம்பலத்தை வணங்காத் தீய மக்களைப் பொருத சிறியவள், — கருதியது என்னைகொல் - (இந்நிலைமைக்கண்) கருதியது என்னோ. எ-று. மெய்ப்பாடு - மருட்சி; பயன் - ஐயந்தீர்தல்.

பள்ளியிடத்தாளாகிய தலைமகள் நுண்ணிதாகிய தோர் காரணம்பற்றி இவ்வகையுரைத்து ஊடக்கண்டபாங்கி தன்னெஞ்சொடு உசாவினளென்பது. தலைமகன் தன்னெஞ்சொடு சாவினானெனின் அதுபொருந்தாது. (௩௭௭)

### வாயிலவர்வாழ்த்தல்.

தலைமகனது தகவுடை மை
நிலைதகுவாயி னின்றோருரைத்த து.

(எ - து.) (செவ்வணி விடுக்கப் பூப்பியற்செவ்வி கெடாமல் மெலிவறிந்து பரத்தையிற்பிரிந்து வந்த) தலைமகனது தகுதியுடைமையை வாயில் நின்றவர் வாழ்த்தியது.

வில்லைப்பொலிநுதல்வேற்பொலிகண்ணிமெலிவறிந்து
வல்லைப்பொலிவொடுவந்தமையானின்றுவானவழுத்துந்
தில்லைப்பொலிசிவன்சிற்றம்பலஞ்சிந்தைசெய்பவரின்
மல்லைப்பொலிவயலூரன்மெய்யேதக்கவாய்மையனே.

(இ - ள்.) வில் பொலி நுதல் வேல் பொலி கண்ணி மெலிவு அறிந்து - வில்போலு நுதலையும் வேல்போலும் கண்களையுமுடையாளது வாட்டமறிந்து,—வல்லை பொலிவொடு வந்தமையால் - விரைய இவளது பொலிவுடன் வந்தமையால், — வான் நின்று வழுத்தும் தில்லை பொலி சிவன் - வானத்துள்ளார் நின்றுவழுத்துந் தில்லைக்கண் பொலியும் சிவனது, — சிற்றம்பலம் சிந்தை செய்பவரின் - சிற்றம்பலத்தைக் கருதுவாரைப்போல, — மல்லல் பொலி வயலூரன் - வளப்பத்தாற் பொலியும் வயலையுடைய வூரையுடையவன், — மெய் தக்க வாய்மையன் - மெய்யாக நல்லமெய்ம்மையன். எ - று. மெய்ப்பாடு - உவகை; பயன் - மகிழ்தல்.

வில்லையென்னுமைகாரம் இசைநிறையாய்வந்தது. காதலன் வர இவள் இடையின்றிப் பொலிந்தமையாற் பொலிவொடென ஓடுக்கொடுத்துக்கூறினார். பொலிசிற்றம்பலமென வியையும். மல்லல்கடைக்குறைந்து ஐகாரம் விரிந்துநின்றது. மல்லற்பொலியென் பதூஉம் பாடம். (௩௬௮)

### புனல்வரவுரைத்தல்.

புனலாடுகவெனப் புனைந்துகொண்டு
மனைபுகுந்தவனை வையமுரைத்தது.

(எ-து.) மனைவழித்தங்கி இன்புறுநின்றதலைமகனைப் பரத்தையர் புனலாடுவாயாக வெனப் புனைந்துகொண்டு புனலாட்டினால் இவன்காதலி புலக்கும் போலுமென வையத்தார் தம்முட் புனல்வரவுகூறியது.

சூன்முதிர் துள்ளுநடைப்பெடைக்கிற்றுணைச்சேவல்செய்வான்
றேன்முதிர்வேழத்தின் மென்பூக்குதர்செம்ம லூரன்றிண்டோ
மான்முதிர்நோக்கினல்லார்மகிழத்தில்லையானருளே [ள்
போன்முதிர்பொய்கையிற்பாய்ந்ததுவாய்ந்தபுதுப்புனலே.

(இ - ள்.) சூல் முதிர் துள்ளு நடை பெடைக்கு இல் செய்வான் துணை சேவல் - சூல் முதிர்ந்த துள்ளுநடையை யுடைத்தாகிய பெடைக்கு (ஈனும்) இல்லைச் செய்யவேண்டித் துணையாகியசேவல், — தேன் முதிர் வேழத்தின் மெல் பூ குதர் - தேன்போலும் (சாறு) முதிர்ந்த கரும்பினதுமெல்லிய பூவைக் கோதும், — செம்மல் ஊரன் திண் தோள் - தலைமையுடையவூரனது திண்ணிய தோள்களை, — மான் முதிர் நோக்கின் நல்லார் மகிழ - மானினது நோக்கம்போலும் நோக்கினையுடைய நல்லார் கூடியின்புற,—தில்லையான் அருள் போல் முதிர் பொய்கையில் வாய்ந்த புது புனல் பாய்ந்தது - தில்லையானது அருளையொத்து (நீர்) முதிர்ந்த பொய்கையுள் நல்லபுதுப்புனல் பாய்ந்தது. (இனிப்புனலாட்டினால் தன்காதலியைச் சிவப்பிக்கும்போலும்). எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - பிரிவுணர்த்துதல்.

சூன் முதிர்தலால் குறுகவடியிடுதலின் துள்ளுநடையென்றார். (௩௬௧)

தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறல்.

பயின்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
கயன்மணிக்கண்ணியர் கட்டுரைத்தது.

(எ-து.) (புனல்வரவுகேட்ட தலைமகன் புனலாட்டு விழவிற்குப்பரத்தையர் சேரிக்கண் செல்லாநிற்ப) இனியிவனதுதோளிணையைத் தோய்மினெனக் கயல் போலு மழகியகண்ணையுடைய பரத்தையர் அவனது மணித்தேர்வரவுகண்டு தம்முண்மகிழ்ந்து கூறியது.

சேயேயெனமன்னுதிம்புனலூரன்றிண்டோளிணைக
டோயீர்புணர்தவந்தொன்மைசெய்தீர்சுடர்கின்றகொலம்

தீயேயெனமன்னுசிற்றம்பலவர்தில்லைநகர்வாய்
வீயேயெனவடியீர்நெடுந்தேர்வந்துமேவினதே.

(இ - ள்.) சுடர்கின்ற கோலம் தீயே என - சுடரா நின்ற வடிவு தீயேயென்று சொல்ல, — மன்னு சிற்றம்பலவர் தில்லை நகர்வாய் வீ என அடியீர் - நிலைபெற்ற சிற்றம்பலவரது தில்லை நகரிடத்துள்ள பூவையொக்கும் அடியையுடையீர், — நெடு தேர் வந்து மேவினது - நெடியதேர் (ஈண்டு) வந்து தோன்றிற்று, — புணர் தவம் தொன்மை செய்தீர்- (இவனைப்) புணர்தற்குத்தக்க தவத்தை முற்காலத்துச்செய்தீர்கள், — சேயே என மன்னு தீம் புனல் ஊரன் - (வடிவு) முருகவேளேயென்று சொல்ல நிலைபெறுநின்ற இனிய புனலையுடைத்தாகிய ஊரையுடையவனது, — திண் தோள் இணைகள் தோயீர் - திண்ணிய தோளிணைகளை யினியணைமின். எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன் - தலைமகன் வரவு சேரிப்பரத்தையர்க்குப் பாங்காயினர் அவர்க்குணர்த்தல்.

ஒன்றற்கொன் றிணையாயிருத்தலின் இணையெனத் தனித் தனி கூறப்பட்டன. கோலமென்பது குறுகிநின்றது. (நஎO)

## புனல்விளையாட்டிற் றம்முளுரைத்தல்.

தீம்புனல்வாயிற் சேயிழைவருமென க்
காம்பனதோளியர்கலந்துகட்டுரைத்த து.

(எ-து.) தலைமகனுடன் புனலாடாநின்ற மூங்கிலையொத்த தோளையுடைய(பரத்தையர்) சேடியர் பரத்தையிற்றலைவியாகிய தம் இற்பரத்தை அவனைத் தன்னிடத்துத் திரிப்பவருமென்று(அவ்வாறுநேராது முன்னுறக்காப்பேமெனத்) தம்முட்கலந்து கூறியது.

அரமங்கையரெனவந்துவிழாப்புகுமவ்வவர்வா
னரமங்கையரெனவந்தணுகும்மவளன்றுகிராற்

சிரமங்கையனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலம்வழுத்தாப்
புரமங்கையரினையாதையகாத்தும்பொற்பனையே.

(இ - ள்.) அரமங்கையர் என வந்து விழா புகும் அவ்வவர் - அரமங்கையரைப்போல வந்து (புனலாட்டு) விழவின் கண் புகா நின்ற (சேடியர்), — வான் அரமங்கையர் என அவள் வந்து அணுகும் - (நாமெல்லாம் இத்தன்மையேமாக) வானிடத்தரமங்கையரென்று கருதும் வண்ணம் (நம்தலைவியாகிய) இற்பரத்தை வந்தணுகி (தன்னிடத்திவரைத் திரித்துக் கொள்ளக்கொடுத்து), — அன்று அங்கு உகிரால் அயனை சிரம் செற்றோன் - அன்று அவ்விடத்து நகத்தினாற் பிரமனைச்சிரந் தடிந்தவனது, — தில்லைச்சிற்றம்பலம் வழுத்தா புரம் மங்கையரின் - தில்லைச்சிற்றம்பலத்தைத் துதியாத புரங்களின் மங்கையரைப்போல, — நையாது - (நாம் பின்) வருந்தாது, — நம் பொற்பனை ஐய காத்தும் - நம் மலைநாட்டவரை வியப்ப (முன்னுடைத்தாகக்) காப்பேம். எ-று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - தலைமகனைத்தங்கட் டாழ்வித்தல்.

அரமங்கையர் - தெய்வப்பெண்களுக்குப் பொதுப்பெயர். வானரமங்கையர் - அவரின்மேலாகியவர். ஐயபொற்பனையெனக்கூட்டினு மமையும். (௩௭௧)

**தன்னை வியந்துரைத்தல்.**

அரத்தத்துவர்வாய்ப் பரத்தைத்தலைவி
முனிவுதோன்ற நனிபுகன்றது.

(எ-து.) (சேடிமார் தலைமகனை முன்னுறக்காப்பேமென்று தம்முட்கூறுவதனைக்கேட்டு) செம்பவளம் போன்ற வாயையுடைய இற்பரத்தை(இவனை யமரப் புல்லும் பரத்தையர்மாட்டு இவனருள்செல்லாமல் விலக்கேனாயின், என்மாட்டிவனைத்தக் தழாநின்ற இவன்மனைக்கிழத்தி யாகின்றேனென) முனிவுதோன்றத் தன்னைவியந்து கூறியது.

கனலூர்கணைதுணையூர்கெடச்செற்றசிற்றம்பலத்தெம்
மனலூர்சடையோனருள்பெற்றவரினமரப்புல்லு
மினலூர்நகையவர்தம்பாலருள்விலக்காவிடின்யான்
புனலூரனைப்பிரியும்புனலூர்கணைப்பூங்கொடியே.

(இ - ள்.) கனல் ஊர் கணை துணை ஊர் கெட செற்ற - அனல் வீசிய கணையால் ஒத்த ஊர் கெடும்படி வெகுண்ட,—சிற்றம் பலத்து எம் அனல் ஊர் சடையோன் - சிற்றம்பலத்தின்கணுளனாகிய எம்முடைய அனலையொக்குஞ் சடையையுடையவனது,—அருள் பெற்றவரின் - அருளைப் பெற்றவர்போலச் (செம்மாந்து),—அமர புல்லும் மின்னல் ஊர் நகையவர் தம்பால் அருள்விலக்காவிடின் - (அவனைச்) செறியப் புல்லாநின்ற ஒளி பரந்த நகையையுடைய சேடியரிடத்து (அவன்) அருள்செல்லாது விலக்கேனாயின், — யான் புனலூரனை பிரியும் புனல் ஊர் கண் அ பூங்கொடியே - யான், புனலூரனைப் பிரிந்து (வருந்தும்) புனல் பரக்குங் கண்ணையுடைய (அவன் மனைக்கிழத்தியாகிய) அப்பூங்கொடியே யாகின்றேன். எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - தனது பீடுணர்த்தல். (௩௭௨)

நகைத் துரைத்தல்.

வேந்தன்பிரிய வேந்திழைமடந் தை
பரத்தையைநோக்கி விரித்துரைத்த து.

(எ - து.) தலைமகன்பிரியத் தலைமகள் (தன்னையே தான்வியக்கும்) இற்பரத்தையை நோக்கி விரித்துக் கூறியது.

இறுமாப் பொழியு மன்றே தங்கை தோன்றினென் னெங்கை யங்கைச், சிறுமான் றரித்த சிற்றம் பலத்தான் றில்லையூரன் றிண்டோள், பெறுமாத் தொடுந்தன்ன பேரணுக்குப் பெற்ற பெற்றியினே, டிறுமாப் பொழிய விறுமாப் பொழிந்த வின்ன மூலையே.

(இ - ள்.) அங்கை சிறு மான் தரித்த சிற்றம்பலத்தான் - அங்கைக்கண் சிறுமானைத்தரித்த சிற்றம்பலத்தானது,—தில்லை யூரன் திண் தோள் பெறும் மாத்தொடும் - தில்லைக்க ணுளனு கிய ஊரனுடைய திண்ணிய தோள்களைப் பெறுதலா னுண்டா கிய பெருமையோடும்,—தன்ன பேர் அணுக்கு பெற்ற பெற் றியினேடு இறுமாப்பு ஒழிய - தன்னவாகிய (அவனேடுண்டா கிய) பெரிய அணுக்கைப்பெற்ற தன்மைகளோடும் தான் செம் மாத்தலையொழிய,—இணை முலை இறுமாப்பு ஒழிந்த - இணை முலைகள் ஏந்துதலை யொழிந்து நின்றன,—தங்கை தோன்றின் என் எங்கை இறுமாப்பு ஒழியும் அன்றே - (இனிதனக்கொரு) தங்கை தோன்றின் என்னுடைய தங்கையும் செம்மாத்தலை யொழியுமன்றே. (அதனால் இப்பரத்தை வருவதறியாது தன் னைப்புகழ்கின்றாள்). எ-று. மெய்ப்பாடு - வெகுளியைச் சார்ந்த வழுகை: பயன் - பரத்தையது சிறுமை யுணர்த்துதல்.

அவ்வகைபரத்தை தன்னைத்தானே வியந்துகூறிய வஞ்சினம் தன் பாங்காயினாற் கேட்ட தலைமகள் பரத்தைக்குப் பாங் காயினார் கேட்ப இவ்வகை சொன்னாளென்பது. மாத்து - தலை மகற்குரியளாய் நிற்றலான் உண்டாகிய வரிசை. (நஎ௩)

நாணுதல்கண்டு மிகுத்துரைத்தல்.

மன்னவன்பிரிய நன்மனைக்கிழத்தி யை
நாணுதல்கண்ட வாணுதலுரைத்த து.

(எ - து.) தலைமகன் பிரியத் தலைமகள் நாணுவ தைக்கண்டபாங்கி அவளது கற்பும்நலனும் நல்ல பகு தியையுடையனவா யிருந்தனவென அவள் நலத்தை மிகுத்துக்கூறியது.

வேயாதுசெப்பினடைத்துத்தமிவைகும்வீயினன்ன
தீயாடிசிற்றம்பலமனையாடில்லையூரனுக்கின்

றேயாப்பழியெனநாணியென்கண்ணிங்ஙனேமறைத்தாள்
யாயாமியல்பிவள்கற்புநற்பாலவியல்புகளே.

(இ-ள்.) வேயாத செப்பின் அடைத்து தமி வைகும் வீயின் அன்ன - கூடாத செப்பின்கணிட்டடைப்பத் தனியேவைகும் பூவைப்போலும்,—தீ ஆடி சிற்றம்பலம் அணையாள் - தீயின்கணாடுவானது சிற்றம்பலத்தை யொப்பாள்,—தில்லை ஊரனுக்கு இன்று ஏயா பழி என நாணி - தில்லையூரனுக்கு இன்று தகாதபழியெனக்கருதி நாணித் (தனதாற்றாமையை), — என்கண் இங்ஙனே மறைத்தாள் - என்னிடத்தும் இவ்வண்ணமே மறைத்தாள்,—இவள் கற்பு யாயாம் இயல்பு - (அதனால்) இவளுடைய கற்பு (நமக்குத்) தாயா மியல்பையுடைத்து, — இயல்புகள் நல் பால - (இவளுடைய நாணமுதலிய) இயல்புகள் நல்ல கூற்றன. எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - தலைமகனது பெருமை யுணர்த்துதல்.

தமிவைகும்வீ - அக்காலத்தி னிகழ்ந்த வேறுபாட்டிற் குவமை. அம்பலம் - இயற்கைநலத்திற் குவமை. (௩௭௪)

பாணன்வர வுரைத்தல்.

இகல்வேலவனகல் வறியாப்பாணனைப்
பூங்குழன்மாதர்க்குப் பாங்கிபகர்ந்தது.

(எ-து.) வலிமையையுடைய வேலனாகிய தலைமகனது அகற்சியையறியாத பாணன்வரவை, (நாமேடு தனியிருந்து வருந்தாநின்ற) பூங்குழலையுடைய தலைமகளுக்குப் பாங்கி, கூறியது.

விறலியும்பாணனும்வேந்தர்க்குத்தில்லையிறையமைத்த
திறலியல்யாழ்கொண்டுவந்துநின்றார்சென்றிராத்திசைபோம்
பறலியல்வாவல்பகலுறைமாமரம்போலுமன்னே
வறலியல்கூழைநல்லாய்தமியோமையறிந்திலரோ.

(இ - ள்) விறலியும் பாணனும் தில்லை இறை அமைத்த திறல் இயல் யாழ் வேந்தற்கு கொண்டு வந்து நின்றார் - விறலியும் பாணனும் தில்லையிறைவனாலமைக்கப்பட்ட வெற்றியையுடைய யாழை நம்வேந்தனுக்குத் (துயிலெழுமங்கலம் பாடக்) கொண்டுவந்து நின்றார்கள், — அறல் இயல் கூழை நல்லாய் - கருமணல் போலும் கூந்தலையுடைய நல்லாய்!—இரா சென்று திசை போம் பறத்தல் இயல் வாவல் பகல் உறை மாமரம் போலும் - இராப் பொழுதின்கண் சென்று திசையைக்கடக்கும் பறத்தலாகிய இயல்பினையுடைய வாவல் (இரைதேருங் காலமல்லாத பகற் பொழுதின்கணுறையும்) பெரியமரம் போலும், — தமி யோமை அறிந்திலர் - (இராப்பொழுதின்கண் துணையில்லாத) தமியோமை (இவர்) அறிந்திலர் போலும். எ-று. மெய்ப்பாடு - அழுகை ; பயன் - பாணனும் விறலியும் வரவுணர்த்திச் சிவப்பாற்றுவித்தல்.

மன்னும் - ஓவும் - அசைநிலை. வெற்றி வீணைகளுட்டலையாதல். சென்று பகலுறை மாமரமென்றியைப்பினு மமையும். இவர்வந்து நின்றதற்குத் தலைமகள் நம்மை இவர்நகையாடிய வந்தாரென்றுமுனிந்தாளாகப் பாங்கி, இவ ரவன் செயலையறிந்தாரல்லொன்றும், தலைவர்க்கியல்பு நம்மிடத்துவருதலும் அவ ளிடத்துச் சேறலுமெனவும் இயல்பு சொல்லுதலாற் சிவப்பாற்றுவித்தாளாம். (௩௭௫)

### தோழியியற் பழித்தல்.

தலைமகனைத் தகவிலனென்னச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பியது.

(இ-ள்.) (பாணன் வரவுணர்த்த) சிலைபோலு நுதலையுடைய பாங்கி, தலைமகனைத் தகவிலனென்ன இயற்பழித்துக் கூறியது.

தீக்கின்றகுதின்டோளிறைதில்லைச்சிற்றம்பலத்துக்
கொக்கிறகணிந்துநின்றாடிதென்கூடலன்ன

யக்கின்னகையிவளையவயல்வயினல்குதலாற்
றக்கின்றிருந்திலனின்றசெவ்வேலெந்தனிவள்ளலே.

(இ - ள்.) திக்கின் இலங்கு திண் தோள் இறை - திசைகள்
தோறும் விளங்காநின்ற திண்ணிய தோள்களையுடைய இறை
பன், — தில்லைச்சிற்றம்பலத்து கொக்கின் இறகது அணிந்து
நின்று ஆடி - தில்லைச்சிற் றம்பலத்தின்கண் கொக்கின் இற
தனை யணிந்து நின்றாடுவான், — தென் கூடல் அன்ன - (அவ
னது) தெற்கின்க ணுண்டாகிய மதுரையை யொக்கும், —
அக்கு இன் நகை இவள் நைய - அக்குமணிபோலும் இனிய
கையையுடைய இவள் வருந்த, — அயல்வயின் நல்குதலால் -
அயலாரிடத்துப் பொருந்துதலால், — நின்ற செவ்வேல் எம்
தனி வள்ளல் - (எல்லாரானு மறியப்பட்டு) நின்ற செவ்வேலை
திய எம்முடைய ஒட்பில்லாத வள்ளல், — இன்று தக்கு
இருந்திலன் - இன்று தகவுடைய னல்லன். எ-று. மெய்ப்பாடு -
முகையைச்சார்ந்த நகை ; பயன் - தலைமகனை யிகழ்ந்து
த் தலைமகளை யாற்றுவித்தல்.

அயல் வயினென்பதற்குப் பொருள்நசை யுள்ளத்தரகவின்
ாமத்திற் கயலென்றுரைப்பினு மமையும். (௩௭௬)

**உழையரியற் பழித்தல்.**

அரத்தவேலண்ணல் பரத்தையிற்பிரிய
குழைமுகத்தவளுக் குழையருரைத்த

(எ-து.) குருதிதோய்ந்த வேலையுடைய தலைமக
பரத்தையரிற்பிரிய அவன் தகவிலனெனக் குழை
முகத்தையுடைய தலைமகளுக்கு உழையர் சொல்
ஆற்றுவித்தது.

ன்புடைநெஞ்சத்திவள்பேதுறவம்பலத்தடியா
ரன்பிடைவந்தமிழ்தூறநின்றாடியிருஞ்சுழியற்

றன்பெடைநையத்தகவழிந்தன்னஞ்சலஞ்சலத்தின்
வன்பெடைமேற்றுயிலும்வயலூரன்வரம்பிலனே.

(இ - ள்.) அடியார் என்பிடை அமிழ்து வந்து ஊற - அடியவரது என்புகளிடையே யமிழ்தம் வந்தூற, — அம்பலத்து நின்றுடி - திருவம்பலத்தின்கண்ணே நின்றுடுவானது, — இருசுழியல் தன்பெடை நைய தகவு அழிந்து அன்னம் சலஞ்சலத்தின் வன் பெடைமேல் துயிலும் வயல் ஊரன் - பெரிய சுழியலின்கண் தன்பெடைவருந்தத் தகுதிகெட்டு அன்னம் சலஞ்சலமென்னும் சங்கினது வலிய பெடைமேற் கிடந்துறங்கும் வயலாற் சூழப்பட்ட ஊரையுடையவன்,—அன்புடை நெஞ்சத்து இவள் பேதுற - தன்மாட்டன்புடைய நெஞ்சத்தை யுடைய இவள் மயங்காநிற்ப (இதற்குப் பிரியாமையின்), — வரம்பிலன் - தகவிலன். எ - று. மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்த நகை; பயன் - தலைமகனை யியற்பழித்துத் தலைமகளை யாற்றுவித்தல்.

அன்புடை நெஞ்சத்திவ ளென்றதனால், பரத்தையரதன் பின்மைகூறப் பட்டதாம். சுழியல் - ஒரு திருப்பதி. வன்பெடை யென்றதனன் பரத்தையரது வன்மை விளங்கும். (௧௭௭)

### இயற்பட மொழிதல்.

வரிசிலையூரன் பரிசுபழித்த
உழையர்கேட்ப வெழிலனையுரைத்தது.

(எ-து.) (தலைமகனை யியற்பழித்த) உழையருக்கு நீர் கொடுமை கூறுகின்ற தென்னோ வெனத் தலைமகள், அவனை இயற்பட மொழிந்தது.

அஞ்சார்புரஞ்செற்றசிற்றம்பலவர்தண் கயிலை
மஞ்சார்புனத்தன்றுமாந்தழையேந்திவந்தாரவரென்
னெஞ்சார்விலக்கினுநீங்கார்நனவுகனவுமுண்டேற்
பஞ்சாரமளிப்பிரிதலுண்டோவெம்பயோதரமே.

(இ - ள்.) அஞ்சார் புரம் செற்ற - (இறைவனென்று) அஞ்சாதவருடைய புரங்களையெரித்த, — சிற்றம்பலவர் அம் தண் கயிலை - சிற்றம்பலவரது அழகிய குளிர்ச்சிபொருந்திய கயிலையின்கண்,—மஞ்சு ஆர் புனத்து - மஞ்சார்ந்த புனத்தின்கண்,—அன்று மாந்தழை ஏந்தி வந்தார் அவர் - அன்று மாந்தழையையேந்தி வந்தவராகிய அவர்,—கனவு என் நெஞ்சார் - (இன்று) கனவில் என் னெஞ்சத்தின் கண்ணார்,—விலக்கினும் நீங்கார் - (யான்) தடுப்பினும் (அவ்விடத்தினின்றும்) நீங்கார்,—கனவும் உண்டேல் - துயிலு முண்டாயின், — பஞ்சு ஆர் அமளி எம் பயோதரம் பிரிதல் உண்டோ - பஞ்சார்ந்த படுக்கையின்கண் எங் கொங்கையைப் பிரிதலுண்டோ! (ஆகையால் நீர் கொடுமை கூறுகின்றதென்)? எ - று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகனை யியற்படமொழிந்தாற்றுதல்.

மஞ்சு - மேகம். அஞ்சார் - தறுகண்ணரொனினு மமை யும். தழையேந்திவந்தார் என்பதனை முற்றென்று, இளி வந் தனசெய்து நம்மைப் பாதுகாத்தார் இன்றிவ்வா றொழுகுவ தொன் றுணைப்பினு மமையும். எனது நெஞ்சாரென்பதூஉம், அவரைப் பரிசுபழித்த வென்பதூம் பாடம். (௩௭௮)

## நினைந்துவியந் துரைத்தல்.

மெல்லியற்பரத்தையை விரும்பிமேவினோ ன்
அல்லியங்கோதையை யகனமர்ந்துரைத்த து.

(எ - து.) புனலாடப்பிரிந்து பரத்தையிடத் தொழுகாநின்ற தலைமகன் தலைமகளைப் பிரிந்து ஈண்டிருத்தல் மிகவு மரிதென அவளை நினைந்து வியப்பாகக் கூறியது.

நள்ளம்புனற்கங்கைதங்குஞ்சடையன்சிற்றம்பலத்தான்
ர்ளம்புகுநெஞ்சர்காணுவிறையுறைகாழியன்னு

ளுள்ளம்புகுமொருகாற்பிரியாதுள்ளியுள்ளுதொறும்
பள்ளம்புகும்புனல்போன்றகத்தேவரும்பான்மையளே.

(இ-ள்.) தெள் அம் புனல் கங்கை தங்கும் சடையன் - தெளிந்த நல்ல நீரையுடைய கங்கைதங்குஞ் சடையையுடையவன், — சிற்றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்கணுள்ளவன், — கள்ளம் புகு நெஞ்சர் காணு இறை - பொய் நுழையு நெஞ்சத்தையுடையவர் ஒரு ஞான்றுங் காணாத இறைவன்,— உறை காழி அன்னாள் - (அவன்) வசிக்கின்ற காழியையொப்பாள், — உள்ளி ஒருகால் பிரியாது உள்ளம் புகும் - (யான் அவனை நினையாது வேறொன்றன்மேல் உள்ளத்தைச்செலுத்தும்போது தான் என்னை) நினைந்து ஒருகாலும் பிரியாது (என்) உள்ளம் புகா நின்றாள், — உள்ளுதொறும் பள்ளம் புகும் புனல் போன்று - (அவ்வாறன்றியான் அவளை) நினையுந்தோறும் (உயர்ந்த விடத்தினின்றும்) பள்ளத்திற்புகும் புனலையொத்து, — அகத்தே வரும் பான்மையள் - (தடுப்பரியளாய்) என் மனத்தின்கண்வரும் முறைமையளாகா நின்றனள். (அதனால் அவளைப்பிரிந் தீண்டிருத்தல் அரிது போலும்). எ-று. மெய்ப்பாடு - மருட்கை; பயன் - பரத்தையி னீங்கித்தலைமகளிடத்தணுதல். தெள்ளம் புனல் - பண்புத் தொகை. (௩௭௧)

**வாயில்பெறாது மகன்றிறநினைத்தல்.**

பொற்றொடிமாதர் நற்கடைகுறுகி
நீடியவாயிலின் வாடினன்மொழிந்தது.

(எ - து.) (பரத்தையிற்பிரிந்து தலைமகள்நினைவொடுவந்த) தலைமகன், அவள் வாயிலின்கணின்று (இத்தகைய சிறுவன் என்னைவந்தணைகின்றிலன், ஆதலான், அவனை யெவ்வாறு நண்ணுவதென) மனம்வாடி மகன்திற நினைந்து கூறியது.

தேன்வண்டுறைதருகொன்றையன்சிற்றம்பலம்வழுத்தும்
வான்வண்டுறைதருவாய்மையன்மன்னுகுதலையின்வா

ரன்வண்டுறைதருமாலமுதன்னவன்வந்தணையா
)ன்வண்டுறைதருகொங்கையெவ்வாறுகொனண்ணுவதே.

(இ - ள்.) தேன் வண்டு உறைதரும் கொன்றையன் - தனும் வண்டு முறையுங் கொன்றைப் பூவையணிந்தவனது,— ற்றம்பலம் வழுத்தும் - சிற்றம்பலத்தைத் துதிக்கும், — ான் வள் துறைதரு வாய்மையன் - வானிடத்துளவாகிய ளவிய இடங்களை (எனக்குத்) தரும் மெய்ம்மையையுடைய ம், — மன்னு குதலை இன் வாயான் - நிலைபெற்ற குதலை யயுடைய இனியவாயையுடையானும், — வள் துறை தரும் ால் அமுது அன்னவன் - வளவிய கடல் தந்தபெருமையை டைய அமிர்தத்தை யொப்பானுமாகிய மைந்தன், — வந்து ணயான் - என்னை வந்தணைகின்றிலன், — வண்டு உறை ரு கொங்கை நான் நண்ணுவது எவ்வாறுகொல் • (நறு நாற் ந்தால்) வண்டுகள் தங்கும் கொங்கையையுடையாளை யான் பாருந்துவது இனி யெவ்வாறோ? எ-று. மெய்ப்பாடு - அழு க; பயன் - வாயில் கோடல் நெஞ்சொடு சொல்லியது.

தேனை நுகரும் வண்டெனினு மமையும். வழுத்துவார் பெ ம் வானென்பது - வழுத்தும் வானென இடத்து நிகழ்பொரு ன் றொழில் இடத்து மேலேறிற்று. இப்பொழுது குதலையை டைத்தாகிய வாயான் மேல் வளவிய நூற்றுறைகளைச் சொ லி எனக் கின்பத்தைச் செய்யும் அமிழ் தன்னவனென் றுரை னு மமையும். வாயிலின் - வாயிலால். (௩௮௦)

### வாயிற்கணின்று தோழிக்குரைத்தல்.

பெருந்தகைவாயில் பெறாதுநி ன்
றருந்தகைப்பாங்கிக் கறியவுரைத்த து.

(எ - து.) வாயில்பெறாது மகன்றிறம் நினைகின்ற தலைமகன், தலைமகள் என்வாட்டத்தை நீக்காத விர தம் யாதெனப் பாங்கிக்கறியக் கூறியது.

கயல்வந்தகண்ணியர்கண்ணிணையான்மிகுகாதரத்தான்
மயல்வந்தவாட்டமகற்றுவிரதமென்மாமதியி
னயல்வந்தவாடரவாடவைத்தோனம்பலநிலவு
புயல்வந்தமாமதிற்றில்லைநன்னாட்டுப்பொலிபவரே.

(இ - ள்.) வந்த ஆடு அரவு மாமதியின் அயல் ஆடவைத்தோன் - (துன்பஞ்செய்யக் கருதி) வந்த ஆடும் பாம்பைப் பெருமைபொருந்திய பிறையின்பக்கத்து (அதனை வருந்தாமல்) ஆடவைத்தவனது, — அம்பலம் நிலவு புயல்வந்த மாமதில் தில்லை - அம்பலம் நிலைபெற்ற புயல் தங்கிய பெரிய மதிலையுடைய தில்லையைச்சூழ்ந்த, — நல் நாடு பொலிபவர் - நல்ல நாட்டிற் பொலியும் மகளிர், — கயல் வந்த கண்ணியர் - கயல் போலுங் கண்ணையுடையவரது, — கண்ணிணையான் மிகுகாதரத்தால்வந்த - கண்ணிணையால் (ஒருகாலைக் கொருகால்) மிகாநின்ற அச்சத்தால்வந்த, — மயல் வாட்டம் அகற்று விரதம் என் - மயக்கத்தினு லுண்டாகிய வாட்டத்தை நீக்காத (இவ்) விரதம் யாதாம்? எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் - வாயில் கோடல் நெஞ்சொடு சொல்லியது.

தில்லைநன்னாட்டுப் பொலிபவர் அகற்றுதவென வியையும். பொலிபவர்க்கு என்னு நான்கனுருபு விகாரவகையாற் றொக்கதெனினு மமையும். இது முன்னிலைப் புறமொழி. இதனுள் கயல்வந்த கண்ணியரென்றது தலைமகளை. தில்லைநன்னாட்டுப் பொலிபவரென்றது பாங்கியை இனிமதிக்குவமை தலைமகளும் அரவிற்குவமை தலைமகனும் ஈசனுக்குவமை பாங்கியுமென்றுக்கி, அவ்வகைத்தாகிய பாம்பையும் மதியையும் தம்மிற் பகையறுத்து ஓரிடத்தே விளங்கவைத்தாற்போல என்னுடன் அவட்குண்டாகிய வெறுப்பைத் தீர்த்து விளங்கவைத்தல் உனக்குக் கடனென்றுனயிற்றென உள்ளுறைகாண்க. மதியையரவு ஏதங்குறித்து வந்தாற்போலத் தலைமகளைத் தலைமகன் ஏதங்குறித்து

வருதலாவது தலைமகளுக்கு ஊடல் புலவி துனியென்னும் வெ றுப்புத் தோன்றுதற்குத் தக்க காரணங்களைத் தலைமகன் உண் டாக்கிக்கொண்டு வருதல். அரவைக்கண்டு மதிக் கச்சந்தோன்றி ஞற்போலத் தலைமகனைக்கண்டு தலைமகளுக்கும் ஊடல் புலவி துனியென்னும் வெறுப்புத் தோன்றிற்று. ஆதலால் அத்தலை மகனையும் தலைமகளையும் மதிக்கு மரவுக்கு மொப்பச் சிலேடித்த சிலேடைக்கு மறுதலையாகாது "தேவரனையர்கயவர்" என்றாற் போலவா மென்க. கயல்வந்த கண்ணியர் கண்ணிணையால் வந்த அச்சத்தால்வந்த மயக்கத்தால்வந்த வாட்டம் இவனுக்கு வருவ தற்குக் காரணம் தலைவி பராமுகஞ் செய்யும்படி தான் வருந் தல். இதனைத் தீர்த்தல் இல்லை என்னுட்டுப் பொலியு மகளிர்க் குக் கடனென்றுனென்க. அது "பிணிக்குமருந்து பிறமனணி யிழை தன்னோய்க்குத் தானேமருந்து" என்று சொல்லியவாறு போலக் கண்ணாலுண்டாகிய நோய்க்குக் கண்ணே மருந்தா மென்று சொல்லியவாறு மெனக் கொள்க. (௩௮௧)

### வாயில்வேண்டத் தோழிகூறல்.

வைவேலண்ணல் வாயில்வேண்டப்
பையரவல்குற்பாங்கிபகர்ந்தது.

(எ - து.) வாயில்வேண்டிய தலைமகனுக்குப் பட வரவல்குலையுடைய பாங்கி, அவன் செய்தியைக் கூறியது.

கூற்றாயினசினவாளியெண்ணீர்கண்கள்கோளிழித்தாற்
போற்றான்செறியிருட்பொக்கமெண்ணீர்கன்றகன்றபுனிற்
றாற்றுவெனநீர்வருவதுபண்டின்றெம்மீசர்தில்லைத்
தேற்றார்கொடிநெடுவீதியிற்போதிரத்தேர்மிசையே.

(இ - ள்.) கூற்றாயின சினம் ஆளி எண்ணீர் - கூற்றம்போ லக் கொடியவாகிய கோபத்தையுடைய ஆளிகளைக் (கெடுதி செய்வனவாகக்) கருதாது,—கண்கள் கோள் இழித்தாற்போல்

செறி இருள்பொக்கம் எண்ணீர் - கண்களின் பார்வையை நீக்கினாற்போலச் செறிந்த இருளின்மிகுதியை (தான் இடையூறாக) நினையாது,—கன்று அகன்ற புனிற்று ஈற்று என - கன்றை யகன்ற ஈன்றணிமையையுடைய ஈற்றுவையொத்து,—பண்டு நீர் வருவது-பண்டு நீர் எம்மாட்டு வருவது,—இன்று எம் ஈசர் இல்லை-இன்று எம்முடைய ஈசரது இல்லையிலே,—தேற்றார் கொடி நெடு வீதியில் - (எமது) பொருந்தாதவரது கொடியையுடைய நெடிய வீதியில், — அ தேர்மிசை போதிர் - (எம்மாட் சேர்ந்து வந்த) அத்தேரின்மே லேறிச் சென்றீர். (இதுவன்றோ எம்மாட்டு நும் அருளாயினவாறு). எ - று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல்.

ஆளியெண்ணீர் பொக்கமெண்ணீர் என்பனவற்றை முற்றாக வுரைப்பினுமமையும். கண்களுக்குக் கோளென்றது பார்வை. இதனை யிழித்தலென்பது கண்மணியை வாங்குதல். தானென்பது அதுவன்றி இது வொன்றென்பதுபட நின்ற தோரிடைச்சொல். அசைநிலை யெனினு மமையும். ஈற்றுவென்றது கடுஞ்சூல் நாகன்றிப் பலகாலீன்ற ஆவை. (௩௮௨)

### தோழி வாயில்வேண்டல்.

வாயில்பெறாது மன்னவனிற் ப
ஆயிழையவட்குத் தோழிசொல்லிய து.

(எ-து.) தலைமகளுக்குத் தலைமகன் முன்செய்த உதவியைக் கூறிச்சென்று அவர் தன் பெருமையை நினையாது இன்று நம்வாயிலில்வந்து ஒன்றுங் கூறிலர், இதற்குயாம் செய்வதியாதெனப் பாங்கி வாயில் வேண்டிநின்றது.

வியந்தலைநீர்வையமெய்யேயிறைஞ்சவின்டோய்குடைக்கீழ்
வயந்தலைகூர்ந்தொன்றும்வாய்திறவார்வந்தவாளரக்கன்
புயந்தலைதீரப்புலியூரானிருக்கும்பொருப்பிற்
கயந்தலையானைகடிந்தவிருந்தினர்கார்மயிலே.

(இ - ள்.) கார் மயிலே - கார்காலத்து மயிலையொப்பாய்! — வந்த வாள் அரக்கன் புயம் தலை தீர - (வரையையெடுக்க) வந்த வாளினையுடைய அரக்கனது கையுந்தலையும் உடலினின்றும் நீங்க, — புலியூர் அரன் இருக்கும் பொருப்பில் - புலியூர ரன் வாளாவிருக்கும் கைலைமலையின்கண், — கயம் தலை யானை கடிந்த விருந்தினர் - மெல்லியதலையையுடைய யானையை (நம்மேல்வாராமல் அன்று) மாற்றிய (நம்) விருந்தினர், — விண் தோய் குடைக்கீழ் - விண்ணைத்தோயா நின்ற (தமது) குடையின் கீழ், — அலை நீர் வையம் வியந்து மெய்யே இறைஞ்ச - கடலாற் சூழப்பட்ட வுலகத்துள்ளாரெல்லாரும் வியந்து சென்று அகனமர்ந்து வணங்க, — வயா தலைகூர்ந்து ஒன்றும் வாய் திறவார் - (தாம் தம்பெருமையை நினையாது நம் கடைவாயிலின்கண் வந்து நின்று) வேட்கைப் பெருக்கம் தம்மிடத்துச்சிறப்ப ஒன்றுஞ்சொல்லுகின்றிலர். (இனிமறுத்த லரிது). எ-று. மெய்ப்பாடு - இளிவரல்; பயன் - தலைமகளைச் சிவப்பாற்று வித்தல்.

விண்டோய் குடைக்கீழிறைஞ்ச வெனவினையும். இருந்த துணையல்லது, ஒருமுயற்சி தோன்றுமையின் இருக்குமென்றார். சிற்றிலிழைத்து விளையாடும் வழி விருந்தாய்ச்சென்று நின்றுரு கலின் விருந்தின ரென்றாள். இற்செறிக்கப்பட்ட விடத்து ஊண்காலத்து விருந்தாய்ச் சென்றுருகலின் விருந்தினரென்று னெனினு மமையும். கார்ப்புனத்தே யென்பதூஉம் பாடம். ()

மனையவர் மகிழ்தல்.

கன்னிமானோக்கி கனன்றுநோக்  க
மன்னியமனையவர் மகிழ்ந்துரைத்த  து.

(எ - து.) இளமானோக்கமுடைய தலைமகள் கண் சிவந்துநோக்க இவளதுகண் சிவக்கவுங் கற்றனவென மனையவர் மகிழ்ந்து கூறியது.

**தேவியங்கண்டிகழ்மேனியன்சிற்றம்பலத்தெழுது**
**மோவியங்கண்டன்னவொண்ணுதலாடனக்கோகையுய்ப்பான்**
**மேவியங்கண்டனையோவந்தனனெனவெய்துயிர்த்துக்**
**காவியங்கண்கழுநீர்ச்செவ்விவெளவுதல்கற்றனவே.**

(இ - ள்.) தேவி அங்கண் திகழ் மேனியன் - தேவி யவ் விடத்து விளங்கு மேனியை யுடையவனது, — சிற்றம்பலத்த எழுதும் - சிற்றம் பலத்தின்கண் எழுதப்பட்ட, — ஓவியங் கண்டன்ன - ஓவியத்தைக் கண்டாற்போலும், — ஒள் நுத லாள்தனக்கு ஓகை உய்ப்பான் வந்தனன் - ஒள்ளிய நுதலை யுடையாள்தனக்கு ஓகைகொண்டு செல்லவேண்டி (காதலன் வந்தான், — மேவு இயம் கண்டனையோ என - வந்துபொரு த்து இன்ற இயவொலி கேட்டனையோவென்று (கண்டார் வந்து சொல்லக்கேட்டு), — வெய்து உயிர்த்து காவியம் கண், - வெய்தாகவுயிர்த்துக் குவளைப்பூப் போலுங்கண்கள், — கழு நீர் செவ்வி வெளவுதல் கற்றன - கழுநீர்மலர்ச் செவ்வியை வெளவுதல் வல்லவாயின; (இனியென்னிகழ்ம்). எ-று. மெய் பாடு-அழுகை; பயன்-தலைமகள்வாயில் நேராமையுணர்த்துத

அங்கட்டிகழ் மேனியென்பது மெலிந்து நின்றது. தேவி னுடைய வழகிய கண்மலர்கள் சென்று விளங்கு மேனியை யுடையவனெனினு மமையும். மேவியங்கண்டனையோ வந்த னென வென்பதற்கு அழகியகண்டன் வந்தானென்று பே யுரைப்ப வெனினு மமையும். ஐயோவென்றது உவகைக்க வந்தது. வெய்துயிர்த்தற்கு வினைமுதல் உயிர்த்தற்குக் க யாகிய பொறியெனினு மமையும். (௩௯

**வாயின்மறுத் துரைத்தல்.**

மடவாரற்றேறுழி வாயில்வேண் டு
அடல்வேலவ னருளுரைத்த து.

(எ - து.) கற்பின் வரலாற்றையுடைய பாங்கி, வாயிலவேண்டத் தலைமகனருளிதுவன்றோ வெனப் பாங்கிக்குத் தலைமகள் வாயின் மறுத்தது.

உடைமணிகட்டிச்சிறுதேருருட்டியுலாத்தரும்இந்
நடைமணியைத்தந்தபின்னர்முன்னான்முகன்மாலறியா
விடைமணிகண்டர்வண்டில்லைமென் றோகையன்னார்கண்முன்னங்
கடைமணிவாணகையாயின்றுகண்டனர்காதலரே. [ங

(இ - ள்.) மணிவாள் நகையாய் - முத்துப்போலு மொளியையுடைய நகையையுடையாய், — உடைமணிகட்டி சிறுதேர் உருட்டி உலாத்தரும் - உடைமணியை யரையிற்கட்டிச் சிறு தேரையுருட்டி உலாவும், — இ நடைமணியை தந்த பின்னர் - இப்புதல்வனை நமக்குத்தந்தபின், — முன் நான்முகன் மால் அறியா விடை மணிகண்டர் - முற்காலத்து நான்முகனுமாலுந் தேடியுமறியாத விடையையுடைய மணிகண்டரது, — வண் தில்லை மெல் தோகையன்னார்கண் முன் - வளவிய தில்லையின் மெல்லிய மயிலையொப்பார்கண் முன்னே, — நம் கடை காதலர் இன்று கண்டனர் - நங்கடையைக்காதலர் இன்று கண்டார்; (இதுவன்றோ நம்மாட்டு அவரருள்). எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல்.

கட்டியென்பதீண்டுத் தங்கியென்னும்பொருட்டாய் நின்றது.

## பாணனொடு வெகுளுதல்.

மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண்ட
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்தது.

(எ-து.) (பாங்கிக்குவாயின்மறுத்த) தலைமகள், நின்னிடத்து நீங்காதவருளுடையாரென்று நீ சொல்ல வேண்டுமோ நினது நல்ல நல்ல பொய்யைப் பொருந்தி நிற்கலுற்றோ நீ என்னில்லிற் போந்ததென வாயில்வேண்டிய பாணனொடு வெகுண்டு கூறியது.

மைகொண்டகண்டர்வயல்கொண்டதில்லைமல்கூரர்நின்வாய்
மெய்கொண்டவன்பினரென்பதென்னிள்ளாவருள்பெரியர்
வைகொண்டவூசிகொற்சேரியின்விற்றெம்மில்வண்ணவண்ணப்
பொய்கொண்டுநிற்கலுற்றேபுலையாத்தின்னிபோந்ததுவே.

(இ - ள்.) மைகொண்ட கண்டர் - கருமையைப் பொருந்திய கண்டத்தையுடையவரது, — வயல் கொண்ட தில்லை மல்கு ஊரர் - வயலைப்பொருந்திய தில்லைக்கணுளராகிய வளமலிய வூரையுடையவர், — நின்வாய் மெய்கொண்ட அன்பினர் என்பது என் விள்ளா அருள் பெரியர் - நின்கண் மெய்ம்மையைப் பொருந்திய அன்பையுடையரென்று நீ சொல்லவேண்டுமோ (அவர் எம்மிடத்து)நீங்காத அருள்பெரியரன்றோ! (அதுகிடக்க),—வை கொண்ட ஊசி கொல் சேரியின் விற்று - கூர்மை பொருந்திய ஊசியைக் கொற்சேரியின்கண்விற்று,— எம் இல் வண்ணவண்ண பொய்கொண்டு நிற்கலுற்றே - எம்மில்லத்து நின்னுடைய நல்ல நல்ல பொய்மையைப் பொருந்தி நிற்கலுற்றே,—புலை ஆ தின்னி போந்தது - புலையனுகிய ஆத்தின்னி எண்டு நீ போந்தது ? (இதுசாலநன்று). எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - வாயின் மறுத்தல். (௩௮௪)

பாணன் புலந்துரைத்தல்.

கருமலர்க்கண்ணிக ளன்றுகட்டுரைப்ப ப்
புரியாழ்ப்பாணன் புறப்பட்ட து.

(எ - து.) கருமையாகிய குவளைமலர்போன்ற கண்ணையுடைய தலைமகள் வெகுண்டுகூற வாயில் பெறாமையின் பாணன்புலந்து கூறியது.

கொல்லாண்டிலங்குமழுப்படையோன்குளிர்தில்லையன்னாய்
வில்லாண்டிலங்குபுருவநெரியச்செவ்வாய்துடிப்பக்
கல்லாண்டெடேல்கருங்கண்சிவப்பாற்றுகறுப்பதன்று
பல்லாண்டடியேனடிவலங்கொள்வன்பணிமொழியே.

(இ - ள்.) கொல் ஆண்டு இலங்கு மழு படையோன் - கொற்றொழி லவ்விடத்து விளங்கும் மழுவாகிய படையை யுடையவனது,—குளிர் தில்லையன்னாய் - குளிர்ச்சிபொருந்திய தில்லையை யொப்பாய்!—வில் ஆண்டு இலங்கு புருவம் நெரிய செவ்வாய் துடிப்ப கல் ஆண்டு எடேல் - வில்லை யடிமைக்கொண்டு விளங்காநின்ற புருவம் நெரியச் செவ்வாய் துடிப்ப எறிதற்குக் கல்லை அவ்விடத் தெடுக்கவேண்டா,—கரு கண் சிவப்பு ஆற்று - கரியகண்களைச் சிவப்பாற்றுவாயாக,—கறுப்பது அன்று - வெகுளப்படுவதன்று,—பல்லாண்டு - நினக்குப் பல்லாண்டுகள் உளவாகவேண்டும்,—பணிமொழி - பணிமொழியை யுடையாய்,—அடியேன் அடிவலம் கொள்வன் - (யான்வேண்டிய தேயத்துக்குப்போக) அடியேன் நின்னடியை வலங்கொள்ளா நின்றேன். எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - சிவப்பாற்றுவித்தல்.

கருங்கண்ணினது சிவப்பெனினு மமையும். பல்லாண்டென்றது - தலைமகளுட னுண்டாகிய வெறுப்புத்தீர்ந்து கூடியிருமென்று சொல்லியது நமக்குத் தவறாயிற்றாயின் பல்லாண்டும் இப்படி யிருப்பீரென்றான். இப்படி யிருப்பீரென்றது பல்லாண்டு மிப்படித் தனித்திருப்பீரென்று வளமாகத் தன் பாணவார்த்தை சொல்லியவா றென்றறிக. புருவநெறிக்க வென்பதூஉம் வெவ்வாயென்பதூஉம் பாடம். புரி - நரம்பு. (௩அஎ)

விருந்தோடுசெல்லத் துணிந்தமைகூறல்.

பல்வளை பரிசுக ண்
டில்லோ ரியம்பிய து.

(எ - து.) (வாயில் பெறாது பாணன்புலந்து நீங்க யாவர்க்கும் வாயினேராது வெகுண்டிருத்தலால் தலைமகன் விருந்தொடு வந்தானென்னத் தலைமகள் பண்டையளாக), இவ ளென்ன மனையறக் கிழத்தி யோவென இல்லோர் தம்முட் கூறியது.

மத்தக்கரியுரியோன்றில்லையூரன்வரவெனலுந்
தத்தைக்கிளவிமுகத்தாமரைத்தழல்வேன்மிளிர்ந்து
முத்தம்பயக்குங்கழுநீர்விருந்தொடென்றுதமுன்னங்
கித்தக்கருங்குவளைச்செவ்வியோடிக்கெழுமினவே.

(இ - ள்.) மத்தம் கரி உரியோன் - களிப்பை யுடைத்தாகிய யானையின் தோலை யுடையவனது,— தில்லையூரன் வரவெனலும் - தில்லையூரனது வரவென்று சொல்லத் தொடங்குதலும்,—தத்தை கிளவி - கிளியின் மொழியை யுடையாளது,— முகம் தாமரை தழல்வேல் மிளிர்ந்து முத்தம் பயக்கும் கழுநீர்- முகமாகிய தாமரைக்கண்ணே தழலையுடைய வேல்போலப் பிறழ்ந்து நீர்த்துளியாகிய முத்தத்தை யுண்டாக்காநின்ற கண்ணாகிய செங்கழுநீர் மலர்,—விருந்தொடு என்றுத முன்னம் - விருந்தோடென்று சொல்லுவதற்கு முன்,—கித்தம் கரு குவளை செவ்வி ஓடி கெழுமின - விளையப்பண்டை நிறமாகிய கரிய குவளைச்செவ்வி பரந்து மேவின. (என்ன மனையறக்கிழத்தியோ?) எ-று. மெய்ப்பாடு - உவகை; பயன்-மெய்ம்மகிழ்தல்.

மத்தம் - மதமென்பாருமுளர். ஊரன் வரவென வினையெச்சமாகப் பிரிப்பினு மமையும். கித்தமென்பதனைச் செய்யப்பட்டதென்னும் பொருளதோர் வடமொழித் திரிபென்பாரு முளர். விருந்து வாயிலாகப்புக்க வழி இல்லோர் சொல்லியது. (ஙஅஅ)

ஊடறணிவித்தல்.

தோன்றலைத்துணையொடு தோழிகண் டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்த து.

(எ-து.) (விருந்தேற்றுக்கொண்ட) தலைமகளிடஞ் சென்று நம்முடைய தோன்றலைத் தனக்குத் துணையாகக் கொண்டுவந்து தோன்றுதலால் நினது கவலையொழிகவெனப் பாங்கி அவளை யூடல்தணிவித்தது.

கவலங்கொள்பேய்த்தொகைபாய்தரக்காட்டிடையாட்டுவந்த
தவலங்கிலாச்சிவன்றில்லையன்னாய்தழுவிம்முழுவிச்
சுவலங்கிருந்தநந்தோன்றற்றுணையெனத்தோன்றுதலா
லவலங்கனைந்துபணிசெயற்பாலையரசனுக்கே.

(இ - ள்.) கவலம்கொள் - கவற்சி கொள்ளுதற் கேதுவா கிய,—பேய் தொகை - பேய்த்திரள்,— பாய்தர - (கரணங்களைப்) பாயாநிற்ப,—காட்டிடை - புறங்காட்டின்கண்,—ஆட்டு உவந்த தவல் அங்கு இல்லா சிவன் - ஆடுதலை விரும்பிய கேடங்கில்லாத சிவனது, — தில்லை யன்னாய் - தில்லையை யொப்பாய்! — தழுவி முழுவி சுவல் அங்கு இருந்த நம் தோன்றல் துணையென தோன்றுதலால் - தழுவி முத்தங்கொண்டு சுவலிடத் தேறியிருந்த நம்முடைய தோன்றலைத் தமக்குத் துணையெனக்கருதிவந்து தோன்றுதலான்,—அவலம் களைந்து அரசனுக்கு பணிசெயற்பாலை - நினதுள்ளத்துக் கவற்சியை நீக்கி இனி யரசற்குக் குற்றேவல் செயற்பாலை. எ-று. மெய்ப்பாடு - பெருமிதம்; பயன் - தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல்.

தழுவிமுழுவித் தோன்றுதலா லெனவியையும். (௩௮௬)

அணைந்தவழி யூடல்.

தெளிபுனலூரன் சென்றணைந்தவழி
ஒளிமதிநுதலி யூடியுரைத்தது.

(எ-து.) (பாங்கியாலூடல் தணிக்கப்பட்டுப் பள்ளியிடத்தாளாகிய) மதிபோலு நெற்றியையுடைய தலைமகள் தன்னையணைந்தவழி அவனொடூடியுரைத்தது.

சேறான்றிகழ்வயற்சிற்றம்பலவர்தில்லைநகர்வாய்
வேறான்றிகழ்கண்ணினையார்வெகுள்வர்மெய்ப்பாலன்செய்த
பாறான்றிகழும்பரிசினமேவும்படிறுவவேல்
காறான்றொடுதொடரேல்விடுதீண்டலெங்கைத்தலமே.

(இ - ள்.) சேல் திகழ் வயல் சிற்றம்பலவர் - சேல்விளங்கும் வயலையுடைய சிற்றம்பலவரது, — தில்லை நகர்வாய் - தில்லை நகரிடத் துளராகிய,—வேல் திகழ் கண் இளையார் - வேல்போ லுங் கண்ணையுடைய (நின் காதலிமாராகிய) இளையவர்,—வெகுள்வர் - (நீ செய்கின்ற விதனை யறியின்) கோபிப்பார், — மெய்பாலன் செய்த பால்திகழும் பரிசினம் - (அன்றியும்) மேனியானது சிறுவனு லுண்டாக்கப்பட்ட பால் புலப்படுந்தன்மையை யுடையேமாதலின் (நினக்குத்தகேம்), — மேவும் படிறு உவவேம் - (அதுவேயுமன்றி யாமும்) நீயும் மேவு நாணின்மையோடு கூடிய கள்ளத்தை விரும்பேம், — கால் தொடல் - (அதனுல்) எங்காலைத் தொடாதொழி, — தொடரேல் - எம்மைத் தொடரவேண்டா,—எம் கைத்தலம் தீண்டல் - எங் கைத்தலத்தைத் தீண்டற்பாலையல்லை, — விடு - விடுவாயாக. எ-று. மெய்ப்பாடு - வெகுளி; பயன் - ஊடனீங்குதல்.

திகழ்வயற்றில்லையென வியையும். நான்கிடத்தும் தானென்பது அசைநிலை. பரிசினமேனு மென்பதூஉம் பாடம். (௩௧0)

புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தல்.

ஆங்கதனுக் கழுக்கமெய் தி
வீங்குமென்முலை விட்டுரைத்த து.

(எ-து.) தலைமக னணைந்தவழியூடிநின்ற தலைமகள் ஊடல்தீராநின்ற தலைமகனேடு புனலாட்டுவித்தமை கூறி அப்படிற்று நிலையால் வெளிப்பட வுரைத்தது.

சேர்தார்நறுங்கொன்றைச்சிற்றம்பலவர் தில்லைநகரோர்
பார்தார்விரலியைப்பாய்புனலாட்டிமன்பாவியெற்கு
வந்தார்பரிசுமன்றுய்நிற்குமாறென்வளமனையிற்
கொந்தார் தடந்தோள்விடங்காலயிற்படைக்கொற்றவரே.

(இ - ள்.) கொந்தார் தடம் தோள் - கொத்துமாலை நிறைந்த பெரிய தோளினையும்,—விடம் கால் அயில் படை கொற்றவர் -

கஞ்சைக்காலுங் கூரிய படையினையுமுடைய கொற்றவர், — பாவியெற்கு - தீவினையேற்கு,—என் வளமனையில் நிற்குமாறு - எனது வளமனையில்வந்து நிற்கின்றபடி, — ஓர் பந்தார் விரலியை - பந்து பயின்ற விரலா ளொருத்தியை, — செந்தார் நறுகொன்றை சிற்றம்பலவர் தில்லை நகர் - செய்ய தாராகிய நறிய கொன்றைப் பூவினையுடைய சிற்றம்பலவரது தில்லையாகிய நகர் (வரைப்பில்),—பாய் புனல் ஆட்டி வந்தார் பரிசும் அன்றாய் - பாய்ந்த புனலை யாட்டுவித்து (வெளிப்படத் தவறுசெய்து) வந்தார் (சிலர் நிற்கும்) பரிசுமன்றாய் (மனத்தவறு செய்யாதார் வந்து நிற்குமாறு வந்து நின்றாராயின், அது பொறுத்தலரிது). எ-று. மெய்ப்பாடு - வெகுளி, பயன் - ஊடனீங்குதல்.

தில்லைநகரோர் பந்தார்விரலியென வியைப்பினு மமையும். மன் - ஒழியிசைக்கண் வந்தது, அசைநிலை யெனினு மமையும். ஒருத்தியைப் புனலாட்டிவந்தார் பரிசுமன்றாய்க் கொற்றவர் மனைக்கண்வந்து நிற்குமா றென்னென்று கூட்டியுரைப்பினு மமையும். கொத்துமாலை - பலவாயொன்றாகிய மாலை. (௩௧௧

கலவிகருதிப் புலத்தல்.

கலைவளரல்குறலை மகன்றன்னொ டு
கலவிகருதிப் புலவிபுகன்ற து.

(எ - து.) புனலாட்டு வித்தமைகூறிப் புலந்தபே
கலையணிந்த தலைமகள், (ஊடல் தீர்க்க றுதலுந்து
ளுமுதலியவற்றைத் தைவந்து வருடித் தலையளிசெ
ய்த) தலைமகனொடு கலவியைநாடிப் புலந்து கூறியது

மின்றுன்னியசெஞ்சடைவெண்மதியன்விதியுடையோர்
சென்றுன்னியகழற்சிற்றம்பலவன்றென்னம்பொதியி
னன்றுஞ்சிறியவரில்லைமதில்லைநல்லூரமன்னோ
வின்றுன்றிருவருளித்துணைசாலுமன்னெங்களுக்கே.

(இ - ள்.) மின் துன்னிய செஞ்சடை வெண் மதியன் - மின்னையொத்த செஞ்சடைக்கண் வைத்த வெண்பிறையை யுடையான், — விதியுடையோர் சென்று உன்னிய கழல் சிற்றம்பலவன் - நற்பாலை யுடையோர் (சிற்றின்பத்திற்குக் காரணமான புலன்களைவிட்டுச்) சென்று நினைந்த கழலையுடைய சிற்றம்பலவன், — தென்னம் பொதியின் - (அவனது) தெற்கின்கணுண்டாகிய பொதியிலிடத்து, —எமது இல்லம் நன்றும் சிறியவர் இல் - எமது குடி பெரிதுஞ் சிறியவரது குடி (அதனான்), — நல்லூர - நல்ல ஊரையுடையாய், — இன்று உன் திருவருள் எங்களுக்கு இத்துணை சாலும் - (முற்காலத்து நின்தலையளி வேண்டுதுமாயினும்) இப்பொழுது உனது திருவருள் எங்கட்கு (நீவந்த) இத்துணையு மமையும்; (நீ தலையளி செய்யவேண்டுவ துண்டோ). எ-று. மெய்ப்பாடு - வெகுளி ; பயன் - புலத்தல். புலவிநீங்கியதூஉமாம். மன்னும் ஓவும் மன்னும் அசைநிலை. ()

## மிகுத்துரைத் தூடல்.

நாடூரு மில்லுஞ்சுட் டி
ஆடற்பூங்கொடி யூடியுரைத்த து.

(எ - து.) (கலவிகருதிப் புலவாநின்ற) நுடக்கத்தையுடைய தலைமகள் (புணர்தலுறுகின்ற தலைமகனுடன்) நீர் விழுமியநாட்டு விழுமியநல்லூர் விழுமிய குடியிலுள்ளீர் எம்போல்வாரிடத்து இவ்வாறு புணரவிரும்புதல் நுமக்கு விழுமிய வல்லவென வூடியுரைத்தது.

தேமூமியமாளிகைச்சிற்றம்பலவர்சென்றன்பர்சிக்தைக்
கழுமியகூத்தர்கடிபொழிலேழினும்வாழியரோ
விழுமியநாட்டுவிழுமியநல்லூர்விழுக்குடியீர்
விழுமியவல்லகொல்லோவின்னவாறுவிரும்புவதே.

(இ - ள்.) செழுமிய மாளிகை சிற்றம்பலவர் - செழுமிய மாளிகைகளாற் சூழப்பட்ட சிற்றம்பலத்தை யுடையார், — அன்பர் சிந்தை சென்று கழுமிய கூத்தர் - அன்பர் சிந்தைக்கண் சென்று பொருந்திய கூத்தர்,—கடி பொழில் ஏழினும் - அவரது காவலையுடைய உலகமேழினுள்ளும், — விழுமிய நாட்டு விழுமிய நல்லூர் விழுகுடியீர் - சிறந்த நாட்டின்கண் சிறந்த நல்லவூரில் சிறந்த குடியிலுள்ளீர், — இன்னவாறு விரும்புவது விழுமிய வல்லகொல் - (எம்போல்வாரிடத்து) இத்தன்மையவாகிய நெறியை விரும்புதல் (உமக்குச்) சிறந்தன வல்லபோலும். எ-று. மெய்ப்பாடு - வெகுளி ; பயன் - புலத்தல், புலவி நீக்கியதுமாம்.

வாழியும் அரோவும் அசைநிலை. விரும்புவதென்புழி, இன்னவாறு விரும்புவ போல்வனவென்பது கருத்தாகலின், ஒருமைப் பன்மை மயக்கம் அமையுமாறு முடைத்து. இன்னவாறென்பதற்கு இன்னவண்ணம் விரும்புதலெனினு மமையும். விரும்புதலென்பதுவும்பாடம். ஆடல் - நடக்கம். (௩௯௩)

ஊடலிட வாடியுரைத்தல்.

வாடா வூ ட
லீடா வாடிய து.

(எ-து.) (தணிக்கத்தணியாது மிகுத்துரைத்துத் தலைமகள் மேன்மேலும்) ஊடிநிற்பத் தலைமகன் "இவள் பண்டைய ளல்லள் இது நம்மை வருத்துவதோர் மாயமாமென்னத் தன்னெஞ்சிற் குறைத்து வாடி நின்றது.

திருந்தேனுயநின்றசிற்றம்பலவர்தென்னம்பொதியி
லிருந்தேனுயவந்திணைமலர்க்கண்ணினின்னேக்கருளிப்
பெருந்தேனெனநெஞ்சகப்பிடித்தாண்டநம்பெண்ணமிழ்தம்
வருந்தேலதுவன்றிதவோவருவதோர்வஞ்சனையே.

(இ - ள்.) திருந்தேன் உய்ய நின்ற சிற்றம்பலவர் - (ஒருவாற்றானும்) திருந்தாத யான் பிறவித் துன்பத்திற் பிழைக்க வந்து நின்ற சிற்றம்பலவரது,—தென்னம் பொதியில் - தெற்கின்க ணுளதாகிய பொதியிலிடத்து, — இருந்தேன் உய்ய வந்து - ஒரு முயற்சியுமின்றி யிருந்த யானுய்யும் வண்ணம் வந்து,—இணை மலர் கண்ணின் இன் நோக்கு அருளி - (தன்னுடைய) இணைந்த மலர்போலுங் கண்களினது (உள்ளக் கருத்தை வெளிப்படுத்தும் நாணோடு கூடிய நோக்கமாகிய) இனிய கடைக்கண் ணோக்கத்தை முன்னெனக்குத்தந்து,—பெரு தேனென - பெருந்தேன்போ லினிதாய், — நெஞ்சு உக - என்னெஞ்சமுருக, — பிடித்து ஆண்ட நம் பெண் அமிழ்தம் அது அன்று - என்னைப் பிடித்துத் தன் வயமாக்கிய நமது பெண் வடிவை யுடைய அமிழ்தமாகிய அது இதுவன்று,—இதுவோ வருவதோர் வஞ்சனை வருந்தேல் - இதுவோ வருவதொரு மாயம், அதனான் நீ வருந்தாதொழி. எ - று. மெய்ப்பாடு - அழுகை; பயன் தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல்.

ஓகாரம் - ஒழியிசைக்கண்வந்தது. தன்னைநோக்கி யொருமுயற்சியுமில்லாத யான் பிறவித்துன்பத்திற் பிழைக்கத்தானே வந்து தன்னிணைமலர்க்கண்ணினதினிய கடைக்கணோக்கத்தைத் தந்து பெருந்தேன் போன்றினிதாய், என் வன்மன நெகிழவலித்துப்பிடித் தடிமைக்கொண்ட பெண்ணமிழ்தமென வேறு மொருபொருள் விளக்கியவாறு கண்டுகொள்க. (௩௯௪)

## துனியொழிந் துரைத்தல்.

தகுதியி னூரன் மிகுபதநோக்கிப்
பனிமலர்க்கோதை துனியொழிந்தது.

(எ-து.) (ஊடனீடலால்) பனிமலராகிய மாலையையணிந்த தலைமகள் தலைமகனது தகுதியாற்றுமைமிக்க அளவுநோக்கி யவனோடும் புணர்ச்சிக்குடன்பட்டது.

இயன்மன்னுமன்புதந்தார்க்கென்னிலையிமையோரிறைஞ்சுஞ்
செயன்மன்னுஞ்சீர்க்கழற்சிற்றம்பலவர்தென்னம்பொதியிற்
புயன்மன்னுகுன்றிற்பொருவேறுணையாப்பொம்மென்னிருள்
யயன்மன்னும்யானைதுரந்தரிதேருமதரகத்தே. [வ

(இ-ள்.) இமையோர் இறைஞ்சும் செயல் மன்னும் சீர் கழல் சிற்றம்பலவர்-இமையோரிறைஞ்சும் நுண்செயல் தங்கிய நல்ல வீரக்கழலணிந்த திருவடியையுடைய சிற்றம்பலவரது,—தென்னம் பொதியில் - தெற்கின்க ணுளதாகிய பொதியிலிடத்து,— புயல் மன்னு குன்றில் பொம்மென் இருள்வாய் - மேகந்தவழும் இக்குன்றிற்செறிந்த இருளின்கண்ணே,—அயல் மன்னும் யானை துரந்து அரி தேரும் அதரகத்து - பக்கத்துத் தங்கும் யானைகளை யோட்டி, அரிமா அவைபுக்கவிடந்தேடும் வழியகத்து, — பொருவேல் துணையாய் - தமது பொருவேலே துணையாக (வந்து),—இயல் மன்னும் அன்பு தந்தார்க்கு நிலை என் - இயல்பாகிய நிலைபெற்ற வன்பை நமக்குத் தந்தவர்க்கு (யானிவ்வா றுடம்படாது நிற்கு) நிலையென்னும்; (இது தகாது). எ - று. மெய்ப்பாடு - அச்சம்; பயன் - சிவப்பாற்றுதல்.

இயல்பைப் பொருந்திய வன்பெனினு மமையும். புயன்மன்னு குன்றிலன்பு தந்தார்க்கெனக் கூட்டுக. (௩௬௫)

## புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தல்.

புதல்வனது திறம்புகன் று
மதரரிக்கண்ணி வாட்டந்தவிர்ந்த து.

(எ-து.) மதர்த்த செவ்வரிபரந்த கண்ணினையுடைய தலைமகள் (தனியொழிந்துகூடிப் பிரிந்தவழிப்பின்னும் தலைமகன் பரத்தையிடத்துப் பிரிந்தா னென்று கேட்டுப் புலந்து வாயின்மறுக்க, தலைமகன் வாயிலில் விளையாடும் புதல்வனை யெடுத்துத் தம்பலமிட்டு முத்தங்கொடுத்து அதுவாயிலாகக்கொண்டு செல்ல, இத

னைத் தந்தவாறு சொல்லுவாயாகவெனத் தலைமகள்
தன்) புதல்வன்திறங்கூறி வாட்டமகன்றது.

கதிர்த்தநகைமன்னுஞ்சிற்றவ்வைமார்களைக்கண்பிழைப்பித்
தெதிர்த்தெங்குநின்றெப்பரிசளித்தானிமையோரிறைஞ்சு
மதுத்தங்கியகொன்றைவார்சடையீசர்வண்டில்லைநல்லார்
பொதுத்தம்பலங்கொணர்ந்தோபுதல்வாவெம்மைப்பூசிப்பதே.

(இ - ள்.) மது தங்கிய கொன்றை வார்சடை ஈசர் - தேன் தங்கிய கொன்றைப்பூவையுடைய நீண்ட சடையையுடைய ஈசரது, — இமையோர் இறைஞ்சும் வள் தில்லை - இமையோரால் வணங்கப்படும் வளவிய தில்லையி லுளராகிய, — நல்லார் பொது தம்பலம் கொணர்ந்தோ - நல்லோ ரெல்லார்க்கும் பொதுவாகிய தம்பலத்தைக்கொண்டு வந்தோ,—புதல்வா எம்மை பூசிப்பது - புதல்வா! நீ யெம்மைக் கொண்டாடுவது?—கதிர்த்த நகை மன்னும் சிறு அவ்வைமார்களை கண்பிழைப்பித்து எதிர்த்து - (அது நிற்க, இது நினக்குத் தருகின்றவிடத்து நின் தந்தை) ஒளிவிட்ட முறுவல் பொருந்திய உன்சிறிய அன்னைமாரைக்கண்ணைத் தப்புவித்து அவர் காணுவண்ணம் ஒருவாற்றால் நின்னை யெதிர்ப்பட்டு,—எங்கு நின்று எப்பரிசு அளித்தான் - எவ்விடத்து நின்று எவ்வண்ணமிதனை நினக்குத் தந்தான்? (நீ யிதுசொல்லவேண்டும்). எ - று. மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்தநகை; பயன் - ஊடனீங்குதல். (௩௬௬)

## கலவியிடத்தூடல்.

சிறடிக்குடைந்த நாறிணர்த்தாரவன்
றன்மைகண்டு பின்னுந்தளர்ந்தது.

(எ-து.) புதல்வனை வாயிலாகப்புக்குப் புலவிநீங்கிப் புணர்கின்ற தலைமகனைத் தலைமகள் ஒரு காரணத்தால் வெகுண்டு மார்பினுதைப்ப அவ்வெகுளி தீரவேண்டி ) அவனவள் காலைத் தலைமே லேற்றுக்

*கொள்ள அது குறையாக அவள் புலந்தது இன்றமை யை அவ்விடத்து உழையர் தம்முட்கூறித் தளர்ந்தது.*

*சிலைமலிவாணுதலெங்கையதாகமெனச்செழும்பூண்*
*மலைமலிமார்பினுதைப்பத்தந்தான்றலைமன்னர்தில்லை*
*யுலைமலிவேற்படையூரனிற்கள்வரிலெனவுன்னிக்*
*கலைமலிகாரிகைகண்முத்தமாலைகலுழ்ந்தனவே.*

(இ - ள்.) மலைமலி செழும்பூண் மார்பின் உதைப்ப - (யான் வெகுண்டு) மலைபோலும் வளவிய பூணையுடைய தன்மார்பகத்து மிதிப்ப,—ஆகம் சிலை மலி வாள் நுதல் எங்கையதெனஅவ்வாகத்தைச் சிலைபோலும் வாணுதலையுடைய எங்கையதென்றே கருதி,—தலை தந்தான் - தன் சென்னியைத் தந்தனன்,—மன்னர் தில்லை - (அதனால்) மன்னனது தில்லையில்,—உலை மலி வேல் படை ஊரனின் கள்வர் இல் என்ன உன்னி - உலையிடத்துண்டாகிய தொழிலான்மிக்க வேலாகிய படையையுடைய ஊரனைப்போலக் கள்வரில்லையென்று கருதி, — கலை மலி காரிகை கண்முத்தம் மாலை கலுழ்ந்தன - (மகளிர்க்குத்தக்க யாழ் முதலாகிய) கலைகளான்மிக்க காரிகை நீர்மையை யுடையாளுடைய கண்கள் (கண்ணீர்த்துளித்தாரையாகிய) முத்தமாலையைப்பொருந்தின ; (அதனான் இவள் புலத்தற்குக் காரணம் வேண்டுவ தில்லைபோலும்), எ-று. மெய்ப்பாடு - இளிவரலைச் சார்ந்த நகை; பயன் - தலைமகளைச் சிவப்பாற்றுவித்தல்.

தலைமகன் பிள்ளை வாயிலாகப்புக்க தலைமகனை யேற்றுக்கொண்டு பள்ளியிடத்தாளான காலத்து, பரத்தைகாரணமாக அவளுண்ணின் றெழுந்த பொறாமையைக்கண்ட தலைமகன் ஆற்றானாக, அவ்வாற்றாமையைக்கண்ட தலைமகள் வெகுண்டனள். ()

**முன்னிகழ்வுரைத்தூட நீத்தல்.**

*முன்னிகழ்ந்தது நன்னுதற்குரைத் து*
*மன்னுபுனலூரன் மகிழ்வுற்ற து.*

(எ - து.) கலவியிடத்தூடிய தலைமகளுக்கு முன் னிகழ்ந்தது கூறுவானாய்த் தலைமகன் உண்ணின்ற சிவப்பாற்றி மகிழ்வித்தது.

ஆறூர் சடைமுடியம்பலத்தண்டரண்டம்பெறினு
மாறூர்மழலைடையாய்கண்டிலம்வண்கதிர்வெதுப்பு
நீறூர்கொடுநெறிசென்றிச்செறிமென்முலைநெருங்கச்
சீறூர்மரையதளிற்றங்குகங்குற்சிறுதுயிலே.

(இ - ள்.) ஊர் மழலைடையாய் - தவழாநின்ற இளையவேற் றை யுடையாய்!—ஆறு ஊர் சடைமுடி அம்பலத்து அண்டர் அண்டம் பெறினும் - ஆறு பரந்த சடைமுடியையுடைய அம் பலத்தின்க ணுளராகிய அண்டரது அண்டமுழுதையும் யாம் பெறினும்,—வள் கதிர் வெதுப்பு நீறு ஊர் கொடு நெறிசெ ன்று - (ஞாயிற்றினுடைய) வளவிய கதிர்கள் வெதுப்பிய நீறு பரந்த கொடிய நெறியைச் சென்று,—இ செறி மெல் முலை நெருங்க - இச்செறிந்த மெல்லிய முலைகள் (எம்முடைய மார் பினிடை) வந்தடர,—சிறு ஊர் மரை அதளில் தங்கு கங்குல் - (நெறியாற்) சிறிய வூரின்கண் மரையதட் பள்ளியிற் றங்கிய இரவில்,—சிறு துயில் மாறு கண்டிலம் - சிறிய துயிற்கு மாறு கண்டிலம்; (அதனை நீ யுள்ளியுமறிதியோ). எ - று. மெய்ப் பாடு - உவகை; பயன் - தலைமகளை மகிழ்வித்தல்.

இளவேறு - புதல்வன். தமக்குத்தக்க பள்ளியுமிடமு மின் மையிற் சிறுதுயிலென்றான். துயிலும் பொழுதிற்றுயிலாய் பொ ழுது பெரிதாகலின் அவ்வாறுகூறினு னெனினுமமையும். முன் னிகழ்ந்தது கூறுவானாய் உண்ணின்ற சிவப்பாற்று வித்தது. ஞெமுங்கவென்பதூஉம் மரவதளென்பதூஉம் பாடம். (௩௧௬)

**பரத்தையைக்கண்டமை கூறிப்புலத்தல்.**

பரத்தையைக்கண்ட பவளவாய்மாது ர்
அரத்தநெடுவே லண்ணற்குரைத்த து.

(எ - து.) (முன்னிகழ்ந்தமை யுரைத்தூடல்நீக்கி இன்புறப் புணரப்பட்ட தலைமகள், பிறர்க்கும் நீ யிவ் வாறின்பஞ்செய்தியென்று சொல்ல) குருதிதங்கிய வேலையுடைய தலைமகன் (நின்னையல்லது பிறரை யறியேனென்று கூறக்கேட்டு யானவளை யறியேனாக நீ மாயங்கூற வேண்டுவ தில்லையெனத்) தான்பரத்தையைக் கண்டமைகூறிப் பின்னு மவளொடு புலந்து நின்றது.

ஐயுறவாய்நம்மகன்கடைக்கண்டுவண் டேருருட்டு
மையுறுவாட்கண்மழவைத்தழுவமற்றுன்மகனே
மெய்யுறவாமிதுன்னில்லேவருகெனவெள்கிச்சென்றாள்
கையுறுமான்மறியோன்புலியூரன்னகாரிகையே.

(இ - ள்.) கை உறு மான் மறியோன் புலியூரன்ன காரிகை - கையைப்பொருந்திய மான் மறியை யுடையவனது புலியூரைப் போலுங் காரிகையாகிய (நின்பரத்தை),—நம் அகல் கடை கண்டு - நமதகன்ற கடைக்கட்கண்டு,—வள் தேர் உருட்டும் மை உறு வாள் கண் மழவை - வளவிய சிறுதேரையுருட்டும் மையுற்ற வாட்கண்ணையுடைய நம் புதல்வனை, — ஐயுற தழுவ - (நின் மகனென) ஐயுற்றுத்தழுவ, — உன் மகனே உறவு மெய்யாம் இது உன் இல்லே வருகென - (அதனைக்கண்டு) அவன் உன்மகனே உறவு மெய்யாகிய உறவே, இதுவும் நினதில்லமே ஈண்டு வருவாயாகவென்று (யான்கூற),—வெள்கி சென்றாள் - (அவள்) நாணிப்பெயர்ந்தனள் ; (அதனால் யானவளையறியாதேனாக நீ நினைந்து மாயங் கூறவேண்டுவதில்லை.) எ-று. மெய்ப்பாடு - நகை ; பயன் - சிவப்பாற்றுதல்.

ஐயுறவாகவெனத் திரித்துக்கொள்க. ஆற்றாமையே வாயிலாகப்புக்க தலைமகன் தலைமகளைச் சிவப்பாற்றுவிப்பான் நின்னின் வேறு சிலரெனக்கில்லையால், நீ வெகுளற்க வென்றாற்குத் தலைமக ளிவ்வகை சொன்னாளென்பது. (கூகக)

**ஊடியமேடுத்துரைத்தூட நீர்த்தல்.**

இரும்பரிசி லேற்றவர்க்கரு ளி
விரும்பினர்மகிழ மேவுதலுரைத்த து.

(எ-து.) (பரத்தையைக் கண்டமைகூறிப் புலந்து வேறுபட்ட தலைமகளுக்கு உண்ணின்ற சிவப்பு ஒரு காரணத்தாற் சிறிது புலப்படக்கண்ட பாங்கி, நம் மூரன் யாவர்க்கு மூதியமாகலின்) அன்பானன்றி ய ருளாற் பரத்தையர்க்குத் தலையளி செய்யுமன்றே, அதனால் நீ புலக்கற்பாலையல்லை யெனத் தலைமகளது சிவப்பாற்று வித்தது.

**காரணி**கற்பகங்கற்றவர்நற்றுணைபாணரொக்கல்
**சீரணி**சிந்தாமணியணிதில்லைச்சிவனடிக்குத்
**தாரணி**கொன்றையன்றக்கோர்தஞ்சங்கநிதிவிதிசே
**ரூருணி**யுற்றவர்க்கூரன்மற்றியாவர்க்குமூதியமே.

(இ-ள்.) ஊரன் கார் - ஊரன் (வேண்டாமை கொடுத்தலின்) காரொடொக்கும், — அணி கற்பகம் - (வேண்டக் கொடுத்த லின்) அழகிய கற்பகத்தோடொக்கும், — கற்றவர் நற்றுணை - (நுண்ணிய கல்வியனாகலின்) கற்றவர்க்கு நல்லவுசாத்துணை,— **பாணர் ஒக்கல்** - (இசை யுணர்வானுங் கெழுதகைமையானும்) **பாணர்க்கு** அவர் சுற்றத்தோடொக்கும், — சீர் **அணி சிந்தா மணி** - (நினைத்தது கொடுத்தலின்) சீரையுடைய நல்ல சிந்தா **மணியோ** டொக்கும்,—அணி தில்லை சிவனடிக்கு தார் **அணி கொன்றையன்** - அழகிய தில்லைக்கண் சிவனது திருவடிக்குத் **தாராகி** அவனுலணியப்படுங் கொன்றைப் பூவின் தன்மையை **யுடையன்**, — தக்கோர் தம் சங்கநிதி - சான்றோர் தமக்குத் **(தொலையாத** நிதியாயிருத்தலின்) சங்கநிதியோ டொக்கும்,— **விதி** - (நட்டார்க்கும் பகைவர்க்குந் தப்பாது பயன் கொடுத்த

லின்) விதியோடொக்கும்,—உற்றவர்க்கு சேர் ஊருணி - சுற்ற த்தார்க்கு (அவர்வேண்டிய செய்யவிருத்தலின்) அணித்தாகிய ஊருணியோ டொக்கும், — யாவர்க்கும் ஊதியம் - (அதனுல் வரைவின்றி) எல்லார்க்கும் இவன் பெறும்பயன். எ-று. மெய்ப் பாடு - உவகை; பயன் - மெய்ம்மகிழ்தல்.

தாரணி கொன்றையனென்பது குரங்கனனென்பதுபோல உவ மைப்பொருட்பட நின்றதெனினு மமையும். விதிசேருருணி யென்பதற்கு முறைமையாற் சேரப்படு மூருணியெனினு மமை யும். தக்கார்க்குஞ் சுற்றத்தார்க்குங் கொடுத்தல் வண்மையன் மையின் அவரை வேறுபிரித்துக் கூறினுள். (சOO)

திருக்கோவையார்

பதவுரை

முற்றிற்று.

# திருக்கோவையார்

# உண்மைக்கருத்து.

திருக்கோவையார் இயற்கைப்புணர்ச்சி முதலிய களவிக் கொத்தெனப்படும் இருபத்தைந்து துறைகளையுடைத்து. அக் களவிக்கொத்துகளுக்கும் அவற்றின் துறைகளுக்கும் உண்மைக் கருத்துவருமாறு: —

## க-வது. இயற்கைப்புணர்ச்சி.

### சற்குரு தரிசனம்.

" இயற்கைப்புணர்ச்சித்துறையீரொன்பதுஞ் சத்திநிபாத மொத்திடுங்காலத், துத்தமசற்குருதரிசனமாகும்." இக்களவிக் கொத்தின் துறை வருமாறு: —

க. காட்சி - குருவின் திருமேனிகாண்டல்.
உ. ஐயம் - திருமேனியை வியந்து ஐயமுறுதல்.
ங. தெளிதல் - பார்வைபோலும் வடிவென்றுணர்தல்.
ச. நயப்பு - திருமேனியாற் பயன் பெறலாமென்றுணர்தல்.
ரு. உட்கோள் - தன்னிடத்திற் கருணையுண்டென்றுணர்தல்.
சா. தெய்வத்தை மகிழ்தல் - தன் தவத்தினை வியத்தல்.
எ. புணர்ச்சி துணிதல் - இன்பம் பெற நினைதல்.
அ. கலவியுரைத்தல் - பெற்ற இன்பத்தை வியத்தல்.
கூ. இருவயினொத்தல் - பெற்ற இன்பம் புதிதாய்ப்பேணல்.
க0. கிளவிவேட்டல் - குருமொழிவேண்டிக்குறையிரத்தல்.
கக. நலம்புனைந்துரைத்தல் - அன்பால் நலங்கொண்டாடல்.
கஉ. பிரிவுணர்த்தல் - திருமேனிப் பிரிவான் மயங்கல்.

கங. பருவரலறிதல் - திருவுளத் திரக்கங்காண்டல்.
கச. அருட்குண முரைத்தல் - அருட்குப் பிரிவில்லையெனல்.
கரு. இடமணித்துக்கூறிவற்புறுத்தல் - பிரிதல்போலன்றிப் பிரிவில்லையென்னல்.
கசு. ஆடிடத்துய்த்தல் - சிவமருளுடனே சேர்தலறிதல்.
கஎ. அருமையறிதல் - கண்டவின்பங் கனவென வியத்தல்.
கஅ. பாங்கியையறிதல்-சிவமறிவிக்கத்திருவருளைக்காண்டல்.

---

## உ-வது. பாங்கற் கூட்டம்.

ஆன்மபோததரிசனம்.

"பாங்கற் கூட்டம் பதினெட்டின்பம், தாங்குதற்போதந் தான்கண்டகறல்." இக்கிளவிக்கொத்தின் துனிறவருமாறு:—

க. பாங்கனைநினைதல்-அருள்போல்போத மாமெனநினைதல்.
உ. பாங்கன்வினுதல் - மனத்தாற்கண்டிஃ தென்னெனவருந் தல்.
ங. உற்ற துரைத்தல்-உயிர் உளத்துடனே யுற்றதுரைத்தல்.
ச. கழறியுரைத்தல் - மனம் உயிருடனே மயங்கியுரைத்தல்.
ரு. கழற்றெதிர் மறுத்தல் - போதத்தாற்காணும் பொருளன் றென்னல்.
சு. கவன்றுரைத்தல் - பின்னும்போதந் தன்னிலை சொல்லல்.
எ. வலியழிவுரைத்தல்-உயிர்நெஞ்சுடன்பட்டுருகியுரைத்தல்.
அ. விதியொடு வெறுத்தல் - பின்னும் மனத்தொடு பேதுற்று நிற்றல்.
கூ. பாங்கனெந்துளைத்தல் - போதம் பின்னும் புகன்றுதா னழிதல்.
க0. இயலிடங்கேட்டல் - உறுதிகண்டின்பட மெங்கென் றுளைத்தல்.

கக. இயலிடங்கூறல் - மகிழ்ந்திட நெஞ்சுக்கு வாழ்வெடுத்துரைத்தல்.

கஉ. வற்புறுத்தல் - போதம்போய்க்காணும் பொலிவெடுத்துரைத்தல்.

கங. குறிவழிச்சேறல் - நெஞ்சாற்கண்ட இன்பந்தேடல்.

கச. குறிவழிக்காண்டல் - போதமருளாற்போ யின்புங்காண்டல்.

கரு. தலைவனை வியந்துரைத்தல் - நெஞ்சமுயிர்நினைவு அறிவெனப் புகழ்தல்.

கசு. கண்டமைகூறல் - போதம் நம்மாற் பொருந்துவதன்றென ஆதரவாயுயிர்க் கறியவுரைத்தல்.

கஎ. செவ்விசெப்பல் - இன்ப மறியும் இயல்பன்றெனினும் நெஞ்சமணியெலாம் நின்றெடுத்துரைத்தல்.

கஅ. அவ்விடத்தேகல்-போதநீங்கப் பொற்பாங்குரவன் தெரிசனங்காணச் சென்றதன்மை.

---

## ரு-வது. இடந்தலைப்பாடு.

### அன்பாலானந்தம் பெற்றனுபவித்தல்.

"இடந்தலைப்பாடீராறுமொன்றும், அருட்குருதரிசனத் தன்புமிகுதியால் பேரானந்தம் பெற்றனுபவித்தல்." இக்கிளவிக்கொத்தின் துறை வருமாறு:—

க. மின்னிடைமெலிதல் - சிவமுயிர்நோக்கித் திருவுளத்தெண்ணல்.

உ. பொழில்கண்டுமகிழ்தல் - பார்க்குமிடமெங்கும் பரனுக்காண்டல்.

ங. உயிரொளவியத்தல் - அநாதியின்ப மரனெனக்காண்டல்.

௪. தளர்வகன்றுரைத்தல் - திருவிகாரமாய் நிலைபெறல்காண்டல்.

௫. மொழிபெற வருந்தல் - திருவாய்மலராவிடினுய்யேனென்னல்.

௬. நாணிக்கண் புதைத்தல் - இன்பநாணுதல்போலுயிர் இன்னலெய்துதல்.

௭. கண்புதைக்கவருந்தல் - உயிர்தன்வருத்த முற்றுற்றுரைத்தல்.

௮. நாண்விடவருந்தல் - இன்பநாணின்றி யெய்தல் கண்டின்புறல்.

௯. மருங்கணைதல் - திருவுருப்பரிவால் பெருகுசுகம் பெறல்.

௧0. இன்றியமையாமைகூறல் - சித்தியெவையுஞ் சேர்ந்திடுமாயினும், இத்தகையின்ப மிசழேனென்னல்.

௧௧. ஆயத்துய்த்தல் - மெய்யடியாரிடை வேறறக்கலந்து ஐயமின்றி யமர்தலையறிதல்.

௧௨. நின்றுவருந்தல் - திருவுருநீங்குந் திறமரிதென்னல்.

௧௩. பொழிலிடைச்சேறல் - கைம்மாறின்றிக் கருணைசெய்தலால் இன்னமுமிவ்விடை யின்புறுமென்னல்.

---

## ௪-வது. மதியுடம்படுத்தல்.

அருள்சிவங்கலந்து உயிர்தரிசனஞ்செய்தல்.

"மதியுடம்படுத்தல் வருமீரைந்தும், குருவறிவித்த திருவருடனைச், சிவத்துடன் கலந்து தெரிசனம் புரிதல்." இக்கிளவிக்காத்தின் துறைவருமாறு.—

௧. பாங்கியிடைச்சேறல்-திருவருளாற்சிவம் பெறுதலறிதல்.

௨. குறையுறத்துணிதல்-சிவமேகாட்டத்திருவருளையுணர்தல்

௩. வேழம்வினுதல்-அருள்சிவங்கலந்த வருமையுயிர்தேர்தல்

ச. கலைமான்வினுதல் - அருள்விடைபெறுமற் பின்னும்புக றல்.

ரு. வழிவினுதல் - வழிமேல்வைத்துப் புகலிலையென்னல்.

சு. பதிவினுதல் - அருளறியாவிடின் அறியேனென்னல்.

எ. பெயர்வினுதல் - இன்பருள்நாம மேதெனவினுதல்

அ. மொழிபெறுது கூறல் - திருவாய்மலராத் திறமெடுத் துரைத்தல்.

கூ. கருத்தறிவித்தல் - சாத்தும்பச்சிலை தான்கொண்டருளி அருளுந்திறத்தை யறியவுரைத்தல்.

கO. இடைவினுதல் - சிவத்திடையன்பு செல்லுதலன்றி வேறிலையென்று விரும்பி யுரைத்தல்.

---

## ரு-வது. இருவருமுள்வழி யவன்வரவுணர்தல்.

சிவமுயிர்விரவிய தருளேதேறல்.

“இருவருமுள்வழி யவன் வரவுணர்தல், துறையோரிரண்டுஞ் சிவமுயிர்விரவிய, தருளேயுணர்ந்திட லாகுமென்ப.” இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

க. ஐயுறுதல் - சிவமுயிர்கலத்தல் அருள்தேறிவினுதல்.

உ. அறிவுநாடல் - உயிர்சிவங்கலந்த தருளேதேறல்.

---

## சு-வது. முன்னுற வுணர்தல்.

சிவமுயிர்கூட அருள்வினுவுதல்.

“முன்னுறவுணர்த லெனவிஃ தொன்றுஞ், சிவமுயிர்கூட லருள்வினவியது.” இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

க. வாட்டம்வினுதல் - சிவனதுகருணையும் உயிரது தெளிவும் அருளேகண்டின்பதனுடன்வினுவுதல்.

## எ-வது. குறையுற வுணர்தல்.

சிவமுயிர்கலத்தல் அருள் பணியாற்காண்டல்.

"குறையுறவுணர்தல் துறையொருநான்கும், உயிர்சிவத்திடைச் சன்றொருப்படுந்தன்மை, பணியாற்கண்டு பரிவால் விளைவது." இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

க. குறையுற்றுநிற்றல் - திருவுளப்பணியைச் செய்வேனென்னல்.

உ. அவன்குறிப்பறிதல் - பளிங்குபோற்சிவத்திடைப் பதிந்துயிரொனல்.

ங. அவள் குறிப்பறிதல்-கருணையுயிரிடத்துக் கண்டருள்தேறல்.

ச. இருவர்நினைவு மொருவழியுணர்தல்-இன்புயிரொன்றென்றருளதிசயித்தல்.

---

## அ-வது நாணநாட்டம்.

அருளுயிர்ப்பக்குவ மறிந்துவியத்தல்.

"நாணநாட்டத் துறையோரைந்தும், அருளேசிவத்தை யதிசத்துயிரின், பக்குவந்தன்னைப் பலவும்வியந்தது." இக்கிளவிக்காத்தின் துறைவருமாறு:—

க. பிறைதொழுகென்றல் - அருள்சிவத்திடையுயி ரார்ந்ததன்மை வெளிப்படநின்று விளைவியுரைத்தல்.

உ. வேறுபடுத்துக்கூறல் - உயிர்க்கின்பிச்சைகண் டுவந்தருள் விளைவல்.

ங. சுனையாடல்கூறி நகைத்தல் - கருணையுயிர்க்குக் காட்டும் பரிவு தானறிந்தறியாத் தன்மை யுரைத்தல்.

ச. புணர்ச்சியுரைத்தல்-சிவனதுகருணை யருளேதேறி இந்த வதிசயமெங்குமில்லென்றல்.

ரு. மதியுடம்படுதல் - உயிர்சிவமொன்றல் தொழிலாலறிதல்.

---

## கூ-வது நடுங்கநாட்டம்.

சிவமேகருணை யென்றருள்நோக்கல்.

"நடுங்கநாட்டமொன்றுஞ்சிவமே, யுயிரிடைக்கருணையென்றற்றருணோக்கல்." இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

க. புலிமிசை வைத்தல் - கருணையளவின்மை யருள்கண்டு மகிழ்தல்.

---

## க0வது. மடற்றிறம்.

உயிர் இன்புறவே யருளோடுரைத்தல்.

"மடற்றுறை யொன்பதுஞ் சிவத்திடைமோகம், உற்றவுயிரருள்பற்றியுரைத்தது." இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

க. ஆற்றுதுரைத்தல் - அருளைநம்பியுயிர் மிகவுமிரங்கல்.

உ. உலகின்மேல் வைத்துரைத்தல் - இன்பம்பெறூர்க்குடல் வம்பெனவுரைத்தல்.

ஈ. தன்துணிபுரைத்தல் - சிவம்பெறுவிடி லுய்யேனென்று அருளுடன் செப்பல்.

ச. மடலேறும்வகை யுரைத்தல்-இவன்சிவனடிமையென் றெ வருஞ்செப்ப இழிபாயெங்கும் திரிவேனென்னல்.

ரு. அருளாலரிதெனவிலக்கல் - அருளேயுயிரையழுத்திநிற் தை வருமோபக்குவ வகையாலென்றல்.

சு. மொழிநடையெழுத லரிதெனவிலக்கல் - அருள் சிவத்தரு மை யறியப்படாதெனல். (அருமை - குணங்குறி.)

எ. அவயவமெழுத லரிதெனவிலக்கல் - சிவனதுகருணையுஞ் செயலுமொருவரா லறியறியப்படாதிஃ தரிதே யென்னல்.

அ. உடம்படாது விலக்கல் - சிவத்திடையாமே சேர்த்துமெ ன்று வன்மையொழியும் வகையை யுரைத்தல்.

கூ. உடம்பட்டுவிலக்கல் - என்வழிச்சிவமே யிருத்தலானுன் றன் குறையுங்கூறிக்கூட்டுவனென்னல்.

---

## கக-வது. குறைநயப்புக்கூறல்.

### உயிர்ப்பறிவின்புக் கருள்புகன்றிடுதல்.

" குறைநயப்புத்துறை யவையிருநான்கும், சிவத்தோடுயி ச் சேர்க்கவேண்டி, உயிர்ப்பரிவெடுத்தெடுத் துரைத் தறிவுறு ல்." இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

௧. குறிப்பறிதல் - சிவத்தோடுயிரைச் சேர்பரிவுரைத்து அவ் வருள்சிவக்குறிப்பை யாராய்தல்.

௨. மென்மொழியாற்கூறல் - அருள்பணிமொழியால் அரற்கு அறிவுறுத்தல்.

௩. விரவிக்கூறல் - உயிர்ப்பரிவுவமையா லுவந்தருளுரைத் தல்.

௪. அறியாள்போறல்-சிவமருட்கறியமற் றென்றுஞ்செப்பல்.

௫. வஞ்சித்துரைத்தல் - சிவமுயிர்க்கொன்றுற் பின்னுஞ்செப் பல்.

௬. புலந்துகூறல்-அருள்தனைவெறுத்தரற் கறியவுரைத்தல்.

௭. வன்மொழியாற்கூறல்-அருள்செயாவிடிலுலகலராமழிவா மலனெனல்.

௮. மனத்தொடுநேர்தல்-சிவமுயிர்க்கின்பஞ் சேரவிரங்கல்.

---

## கஉ-வது. சேட்படை.

### இடையாவின்பத் தருமைகாட்டல்.

சட்படையிருபத் தாறுதுறையுங், இடையாவின்பங் இடை லுயிரை, அருமைகாட்டியறியாள்போலப் பலபலவரு ற்றியுரைத்த, அருளேசிவத்தோ டாக்கவருளல்." இக்கிள காத்தின் துறைவருமாறு:

நழைகொண்டுசேறல்-மலமொடுத்துயிரருள்வழியேசேறல்.

௨. சந்தனத்தழைதகா தென்றுமறுத்தல் - உன்னறிவாம் மல ரொவ்வாதென்னல்.

௩. நிலத்தின்மை கூறிமறுத்தல் - உன்னறிவு அடியாருருவா காதென்னல்.

௪. நினைவறிவுகூறிமறுத்தல் - சிவத்துளங்கண்டுனைத் தே ற்றுவேனென்னல்.

௫. படைத்துமொழியான்மறுத்தல் - சிவங்கொளுமுன்னு ணர் வாகாதென்றல்.

௬. நாணுரைத்துமறுத்தல் - அடியாரறிவுக்கு உன்னறிவுபிறி தென்னல்.

௭. இசையாமைகூறி மறுத்தல் - அடியாரறிவுபோல் உன்ன றிவாகாதென்னல்.

௮. செவ்வியிலதென்று மறுத்தல் - சிவக்கனிபழுத்த நிலை யுனக்கென்னல்.

௯. காப்புடைத்தென்று மறுத்தல் - மேலா மின்பத்துக்குக் காலமிலையென்னல்.

௰. நீயேகூறென்று மறுத்தல் - உன்னறிவா லின்புறுவை நீ யென்னல்.

௧௧. குலமுறைகூறி மறுத்தல்-உன்றனக்கின்ப மொக்குமோ வென்னல்.

௧௨. நகையாடிமறுத்தல் - உன்னறிவின்பமுறலரிதென்னல்.

௧௩. இரக்கத்தொடுமறுத்தல் - என்னறிவிலையென்றெய்த் தற்கிரங்கல்.

௧௪. சிறப்பின்மைகூறிமறுத்தல் - சிவத்திடைசேருந் திற முயிர்க்கிலையெனல்.

௧௫. இளமைகூறிமறுத்தல்-இன்பமுதிர்ந்த நிலையுனக்கென் னல்.

கசு. மறைத்தமைசுூறிநகைத்துரைத்தல் - அருளன்றிச்சிவ மமையாதென்னல்.

எ. நகைகண்டு மகிழ்தல் - அருள்நோக்கமின்றியின்பா மோவென்னல்.

அ. அறியாள்போன்று நினைவுகேட்டல் - இன்பம்பலவதில் எங்ஙனஞ்சிவமெனல்.

கூ. அவயவங்கூறல் - இன்பக்கனமரன் திருமேனியென் னல். (இன்பக்கனம் - ஆனந்தமயம்).

௨0. கண்ணயர்துரைத்தல் - திருநோக்கின்பச் சேதனமெ ன்னல்.

௨க. தழையெதிர்தல் - அடிமைத் திறத்தாற் சிவத்தாக்குவ னென்னல்.

௨௨. குறிப்பறிதல் - பரிவுயிர்க்கருளெனப் பகரருள்கூறல்.

௨௩. குறிப்பறிந்து கூறல் - வேறறியாவுயிர்க்கு அருளவே ண்டுமென்னல்.

௨௪. வகுத்துரைத்தல் - சிவமுயிர்ப்பரிவருள் தனக்குச்செப் பல்.

௨௫. தழையேற்பித்தல் - அருளே யுயிர்ப்பணி சிவத்துக்கா க்கல்.

௨௬. தழைவிருப்புரைத்தல் - உன்பணிசிவத்துக் குவப்பென வுரைத்தல்.

---

## கஙு - வது. பகற்குறி.

இயற்கைபோற் சிவத்தோ டியலுறக் கூட்டல்.

பகற்குறித்துறைமுப் பதிஞேரிரண்டும் இயற்கைபோற் ந்தோ டியலுறக்கூட்டிப் பிரித்தவருளின் பெரும்பகற்குறி " இக்கிளவிக் கொத்தின் துறைவருமாறு:—

க. குறியிடங்கூறல்-அருளுயிர்க்கின்ப மாமிடமுரைத்தல்.
உ. ஆடிடம்படர்தல்-இன்பந்தனைக்கொண்டேகாந்தத்தேகல்
ஙு. குறியிடத்துக்கொண்டுசேறல்-அருமையாற்சிவத்தையுயி ரிடத்தாக்கல்.
ச. இடத்துய்த்துநீங்கல்-அருள்சிவத்திடைச்சேர்த் தகன்று நிற்றல்.
ரு. உவந்துரைத்தல்-உயிர்சிவந்தரிசித் துண்மகிழ்ந்துரைத்தல்
சு. மருங்கணைதல்-இன்பங்கண்டத னியல்பெடுத்துரைத்தல்.
எ. பாங்கியறிவுரைத்தல் - இன்பங்கண்டபின் அருள்தெரி சித்ததென்னல்.
அ. உண்மகிழ்ந்துரைத்தல்-கண்ட வின்பம் அருளுக்கியம்பல்.
கூ. ஆயத்துய்த்தல் - அடியார்கூட்டந் தன்பாலுய்த்தல்.
க0. தோழிவந்துகூடல்-அருள்சிவங்கலந்தவபேதங்காண்டல்
கக. ஆடிடம்புகுதல் - அன்பர்க்கின்பம் அருளேயாக்கல்.
கஉ. தனிகண்டுரைத்தல் - அருளுயிர்தனைக்கண் டகமகிழ்ந் துரைத்தல்.
கஙு. பருவங்கூறி வரவுவிலக்கல் - அருள்சிவத்தின்படுத் தறி வுறுத்துதல்.
கச. வரைவுடம்படாது மிகுத்துக்கூறல் - இன்பமெளியேற் கெய்துமோ வென்னல்.
கரு. உண்மைகூறி வரைவுகடாதல் - அன்புக்கருளு மின்பெ ளிதென்னல்.
கசு. வருத்தங்கூறி வரைவுகடாதல் - இன்புறுதிருத்த லென் பிழையென்னல்.
கஎ. தாயச்சங்கூறி வரைவுகடாதல் - பழையுமுயிரின் பக்கு வங்காண்டல்.
கஅ. இற்செறிவறிவித்து வரைவுகடாதல் - அருளினிலின்ப மரிதெனவிரைதல்.

கக. தமர்நினைவுரைத்து வரைவுகடாதல் - இன்பம்பெருவிடி விகழுமுலவெனல்.

உ0. எதிர்கோள்கூறிவரைவுகடாதல் - திரோதையும் பரை யுஞ் சேர்த்திடுமென்னல்.

உக. ஏறுகோள்கூறி வரைவுகடாதல் - அன்புபுரிபவர்க் கின் பெளிதென்னல்.

உஉ. அயலுரையுரைத்து வரைவுகடாதல்-அடியாரின்பே யார் வாரென்றல்.

உ௩. தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதல் - பணியொழிந் தாற்சிவம் பலியாதென்னல்.

உ௪. பகல்வரல்விலக்கிவரைவுகடாதல்-பசுகரணத்தாற் பலி யாதென்னல்.

உ௫. தினையொடுவெறுத்து வரைவுகடாதல் - தவங்கள்செ ய்துஞ் சலிட்பிலையென்னல்.

உ௬. வேங்கையொடுவெறுத்து வரைவுகடாதல் - பசுகரண ங்களே பகையாமென்னல்.

உ௭. இரக்கமுற்று வரைவுகடாதல் - அருளுயிர்க்கிரங்கி யன் பெடுத்துரைத்தல்.

உ௮. கொய்தமைகூறி வரைவுகடாதல் - சரியையாதி மூன் றுங்கடத்தல்.

உ௯. பிரிவருமைகூறி வரைவுகடாதல் - பழக்கந்தவிரப் பயி றல்பெரிதெனல்.

௩0. மயிலொடுகூறி வரைவுகடாதல்-அருள்கரணத்தி லார்ந் தினி துரைத்தல்.

௩க. வறும்புனங்கண்டுவருந்தல்-அருளன்றியின்ப மாராதெ ன்னல்.

௩உ. பதிநோக்கிவருந்தல்-இன்பப்பெருமைகண் டெளிமை யன்றென்னல்.

## கச - வது. இரவுக்குறி.

அருளே சிவத்தோடாக்கி யவ்வருமை கருணை பலவு மெடுத்துக்காட்டல்.

"இரவுக்குறித்துறை முப்பத்துமூன்றும், அருளேசிவத்தோடாக்கியவ்வருமை, தெரியவற்புறுத்திச் சிவனது கருணையின் இச்சைபலவு மெடுத்தெடுத்தருளல்." இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு :—

க. இரவுக்குறிவேண்டல்-அருளையிரந்துயிரன்பாய்க்கலத்தல்.

உ. வழியருமைகூறி மறுத்தல் - அருளுயிர்ப்போத மகறல் கண்டின்புறல்.

ந. நின்றுநெஞ்சுடைதல் - இன்பங்கிடைக்குமோ வென்று நெஞ்சுடைதல்.

ச. இரவுக்குறிநேர்தல் - உயிர்ப்பரிவருள்கண் டுவந்தியம்பல்.

ரு. உட்கோள்வினாதல்-அருளுயிர்கண்ட வனுபவங்கேட்டல்.

சு. உட்கொண்டுவினாதல் - அறிவித்தாலறிவனென் றனுபவங் கேட்டல்.

எ. குறியிடங்கூறல் - உயிர்க்கின்பமாமிட மருளெடுத்துரைத்தல்.

அ. இரவுக்குறியேற்பித்தல் - சிவத்துக்கருளுயிர்ச் செய்கையுரைத்தல்.

கூ. இரவரவுரைத்தல் - மலத்தடைகடந்துயிர் மருவிற்றென்னல்.

க0. ஏதங்கூறிமறுத்தல் - பரிவுயிரருளிற் படற்கிரங்கல்.

கக. குறைநேர்தல் - திருமேனியருமை தெரிதலாலாமெனல்.

கஉ. குறைநேர்ந்தமைகூறல் - உயிர்க்குக்கருணை யுண்மையுரைத்தல்

கரு. வரவுணர்ந்துரைத்தல் - சிவத்துக்கருளுயிர்த்திறமெ டுத்துரைத்தல்.

கசு. தாய்துயிலறிதல் - பாைக்கும்பாங்காம் பண்பருள்காண் டல்.

கரு. துயிலெடுத்துச்சேறல் - உயிர்ப்பக்குவங்கண்டேவந்தறி வித்தல்.

கசு. இடத்துய்த்துநீங்கல் - சிவத்திற் சேர்த்தருள் சென்று நிற்றல்.

கஎ. தளர்வகன்றுரைத்தல் - உயிர்சிவங்கண்டன்புற வுவந் துரைத்தல்.

கஅ. மருங்கணைதல் - இன்பக்கனங்கண் டின்பனுபவித்தல்.

கக. முகங்கண்டுமகிழ்தல் - திருமேனிகண்டின் பதுவாய்த் தேறல்.

உ0. பள்ளியிடத்துய்த்தல் - அடியரிடத்தன்பா யமர்தலுயிர் காண்டல்.

உக. வரவுவிலக்கல் - அருளுயிர்க்குச்சிவத் தருமைகூறல்.

உஉ. ஆற்றுதுரைத்தல் - இன்பமேயன்றி யுயிரிலையென்னல்.

உங. இரக்கங்கூறி வரைவுகடாதல் - கருணையேயின்பக் கன மெனவுரைத்தல்.

உச. நிலவு வெளிப்படவருந்தல் - உயிர்க்குமாயையு மொளி யென்றிரங்கல்.

உரு. அல்லகுறியறிவித்தல் - உன்பரிவின்புக் குருதென்று ரைத்தல்.

உசு. கடலிடைவைத்துத் துயரறிவித்தல் - அருளுயிர்மோ கங் கடலொடியம்பல்.

உஎ. காமமிக்க கழிபடர்கிளவி - உயிர்மோகங்கண்டரு ளு வகையொடியம்பல்

உஅ. காப்புச்சிறைமிக்ககையறுகிளவி-உயிர்பெறுமோக முற வற்றியம்பல்.

உகூ. ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி - இன்பத்தின்வழியேக வரிதெனல்.

ஙo. தன்னுட்கையாறெய்திடுகிளவி - சிவத்தின்கருணைத் திற ம்பரிவாதல்.

ஙக. நிலைகண்டுரைத்தல்-அருளேயுயிர்க்குப் பரிவாயுரைத்தல்.

ஙஉ. இரவுறுதுயரங் கடலொடுசேர்த்தல் - கருணையாற் சிவ மே யுயிர்போற்கனிதல்.

ஙங. அலரறிவுறுத்தல்-அருளுயிர்க்கின்பம்பெறவுறுத்துதல்.

---

## கரு - வது. ஒருவழித்தணத்தல்.

சிவனது கருணை யருள் தெரிவித்தல்.

"ஒருவழித்தணத்த லொருபதின் மூன்றுஞ், சிவனதுகருணை யருடெரிவித்தது" இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

க. அகன்றணைவுகூறல் - பிரிந்துகூடிப் பெறுமின்பென்னல்.

உ. கடலொடுவரவுகேட்டல் - உயிராய்ச்சிவமே யுற்றுற்று ரைத்தல்.

ங. கடலொடுபுலத்தல் - பின்னுமுயிராய் மன்னியுரைத்தல்.

ச. அன்னமோடாய்தல்-பின்னுமுயிர்போன்மன்னியுரைத்தல்

ரு. தேர்வழிநோக்கிக் கடலொடுகூறல் - சிவனுயிர் மோகஞ் சென்றியம்புதல்.

சு. கூடலிழைத்தல்-உயிர்த்தொழில்சிவமா யுறுங்குறிபார்த் தல்.

எ. சுடரொடுபுலம்பல் - இன்பேயுயிரா யிடருற்றியம்பல்.

அ. பொழுதுகண்டுமயங்கல்-பருவநோக்கிப்பரிவின்புறுதல்.

கூ. பறவையொடுவருந்தல்-இன்பருணேக்க மெங்குமாதல்.

௧0. பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தல் - இன்புற்றிடஞேக்கி யன்புற்றிரங்கல்.

௧௧. அன்னமோடழிதல் - இன்பமுயிர்க்கா யெடுத்திரங்கல்.

௧௨. வரவுணர்ந்துரைத்தல்-அருளேசென்றங் கரற்கியம்பல்.

௧௩. வருத்தமிகுதிகூறல் - சிவனதுகருணையி னளவெடுத்துரைத்தல்.

## ௧சு-வது. உடன்போக்கு.

அருளுயிர்க்கருமை யறியவுரைத்தலு மானந்தத் திடையழுத்துவித்தலும்.

"உடன்போக்கைம்பதோ டாறுதுறையு, மருளுயிர்க்கருமை யறியவுணர்த்தலு, மானந்தத்திடையழுத்தித் திரோதை, பவை வழியாகப் பண்புணர்த்தியது" இக்கிளவிக்கொத்தின் துறை வருமாறு:—

௧. பருவங்கூறல் - அருள்சிவம்பெறும்பத மிதுவெனவுரைத்தல்.

௨. மகட்பேச்சுரைத்தல்-விரைவிலின்பம் பெறுவாயென்னல்.

௩. பொன்னணிவுரைத்தல் - அன்புடையோர்க்கே யின்பாமென்னல்.

௪. அருவிலையுரைத்தல் - இன்பதனுக்களவில்லையென்னல்.

௫. அருமைகேட்டழிதல் - உயிரின்பமெமக் குறுமோவென்னல்.

௬. தளர்வறிந் துரைத்தல் - உன்னுடன்சிவமுறு மெனவருளுரைத்தல்.

௭. குறிப்புரைத்தல் - கண்டகுறியாற் கலவேமென்னல்.

௮. அருமையுரைத்தல் - சிவன்றன்பெருமை யுயிரருட்குரைத்தல்.

௯. ஆதரங்கூறல் - அன்புக்கிரங்குமின்பெனவுரைத்தல்.

க0. இறந்துபாடுரைத்தல் - இன்புக்குயிரோ யிடமென்றுரைத்தல்.

கக. கற்புநலனுரைத்தல் - அருள்சிவத்திடைச்சென் றுதரங்கூறல்.

கஉ. துணிந்தமைகூறல் - சிவத்துக்கருளுயிர்ச் செய்கையுரைத்தல்.

கங. துணிவொடுவினவல் - உயிர்வழிவருங்காரணமேதென்னல்.

கச. போக்கறிவித்தல்-உயிருடன்படலரற்கருளேயுரைத்தல்.

கரு. நாணிழந்துவருந்தல்-இன்பமேயுயிருக்கேகாந்தமுன்னல்

கசு. துணிவெடுத்துரைத்தல் - இன்பத்துணிவுயிர்க் கருளியம்பல்.

கஎ. குறியிடங்கூறல்-யான்கொடுவரும்வழி நீவருகென்னல்.

கஅ. அடியொடுவழிநினைந் தவனுளம்வாடல் - இன்பத்துக்கென்வழி வருந்துமேயென்னல்.

கக. கொண்டு சென்றுய்த்தல் - அருளேசிவங்கொண் டுயிர்க்கறிவித்தல்.

உ0. ஓம்படுத்துரைத்தல் - சிவத்திடைநெஞ்சந் திறம்பாயென்னல்.

உக. வழிப்படுத்துரைத்தல் - இன்பம்விடாதினி தேகென்றியம்பல்.

உஉ. மெல்லக்கொண்டேகல் - இன்பைப்பிரிவின்றி யினிதியம்புதல்.

உங. அடலெடுத்துரைத்தல் - இன்பைப்பார்த்ததன்வலி யுயிரெடுத்தியம்பல்.

உச. அயர்வகற்றல்-இன்பேயிடர்க்குத்துணையென்றியம்பல்.

உரு. நெறிவிலக்கிக்கூறல்-பெற்றாரின்பம் பற்றியுரைத்தல்.

உசு. கண்டவர்மகிழ்தல் - உயிர் சிவங்கலந்த வுண்மைக்குமகிழ்தல்.

உஎ. வழிவிளையாடல் - இன்பிற்கலந்துயி ரன்புசெய்தல்.

உஅ. நகரணிமைகூறல் - சிவந்தங்கிடமிது வென்றுதேர்தல்

உகூ. நகர்காட்டல் - அன்பாலடுத்த தென்றியம்புதல்.

௩௦. பதிபரிசுரைத்தல் - இன்பமாமிடமிவையென்றியம்பல்

௩க. செவிலிதேடல் - திரோதையைக்கடந்த செய்கையுரைத்தல்.

௩உ. அறத்தொடுநிற்றல் - அருளேதிரோதை யாந்திறமுரைத்தல்.

௩௩. கற்புநிலைக்கிரங்கல் - திரோதையுமிரங்கித் திரும்பிரைத்தல்.

௩௪. கவன்றுரைத்தல் - இன்பச்சின்னங்கண்டேனென்னல்.

௩௫. அடிநினைந்திரங்கல் - சிவனதுகருணையைத் திரோதை வியத்தல்.

௩௬. நற்றாய்க்குரைத்தல்-திரோதை பரைக்குயிர்ச் செய்கையுரைத்தல்.

௩எ. நற்றாய்வருந்தல்-திரோதையுரைக்கப்பரைபிரிந்திரங்கல்

௩அ. கிளிமொழிக்கிரங்கல்-பரையின்பத்தின்பண்புக்கிரங்கல்

௩கூ. சுடரோடிரத்தல் - பரைதிருமேனிப் பண்புக்கிரங்கல்

௪௦. பருவநினைந்துகவறல்-இன்பமுயிரன் பெண்கொளவென்னல்.

௪க. நாடத்துணிதல்-திரோதைபின்யானேதேடுவனென்னல்.

௪உ. கொடிக்குறிபார்த்தல் - பரையேசிவத்தின் குறிப்பண்டபார்த்தல்.

௪௩. சோதிடங்கேட்டல் - திரோதையுயிர்ப்பண்பு தீருமோவென்னல்.

சச. சுவடுகண்டறிதல் - திரோதைசிவம்பெறுஞ் சின்னங்கா
ண்டல்.

சரு. சுவடுகண்டிரங்கல் - திரோதைசிவத்தின்சின்னத்திற்கிர
ங்கல்.

சசு. வேட்டமாதரைக்கேட்டல் - திரோதையேபெற்றவர்தே
றவுரைத்தல்.

சஎ. புறவொடுபுலத்தல் - திரோதைசிவத்தின் செய்கையுரை
த்தல்.

சஅ. குரவொடுவருந்தல் - திரோதையெங்குஞ் சிவமேவினு
வல்.

சகூ. விரதியரைவினுவல் - திரோதைதவத்தர் திறத்தில்வினு
வல்.

ருo. வேதியரைவினுவல் - திரோதைபெற்றோரைச் சென்றுவி
னுவல்.

ருக. புணர்ந்துடன்வருவோரைப்பொருந்திவினுவல் - திரோ
தைபெற்ற சிவத்தைக்காட்டல்.

ருஉ. வியந்துரைத்தல் - திரோதையின்புயிர்க்குச் செய்திறங்
காண்டல்.

ருஙூ. இயைபெடுத்துரைத்தல் - திரோதையின்புருவைச் சிவ
மாக்காண்டல்.

ருச. மீளவுரைத்தல் - அடியார்சிவத்தோ டாவாயென்னல்.

ருரு. உலகியல்புரைத்தல் - பெற்றவின்பம் பிறர்கொள்வரொ
ன்னல்.

ருசு. அழுங்குதாய்க்குரைத்தல் - அடியார்திரோதை யருளே
யென்னல்.

---

## கஎ-வது. வரைவுமுடுக்கம்

சிவனதுகருணை தெரியவுரைத்தவ் வின்பம்பெற வருளெடுத்தியம்பியது.

"வரைவுமுடுக்க மொருபதினாறுஞ், சிவனதுகருணைதெரிய ரைத்தவ், வின்பம்பெறவருளெடுத்தியம்பியது" இக்கிளவிக் ாத்தின் துறைவருமாறு:—

க. வருத்தமிகுதிகூறிவரைவுகடாதல் - சிவனதுகருணைதெரி யவுரைத்தவ் வின்பம்பெறவகுத்துரைத்தல்.

உ. பெரும்பான்மைகூறிமறுத்தல்-உயிர்சிவப்பெருமை யெ டுத்தருட்கியம்பல்.

ந. உள்ளதுகூறிவரைவுகடாதல் - இன்பத்துக்கிடமியல் பரு ளுயிர்க்கியம்பல்.

ச. ஏதங்கூறியிரவரவுவிலக்கல் - இன்புருக்காண்டற்கிரவிலே யென்றல்.

ரு. பழிவரவுரைத்துப்பகல்வரவுவிலக்கல் - இன்புருக்கொளி வே றில்லையென்னல்.

சு. தொழுதிரந்துகூறல் - இன்புக்கிருளிலே யேகாயென்னல்.

எ. தாயறிவுகூறல் - திரோதையுந்திரும்பலாமென்றுகூறல்.

அ. மந்திமேல்வைத்துவரைவுகடாதல் - பெற்றோர்பேறெடு த்தருள்பெருங்கருணையுரைத்தல்.

௯. காவன்மேல்வைத்துக்கண்டுயிலாமைகூறல் - உயிர்க்கின் பிடையூறுண்டென்றியம்பல்.

௰. பகலுடம்பட்டாள்போன்றிரவரவுவிலக்கல்-சகலமுடன் பட்டுக் கேவலமொருவல்.

௧௧. இரவுடம்பட்டாள்போன்றுபகல்வரவுவிலக்கல் - கேவ லம்போற்சகல மென்றருளியம்பல்.

கஉ. இரவும்பகலும்வரவுவிலக்கல் - கேவலசகலமு மேலிலை யென்னல்.

கங. காலங்கூறிவரவுகடாதல்-பக்குவமீதெனப் பரிந்தருளி யம்பல்.

கச. கூறுவிக்குற்றல் - சிவத்திலுயிரின்பார்வதன்றி யாகாதெ ன்றேயருளியம்பல்.

கரு. செலவுநினைந்துரைத்தல்-அருளாற்சிவமுயிர்க் கன்பறிவி த்தல்.

கசு. பொலிவழிவுரைத்துவரவுகடாதல் - இன்னுங்கருணை கண் டிலையோவென்னல்.

---

## கஅ-வது. வரைபொருட்பிரிதல்.

### கருணையருடிரோதைபரையின்புணர்தல்.

"வரைபொருட்பிரிதற் றுறைமுப்பத்து, மூன்றுங்கருணை தோன்றவருளே, புணர்த்தலுமுணர்தலுந் திரோதையும்பரை யும், தெரிசனமாகித்திவ்வியவின்பங் கூடுங்குறியுங்குலவியுணர் த்தல்" இக்கிளவிக்கொத்தின் றுறைவருமாறு:—

க. முலைவிலைகூறல் - கைம்மாறின்பக் கனத்துக்கிலையெனல்.

உ. வருமதுகூறி வரைவுடம்படுத்தல் - அடியார்க்கலராகா தணையின்பென்னல்.

ங. வரைபொருட்பிரிவையுரையெனக்கூறல் - யானன்பா லின்ப மாவுரையென்னல்.

ச. நீயேகூறென்றல் - அன்பாலின்புறு லுனக்கெளிதென்னல்.

ரு. சொல்லாதேகல் - எக்காலும்பிரி வில்லையென்னல்.

சு. பிரிந்தமைகூறல் - அருளுயிர்ப்பிரிவின் பாரவுரைத்தல்.

எ. நெஞ்சொடு கூறல்-உயிர்ப்பரிவாற்சிவன் கருணையுறுதல்.

அ. நெஞ்சொடுவருந்தல் - உயிர்க்கேகருணை யுற்றின்பாதல்.

௯. வருத்தங்கண்டுரைத்தல் - அருள்சிவன்கருணைக் குருநோக்கல்.

௰. வழியொழுகி வற்புறுத்தல் - கருணையிங்ஙனமாயினுயிரு மின்பேயாருமென் றன்புறவுரைத்தல்.

க. வன்புறையெதிரழிந்திரங்கல் - பின்னுஞ்சிவமே பெருங் கருணையாதல்.

உ. வாய்மைகூறி வருத்தந்தணித்தல - உயாபபாமவழுதத தருளுவர்தரற்குரைத்தல்.

ங. தேறாது புலம்பல் - அருளியம்பியுமரான் கருணைமிக்கெழுதல்.

ச. காலமறைத்துரைத்தல் - அருள்சிவநோக்கிக் காலமீதென்னல்.

ரு. தூதுவரவுரைத்தல் - உயிர்க்குக்கரணம்யான் வேறிலையென்னல்.

௬. தூதுகண்டழுங்கல் - கரணமொன்றுண்டோ வென்றருள்கருதுதல்.

. மெலிவுகண்டுசெவிலிகூறல் - திரோதைசிவத்திற் சேர்ந்ததெனத்திரும்பல்.

. கட்டுவைப்பித்தல் - திரோதைசிவத்திற்சேர்சின்னங் காண்டல்.

கலக்கமுற்றுநிற்றல் - சிவத்துயிர்சேர்ந்த திறமுலகறிதலருள்கண்டிதுவழி யாமோவென்னல்.

கட்டுவித்திகூறல் - சிவமுயிருற்ற திவ்வியந்தெரிதல்.

வேலனையழைத்தல்-திரோதைசிவத்தின் செயல்வெளியாக்கல்.

இன்னலெய்தல் - எங்குராமன்றி யில்லையின்பென்னல்.

உ௩. வெறிவிலக்குவிக்கநினைதல்-யாமன்றிப்பிறவிலை யென்றன்பியம்பல்.

உ௪. அறத்தொடுநிற்றலையுணர்த்தல் - சிவமேயருட்குயிர்ச் செய்தியுணர்த்தல்.

உ௫. அறத்தொடுநிற்றல் - அருட்சிவமே யெடுத்தியம்புதல்.

௬. ஐயந்தீரக்கூறல் - அருளேசிவத்தை வியந்தெடுத்துணர்த்தல்.

உ௭. வெறிவிலக்கல் - அருள்பிறிதொன்றுமிலையுயிர்சிவமேயாதல்கண்டவேதியம்பல்.

உ௮. செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றல் - திரோதைக்கருளே சென்றியம்புதல்.

உ௯. நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநிற்றல் - திரோதைபரைக்குச்சென்றியம்புதல்.

௩0. தேர்வரவுகூறல்-அருளுயிர்வரல்சிவற் கடுத்தியம்பல்.

௩௧. மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல் - சிவமணமுயிர்பெற லருள்கண்டுமகிழ்தல்.

௩௨. ஐயுற்றுக்கலங்கல் - இன்னு முயிர்க்கிடையூ றுண்டோவென்னல்.

௩௩. நிதிவரவுகூறுநிற்றல் - உடல்பொருளுயிரின் புவந்ததென்னல்.

---

## க௯-வது. மணஞ்சிறப்புரைத்தல்.

### உயிர்சிவமணம் பெற்றுண்மையாதல்.

"மணஞ்சிறப்புரைத்தல்வருமோரொன்பது, முயிர்சிவமணம் பெற்றுண்மையின்பாகிப், பரைகடந்தின்பப் பண்பாய்நிற்றல்." இக்கிளவிக்கொத்தின் துறைவருமாறு:—

